ஒரு நவீன ஆன்மீகச் செவ்விலக்கியம்

# நான் ப்ரம்மம்

## I AM THAT

இரண்டாம் பகுதி



ஸ்ரீ நிசர்கதத்த மஹராஜ்

# நான் ப்ரம்மம்

## ஸ்ரீ நிசர்கதத்த மஹராஜ் அவர்களுடன் உரையாடல்

(இரண்டாம் பகுதி)

மராத்தி ஒலிப்பதிவுகளை
ஆங்கிலத்தில் மொழிபெயர்த்தவர்:
**மோரிஸ் ஃப்ரைட்மேன்**
(Maurice Frydman)

தமிழாக்கம்:
**சி.அர்த்தநாரீஸ்வரன்**, B.Sc., F.C.A.

கண்ணதாசன் பதிப்பகம்
23, கண்ணதாசன் சாலை,
தியாகராய நகர்,
சென்னை-600017.
தொலைபேசி: 24332682
மதுரை ❖ கோவை ❖ பாண்டி

முதற் பதிப்பு : மார்ச், 2017



E-mail: sales@kannadasan.co.in
Our Web Site: www.kannadasan.co.in

பதிப்பாசிரியர்: காந்தி கண்ணதாசன்



**Price Rs: 300/-**

**"NAAN BRAHMMAM"**- *Paguthi - II* - *Tamil*

ENGLISH SOURCE: LAST 50 CHAPTERS OF 101 CHAPTERS OF THE BOOK 'I AM THAT' TRANSLATED FROM MARATHI TAPE RECORDINGS OF SHRI NISARGADATTA MAHARAJ BY MAURICE FRYDMAN

- Tamil Translation : C.ARTHANAREESWARAN, B.SC., F.C.A., carthanareeswaran@gmail.com
- First Edition : March, 2017
- Publishing Editor : **Gandhi Kannadhasan**
- Published By : **Kannadhasan Pathippagam**
  23, Kannadhasan Salai,
  Thiyagaraya Nagar, Chennai - 600 017.
  Ph: 044-24332682 / 8712

**ISBN: 978-81-8402-807-2**

- Our Branches :
  - No: 1212, Range Gowder Street, **Coimbatore** - 641001 ☎: 0422 - 2479774
  - 1, Annai Complex, III Street, Vasantha Nagar, **Madurai**-625 003. ☎: 0452 - 2373793
  - 37, Bharathy Street, **Puducherry** - 605 001. ☎: 0413 - 2221241
- Our Bankers : State Bank of India, T.Nagar, Chennai-17.

Laser : **Sivaagraphics Dtp** ☎ : 89394 75707

Printed by : Novena Offset Printing Co., Chennai - 5

எல்லா வாழ்பவைகளும் வசிக்கின்ற அது, எல்லா வாழ்பவைக் குள்ளும் வசிக்கின்ற அது, எல்லோருக்கும் கிருபையைக் கொடுக்கின்ற அது, பிரபஞ்சத்தின் உச்ச உயர்வான ஆன்மா, அளவு அற்ற இருத்தல் - நான் அது.

**-அம்ரித்பிந்து உபநிஷத்**

எல்லாவற்றிலும் ஊடுருவுகின்றதும், எதனாலும் கடக்கப்பட முடியாததும், நம்மைச் சுற்றி உள்ள பிரபஞ்ச வெளியைப் போன்று எல்லாவற்றையும் உள்ளும், புறமும் முழுவதும் நிரப்புகின்றதும் ஆகிய உச்ச உயர்வான, இருமையற்ற ப்ரம்மம் - அந்த ஒன்று நீ.

**- ஸ்ரீ சங்கரர்.**

மெய்யைத் தேடி விசாரம் செய்பவர் என்பவர், தன்னைத் தேடுபவரே.

'நான் யார்' என்னும் கேள்வியைத் தவிர, மற்ற எல்லாக் கேள்விகளையும் விட்டு விடு.நீ உறுதியாக உள்ள ஒரே உண்மை, நீ உள்ளாய் என்பதே. 'நான்' என்பது உறுதியாக உள்ளது. 'நான் இது' என்பது அவ்வாறு இல்லை. மெய்யாக நீ என்ன என்பதைக் கண்டுபிடிக்கப் போராடு. நீ என்ன என்று அறிய, முதலில் நீ என்னவாக இல்லை என்று ஆராய்ந்து அறிய வேண்டும்.

நீ என்னவாகவெல்லாம் இல்லை என்பதைக் கண்டுபிடி- நீ உறுதியாகவோ அல்லது அருவமாகவோ உணர்ந்து அறிகின்ற உடல், உணர்ச்சிகள், எண்ணங்கள், காலம், இடம், இது அல்லது அது ஆகிய எதுவுமே நீயாக இருக்க முடியாது. உணர்ந்து அறிவது என்னும் செயலே, நீ என்ன உணர்ந்து அறிகிறாயோ அது நீ அல்ல என்பதைக் காண்பிக்கிறது.

நீ எந்த அளவிற்குத் தெளிவாக மனதளவில் எதிர் மறையாகத்தான் உன்னை விவரிக்க முடியும் என்று புரிந்து கொள்கிறாயோ, அந்த அளவிற்கு விரைவாக உன் தேடுதலின் முடிவிற்கு வந்து, நீ அளவு அற்ற இருத்தல் என்று அறிவாய்.

**- ஸ்ரீ நிசர்கதத்த மஹராஜ்**

## ஸ்ரீ நிசர்கதத்த மஹராஜ் என்பவர் யார்?

குருஜியிடம் அவருடைய பிறந்த தேதியைக் கேட்டபோது, தான் பிறக்கவே இல்லை என்று பதிலளித்தார்.

ஸ்ரீ நிசர்கதத்த மஹராஜ் அவர்கள் 1897 ம் ஆண்டு ஏப்ரல் மாதம் 17ம் தேதி பௌர்ணமி நாளில் பிறந்தார். அது ஹனுமான் ஜெயந்தி பண்டிகை நாள். அவருடைய பிறப்பை அந்தப் புனிதமான நாளோடு தொடர்புபடுத்தி அவருடைய பெற்றோர் அவருக்கு மாருதி என்று பெயர் வைத்தனர்.

அவர் சிறுவனாக இருந்த காலத்தைப் பற்றியும், வாலிபப் பருவத்தைப் பற்றியும் கிடைக்கும் தகவல்கள் கொஞ்சம் கொஞ்சமாகவும், தொடர்பில்லாமலும் இருக்கின்றன. அவருடைய தந்தை ஷிவ்ராம்பண்ட் ஒரு ஏழை. சில காலம் அவர் ஒரு வீட்டு வேலைக்காரராக பம்பாயிலும், பிறகு சிறு விவசாயியாக மஹாராஷ்ட்ராவில், ரத்னகிரி மாவட்டத்தில் உள்ள கண்டல் கோவன் என்னும் ஒரு சிறு கிராமத்திலும் பிழைப்பை நடத்தினார். மாருதி பள்ளிப் படிப்பு இல்லாமலேயே வளர்ந்தார். சிறு பையனாக அவரால் செய்யக் கூடிய மாடு மேய்ப்பது, வயல் வேலை பார்ப்பது போன்றவற்றைத் தன் தந்தைக்கு உதவியாகச் செய்து வந்தார். அவருடைய வேலைகளைப் போலவே, அவருடைய சந்தோசங் களும் எளிமையானவையே. ஆனால் அவர், எல்லாவிதமான கேள்விகளையும் கேட்கின்ற ஆர்வமுள்ள மனதைக் கொண்டிருந்தார்.

அவருடைய தந்தையாருக்கு விஷ்ணு ஹரிபாபு கோரே என்னும் பண்பான, படித்த பிராமண நண்பர் ஒருவர் இருந்தார். கோரே அடிக்கடி மதம் சம்பந்தப்பட்டவைகளைப் பற்றிப் பேசுவார். அதை சிறுவன் மாருதி உன்னிப்பாகக் கேட்டு, அதில் யாரும் எதிர் பார்க்காத அளவிற்கு ஆழ்ந்துவிடுவார். கோரே அவருக்கு

அக்கறையுள்ள, அன்பான, அறிவுள்ள சரியான மனிதராக இருந்தார்.

மாருதிக்குப் பதினெட்டு வயதான போது அவருடைய தந்தை இறந்து விட்டார்- மனைவி, நான்கு மகன்கள், இரண்டு மகள்களை விட்டுவிட்டு. சிறிய தோட்டத்திலிருந்து கிடைத்த சொற்ப வருமானம் தந்தையின் இறப்பிற்குப் பிறகு மேலும் குறைந்தது. அது அவ்வளவு பேரும் சாப்பிடப் போதவில்லை. மாருதியின் மூத்த சகோதரர் வேலைதேடி கிராமத்தை விட்டு பம்பாய்க்குச் சென்றார். மாருதி அவரைத் தொடர்ந்து சென்றார். அவர் பம்பாயில் சிறிய சம்பளத்தில் ஜூனியர் குமாஸ்தாவாக ஒரு அலுவலகத்தில் வேலை செய்ததாகவும், வெறுத்துப் போய் அந்த வேலையை ராஜினாமா செய்து விட்டதாகவும் சொல்லப்படுகிறது. அவர் பிறகு சிறு பொருள்கள் விற்பவராகச் சில்லரை வியாபாரத்தைச் செய்தார். அப்போது குழந்தைகளுக்கான துணிகள், புகையிலை, சுருட்டு ஆகியவற்றை விற்கும் கடையை ஆரம்பித்தார். இந்த வியாபாரம் நாளடைவில் வளர்ந்து, அவருக்கு ஓரளவிற்குப் பொருளாதார வலிமையைத் தந்தது. இந்தக் காலகட்டத்தில் அவர் திருமணம் செய்து கொண்டார். ஒரு மகனும் மூன்று மகள்களும் பிறந்தனர்.

குழந்தைப் பருவம், இளமைப் பருவம், திருமணம், குழந்தைகள் என்று மாருதி வழக்கமான, சாதாரண மனிதன் வாழ்கின்ற, எதுவும் பெரிதாக நிகழாத வாழ்க்கையை, பின்னால் தொடரப் போகின்ற புனிதத்தன்மையைப் பற்றி சிறிதும் அறியாமலே நடு வயது வரை வாழ்ந்தார். அந்தக் கால கட்டத்தில் அவருடைய நண்பர்களில் ஒருவர் யஷ்வந்ராவ் பாஃகர் என்பவர். அவர் இந்து மதப் பிரிவுகளில் ஒன்றான நவநாத் சம்பிரதாயத்தைச் சேர்ந்த ஒரு ஆன்மீக குருவான ஸ்ரீ சித்தராமேஷ்வர் மஹராஜ் என்பவரின் பக்தர். ஒரு நாள் மாலை நேரத்தில் அவர் மாருதியைத் தன் குருவிடம் அழைத்துச் சென்றார். அந்த மாலை வேளை, அவருடைய வாழ்க்கையில் திருப்பு முனையாக ஆகிற்று. குரு அவருக்கு ஒரு மந்திரத்தைப் போதித்து, தியானத்திற்கான குறிப்புகளைக் கொடுத்தார். ஆரம்ப காலப் பயிற்சியின்போது அவர் சில காட்சிகளைக் காண ஆரம்பித்தார். எப்போதாவது மெய்மறந்த நிலைக்கும் செல்வார். அவருக்குள்

ஏதோ ஒன்று வெடித்து, ஒரு பேரண்ட விழிப்புணர்வை, ஒரு சாசுவதமான உயிர்வாழும் உணர்வை அவருக்குள் பிறக்கச் செய்தது. சிறு பெட்டிக் கடைக்காரர் என்னும் மாருதியின் அடையாளம் கரைந்து, ஒளிவீசுகின்ற தன்மையுடைய ஸ்ரீ நிசர்கதத்தா வெளிப்பட்டார்.

பெரும்பாலான மக்கள், தன் விழிப்புணர்வு என்னும் உலகத்தில் வாழ்கிறார்கள். அவர்களுக்கு அதைவிட்டு விலகவேண்டும் என்னும் ஆசையோ, வலிமையோ கிடையாது. அவர்கள் தங்களுக் காகவே இருக்கிறார்கள்; அவர்களுடைய முயற்சிகள் எல்லாம் சுய திருப்தியையும், சுய மகிமைப் படுத்துதலையும் நோக்கியே இருக்கின்றன. ஆனாலும் சில மகான்கள், ஆசிரியர்கள், ஞானிகள் வெளிப்படையாக அதே உலகத்தில் வாழ்வதாகத் தோன்றினாலும், அதே சமயம் பேரண்ட விழிப்புணர்வுள்ள, அளவற்ற அறிவை உள்ளடக்கிய உலகத்திலும் வாழ்கிறார்கள். தனக்கு ஒளி பொருந்திய அனுபவம் கிடைத்த பிறகு, ஸ்ரீ நிசர்கதத்த மஹராஜ் அப்படிப்பட்ட ஓர் இருமை வாழ்க்கையை வாழ ஆரம்பித்தார். அவர் தன் கடையை நடத்தினார். ஆனால், லாப நோக்குடைய வியாபாரியாக இல்லாமல் போனார். பிறகு, தன் குடும்பத்தையும், வியாபாரத்தையும் விட்டுவிட்டு, 1937ம் ஆண்டு ஒரு ஆண்டியாக, ஒரு யாத்திரைக்காரராக, விரிந்த, பல்வகைப்பட்ட இந்திய மத அரங்கில் மாறினார். தன் மீதிக் காலத்தை, சாசுவதமான வாழ்க் கையை விரும்பிக் கழிக்கும் எண்ணத்துடன் இமய மலையை நோக்கி வெறும் காலுடன் நடக்க ஆரம்பித்தார். ஆனால் சீக்கிரமே அம்மாதிரியான விருப்பத்தின் இயலாமையை உணர்ந்து வீட்டிற்குத் திரும்பினார். சாசுவதமான வாழ்க்கை தேடப்படுவது அல்ல; முன்பே அவரிடம் உள்ளது என்று உணர்ந்து 1938ஆம் ஆண்டு அறிந்தார். 'நான் உடல்' என்னும் கருத்திற்கு அப்பால் சென்று விட்டதால் அவர் ஆனந்தமான, அமைதியான, உன்னதமான, அதனோடு ஒப்பிட்டால் எதுவுமே மதிப்பற்றதாகத் தோன்றும் மனோ நிலையை அடைந்தார். அவர் மெய்ஞானம் அடைந்தார்.

தொடர்ந்து மும்பையில், கேத்வாடி என்னும் இடத்தில் இருந்த அவரது வீட்டில் தன்னைத் தேடி வந்தவர்களை வரவேற்று தினமும்

இருவேளை சொற்பொழிவுகள் செய்து வழி நடத்தினார். *8.9.1981*ம் தேதி *84*ம் வயதில் சமாதியானார்.

**கு**ரு படிக்காதவராக இருந்தாலும், அவருடைய உரையாடல்கள் ஒரு அசாதாரணமான அளவிற்கு ஞானமுள்ளவையாக இருக்கின்றன. ஏழையாகப் பிறந்து வளர்ந்தாலும், அவர் செல்வந்தர்களிலும் செல்வந்தர். ஏனெனில், மிக மிக உன்னதமான செல்வமும் ஒன்றுமில்லாததாகத் தோன்றும்படியான அளவற்ற, வற்றாத அறிவாகிய சொத்து அவரிடம் இருந்தது. அவர் வாஞ்சை உள்ளவராகவும், மென்மையானவராகவும், சிரிப்புணர்வு உள்ள வராகவும், தீர்க்கமாக அச்சமற்றும், உண்மை ஆர்வத்துடனும், தன்னிடம் வரும் அனைவருக்குமே வழிகாட்டுபவராகவும், உதவுபவராகவும் இருந்தார்.

அம்மாதிரியான மனிதரைப் பற்றி ஒரு வாழ்க்கைக் குறிப்பு எழுத முயற்சிப்பது அற்பமானதும், முடியாததும் ஆகும். ஏனெனில், அவர் கடந்தகாலமோ, எதிர்காலமோ இல்லாத மனிதர்; அவர் சாசுவதமான, மாறாத, வாழ்கின்ற நிகழ்காலம். எல்லாமுமான சுயம் அவர்.

* * *

ஸ்ரீ நிசர்கதத்த மஹராஜ் அவர்களின் ஆசிரமம், 'சித்தாஸ்ரம்', நிசர்க சொசைட்டி, பத்ரேவாடி, பாபு பாக்வே மார்க், தாஹிசர் (மேற்கு), மும்பை -*400 068* என்னும் முகவரியில் உள்ளது. (அங்கு செல்லும் வழியை அறிய google mapsல் Shree Nisargadatta samadhi mandir, mumbai' என்று தேடவும்.) அங்கு மஹராஜ் அவர்களின் அஸ்தி வைக்கப்பட்டுள்ளது. ஒரு தியான மண்டபமும் உள்ளது. மஹராஜ் அவர்களின் உரையாடல்கள் உள்ள ஒலி நாடாக்களும், ஒளிப் பதிவுகளும், அவருடைய வழிகாட்டுதல்களைக் கொண்டுள்ள புத்தகங்களும் அங்கு உள்ளன.

தினசரி காலை, மாலை இருவேளைகளிலும் பூஜையும், ஒவ்வொரு வியாழன் மற்றும் சனிக்கிழமை மாலை *6.30* மணி முதல் *9.00* மணி வரை சத்சங்கமும் அங்கு நடைபெறுகின்றன. வருடாவருடம் ஏப்ரல் மாதத்தில் மஹராஜ் அவர்களின் ஜெயந்தி விழாவும், செப்டம்பர் மாதத்தில் புண்ய திதி விழாவும் அங்கு கொண்டாடப்படுகின்றன.

# மொழிபெயர்ப்பாளரின் குறிப்பு

பாரதத்தின் ஆன்மீக மரபில் தோன்றிய மாபெரும் ஞானிகளில் **ஸ்ரீ நிசர்கதத்த மஹராஜ்** குறிப்பிடத்தக்கவர் மற்றும் சமீப காலத்தவர். அவருடைய வழிகாட்டுதல்களின் சாரமான **'நான் ப்ரம்மம்'** என்னும் இப்புத்தகத்தின் இரு பகுதிகளும் ஆத்மஞானம் (Self Realisation) அடைய முயலும் சாதகர்களுக்கு மிகவும் உதவும் என்பது திண்ணம்.

தமிழ் கூறும் நல்லுலகம் பயனுற இந்த ஆன்மீகப் பணியைச் செய்ய எனக்கு வாய்ப்பளித்து, செய்வித்த **குரு அருளுக்கும், இறை அருளுக்கும்** என் இருத்தலின் ஆழத்திலிருந்து கோடானுகோடி நன்றி.

இந்த மொழிபெயர்ப்பிற்கு அனுமதி அளித்த மும்பை, ஸ்ரீ நிசர்கதத்த ஆத்யாத்ம கேந்த்ராவின் நிர்வாக அறங்காவலர் திரு விஜய் சவந்த் அவர்களுக்கும் நன்றி. இந்தப் புத்தகங்களைப் பதிப்பிக்க மனமுவந்து, ஆர்வமாக, உடனே முன்வந்த, தன் தந்தையின் ஆன்மீக, இலக்கிய, சமுதாயப் பணிகளைத் தன் பதிப்புக்களின் மூலமாகச் சிறப்பாகத் தொடர்ந்து செய்துவரும் **கண்ணதாசன் பதிப்பக** உரிமையாளர் திரு.காந்தி கண்ணதாசன் அவர்களுக்கும் நன்றி. இப்பகுதியின் தமிழாக்கத்தை மராத்தி மூலத்திலிருந்து சரி பார்த்துத் திருத்த உதவிய நண்பர், ஆடிட்டர் திரு. N.A.சபாபதி, கோவை அவர்களுக்கும், முதல் பகுதியின் சில அத்தியாயங்களை ஆங்கிலத்திலிருந்து சரி பார்த்துத் திருத்திக் கொடுத்த நண்பர் திரு. S.சுகுமார், சென்னை அவர்களுக்கும் நன்றி. இப்புத்தகத்தை நேர்த்தியாக வடிவமைத்துக் கொடுத்த சிவா கிராபிக்ஸ் திரு.பழ.சொக்கலிங்கம் அவர்களுக்கும் என் நன்றி உரித்தாகுக.

கோயம்புத்தூர்
ஜனவரி - 2017

**சி.அர்த்தநாரீஸ்வரன்**
மொழிபெயர்ப்பாளர்

# பொருளடக்கம்

# 52. மகிழ்ச்சியாக இருப்பது, மகிழ்விப்பது - வாழ்க்கையின் லயம்

**கேட்பவர்:** கொல்கத்தாவிற்கு அருகில் இருக்கும் என் குருவைப் பார்ப்பதற்காக வழக்கம் போல வருவது மாதிரி சில மாதங்களுக்கு முன் ஐரோப்பாவிலிருந்து நான் வந்துள்ளேன். இப்போது என் வீட்டிற்குத் திரும்பிப் போய்க்கொண்டிருக்கிறேன். என் நண்பரால் தங்களைப் பார்க்க அழைக்கப்பட்டேன். தங்களைச் சந்திப்பதில் மகிழ்ச்சி.

**மஹராஜ்:** உன் குருவிடம் என்ன கற்றுக் கொண்டாய்? என்ன பயிற்சியைக் கடைப்பிடிக்கிறாய்?

**கே:** அவர் சுமார் எண்பது வயதான, வணங்கத்தக்க முதியவர். தத்துவ மரபுப்படி அவர் ஒரு வேதாந்தி. அவர் போதிக்கின்ற பயிற்சிகள் மனதின் விழிப்புணர்வற்ற சக்திகளை எழுப்புவதற்கும், மறைந்துள்ள தடைகளையும், தடங்கல்களையும் விழிப்புணர்விற்குக் கொண்டுவரவும் உதவுகின்றன. என் தனிப்பட்ட சாதனா, என்னுடைய ஆரம்ப கால மழலைப் பருவம் மற்றும் குழந்தைப் பருவத்தின் வினோதமான பிரச்சனையைப் பற்றியது. என் தாயால் குழந்தையின் இயல்பான வளர்ச்சிக்கு முக்கியமாகத் தேவைப் படும் பாதுகாப்பான மற்றும் அன்பான உணர்வைத் தர முடியவில்லை. அவர் ஒரு தாயாக இருக்கத் தகுதி இல்லாதவர்; பதட்டமும், உள நோயும் உடையவராய், தன்னம்பிக்கையற்றவராய் இருந்ததால் என்னை ஒரு கடமையாகவும், தன்னால் தாங்கமுடியாத பாரமாகவும் நினைத்தார். அவர் நான் பிறந்திருக்கவே கூடாது என்று நினைத்தார். நான் வளர்ந்து, பெரிதாக அவர் விரும்பவில்லை. நான் பிறக்காதவனாக, இல்லாதவனாக, அவருடைய கருப்பைக்குள் திரும்ப வேண்டும் என்று விரும்பினார். என் வாழ்க்கையின் எந்த ஒரு அசைவையும்

அவர் எதிர்த்தார்; அவருடைய வழக்கமான வாழ்க்கையின் குறுகிய வட்டத்திற்கு வெளியே செல்ல நான் எடுக்கும் எந்த முயற்சியையும் அவர் தீவிரமாகத் தடுத்தார். ஒரு குழந்தையாக நான் மிகவும் உணர்வுள்ளவனாகவும், பாசமுள்ளவனாகவும் இருந்தேன். மற்ற எல்லாவற்றையும் விட அன்பிற்காக நான் ஏங்கினேன். தாய் தன் குழந்தைக்குத் தரும் எளிய, உள் உணர்வு பூர்வமான அன்பு எனக்கு மறுக்கப்பட்டது. குழந்தை தன் தாயைத் தேடுவது என்பது என் வாழ்க்கையின் முதன்மையான நோக்கமாக ஆனது. நான் அதற்கு வெளியே வளரவே இல்லை. ஒரு சந்தோஷமான குழந்தை, ஒரு மகிழ்ச்சியான குழந்தைப் பருவம் என் ஊன்றிய வெறிக்கருத்தாக ஆனது. கருவுருதல், குழந்தைப் பிறப்பு, மழலைப் பருவம் ஆகியவை மீது உணர்ச்சிவசப்பட்டவாறு ஆர்வம் கொண்டேன். நான் ஓரளவு பெயர் பெற்ற மகப் பேறு மருத்துவர் ஆனேன். வலியில்லாத குழந்தைப் பிறப்பிற்கான வழிமுறையை உருவாக்க உதவினேன். ஒரு மகிழ்ச்சியான தாயின் மகிழ்ச்சியான குழந்தை - என் வாழ்க்கையின் முழுக் குறிக்கோள் ஆனது. ஆனால், தானும் சந்தோஷமாக இல்லாமல், நான் சந்தோஷமாக இருப்பதைப் பார்க்க விருப்பமில்லாமலும், முடியாமலும் என் தாய் எப்போதும் இருந்தார். அது பல வினோதமான விதங்களில் வெளிப்பட்டது. எனக்கு எப்போதெல்லாம் உடல்நலம் இல்லையோ, அப்போதெல்லாம் அவர் சந்தோஷமாக உணர்ந்தார்; நான் நலமாக இருந்தால் அவர் தன்னையும், என்னையும் சபித்துக் கொண்டு, மோசமாக உணர்வார். நான் பிறந்த குற்றத்தை மன்னிக்க முடியாததுபோல, என்னை நான் உயிரோடிருப்பதற்காகக் குற்றவாளியாக உணரும்படி செய்தார். 'நீ என்னை வெறுப்பதால் உயிரோடிருக்கிறாய். நீ என்னை நேசித்தால் செத்துப் போ' என்பதுதான் அவருடைய தொடர்ந்த, ஆனால் நிசப்தமான செய்தி. ஆகையால் அன்பிற்குப் பதிலாக மரணம் வழங்கப்பட்டு என் வாழ்க்கையைக் கழித்தேன். நிரந்தரமான மழலையாக, என் தாய்க்குள் சிறை பிடிக்கப்பட்டிருந்ததால் என்னால் எந்த ஒரு பெண்ணிடமும் ஒரு அர்த்தமுள்ள உறவை ஏற்படுத்திக் கொள்ள முடியவில்லை; என் தாயின் உருவம் மன்னிக்காமல், மன்னிக்கப் படாமல் குறுக்கே நிற்கும். என் வேலையில் ஆறுதலைத் தேடி,

நிறையவே பெற்றேன்; ஆனால் என் குழந்தைப் பருவக் குழியிலிருந்து என்னால் நகர முடியவில்லை. இறுதியாக, ஆன்மீகத் தேடலின் பக்கம் திரும்பி, பல வருடங்களாக நான் அதில் உறுதியாக இருந்துகொண்டிருக்கிறேன். ஆனால் ஒருவிதத்தில் அது தாயின் அன்பைத் தேடும் அதே பழைய தேடல்தான். அதைக் கடவுள் என்றோ, அல்லது ஆத்மா என்றோ, அல்லது உச்ச உயர்வான மெய்மை என்றோ சொல்லலாம். அடிப்படையில் நான் நேசிக்கவும், நேசிக்கப்படவும் வேண்டுகிறேன். துரதிர்ஷ்டவசமாக சமயவாதிகள் என்று சொல்லப்படுபவர்கள் வாழ்க்கைக்கு எதிராகவும், மனதை வேண்டுபவர்களாகவும் இருக்கிறார்கள். வாழ்க்கையின் தேவைகள் மற்றும் உந்துதல்களை எதிர்கொள்ளும் போது வகைப்படுத்தவும், சுருக்கவும், கோட்பாடுகளை உருவாக்கவும் ஆரம்பிக்கிறார்கள். பிறகு, வகைப்படுத்துவதை வாழ்க்கையைவிட முக்கியமானதாக ஆக்கிவிடுகிறார்கள். அவர்கள் ஒரு கருத்தின் மீது கவனத்தைக் குவிக்கவும், உருவகப் படுத்தவும் வேண்டுகிறார்கள். அன்பால் தன்னிச்சையாக ஒருமைப்படுவதற்குப் பதிலாக அவர்கள் ஒரு சூத்திரத்தின் மீது, வெளிப்படையான மற்றும் நீடித்த உழைப்பு தேவைப்படும் முழுக் கவனத்தையும் செலுத்தச் சொல்லுகிறார்கள். அது கடவுளோ அல்லது ஆத்மாவோ, நானோ அல்லது பிறறோ ஒன்றுக்கேதான் வருகிறது. சிந்திக்கத்தான் ஏதோ ஒன்று இருக்கிறதே தவிர நேசிக்க ஒருவரும் இல்லை. எனக்குத் தேவை கோட்பாடுகளோ, அமைப்பு முறைகளோ அல்ல. கவர்ச்சிகரமான அல்லது உண்மைபோல் தோன்றுகிற பல இருக்கின்றன. இதயத்தைச் சுண்டுகிற ஒன்று, வாழ்க்கையைப் புணரமைக்கின்ற ஒன்றுதான் எனக்குத் தேவை; ஒரு புதுமாதிரி சிந்திக்கும் வழிமுறை அல்ல. புதுமாதிரி சிந்திக்கும் வழிமுறைகள் எதுவும் கிடையாது. ஆனால் உணர்ச்சிகள் எப்போதும் பசுமையாக இருக்கும். நான் யாரையாவது நேசித்தால் அவர் மேல் தன்னிச்சையாகவும், வலிவோடும், வாஞ்சையுடனும், வேகத்துடனும் தியானிப்பேன். அதில் என் மனம் அதிகாரம் செய்ய முடியாது.

வார்த்தைகள் உணர்ச்சிகளை வடிவமைக்கத் தேவை; உணர்ச்சி இல்லாத வார்த்தைகள் உடல் இல்லாத ஆடைகள் போல -

குளிர்ந்தும், தளர்வுற்றும். என்னுடைய இந்தத் தாய், உணர்ச்சிகள் அனைத்தையும் போகச் செய்துவிட்டார். என் மூல ஆதாரங்கள் வறண்டுவிட்டன. ஒரு குழந்தையாக இருந்தபோது எனக்கு நிறையத் தேவைப்பட்ட செழுமையான மற்றும் அபரிமிதமான உள எழுச்சியை நான் இங்கு காண முடியுமா?

**ம:** உன் குழந்தைப் பருவம் இப்போது எங்கே? உன் எதிர்காலம் என்ன?

**கே:** நான் பிறந்தேன், வளர்ந்துள்ளேன், இறப்பேன்.

**ம:** கண்டிப்பாக, உன் உடலும், உன் மனமும் இறக்கும். நான் உன் உடற்கூற்றைப் பற்றியும், மனோபாவத்தைப் பற்றியும் பேசவில்லை. அவையெல்லாம் இயற்கையின் ஒரு அங்கம். அவை இயற்கையின் விதிகளால் ஆளப் படுகின்றன. நான் உன் அன்பின் தேடலைப் பற்றிப் பேசுகிறேன். அதற்கு ஒரு ஆரம்பம் இருந்ததா? அதற்கு ஒரு முடிவு இருக்குமா?

**கே:** உண்மையாகவே என்னால் சொல்ல முடியாது. அது அங்கு உள்ளது - என்னுடைய வாழ்க்கையின் ஆரம்ப காலம் முதல், கடைசி வரை. இந்த அன்பிற்கான ஏக்கம் எவ்வளவு நிலையாகவும், எவ்வளவு நம்பிக்கையற்றதாகவும் இருக்கிறது பாருங்கள்!

**ம:** உன் அன்பிற்கான தேடலில் குறிப்பாக எதைத் தேடுகிறாய்?

**கே:** நேசிக்கவும், நேசிக்கப்படவும்.

**ம:** நேசிக்கவும், நேசிக்கப்படவும் ஒரு பெண்ணைக் குறிப்பிடுகிறாயா?

**கே:** அவசியமில்லை. அது ஒரு நண்பராகவோ, ஒரு ஆசிரியராகவோ, ஒரு வழிகாட்டியாகவோ இருக்கலாம் - உணர்ச்சி பிரகாசமாகவும், தெளிவாகவும் இருக்கும் வரை. கண்டிப்பாக ஒரு பெண்தான் வழக்கமான பதில். ஆனால் அதுதான் ஒரே பதிலாக இருக்க வேண்டியதில்லை.

**ம:** நேசிப்பது அல்லது நேசிக்கப்படுவது - இந்த இரண்டில் எதை நீ தேர்வு செய்வாய்?



ஸ்ரீ சித்தராமேஷ்வர் மஹராஜ் (1888 - 1936)
ஸ்ரீ நிசர்கதத்த மஹராஜ் அவர்களின் குரு



ஸ்ரீ நிசர்கதத்த மஹராஜ் (1897 - 1981)

**கே:** இரண்டையுமேதான்! ஆனால் அன்பு சிறந்தது, புனிதமானது, ஆழமானது என்பதாகப் பார்க்கிறேன். நேசிக்கப்படுவது இனிமையானது. ஆனால் அது ஒருவரை வளரச் செய்யாது.

**ம:** நீயே சுயமாக நேசிப்பாயா அல்லது நேசிக்கச் செய்யப்பட வேண்டுமா?

**கே:** கண்டிப்பாக நேசிக்கத்தக்க ஒருவரைச் சந்திக்க வேண்டும். என் தாய் நேசிக்கவும் இல்லை; நேசிக்கத் தக்கவராகவும் இல்லை.

**ம:** எது ஒருவரை நேசிக்கத் தக்கவராக்குகிறது? இருத்தல் தானே நேசிக்கப்படுகிறது? முதலில் நேசி. பிறகு காரணங்களைத் தேடு.

**கே:** அது வேறுவிதமாகவும் இருக்கலாம். உங்களை எது மகிழ்விக்கிறதோ அதை நீங்கள் நேசிப்பீர்கள்.

**ம:** ஆனால் எது உன்னை மகிழ்விக்கும்?

**கே:** அதற்கு எந்த விதிமுறையும் கிடையாது. இந்த முழுச் சமாச்சாரமுமே மிகவும் தனிப்பட்டது மற்றும் யூகிக்க முடியாதது.

**ம:** சரி. நீ எந்தவகையில் அதைச் சொன்னாலும், நீ நேசிக்காவிட்டால் மகிழ்ச்சி இருக்காது. ஆனால் அன்பு எப்போதும் உன்னை மகிழ்விக்குமா? நேசிப்பதை மகிழ்ச்சியுடன் தொடர்பு படுத்துவது ஒரு ஆரம்பகால, குழந்தைத்தனமான நிலை அல்லவா? நேசிக்கப்படுபவர் துன்பப்பட்டால் நீயும் துன்பப் பட மாட்டாயா? நீ துன்பப்படுவதால் நேசிப்பதை நிறுத்தி விடுவாயா? நேசமும், மகிழ்ச்சியும் ஒன்றாகவேதான் வந்து போக வேண்டுமா? நேசிப்பது வெறுமனே மகிழ்ச்சியை எதிர்பார்த்தா?

**கே:** இல்லவே இல்லை. அன்பில் மிகுந்த துன்பம் இருக்கலாம்.

**ம:** அப்படியானால் அன்பு என்பது என்ன? அது மனதின் ஒரு நிலையாக அல்லாமல் இருத்தலின் ஒரு நிலை அல்லவா? நேசிப்பதற்காகவே நீ நேசிக்கிறாய் என்று நீ கண்டிப்பாக அறிய வேண்டுமா? உனக்குத் தெரியாமலேயே நீ உன் தாயை நேசிக்கவில்லையா? அவருடைய அன்பிற்காக, அவரை நேசிக்க ஒரு சந்தர்ப்பத்திற்கான உன் ஏக்கம், அன்பின் இயக்கம் அல்லவா? உன் இருத்தலைப் பற்றிய விழிப்புணர்வைப் போல அன்பும் உன்னில்

ஒரு பகுதி அல்லவா? நீ உன் தாயின் அன்பை வேண்டினாய். ஏனெனில் நீ அவரை நேசித்தாய்.

**கே:** ஆனால் அவர் என்னை நேசிக்க விட மாட்டார்.

**ம:** அவரால் உன்னைத் தடுக்க முடியாது.

**கே:** அப்படியானால், நான் ஏன் என் வாழ்க்கை முழுவதும் மகிழ்ச்சி இல்லாமல் இருக்கிறேன்?

**ம:** ஏனெனில் நீ உன்னைப் புரிந்துகொள்ளவில்லை; உன் இருத்தலின் அடி ஆழத்திற்குள் செல்லவில்லை. உன்னைப் பற்றிய உன் முழு அறியாமை உன் அன்பையும், சந்தோசத்தையும் மூடி, நீ எப்போதுமே இழக்காததைத் தேட வைக்கிறது. அன்பு என்பது மனோதிடம்; உன் மகிழ்ச்சியை எல்லோருடனும் பகிர்ந்து கொள்ளும் மனோதிடம். மகிழ்ச்சியாக இருப்பது - மகிழ்விப்பது - இதுதான் வாழ்க்கையின் லயம்.

**கே:** மகிழ்ச்சி, வாழ்க்கையின் ஆதாரமும், பயனுமாக இருந்தால்தானே!



# 53. நிறைவேற்றப் பட்ட ஆசைகள் மேலும் அதிகமான ஆசைகளைப் பிறப்பிக்கின்றன

**கேட்பவர்:** நான் இன்று ஒரு கிளர்ச்சியான மனோ நிலையில் வந்துள்ளேன் என்பதை ஒப்புக்கொள்ளத்தான் வேண்டும். விமான நிலைய அலுவலகத்தில் ஒரு முறையற்ற அணுகுமுறையை எதிர்கொண்டேன். அந்த மாதிரியான சந்தர்ப்பங்களை எதிர் கொள்ளும் போது எல்லாமும் சந்தேகத்திற்குட்பட்டவையாகவும், பயனற்றவையாகவும் தோன்றுகின்றன.

**மஹராஜ்:** இது மிகவும் உபயோகமான மனோ நிலை. எல்லாவற்றையும் சந்தேகிப்பது, எல்லாவற்றையும் மறுப்பது, வேறொருவர் மூலமாகக் கற்றுக் கொள்ள விரும்பாதது - இது உன் நீண்ட சாதனாவின் பலன். ஒருவர் சதா காலமும் கற்றுக் கொண்டே இருப்பதில்லை.

**கே:** கற்றது போதும். அது என்னை எங்கும் கொண்டு செல்லவில்லை.

**ம:** எங்கேயும் கொண்டு செல்லவில்லை என்று சொல்லாதே. அது நீ இப்போது இருக்கும் இடத்திற்குக் கொண்டு வந்துள்ளது.

**கே:** அது மறுபடியும் குழந்தையும், அதன் தந்திரங்களும்தான். நான் இருந்த இடத்திலிருந்து ஒரு அங்குலம் கூட நகரவில்லை.

**ம:** நீ குழந்தையாக ஆரம்பித்தாய். குழந்தையாக முடிவாய். இடைப்பட்ட காலத்தில் நீ என்னவெல்லாம் சேர்த்தாயோ அதை எல்லாம் இழந்து, ஆரம்பத்திலேயே அது முடிய வேண்டும்.

**கே:** ஆனால் குழந்தை உதைக்கிறது. அது மகிழ்ச்சியற்று இருக்கும்போதும், அதற்கு ஏதாவது மறுக்கப்படும் போதும் அது உதைக்கிறது.

**ம:** அது உதைக்கட்டும். உதைப்பதைப் பார். மேலும், திருப்திகரமான அளவிற்கு உதைக்க சமுதாயத்தைப் பார்த்து மிகவும் பயப்பட்டால் அதையும் பார். அது மிகவும் வலி மிகுந்தது என்று எனக்குத் தெரியும். ஆனால் அதற்குத் தீர்வு இல்லை - தீர்வுகளைத் தேடுவதை நிறுத்துவது என்னும் ஒன்றே ஒன்றைத் தவிர.

நீ கோபமாகவோ அல்லது துயரத்துடனோ இருந்தால் உன்னைக் கோபத்திலிருந்தும், துயரத்திலிருந்தும் பிரித்து அவற்றை கவனி. ஒன்றிலிருந்து விலகி அப்பால் வருவது விடுதலைக்கான முதல் படி. அப்பால் வந்து கவனி. பௌதீக நிகழ்வுகள் நடந்து கொண்டேதான் இருக்கும். ஆனால் தானாகவே அவற்றிற்கு ஒரு முக்கியத்துவம் கிடையாது. மனம் மட்டுமே முக்கியம். எது நடந்தாலும் நீ ஒரு விமான நிலைய அலுவலகத்திலோ அல்லது ஒரு வங்கியிலோ உதைத்துக் கொண்டு கத்த முடியாது. சமுதாயம் அதை அனுமதிக்காது. அவர்களின் வழிமுறைகள் உனக்குப் பிடிக்கா விட்டாலோ அல்லது அவற்றைப் பொறுத்துக் கொள்ள முடியாவிட்டாலோ விமானத்தில் பறக்காதே அல்லது பணத்தை எடுத்துச் செல்லாதே. நட. உன்னால் நடக்க முடியாவிட்டால் பிரயாணம் செய்யாதே. நீ சமுதாயத்தோடு பரிவர்த்தனை செய்தால் அதன் வழிமுறைகளை ஒத்துக் கொள்ள வேண்டும். ஏனெனில் அதன் வழிகளே உன் வழிகள். உன் தேவைகளும், வேண்டுதல்களும் அவற்றை உருவாக்கி உள்ளன. உன் ஆசைகள் மிகவும் சிக்கலானவையும், முரண்பட்டவையும் ஆகும் - ஆதலால் நீ உருவாக்கும் சமுதாயமும் மிகவும் சிக்கலாகவும், முரண் பட்டதாகவும் இருப்பதில் ஆச்சரியம் எதுவும் இல்லை.

**கே:** வெளியே இருக்கின்ற குழப்பங்கள், எனக்கு உள்ளே இருக்கின்ற ஒத்திசைவற்ற தன்மையின் பிரதிபலிப்பு என்பதை நான் பார்க்கவும், ஒப்புக்கொள்ளவும் செய்கின்றேன். ஆனால் இதற்குத் தீர்வு என்ன?

**ம:** தீர்வுகளைத் தேடாதே.

**கே:**சில சமயங்களில் ஒருவர் 'கிருபை பெற்ற' ஒரு நிலையில் இருக்கிறார். அப்போது வாழ்க்கை ஆனந்தமாகவும், ஒத்திசை வுடனும் இருக்கிறது. ஆனால் அந்த நிலை நீடிப்பதில்லை! மனோபாவம் மாறி, எல்லாமும் தவறாகப் போய் விடுகின்றன.

**ம:** நீ அமைதியாகவும், ஞாபகங்கள் மற்றும் எதிர்பார்ப்புகள் இல்லாமலும் இருந்தால் உன்னால் நிகழ்வுகளின் அழகான வகைகளை நுணுகிக் காண முடியும். உன் அமைதியின்மைதான் குழப்பங்களை உருவாக்குகிறது.

**கே:** நான் விமான நிலைய அலுவலகத்தில் இருந்த மூன்று மணி நேரம் முழுவதும் பொறுமையையும், விட்டுக் கொடுத்தலையும் தான் கடைப்பிடித்தேன். அது காரியங்களை வேகப்படுத்தவில்லை.

**ம:** குறைந்தபட்சம் அது அவற்றைத் தாமதப்படுத்தவில்லை. நீ எதிர்த்திருந்தால் நிச்சயமாகத் தாமதமாகி இருக்கும்! நீ உடனடியான முடிவுகளை வேண்டுகிறாய்! நாங்கள் இங்கு வித்தைகள் நடத்துவதில்லை. எல்லோரும் ஒரே தவறைத்தான் செய்கிறார்கள் - வழிமுறைகளை மறுத்துவிட்டு, முடிவுகளை வேண்டுகிறார்கள். நீ உலகத்தில் அமைதியையும், ஒத்திசைவையும் வேண்டுகிறாய். ஆனால் அவற்றை உனக்குள் வைத்துக் கொள்ள மறுக்கிறாய். என் அறிவுரையைத் தலைமேற்கொண்டு கடைப்பிடி. அப்போது நீ ஏமாற்றமடையமாட்டாய். வெறும் வார்த்தைகளால் உன் பிரச்சனைகளை நான் தீர்க்க முடியாது. நான் உனக்குச் சொன்னவைகளை நீ விடாப் பிடியாகச் செயல் படுத்த வேண்டும். சரியான அறிவுரை மட்டும் விடுதலை அளிக்காது; அதன்படி செயல்படுவதுதான் விடுதலை அளிக்கும். ஒரு மருத்துவர், நோயாளிக்கு ஊசி போட்டுவிட்டு 'இப்போது அமைதியாக இரு. மேற்கொண்டு எதுவும் செய்யாதே. வெறுமனே அமைதியாக இரு' என்று சொல்வதைப் போல, நான் உனக்குச் சொல்கிறேன்: 'உனக்கு வேண்டிய ஊசியைப் போட்டாகிவிட்டது. இப்போது அமைதியாக இரு. வெறுமனே அமைதியாக இரு. நீ செய்ய வேண்டியது எதுவும் இல்லை'. என் குரு எனக்கு அதைத்தான் செய்தார். என்னிடம் ஏதாவது சொல்வார். பிறகு 'இப்போது அமைதியாக இரு. அதை

எல்லா நேரமும் நினைத்துக் கொண்டிருக்காதே. நிறுத்து. அமைதியாக இரு' என்று சொல்வார்.

**கே:** நான் காலையில் ஒரு மணி நேரம் அமைதியாக இருக்க முடியும். ஆனால் பகல் மிகவும் நீண்டது. பலவகையான நிகழ்வுகள் நடந்து என்னைச் சம நிலையிலிருந்து பிறழச் செய்துவிடுகின்றன. 'அமைதியாக இரு' என்று சொல்வது சுலபம். ஆனால் எனக்குள்ளும், என்னைச் சுற்றிலும் எல்லாமும் அலறிக் கொண்டு இருக்கும் போது அமைதியாக இருப்பது - தயவு செய்து அதை எப்படிச் செய்வது என்று எனக்குச் சொல்லுங்கள்.

**ம:** செய்ய வேண்டியதை எல்லாம் அமைதியிலும், மௌனத்திலும் செய்யலாம். நிலை குலைய வேண்டிய அவசியம் இல்லை.

**கே:** இவையெல்லாம் உண்மைகளுக்குப் பொருந்தாத கோட்பாடுகள். நான் ஐரோப்பாவிற்கு, அங்கு செய்வதற்கு ஒன்றுமே இல்லாமல் திரும்பிச் செல்கிறேன். என் வாழ்க்கை முற்றிலும் காலியாக உள்ளது.

**ம:** நீ அமைதியாக இருக்க முயற்சித்தால், வேலை, வேலை செய்வதற்குத் தேவையான வலிமை, சரியான உந்துதல் ஆகிய எல்லாமும் வரும். எல்லாவற்றையும் முன் கூட்டியே அறிய வேண்டுகிறாயா? உன் எதிர்காலத்தைப் பற்றி பதற்றத்தோடு கூடிய ஆவலுடன் இருக்காதே - இப்போது அமைதியாக இரு. எல்லாமும் அதனதன் இடத்தில் பொருந்தும். எதிர்பாராதது நிகழும். அதே சமயம் எதிர்பார்ப்பது நிகழாமலே போகலாம். உன் இயல்பை உன்னால் கட்டுப்படுத்த முடியாது என்று நீ சொல்லாதே. அதை நீ கட்டுப்படுத்த வேண்டியதில்லை. அதை வீசி எறி. எதிர்ப்பதையோ, பணிந்து போவதையோ உன் இயல்பாகக் கொள்ளாதே. உன்னுடைய பழக்கமாகக் கொண்டால் ஒழிய எந்த அனுபவமும் உன்னை நோகச் செய்யாது. முழுப் பிரபஞ்சத்திற்கும் நீதான் நுட்பமான காரணம். எல்லாமும் நீ இருப்பதால்தான் இருக்கின்றன. இந்தக் கருத்தை உறுதியாகவும், ஆழமாகவும் பிடித்துக்கொள். அதில் திரும்பத் திரும்ப ஆழ்ந்திரு. இதைத் தீர்க்கமான உண்மையாக அறிந்துகொள்வதே விடுதலை.

**கே:** நான் என் பிரபஞ்சத்தின் விதையானால், நான் ஒரு கெட்டுப் போன விதை! பழத்தால் விதை அறியப்படும்.

**ம:** நீ பழிக்கின்ற உன் உலகத்தில் என்ன தவறு?

**கே:** அது வலியால் நிறைந்திருக்கிறது.

**ம:** இயற்கை இனிமையானதோ, வலி மிகுந்ததோ அல்ல. அது புத்திசாலித்தனமானதும், அழகானதும் ஆகும். வலியும், மகிழ்ச்சியும் மனதில்தான் உள்ளன. உன் மதிப்பீடுகளை மாற்று. எல்லாமும் மாறும். மகிழ்ச்சியும், வலியும் வெறுமனே புலன்களின் தொந்தரவுகளே; அவற்றைச் சமமாகப் பாவி. அப்போது பேரின்பம் மட்டுமே இருக்கும். நீ உருவாக்கும் வகையில்தான் உலகம் இருக்கும்; எல்லாவகையிலும் அதை மகிழ்வானதாக்கு. திருப்தி மட்டுமே உன்னை மகிழ்வடையச் செய்யும் - நிறைவேற்றப்பட்ட ஆசைகள் மேலும் அதிகமான ஆசைகளைப் பிறப்பிக்கின்றன. எல்லா ஆசைகளுக்கும் அப்பால் இருப்பதும், தானாக வருவதில் திருப்தி அடைவதும் ஒரு நல்ல முதிர்ந்த நிலை - நிறைவான நிலைக்கான ஒரு முன் நிபந்தனை. அதன் வெளிப்படையான வறண்ட தன்மை மீதும், வெறுமைத் தன்மை மீதும் அவ நம்பிக்கை கொள்ளாதே. என்னை நம்பு - ஆசைகளைத் திருப்திப் படுத்துவதுதான் துன்பங்களைப் பிறப்பிக்கிறது. ஆசைகளிலிருந்து விடுபடுவதுதான் பேரின்பம்.

**கே:** நமக்குத் தேவைகள் இருக்கின்றன.

**ம:** உனக்குத் தேவை இல்லாததை நீ கேட்காவிட்டால் தேவையானது உனக்கு வரும். இருப்பினும் ஒரு சிலரே இந்த முழுவதுமான ஆசையற்ற மற்றும் பற்றற்ற நிலையை அடைகிறார்கள். அது ஒரு உயர்ந்த நிலை - விடுதலைக்கான வாயிற்படி.

**கே:** கடந்த இரண்டு வருடங்களாக நான் தனித்தும், வெறுமையாகவும் வறண்டு இருந்தேன். இறந்து விட வேண்டும் என்று அடிக்கடி பிரார்த்தித்தேன்.

**ம:** நன்று. நீ இங்கு வந்ததிலிருந்து நிகழ்வுகள் நடைபெற ஆரம்பித்துவிட்டன. ஒவ்வொன்றும் அவை நடைபெறும் விதத்தில்

நடக்கட்டும் - இறுதியில் அவை தங்களை நன்கு வகைப்படுத்திக் கொள்ளும். எதிர்காலத்தைக் குறித்து நீ கடும் முயற்சி செய்ய வேண்டியதில்லை - எதிர் காலம் உன்னிடம் தானாகவே வரும். இப்போது செய்வது போல இன்னும் சில காலத்திற்கு நீ தூக்கத்தில் நடந்து கொண்டிருப்பாய், அர்த்தமும், உறுதியும் இழந்து; ஆனால் இந்தக் காலம் முடிந்து, நீ உன் வேலையைப் பயனுள்ளதாகவும், சுலபமானதாகவும் காண்பாய். வெறுமையாகவும், கைவிடப் பட்டும் உணரும் தருணங்கள் எப்போதும் இருக்கும். அதுமாதிரியான தருணங்கள் மிகவும் மதிப்பு வாய்ந்தவை. ஏனெனில் ஆன்மா அதன் நங்கூரத்தைத் தூக்கி விட்டு, தூரமான பிரதேசங்களுக்குப் பயணிக்கிறது என்று அதற்குப் பொருள். இதுதான் பந்தம் அறும் நிலை - பழையது முடிந்துவிட்டது; புதியது இன்னும் வரவில்லை. நீ பயப்பட்டால், அந்த நிலை மிகவும் அவலமாக இருக்கும்; ஆனால் அதில் பயப்பட மெய்யாகவே எதுவும் இல்லை. இந்த அறிவுரையை ஞாபகம் வைத்துக் கொள்: நீ எதை எதிர்கொண்டாலும் அதைக் கடந்து போ.

**கே:** புத்தர்களின் விதிமுறை: எதை ஞாபகம் வைத்திருக்க வேண்டுமோ அதை ஞாபகம் வைத்திருக்க வேண்டும். ஆனால் சரியானதை சரியான தருணத்தில் ஞாபகம் வைத்திருக்க நான் மிகவும் சிரமப் படுகிறேன். எனக்கு மறப்பதுதான் விதிமுறை போலிருக்கிறது!

**ம:** ஒவ்வொரு சூழ்நிலையும் ஒரு ஆசை மற்றும் அச்சப் புயலைக் கொண்டுவந்தால் எதையும் ஞாபகம் வைத்திருப்பது சுலபமல்ல. ஞாபகத்தினால் பிறக்கும் அடக்கமுடியாத ஆசையும்கூட ஞாபகத்தை அழிக்கும்.

**கே:** நான் ஆசையை எப்படி வெல்லுவது? என்னிடம் எதுவும் வலிமையுடன் இல்லை.

**ம:** விரும்பத்தக்கது அல்லது வெறுக்கத்தக்கதுமான பாறைகளின் மேல் வாழ்க்கையின் நீர் மோதி ஓடுகிறது. விவேகமான பார்வையினாலும், பற்றற்ற தன்மையினாலும் அந்தப் பாறைகளை நீக்கு. அப்போது அதே நீர் ஆழமாகவும், அமைதியாகவும், விரைவாகவும், அதிக அளவிலும், அதிக வலிமையுடனும் ஓடும்.

அதைக் கோட்பாட்டளவில் அணுகாதே. விசாரமான சிந்தனைக்கு நேரம் கொடு. நீ விடுதலைக்கு ஆசைப்பட்டால் அதற்கு மிக அருகாமையிலுள்ள காலடியை உதாசீனப்படுத்தாதே. அது மலை ஏறுவது போன்றது; ஒரு காலடி கூட தவறக்கூடாது. ஒரு காலடி குறைவு என்றாலும் உச்சி அடையப்படாது.



# 54. உடலும், மனமும் அறியாமையின் அறிகுறிகள்

**கேட்பவர்:** நாம் ஒரு நாள் நபர் - சாட்சி - பூரணம் (வியக்தி - வியக்தா - அவியக்தா) என்பதைப் பற்றி விவாதித்தோம். பூரணம் (ABSOLUTE) மட்டுமே மெய்யானது. பூரணம் ஒரு குறிப்பிட்ட காலத்திலும், இடத்திலும் மட்டுமே சாட்சி என்று நீங்கள் சொன்னதாக எனக்கு ஞாபகம். நபர் என்பது மொத்தமானதும், நுட்பமானதுமான பூரணத்தால் ஒளியூட்டப்பட்ட உயிரினம். என்னால் இதைத் தெளிவாகப் புரிந்து கொள்ள முடியவில்லை. நாம் அதைத் திரும்பவும் விவாதிக்கலாமா? நீங்கள் மஹாதஹாஷ், சித்தஹாஷ், பரமஹாஷ் என்னும் வார்த்தைகளை உபயோகித்தீர்கள். அவை நபர், சாட்சி, பூரணம் என்பவற்றோடு எவ்வாறு தொடர்பு கொண்டவை?

**மஹராஜ்:** மஹாதஹாஷ் என்பது இயற்கை, இருப்பவைகளின் கடல், புலன்களால் தொடர்பு கொள்ளக்கூடிய எல்லாவற்றிலும் இருக்கும் பௌதீக வெளி. சித்தஹாஷ் என்பது பிரக்ஞையின் விரிவு; காலம், உணர்ந்தறிதல், அறியும் ஆற்றல் ஆகியவற்றின் மனோ வெளி. பரமஹாஷ் என்பது காலமற்ற மற்றும் இடமற்ற மெய்மை, மனமற்றது, வித்தியாசமற்றது, எல்லையற்ற செயல்படும் திறம், ஆதாரம் மற்றும் தோன்றுமிடம், உட்பொருள் மற்றும் சாரம், பொருள் மற்றும் விழிப்புணர்வு ஆகிய இரண்டுமே. ஆனாலும் இரண்டையும் கடந்தது. அதைப் புலன்களால் உணர்ந்தறிய முடியாது. ஆனால் சாட்சியைச் சதா காலமும் சாட்சியாகப் பார்ப்பதாகவும், உணர்ந்தறிபவரை உணர்ந்தறிவதாகவும், எல்லா வெளிப்பாடுகளின் தோற்றமும், முடிவுமாகவும், காலம் மற்றும் இடத்தின் வேராகவும், காரண காரியத் தொடரின் மூல காரணமாகவும் அதை அனுபவப்படலாம்.

**கே:** வியக்தாவிற்கும், அவியக்தாவிற்கும் என்ன வித்தியாசம்?

**ம:** வித்தியாசம் எதுவும் இல்லை. அது ஒளி மற்றும் பகல்வெளிச்சம் போன்றது. பிரபஞ்சம் முழுவதும் ஒளி உள்ளது. அதை நீ பார்ப்பதில்லை. ஆனால் அதே ஒளியை நீ பகல்வெளிச்சமாகப் பார்க்கிறாய். அந்தப் பகல்வெளிச்சம் புலப்படுத்துவது வியக்தி. எப்போதும் நபர் என்பது காணக்கூடிய பொருள். சாட்சி என்பது எது காண்கிறதோ அது. அவற்றின் ஒன்றை ஒன்று சார்ந்திருக்கும் பந்தம், அவற்றின் ஒருமைத் தன்மையின் பிரதிபலிப்பு. அவை முற்றிலும் மாறுபட்ட, தனித்தனி நிலை என்று நீ கற்பனை செய்கிறாய். அவை அப்படி அல்ல. அவை, அசைவற்றிருக்கும் போதும், அசையும் போதும் இருக்கும் ஒரே விழிப்புணர்வு. ஒரு நிலைக்கு மற்றதைப் பற்றிய உணர்வு இருக்கும். 'சித்'தில் மனிதன் கடவுளை அறிவான்; கடவுளுக்கு மனிதனைத் தெரியும். 'சித்'தில் மனிதன் உலகத்தை வடிவமைக்கிறான், உலகம் மனிதனை வடிவமைக்கிறது. 'சித்' என்பது இணைப்பு, இரு எதிர் எதிர் துருவங்களுக்கு இடையே ஆன பாலம், ஒவ்வொரு அனுபவத்திலும் உள்ள சமப்படுத்தும் மற்றும் இணைக்கும் காரணி. எல்லா உணர்ந்தறிந்தவைகளின் மொத்தமே நீ பொருள் என்று சொல்வது. எல்லா உணர்ந்தறிபவர்களின் மொத்தமே நீ பிரபஞ்ச மனம் என்று சொல்வது. அந்த இரண்டின் அடையாளம், இரண்டையும் ஒன்றாகப் பார்க்கும் தன்மையாகவும், ஒன்றாகப் பார்ப்பதாகவும், ஒத்திசைவு மற்றும் புத்திசாளித்தனமாகவும், அன்பு மற்றும் அன்பைச் செலுத்துவதாகவும் வெளிப்பட்டுத் தன்னைத் திரும்ப உறுதி செய்கிறது.

**கே:** திரிகுணங்கள் - சாத்வீகம், ராஜசம், தாமசம் ஆகியவை பருப்பொருளில் மட்டுமே உள்ளனவா அல்லது மனதிலுமா?

**ம:** இரண்டிலுமேதான். ஏனெனில் அவை இரண்டும் தனித் தனியானவை அல்ல. பூரணம் மட்டுமே குணங்களுக்கு அப்பாற்பட்டது. உண்மையில் இவையெல்லாம் பார்வையின் கோணங்கள், பார்க்கும் விதங்கள். இவை மனதில் மட்டுமே உள்ளன. மனதிற்கு அப்பால் வேறுபாடுகள் மறைந்து விடுகின்றன.

**கே:** பிரபஞ்சம் புலன்களால் உருவாக்கப்பட்டதா?

**ம:** எப்படி நீ தூங்கி எழுந்தவுடன் உன் உலகத்தை மறு உருவாக்கம் செய்கிறாயோ அப்படி பிரபஞ்சம் கட்டவிழ்க்கப் படுகிறது. ஐந்து உணர்ந்தறியும் உறுப்புகள், ஐந்து இயங்கும் உறுப்புகள், ஐந்து விழிப்புணர்வின் வாகனங்களோடு சேர்ந்து மனமானது ஞாபகம், எண்ணம், புத்தி மற்றும் அகங்காரம் எனத் தோன்றுகிறது.

**கே:** விஞ்ஞானம் மிகுந்த முன்னேற்றம் அடைந்துள்ளது. நம் முன்னோர்களை விட நமக்கு உடலைப் பற்றியும், மனதைப் பற்றியும் நன்கு தெரியும். உங்களுடைய பாரம்பரிய வழியில் மனதையும், பொருளையும் விவரிப்பதும், நுணுகி ஆராய்வதும் இனிமேல் செல்லுபடி ஆகாது.

**ம:** ஆனால் உன் விஞ்ஞானிகளும், அவர்களுடைய விஞ்ஞானமும் எங்கே உள்ளன? அவர்கள் மறுபடியும் உன் மனதின் உருவகங்கள் அல்லவா?

**கே:** இங்குதான் வித்தியாசம் இருக்கிறது! எனக்கு இவையெல்லாம் என் சொந்தக் கற்பனைகள் அல்ல. அவை நான் பிறப்பதற்கு முன்பே இருந்தன. நான் இறந்த பின்பும் இருப்பன.

**ம:** ஆமாம். காலத்தையும், இடத்தையும் மெய்யானவை என்று நீ ஒப்புக் கொண்டால் உன்னை மிகமிகச் சிறியதாகவும், குறுகிய காலமே வாழக்கூடியவனாகவும் கருதுவாய். ஆனால் அவை மெய்யானவையா? அவை உன்னைச் சார்ந்து இருக்கின்றனவா அல்லது நீ அவற்றைச் சார்ந்து இருக்கிறாயா? உடலாக நீ இடத்தில் இருக்கிறாய். மனமாக நீ காலத்தில் இருக்கிறாய். ஆனால் நீ வெறுமனே ஒரு மனதை உள்ளே கொண்டுள்ள உடல் மட்டும்தானா? நீ எப்போதாவது ஆராய்ந்து இருக்கிறாயா?

**கே:** என்னிடம் அதற்கு ஆர்வமும், வழியும் இல்லை.

**ம:** நான் இரண்டையும் பரிந்துரைக்கிறேன். ஆனால் நிஜமான விவேகமான பார்வையும், பற்றற்ற தன்மையும் உன்னுடையவை.

**கே:** நான் அனுமானிக்கக் கூடிய ஒரே உந்துதல் என்னுடைய காரணமற்ற, காலமற்ற மகிழ்ச்சி மட்டும்தான். அதற்கான வழிமுறை என்ன?

**ம:** மகிழ்ச்சி உடன் வருவது. உண்மையானதும், பலனளிக்கக் கூடியதுமான உந்துதல் அன்பு. நீ மக்கள் துன்பப்படுவதைப் பார்த்து, அவர்களுக்கு உதவச் சிறந்த வழியைத் தேடுகிறாய். இதற்கான விடை வெளிப்படையானது - முதலில் உன்னை உதவி தேவைப்படாத நிலையில் வை. உன் மனப்பாங்கு தூய நல்லெண்ணம் உடையது, எந்த விதமான எதிர்பார்ப்பும் இல்லாதது என்பதில் உறுதியாக இரு.

வெறும் மகிழ்ச்சியை மட்டும் தேடுபவர்கள் உன்னதமான விருப்பு வெறுப்பின்மையில் முடியலாம். ஆனால் அன்பு எப்போதும் ஓயாது.

வழிமுறையைப் பொருத்தவரையில் ஒன்றே ஒன்றுதான் உள்ளது - நீ உன்னை அறிய வேண்டும் - என்னவாகத் தெரிகிறாய், மற்றும் என்னவாக உள்ளாய் என்னும் இரண்டையுமே. மனத் தூய்மையும், பரோபகாரமும் ஒன்றாகச் செல்பவை, ஒன்றுக்கு மற்றொன்று தேவை. ஒன்றை ஒன்று வலிமைப்படுத்திக் கொள்கின்றன.

**கே:** கருணை, தவிர்க்கக் கூடிய துன்பங்கள் நிறைந்த, ஒரு புறவயப் பட்ட உலகத்தை உணர்த்துகிறது.

**ம:** உலகம் புறவயப்பட்டதல்ல; அதன் துன்பங்கள் தவிர்க்கக் கூடியவை அல்ல. கருணை இருக்கிறது. ஆனால் அது கற்பனையான காரணங்களுக்காகத் துன்பப்படுவதை மறுப்பதற்கான வார்த்தை.

**கே:** காரணங்கள் கற்பனையானவை என்றால் துன்பப் படுவதை ஏன் தவிர்க்க முடியாது?

**ம:** எப்பொதும், பொய்யானதுதான் உன்னைத் துன்பப் பட வைக்கிறது, பொய்யான ஆசைகள் மற்றும் அச்சங்கள், பொய்யான மதிப்பீடுகள் மற்றும் கருத்துக்கள், மக்களுக்கிடையே பொய்யான உறவுகள் ஆகியன. பொய்யானதை விட்டுவிட்டால் நீ துன்பத்திலிருந்து விடுபடுவாய். உண்மை மகிழ்ச்சியைக் கொடுக்கிறது - உண்மை விடுதலை அளிக்கிறது.

**கே:** உண்மை என்னவென்றால், நான் உடலில் அடைக்கப்பட்ட ஒரு மனம் என்பது. இது ஒரு வருத்தமான உண்மை.

**ம:** நீ உடலும் அல்ல, உடலில் இருப்பதும் அல்ல - உடல் என்று ஒன்று இல்லை. உன்னை மிக மோசமாகத் தவறாகப் புரிந்து கொண்டுள்ளாய்; சரியாகப் புரிந்துகொள்ள ஆராய்.

**கே:** ஆனால் நான் உடலாகப் பிறந்துள்ளேன், உடலில் பிறந்துள்ளேன், உடலுடன் இறப்பேன், உடலாக இறப்பேன்.

**ம:** இது உன் தவறான கருத்து. விசாரம் செய், ஆராய், உன்னையும் மற்றவர்களையும் சந்தேகப்படு. மெய்யை அறிய நீ உன் திட நம்பிக்கைகளுடன் ஒட்டிக்கொண்டிருக்காதே; நீ உனக்கு அடுத்து இருப்பதைப் பற்றி உறுதியாக இருந்தால், உச்சமான மெய்மையை உன்னால் அடையவே முடியாது. நீ பிறந்துள்ளாய், இறந்துவிடுவாய் என்னும் உன் கருத்து அபத்தமானது; அறிவுபூர்வமாகவும், அனுபவபூர்வமாகவும் அது முரண்படுகிறது.

**கே:** சரி. நான் உடல் என்று வலியுறுத்தமாட்டேன். நீங்கள் சொல்வதில் ஒரு கருத்து உள்ளது. ஆனால் இங்கு, இப்போது உங்களிடம் நான் பேசிக்கொண்டிருக்கும் போது நான் என் உடலில் இருக்கிறேன், வெளிப்படையாக. உடல் நானாக இல்லையென்றாலும், அது என்னுடையது.

**ம:** முழுப் பிரபஞ்சமும் உன் இருத்தலுக்கு ஓயாமல் பங்களிக்கிறது. ஆதலால் முழுப் பிரபஞ்சமும் உன் உடல். இந்த அர்த்தத்தில் - நான் ஒப்புக் கொள்கிறேன்.

**கே:** என் உடல் எனக்குள் ஆழமாகத் தாக்கம் ஏற்படுத்துகிறது. ஒன்றுக்கும் மேலான வழிகளில் என் உடல் என் விதி. பிறப்பிலிருந்தே வருகின்ற மற்றும் உருவாக்கிக் கொண்ட என் குணாதிசயம், என் மனோபாவம், என் எதிர்வினைகளின் தன்மை, என் ஆசைகள் மற்றும் அச்சங்கள் - இவை எல்லாம் உடலை அடிப்படையாகக் கொண்டவை. சிறிது மது அல்லது ஏதாவது போதைப் பொருட்கள் அருந்தினால் எல்லாமும் மாறிவிடுகிறது. போதை இறங்கும் வரை நான் வேறு மனிதன் ஆகிவிடுகிறேன்.

**ம:** நீ உன்னை உடலாக நினைப்பதால்தான் இவை எல்லாம் நடக்கின்றன. உன் மெய்யான சுயத்தை அறி. அப்போது போதைப் பொருட்களும் உன்மேல் செயல்புரிய முடியாது.

**கே:** *நீங்கள் புகை பிடிப்பீர்களா?*

**ம:** என் உடல் சில பழக்கங்களைக் கொண்டுள்ளது. அது இறக்கும் வரை அவை தொடரலாம். அதில் எந்தத் தவறும் இல்லை.

பிறந்துள்ளோம் என்னும் கற்பனைக்கே மறுபடியும் வருவோம். உன் பெற்றோர்கள் உன்னிடம் சொன்னதில் நீ சிக்கிக் கொண்டுவிட்டாய்: கருவுறுதல், கர்ப்பம் மற்றும் பிறப்பு, மழலை, குழந்தை, விடலை, வாலிபர், மேற்கொண்டு அதுபோல. நீ உடல் என்னும் கருத்தை அதற்கு மாற்றுக் கருத்தான நீ உடல் அல்ல என்னும் கருத்தின் துணையால் விட்டு விடு. சந்தேகமில்லாமல் இதுவும் ஒரு கருத்துதான்; வேலை முடிந்தவுடன் கைவிடப்படும் ஒன்றைப் போல அதைக் கையாள். நான் உடல் அல்ல என்னும் கருத்து உடலுக்கு மெய்த் தன்மையைத் தருகிறது. உண்மையில் உடல் என்று ஒன்று இல்லை. அது ஒரு மனோ நிலை. உனக்குப் பிடித்தபடி எத்தனை உடல்களை வேண்டுமானாலும், எத்தனை விதங்களில் வேண்டுமானாலும் நீ வைத்துக் கொள்ளலாம். உனக்கு என்ன வேண்டும் என்பதை உறுதியாக ஞாபகம் வைத்துக் கொண்டு, ஒத்துவராததைத் தள்ளிவிடு.

**கே:** நான் ஒரு பெட்டிக்குள் இருக்கும் மற்றொரு பெட்டிக்குள் இருக்கும் பெட்டியைப் போல இருக்கிறேன். வெளிப்புறமுள்ள பெட்டி உடலாகச் செயல்படுகிறது, அதற்கு அடுத்துள்ளது உடலுக்குள் வசிக்கும் ஆத்மா போன்றது. வெளிப்புறப் பெட்டியைக் கழித்தால் அதற்கு அடுத்துள்ளது உடலாகவும், அதற்கு உள்ளே உள்ளது ஆத்மாவாகவும் ஆகிறது. அது ஒரு முடிவில்லாத தொடரைப் போல, ஒரு முடிவற்ற பெட்டிகளைத் திறப்பதைப் போல. கடைசிப் பெட்டிதான் முடிவான ஆத்மாவா?

**ம:** உனக்கு ஒரு உடல் இருந்தால், ஒரு ஆத்மாவையும் நீ கொண்டிருக்க வேண்டும். இங்கு நீ உதாரணமாகச் சொல்லும் பெட்டிகளின் அடுக்கு சரி. ஆனால் இங்கு, இப்போது உன் எல்லா

உடல்கள் மற்றும் ஆன்மாக்கள் மூலமாகச் 'சித்'தின் தூய ஒளியாகிய பிரக்ஞை மிளிர்கிறது. அதை அசையாமல் வைத்திரு. பிரக்ஞை இல்லாமல் உடல் ஒரு நொடி கூட நிலைக்காது. உடலில் சக்தி, அன்பு மற்றும் புத்திசாளித்தனத்தின் ஒரு ஓட்டம் இருக்கிறது. அது உடலை வழி நடத்தி, பராமரித்து, சக்தி ஊட்டுகிறது. அந்த ஓட்டத்தைக் கண்டுபிடித்து அதனுடன் இரு.

இவையெல்லாம் பேசும் வகைகள். வார்த்தைகள் ஒரு கடந்து போக உதவும் பாலம் போன்றவையும், ஒரு தடையைப் போன்றவையும் கூட. உன் உடலின் திசுக்களை ஊடுருவுகின்ற உயிரின் கீற்றைக் கண்டுபிடித்து அதனுடன் இரு. அது ஒன்றுதான் உன் உடல் கொண்டுள்ள ஒரே மெய்மை.

**கே:** இறப்பிற்குப் பிறகு அந்த உயிரின் கீற்று என்னவாகிறது?

**ம:** அது காலத்திற்கு அப்பாற்பட்டது. பிறப்பும், இறப்பும் காலத்தில் உள்ள புள்ளிகள். உயிர் அதன் பல வலைகளை சாசுவதமாகப் பின்னிக் கொண்டிருக்கிறது. பின்னுதல் காலத்தில் உள்ளது. ஆனால் உயிரோ காலமற்றது. அதன் வெளிப்பாடுகளுக்கு என்ன பெயரும், உருவமும் நீ கொடுத்தாலும் அது கடலைப் போன்றது - ஒருபோதும் மாறாதது, எப்பொழுதும் மாறுவது.

**கே:** நீங்கள் சொல்வதெல்லாம் அழகாக நம்பத்தக்கவையாகத் தெரிகின்றன. இருந்தாலும் விந்தையாகவும், அன்னியமாகவும், அடிக்கடி விரோதமாகவும், ஆபத்தாகவும் தோன்றுகின்ற உலகத்தில் வெறுமனே ஒரு நபராக இருப்பதான உணர்வு மறைவதில்லை. காலத்தாலும், இடத்தாலும் கட்டுப் படுத்தப்பட்ட ஒரு நபராக இருப்பதால் நான் எப்படி அதற்கு நேரெதிராக, நபரற்ற, குறிப்பிட்ட ஏதோ ஒன்றாக இல்லாமல் பிரபஞ்சப் பிரக்ஞை உடையவனாக என்னை உணர முடியும்?

**ம:** நீ என்னவாக இல்லையோ அதுவாக உன்னை உறுதி செய். நீ என்னவாக இருக்கிறாயோ அதை மறு. தூய்மையான அறியும் ஆற்றல்கூறை, எந்தத் தனிப்பட்ட திரிபும் இல்லாத பிரக்ஞையை விட்டுவிடுகிறாய். 'சித்'தின் மெய்த்தன்மையை நீ ஒப்புக்கொள்ளா விட்டால் உன்னால் உன்னை எப்போதும் அறிய முடியாது.

**கே:** நான் என்ன செய்வது? நீங்கள் என்னைப் பார்ப்பதைப் போன்று நான் என்னைப் பார்ப்பதில்லை. நீங்கள் சரியாகவும், நான் தவறாகவும் இருக்கலாம். ஆனால் நான் என்ன என்று உணர்வதை எப்படி இல்லாமல் செய்வது?

**ம:** தன்னை ஒரு பிச்சைக்காரனாக நம்பும் ஒரு அரசகுமாரனை ஒரே ஒரு வழியில் தான் முழுவதுமாக நம்பவைக்க முடியும்: அவன் ஒரு இளவரசனாக நடந்து கொண்டு, என்ன நிகழ்கிறது என்று பார்க்கச் செய்ய வேண்டும். நான் சொன்னபடி நடந்து கொண்டு, நிஜமாலும் நிகழ்வதன்படி மதிப்பிடு. நான் கேட்பதெல்லாம் முதல் அடியை எடுத்து வைக்கத் தேவையான சிறிதளவு நம்பிக்கை. அனுபவத்துடன் நம்பிக்கை வரும். அப்போது மேற்கொண்டு நான் உனக்குத் தேவைப்பட மாட்டேன். நீ என்ன என்று எனக்குத் தெரியும். அதை நான் உனக்குச் சொல்கிறேன். என்னைச் சிறிது காலம் நம்பு.

**கே:** நான் இங்கு, இப்போது இருக்க என் உடலும் அதன் உணர்வுகளும் எனக்குத் தேவை. புரிந்து கொள்ள எனக்கு ஒரு மனம் வேண்டும்.

**ம:** உடலும், மனமும் அறியாமை மற்றும் தவறான புரிதலின் அறிகுறிகள். நீ தூய பிரக்ஞையாக, உடலற்ற மற்றும் மனமற்ற, இடமற்ற மற்றும் காலமற்ற, ‘எங்கு’, ‘எப்போது’ மற்றும் ‘எப்படி’ ஆகியவற்றிற்கு அப்பாற்பட்டதாக நடந்து கொள். அதில் ஆழ்ந்திரு, அதைப் பற்றிச் சிந்தி. அதன் மெய்த்தன்மையை ஒப்புக் கொள்ளக் கற்றுக்கொள். சதா காலமும் அதை எதிர்க்கவும், மறுக்கவும் செய்யாதே. குறைந்த பட்சம் திறந்த மனதையாவது கொண்டிரு. யோகா என்பது வெளிப்புறத்தை உட்புறமாக வளைப்பது. எல்லாமாகவும், எல்லாவற்றைக் கடந்தும் இருக்கும் மெய்யை உன் மனதும், உடலும் வெளிப்படுத்துமாறு செய். செயல்படுவதால் மட்டுமே வெற்றி பெற முடியும். வாதிடுவதால் அல்ல.

**கே:** என் முதல் கேள்விக்கே வருவதற்குத் தயவுசெய்து அனுமதியுங்கள். ஒரு நபராக இருக்கும் தவறு எப்படி ஆரம்பித்தது?

**ம:** பூரணம் காலத்திற்கு முந்தையது. விழிப்புணர்வு முதலில் வருகிறது. ஞாபகங்கள் மற்றும் மனப் பழக்கங்களின் ஒரு கற்றை

கவனத்தை ஈர்த்து, விழிப்புணர்வு ஒருமுகப்பட்டு, ஒரு நபர் திடீரென்று தோன்றுகிறார். விழிப்புணர்வின் ஒளியை நீக்கிவிட்டு, தூங்கச் செல் அல்லது மயங்கி விழு. அப்போது நபர் மறைந்துவிடும். நபர் (வியக்தி) மின்னுகிறது, சாட்சி (வியக்தா) எல்லா இடத்தையும், காலத்தையும் கொண்டிருக்கிறது. பூர்ணம் (அவியக்தா) இருக்கிறது.



# 55. எல்லாவற்றையும் விடு; நீ எல்லாவற்றையும் பெறுவாய்

**கேட்பவர்:** தற்போதைய கணத்தில் உங்களுடைய நிலை என்ன?

**மஹராஜ்:** அனுபவப்படாத ஒரு நிலை. அதில் எல்லா அனுபவங்களும் உள்ளடங்கியுள்ளன.

**கே:** உங்களால் மற்றொரு மனிதரின் மனதிலும் இதயத்திலும் நுழைந்து அவருடைய அனுபவங்களைப் பகிர முடியுமா?

**ம:** முடியாது. அது மாதிரியானவைக்குச் சிறப்புப் பயிற்சி தேவை. நான் ஒரு கோதுமை வியாபாரியைப் போன்றவன். எனக்கு ரொட்டியைப் பற்றியும், கேக்கைப் பற்றியும் சிறிதளவுதான் தெரியும். கோதுமைக் கூழின் சுவையைப் பற்றிக் கூட எனக்குத் தெரியாது. ஆனால் கோதுமை மணிகளைப் பற்றி எல்லாமும் நன்றாக எனக்குத் தெரியும். எல்லா அனுபவங்களின் மூலாதாரம் எனக்குத் தெரியும். ஆனால் அனுபவங்கள் எடுக்கும் கணக்கற்ற குறிப்பிட்ட வடிவங்களைப் பற்றி எனக்குத் தெரியாது. அதைப் பற்றி எனக்குத் தெரியவும் வேண்டியதில்லை. கணத்துக்குக் கணம் என் வாழ்க்கையை வாழ என்ன தெரிய வேண்டுமோ அது எப்படியோ எனக்குத் தெரிந்து விடுகிறது.

**கே:** உங்களுடைய குறிப்பிட்ட இருத்தலும், என்னுடைய குறிப்பிட்ட இருத்தலும் ப்ரம்மாவின் மனதில் இருக்குமா?

**ம:** பிரபஞ்ச மயமானது குறிப்பிட்ட ஒன்றைப் பற்றி அறிந்திருக்காது. ஒரு நபராக இருப்பது ஒரு தனிப்பட்ட சமாச்சாரம். ஒரு நபர் காலத்திலும், இடத்திலும் இருக்கிறார். அவருக்குப் பெயரும் உருவமும் உண்டு. ஆரம்பமும் முடிவும் உண்டு. பிரபஞ்ச மயமானது எல்லா நபர்களையும் உள்ளடக்கியது. பூரணம்

(அவியக்தா) எல்லாவற்றின் மூலத்திலும், எல்லாவற்றிற்கும் அப்பாலும் உள்ளது.

**கே:** எனக்கு முழுமைத் தன்மையைப் பற்றி அக்கறை இல்லை. என் தனிப்பட்ட விழிப்புணர்விற்கும், உங்களுடைய தனிப்பட்ட விழிப்புணர்விற்கும் இடையில் உள்ள இணைப்பு என்ன?

**ம:** இரண்டு கனவு காண்பவர்களுக்கு இடையே என்ன இணைப்பு இருக்க முடியும்?

**கே:** ஒருவர் மற்றவரைப் பற்றி கனவு காணலாம்.

**ம:** இதைத்தான் மக்கள் செய்கிறார்கள். ஒவ்வொருவரும் 'மற்றவர்களை' கற்பனை செய்து, அவர்களுடன் ஒரு இணைப்பைத் தேடுகிறார்கள். தேடுபவர்தான் இணைப்பு. வேறு எதுவும் கிடையாது.

**கே:** நாமாக உள்ள விழிப்புணர்வின் பல புள்ளிகளுக்கிடையே கண்டிப்பாகப் பொதுவான ஒன்று இருக்க வேண்டும்.

**ம:** பல புள்ளிகள் எங்கு உள்ளன? உன் மனதில். உன் உலகம் உன் மனதிலிருந்து தனிப்பட்டது என்று நீ வலியுறுத்துகிறாய். அது எப்படி அவ்வாறு இருக்க முடியும்? மற்றவர்களின் மனதை அறிந்து கொள்ள நீ ஆசைப்படுவது உன் சொந்த மனதை அறியாததால் தான். முதலில் உன் மனதை அறிந்துகொள். அப்போது மற்றவர்களின் மனம் பற்றிய கேள்வியே எழாததைக் காண்பாய். ஏனெனில் மற்ற மனிதர்களே இல்லை. நீதான் பொதுக் காரணி, மனங்களுக்கு இடையேயான ஒரே இணைப்பு. இருத்தல்தான் விழிப்புணர்வு. 'நான்' என்பது எல்லாவற்றிற்கும் பொருந்துகிறது.

**கே:** உச்ச உயர்வான மெய்மை (பரப்ரம்மம்) நம் எல்லோரிலும் இருக்கலாம். ஆனால் அதனால் நமக்கு என்ன பயன்?

**ம:** 'என் பொருள்களை வைக்க எனக்கு ஒரு இடம் வேண்டும். ஆனால் வெட்ட வெளியினால் எனக்கு என்ன பயன்' என்றோ, அல்லது 'எனக்கு பால், டீ, காபி அல்லது சோடா வேண்டும்; ஆனால் தண்ணீரினால் எனக்கு எந்தப் பயனும் இல்லை' என்றோ சொல்லும் மனிதனைப் போல நீ இருக்கிறாய். உச்ச உயர்வான

மெய்மைதான் எல்லாவற்றையும் சாத்தியமாக்குகிறது என்று உனக்குத் தெரியாதா? ஆனால் அதனால் எனக்கு என்ன பயன் என்று கேட்டால், 'ஒன்றுமில்லை' என்றுதான் நான் பதில் சொல்வேன். தினசரி வாழ்க்கை சம்பந்தப் பட்ட சமாச்சாரங்களில் மெய்யை அறிந்தவருக்கு எந்த அனுகூலமும் இல்லை; அவருக்குப் பாதிப்பு வேண்டுமானால் இருக்கலாம். பொறாமையும், அச்சமும் இல்லாதிருப்பதால் அவர் தன்னைப் பாதுகாத்துக் கொள்வதில்லை. லாபம் என்னும் கருத்தே அவருக்கு அன்னியமானது. அவர் சேர்த்து வைப்பதை வெறுப்பார். அவருடைய வாழ்க்கை தன்னை எப்போதும் நீக்குவது, பகிர்ந்துகொள்வது, கொடுப்பது என்பதுதான்.

**கே:** உச்ச உயர்வை அடைவதால் எந்தப் பயனும் இல்லை என்றால் ஏன் தொந்தரவுபட வேண்டும்?

**ம:** நீ எதையாவது பற்றிக்கொண்டால்தான் தொந்தரவு. நீ எதையும் பற்றிக் கொள்ளாவிட்டால் எந்தப் பிரச்சனையும் எழாது. குறைவானதை விட்டுவிடுவது பெரியதைப் பெறுவது. எல்லாவற்றையும் விட்டு விடு, நீ எல்லாவற்றையும் பெறுவாய். பிறகு வாழ்க்கை அதற்கு என்ன அர்த்தமோ அதுவாக மாறும்: ஒரு தீராத ஆதாரத்திலிருந்து வரும் தூய ஒளி வீச்சாக. அந்த ஒளியில் உலகம் மங்கலாக ஒரு கனவைப் போல் தோன்றும்.

**கே:** என் உலகம் வெறுமனே ஒரு கனவாகவும், அதில் நீங்களும் ஒரு பகுதியாக இருந்தால், நீங்கள் எனக்கு என்ன செய்ய முடியும்? கனவு மெய்யானதாக இல்லாமலும், இருத்தலைக் கொண்டிருக்காமலும் இருந்தால் மெய்மை எப்படி அதைப் பாதிக்கும்?

**ம:** கனவு இருக்கும் போது, அதற்குத் தற்காலிகமான இருத்தல் இருக்கும். அதைப் பிடித்து வைத்துக்கொள்வதற்கான உன் ஆசைதான் பிரச்சனையை உருவாக்குகிறது. போக விடு. கனவு உன்னுடையது என்னும் கற்பனையை நிறுத்து.

**கே:** ஒரு கனவு காண்பவர் இல்லாமல் ஒரு கனவு இருக்கும் என்றும், என்னுடைய சுய விருப்பத்தினால் நான் என்னை அதனுடன் அடையாளப்படுத்திக்கொள்கிறேன் என்றும் நீங்கள்

தீர்மானமாகச் சொல்வதுபோல் இருக்கிறது. ஆனால் நானே கனவு காண்பவனும், கனவும். யார் கனவை நிறுத்துவது?

ம: கனவை அதன் கடைசி வரைக்கும் விரிய விடு. அதற்கு நீ ஒன்றும் செய்ய முடியாது. ஆனால் கனவை நீ கனவாகப் பார்த்து, அதற்கு மெய்மையின் முத்திரையைக் கொடுப்பதை மறுக்கலாம்.

கே: இங்கு நான் உங்கள் முன்னால் அமர்ந்திருக்கிறேன். நான் கனவு காண்கிறேன். நான் என் கனவில் பேசுவதை நீங்கள் கவனித்துக் கொண்டிருக்கிறீர்கள். நம் இருவருக்கும் இடையிலான இணைப்பு என்ன?

ம: உன்னை எழுப்ப வேண்டும் என்னும் என்னுடைய நோக்கம்தான் இணைப்பு. என் இதயம் நீ விழிக்க வேண்டுகிறது. உன் கனவில் நீ துன்பப்படுவதை நான் காண்கிறேன். உன் துன்பங்களை முடிவிற்குக் கொண்டுவர நீ விழிக்க வேண்டும் என்றும் எனக்குத் தெரியும். உன் கனவை நீ கனவாகப் பார்த்தால் நீ விழித்துவிடுவாய். ஆனால் உன் கனவில் எனக்கு அக்கறை இல்லை. நீ விழிக்க வேண்டும் என்பதே எனக்குப் போதும். நீ உன் கனவை ஒரு தீர்மானமான முடிவிற்குக் கொண்டுவரவோ, அல்லது அதைப் புனிதமாக்கவோ, அல்லது மகிழ்ச்சியாக்கவோ, அல்லது அழகாக்கவோ செய்யாதே. உனக்குத் தேவையானதெல்லாம் நீ கனவு காண்கிறாய் என்பதை அறிவதே. கற்பனை செய்வதை நிறுத்து. நம்புவதை நிறுத்து. முரண்பாடுகளையும், பொருத்த மற்றவைகளையும், பொய்மையையும், மனித குலத்தின் துன்பத்தையும், அதற்கு அப்பால் செல்ல வேண்டிய அவசியத்தையும் பார். அண்ட வெளியின் அடர்த்திக்குள்ளே ஒரு மிகச் சிறிய அணுவாகிய விழிப்புணர்வு மிதக்கிறது. அதில் முழுப் பிரபஞ்சமும் அடங்கியிருக்கிறது.

கே: கனவில் மெய்யாகவும், எப்போதும் இருப்பதாகவும் தோன்றும் பற்றுதல்கள் இருக்கின்றன. விழிக்கும் போது அவை மறைந்து விடுமா?

ம கனவில் நீ சிலரை நேசிக்கிறாய். மற்றவர்களை நேசிப்பதில்லை. விழித்தவுடன் நீ எல்லோரையும் அரவணைக்கும்

அன்பாகவே உன்னைப் பார்ப்பாய். தனிப்பட்ட அன்பு எவ்வளவுதான் தீவிரமாகவும், உண்மையாகவும் இருந்தாலும் தவறாமல் கட்டுப்படுத்துகிறது. சுதந்திரத்தில் உள்ள அன்பு எல்லோரையும் நேசிப்பது.

**கே:** மக்கள் வந்து போகிறார்கள். தான் சந்திப்பவரைத்தான் ஒருவர் நேசிப்பார். எல்லோரையும் ஒருவர் நேசிக்க முடியாது.

**ம:** நீ அன்பாகவே இருக்கும் போது காலத்திற்கும், எண்ணிக்கை களுக்கும் அப்பாற்பட்டவன். ஒருவரை நேசிப்பதால் நீ எல்லோரையும் நேசிக்கிறாய். எல்லோரையும் நேசிப்பதால் நீ ஒவ்வொருவரையும் நேசிக்கிறாய். தனித்த ஒருவரும், ஒட்டு மொத்தமாக எல்லோரும் ஒன்றுக்குப் பதிலாக ஒன்று அல்ல.

**கே:** நீங்கள் காலமற்ற நிலையில் இருப்பதாகக் கூறுகிறீர்கள். அதற்குக் கடந்தகாலமும், எதிர்காலமும் உங்களுக்குத் திறந்திருக்கிறது என்று பொருளா? நீங்கள் ஸ்ரீராமரின் குருவான வசிஷ்ட முனியைச் சந்தித்திருக்கிறீர்களா?

**ம:** இந்தக் கேள்வி காலத்தில், காலத்தைப் பற்றியது. மறுபடியும் நீ ஒரு கனவின் உள்ளடக்கத்தைப் பற்றி என்னிடம் கேட்கிறாய். காலமற்ற தன்மை காலத்தின் மாயைக்கு அப்பாற்பட்டது; அது காலத்தில் ஒரு நீட்சி அல்ல. தன்னை வசிஷ்டராக அழைத்துக் கொண்டவருக்கு வசிஷ்டரைப் பற்றித் தெரியும். நான் எல்லாப் பெயர்களுக்கும், வடிவங்களுக்கும் அப்பாற்பட்டவன். வசிஷ்டர் உன் கனவில் ஒரு கனவு. எனக்கு எப்படி அவரைத் தெரியும்? நீ கடந்த காலத்தைப் பற்றியும், எதிர்காலத்தைப் பற்றியும் மிகவும் அக்கறை கொண்டுள்ளாய். இவை எல்லாம் தொடர்வதற்கான, அழிந்து போகாமல் உன்னைக் காத்துக் கொள்வதற்கான உன்னுடைய ஏக்கத்தினால்தான். நீ தொடர வேண்டி, மற்றவர்கள் உன் கூட இருக்க வேண்டும் என்று விரும்புகிறாய். அதனால் அவர்கள் உயிர்வாழ உனக்கு அக்கறை. ஆனால் உயிர்வாழ்தல் என்று நீ சொல்வது இருக்கிறது, ஆனால் அது ஒரு கனவின் உயிர்வாழ்தல். அதைவிட இறத்தல் சிறந்தது. அதில் விழித்தெழுவற்கு ஒரு சந்தர்ப்பம் உள்ளது.

**கே:** நீங்கள் சாசுவதத்தை அறிவீர்கள். ஆதலால் உங்களுக்கு வாழ்வதைப் பற்றி அக்கறை இல்லை.

**ம:** அது அதற்கு நேர்மாறானது. எல்லா ஆசைகளிலிருந்தும் சுதந்திரமாக இருப்பது சாசுவதத் தன்மை. எல்லாப் பந்தங்களும் அச்சத்தைக் குறிக்கின்றன. ஏனெனில் எல்லாமும் கடந்து போகக் கூடியவை. அச்சம் ஒருவரை அடிமையாக்கும். பந்தத்திலிருந்து விடுதலை அடைவது பயிற்சியினால் வருவதில்லை. ஒருவர் தன் உண்மையான இருத்தலை அறிந்தால் அது இயற்கையானது. அன்பு பற்றிக் கொண்டிருக்காது. பற்றிக் கொண்டிருப்பது அன்பல்ல.

**கே:** அப்படியானால் பற்றற்று இருப்பதை அடைய வழி எதுவும் கிடையாதா?

**ம:** அடைய எதுவும் கிடையாது. எல்லாக் கற்பனைகளையும் விட்டுவிடு. உன்னை உள்ளவாறு அறி. சுய அறிவுதான் பற்றற்ற தன்மை. எல்லா ஏக்கங்களும் போதவில்லை என்னும் ஒரு உணர்வால்தான் வருகின்றன. உன்னிடம் இல்லாதது எதுவும் இல்லை என்றும், இருப்பவை எல்லாமும் நீயும், உன்னுடையவை என்றும் நீ அறிந்தால் ஆசைப்படுவது இல்லாமல் போய்விடும்.

**கே:** என்னை அறிய நான் பிரக்ஞையைப் பயிற்சி செய்ய வேண்டுமா?

**ம:** பயிற்சி செய்ய எதுவும் இல்லை. உன்னை அறிய நீ நீயாக இரு. நீயாக இருக்க உன்னை இதுவாகவோ அல்லது அதுவாகவோ கற்பனை செய்யாமல் இரு. வெறுமனே இரு. உன் சுய ரூபம் வெளிவர விடு. உன் மனதை மெய்யறியும் தேடுதலால் தொந்தரவு செய்யாதே.

**கே:** நான் வெறுமனே காத்திருந்தால் சுயம் அறிய நீண்ட காலம் பிடிக்கும்.

**ம:** அது இங்கு, இப்போதே இருக்கும்போது எதற்காக நீ காத்திருக்க வேண்டும்? நீ பார்க்கவும், நோக்கவும்தான் வேண்டும். உன்னை, உன் சொந்த சுயத்தைப் பார். நீ யார் என்று நீ அறிவாய். அதை நீ விரும்புவாய். எல்லாக் கற்பனைகளையும் விட்டு விடு. அவ்வளவே. காலத்தைச் சார்ந்து இருக்காதே. காலம் என்பது

இறப்பு. காத்திருப்பவர் இறக்கிறார். உயிர் வாழ்தல் என்பது இப்போது மட்டுமே இருப்பது. என்னிடம் கடந்த காலத்தைப் பற்றியும் எதிர்காலத்தைப் பற்றியும் பேசாதே - அவை உன் மனதில்தான் இருக்கின்றன.

**கே:** நீங்களும் இறப்பீர்கள்.

**ம:** நான் முன்பே இறந்துவிட்டேன். பௌதீக இறத்தல் என்னைப் பொருத்தவரை ஒரு வித்தியாசத்தையும் ஏற்படுத்தாது. நான் காலமற்ற இருத்தல். நான் ஆசையும், அச்சமும் அற்றவன். ஏனெனில் நான் கடந்த காலத்தை ஞாபகம் வைத்திருப்பதில்லை. அல்லது எதிர் காலத்தைக் கற்பனை செய்வதில்லை. எங்கு பெயர்களும், உருவங்களும் இல்லையோ அங்கு எப்படி ஆசையும், அச்சமும் இருக்க முடியும்? ஆசையற்ற தன்மையுடன், காலமற்ற தன்மை வருகிறது. நான் பத்திரமாக உள்ளேன். ஏனெனில் இருப்பதை இல்லாதது தொட முடியாது. நீ பத்திரமாக உணரவில்லை. ஏனெனில் நீ அபாயத்தைக் கற்பனை செய்கிறாய். உன் உடல் உள்ளபடியே சிக்கலானது மற்றும் அழியக்கூடியது. அதற்குப் பாதுகாப்பு தேவை. ஆனால் நீ அவ்வாறல்ல. உன் அசைக்க முடியாத சொந்த இருத்தலை அறிந்துவிட்டால் நீ அமைதி அடைவாய்.

**கே:** உலகம் துன்பப்படும் போது நான் எப்படி அமைதியைக் காண முடியும்?

**ம:** உலகம் தகுந்த காரணங்களுக்காகத் துன்பப்படுகிறது. நீ உலகத்திற்கு உதவ விரும்பினால், உதவி தேவைப்படாத நிலையில் நீ இருக்க வேண்டும். பிறகு உன் எல்லாச் செயல்பாடுகளும், செயலற்ற தன்மையும் உலகத்திற்கு மிகவும் பயனுள்ள வகையில் உதவும்.

**கே:** செயல்பாடு தேவைப்படும் போது எப்படிச் செயல்படாத தன்மை உதவும்?

**ம:** எங்கு செயல் தேவையோ அங்கு செயல் நிகழும். மனிதன் செயல்படுபவன் அல்ல. என்ன நிகழ்கிறது என்ற பிரக்ஞை அவனுக்கு இருக்க வேண்டும். அவன் இருப்பதே செயல்பாடு. ஜன்னல் என்பது சுவர் இல்லாத இடம். அது காலியாக இருப்பதால்

காற்றையும், வெளிச்சத்தையும் கொடுக்கிறது. எல்லா மன உள்ளடக்கங்களையும், கற்பனைகளையும், முயற்சிகளையும் காலி செய். தடைகள் இல்லாமலிருப்பது மெய்மையை உள்ளே வேகமாகப் புகச் செய்யும். நீ உண்மையிலேயே ஒருவனுக்கு உதவ வேண்டினால் விலகி இரு. உதவுவதற்கு நீ உணர்ச்சிவயப்பட்டு முடிவெடுத்திருந்தால் உதவத் தவறி விடுவாய். நீ மிகுந்த வேலைப் பளுவுடன் இருக்கலாம். உன் தர்மம் செய்யும் இயல்பினால் மகிழ்ந்திருக்கலாம். ஆனால் அதிகமாக எதுவும் செய்ய முடியாது. மேற்கொண்டு உதவி தேவைப்படாமல் செய்வதே ஒரு மனிதனுக்கு உண்மையிலேயே உதவுவதாகும். மற்ற எல்லாமும் வீண்.

**கே:** உதவி கிடைக்க அமர்ந்து, காத்திருக்கப் போதிய நேரம் கிடையாது. ஒருவர் ஏதாவது செய்ய வேண்டும்.

**ம:** எல்லா வகையிலும் செய். ஆனால் நீ செய்யக் கூடிய தெல்லாம் அளவானதே; சுயம் மட்டுமே அளவற்றது. உன்னை அளவில்லாமல் கொடு. நீ கொடுக்கக் கூடிய மற்ற எல்லாமும் சிறிய அளவு மட்டுமே. நீ மட்டுமே அளவற்றவன். உதவுவது உன் அடிப்படை இயல்பு. சாப்பிடுவதாலும், நீர் அருந்துவதாலும் நீ உன் உடலுக்கு உதவுகிறாய். உனக்கு எதுவும் தேவையில்லை. நீ ஆரம்பம் இல்லாத, முடிவு இல்லாத, தீர்ந்து போகாத தூய இருத்தல். துக்கத்தையும், துயரத்தையும் பார்த்தால் அதனுடன் இரு. செயல் புரிய அவசரப்படாதே. கற்றுக் கொள்வதோ, செயல் புரிவதோ உண்மையில் உதவாது. துக்கத்துடன் இரு, அதன் வேருடன் வெறுமனே இரு - புரிந்து கொள்ள உதவுவதே மெய்யான உதவி.

**கே:** என்னுடைய இறப்பு நெருங்குகிறது.

**ம:** உன் உடலுக்குத்தான் காலம் குறைவு. உனக்கு அல்ல. காலமும், இடமும் மனதில் மட்டுமே உள்ளன. நீ கட்டுப் பட்டவன் அல்ல. உன்னைப் புரிந்துகொள் - அதுவேதான் சாசுவதத் தன்மை.

# 56. விழிப்புணர்வு தோன்றும்போது உலகம் தோன்றுகிறது

**கேட்பவர்:** ஒரு சாதாரண மனிதன் இறக்கும் போது, அவனுக்கு என்ன நடக்கிறது?

**மஹராஜ்:** அவனுடைய நம்பிக்கையைப் பொருத்து அது நடக்கிறது. எப்படி உயிர் வாழ்தல் என்பது இறப்பதற்கு முன்பு கற்பனையோ, அப்படித்தான் பிறகும். கனவு தொடர்கிறது.

**கே:** ஞானியைப் பொருத்து எப்படி?

**ம:** ஞானி இறப்பதில்லை. ஏனெனில் அவர் பிறக்கவே இல்லை.

**கே:** மற்றவர்களுக்கு அவர் அவ்வாறு தோன்றுகிறார்.

**ம:** ஆனால் தனக்கு அவ்வாறு இல்லை. தனக்குள் அவர் உடலளவிலும், மனதளவிலும் சுதந்திரமானவர்.

**கே:** இருப்பினும் இறந்த மனிதனின் மனோ நிலை உங்களுக்குத் தெரியும். குறைந்தபட்சம் உங்களுடைய கடந்த பிறவிகளிலிருந்தாவது.

**ம:** என் குருவைச் சந்திக்கும்வரை எனக்கு நிறையத் தெரிந்திருந்தது. இப்போது எதுவும் தெரியாது. ஏனெனில் எல்லா ஞானமும் கனவில்தான் உள்ளன. அவை செல்லுபடியாகமாட்டா. எனக்கு என்னைத் தெரியும். எனக்குள் உயிர்வாழ்வதையோ, இறப்பதையோ நான் பார்ப்பதில்லை. தூய இருத்தலை மட்டுமே பார்க்கிறேன் - இதுவாகவோ, அதுவாகவோ இருப்பதை அல்ல, வெறுமனே தூய இருத்தலாக மட்டுமே. ஆனால் மனம் அதன் ஞாபகங்களின் தொகுதியிலிருந்து எடுத்து, கற்பனை செய்ய ஆரம்பிக்கும் கணத்திலிருந்து, இடத்தைப் பொருள்களாலும், காலத்தை நிகழ்வுகளாலும் நிரப்புகிறது. எனக்கு இந்தப் பிறவியைப்

பற்றியே தெரியாதிருக்கும் போது நான் எப்படி கடந்த பிறவிகளைப் பற்றி அறிவேன்? இயக்கத்திலிருக்கின்ற மனம்தான் ஒவ்வொன்றையும் இயங்குவதாகப் பார்க்கிறது. மேலும், காலத்தை உருவாக்கியதற்குப் பிறகு கடந்த காலத்தைப் பற்றியும், எதிர்காலத்தைப் பற்றியும் கவலைப்படுகிறது. மொத்தப் பிரபஞ்சமும் விழிப்புணர்வில் (மஹாதத்வா) தொட்டிலிடப் பட்டிருக்கிறது. குறைபாடற்ற முழு நிறைவான ஒழுங்கும், ஒத்திசைவும் (மஹாசத்வா) இருக்கும் போது விழிப்புணர்வு தோன்றுகிறது. எப்படி எல்லா அலைகளும் கடலில் இருக்கின்றனவோ அப்படி எல்லாப் பௌதீகமான மற்றும் மனோ வயப்பட்ட பொருள்களும் பிரக்ஞையில் உள்ளன. ஆகையால் பிரக்ஞைதான் முக்கியம். அதன் உள்ளடக்கம் அல்ல. உன்னைப் பற்றிய உன்னுடைய பிரக்ஞையை ஆழமும், விரிவும் படுத்து. அப்போது எல்லா ஆசீர்வாதங்களும் ஊற்றெடுக்கும். நீ எதையும் தேட வேண்டியதில்லை. எல்லாமும் மிக இயல்பாகவும், பிரயத்தனமில்லாமலும் உன்னிடம் வரும். ஐந்து புலன் உணர்வுகளும், ஞாபகம், எண்ணம், புரிந்துகொள்ளுதல், மற்றும் சுயத்தன்மை ஆகிய மனதின் நான்கு செயல்பாடுகளும், நிலம், நீர், தீ, காற்று, ஆகாயம் ஆகிய ஐந்து மூலகங்களும், பொருள் மற்றும் ஆன்மா ஆகிய படைப்பின் இரு தன்மைகளும் ஆகிய எல்லாமும் பிரக்ஞையில் அடங்கி உள்ளன.

**கே:** இருப்பினும் முன்பே நீங்கள் வாழ்ந்ததை நம்ப வேண்டும்.

**ம:** சாஸ்திரங்கள் அவ்வாறு சொல்கின்றன. ஆனால் எனக்கு அதைப் பற்றி எதுவும் தெரியாது. நான் எப்படி இருக்கிறேனோ அப்படித்தான் எனக்குத் தெரியும். நான் எப்படித் தோற்றமளித்தேன் அல்லது எப்படித் தோற்றமளிப்பேன் என்பவை என் அனுபவத்திற்குள் இல்லை. எனக்கு ஞாபகம் இல்லை என்பதால் அல்ல. உண்மையில் ஞாபகம் வைத்துக் கொள்ள எதுவும் இல்லை. மறு பிறவி என்பது மறு பிறப்பெடுக்கக் கூடிய சுயத்தை உணர்த்துகிறது. அப்படி எதுவும் கிடையாது. 'நான்' என்று சொல்லப்படுகின்ற ஞாபகங்கள் மற்றும் நம்பிக்கைகளின் கற்றை, தன்னைத் தீர்க்கமாக நிலைத்திருப்பதாகக் கற்பனை செய்து கொண்டு, அதனுடைய பொய்யான சாசுவதத்தை உள்ளடக்கிக்

கொள்ள காலத்தை உருவாக்குகிறது. இருப்பதற்கு, எனக்குக் கடந்த காலமோ அல்லது எதிர்காலமோ தேவை இல்லை. எல்லா அனுபவங்களும் கற்பனையால் பிறப்பவை; நான் கற்பனை செய்வதில்லை. ஆதலால் எனக்குப் பிறப்போ, இறப்போ நிகழ்வதில்லை. தான் பிறந்ததாக நினைப்பவர்கள்தான் தாங்கள் மறுபடியும் பிறப்பதாக நினைக்கலாம். நான் பிறந்ததாக என்மீது குற்றம் சுமத்துகிறாய். நான் குற்றமற்றவன் என்று வாதிடுகிறேன்.

எல்லாமும் பிரக்ஞையில் இருக்கின்றன; பிரக்ஞை இறப்பதும் இல்லை, மறுபடியும் பிறப்பதும் இல்லை. மாற்றமில்லாத மெய்மையே அதுதான்.

எல்லா அனுபவங்களின் பிரபஞ்சமும் உடலுடன் பிறந்து, உடலுடன் இறக்கின்றன; அது அதன் ஆரம்பத்தையும், முடிவையும் பிரக்ஞையில் கொண்டுள்ளது. ஆனால் பிரக்ஞைக்கு ஆரம்பத்தையும், முடிவையும் பற்றி எதுவும் தெரியாது. நீ ஜாக்ரதையாக அதைப்பற்றிச் சிந்தித்து, நீண்ட காலம் அந்தக் கருத்தில் ஆழ்ந்திருந்தால் நீ பிரக்ஞையின் வெளிச்சத்தை மிகத் தெளிவாகப் பார்ப்பாய்; உலகம் உன் பார்வையிலிருந்து மங்கி விடும். அது எரிகின்ற ஊதுவத்தியைப் பார்ப்பது போன்றது. ஆரம்பத்தில் நீ புகையையும், குச்சியையும்தான் பார்ப்பாய்; அதன் தீக் கங்கைப் பார்க்கும்போது அதற்கு மலையளவு குச்சிகளை எரிக்கவும், பிரபஞ்சத்தையே புகையால் நிரப்பவும் சக்தி உள்ளதென்று நீ அறிவாய். காலவரையறையின்றி சுயம் தன்னை மெய்ப்பிக்கிறது, அதன் முடிவில்லாத எண்ணிக்கையிலான சாத்தியக் கூறுகளைத் தீர்க்காமல். ஊதுவத்தியை உதாரணமாக எடுத்துக் கொண்டதில், குச்சிதான் உடல், புகைதான் மனம். மனம் அதன் திருகல்களில் மும்முரமாக ஈடுபட்டிருக்கும் போது அதன் மூலத்தை உணராது. குரு வந்து உன் கவனத்தை உனக்குள் இருக்கும் தீப்பொறியின் பக்கம் திருப்புவார். அதன் இயல்பில் மனம் வெளிப்புறமாகத் திரும்பி இருக்கும்; அது எப்போதும் பொருள்களின் மூலத்தைப் பொருட்களுக்குள்தான் தேடும்; 'மூலத்தை உள்ளுக்குள் தேடு' என்று சொல்லக் கேட்பதே ஒருவகையில் ஒரு புது வாழ்க்கையின் ஆரம்பம். பிரக்ஞை விழிப்புணர்வின் இடத்தை எடுத்துக் கொள்கிறது; விழிப்புணர்வில்

'நான்' என்பது இருக்கிறது. அது உணர்வுடையது. ஆனால் பிரக்ஞையோ பிளவுபடாதது; பிரக்ஞை அதைப் பற்றிய பிரக்ஞையை உடையது. 'நான்' என்பது ஒரு எண்ணம், ஆனால் பிரக்ஞை ஒரு எண்ணம் அல்ல. 'எனக்குப் பிரக்ஞை உள்ளது' என்பது பிரக்ஞையில் இருக்காது. விழிப்புணர்வு என்பது ஒரு குணாதிசயம்; ஆனால் பிரக்ஞை ஒரு குணம் அல்ல. ஒருவர் விழிப்புணர்வுடன் இருப்பதைப் பற்றி பிரக்ஞையோடு இருக்கலாம்; ஆனால் பிரக்ஞையைப் பற்றி உணர்வு இருக்காது. கடவுள் என்பது விழிப்புணர்வின் ஒட்டுமொத்தம். ஆனால் பிரக்ஞை, இருத்தல் மற்றும் இல்லாதிருத்தல் ஆகிய எல்லாவற்றிற்கும் அப்பாற்பட்டது.

**கே:** ஒரு மனிதனின் இறப்பிற்குப் பிறகு அவன் நிலை என்ன என்னும் கேள்வியில் நான் ஆரம்பித்தேன். அவன் உடல் எரிக்கப் பட்டபிறகு, அவன் விழிப்புணர்விற்கு என்ன நிகழ்கிறது? அவன் தன்னுடைய பார்க்கின்ற, கேட்கின்ற புலன் உணர்வுகளைத் தன்னுடன் எடுத்துச் செல்வானா அல்லது அவற்றைப் பின்னால் விட்டுவிட்டுச் செல்வானா? அவன் தன்னுடைய புலன் உணர்வுகளை இழந்தால் அவனுடைய விழிப்புணர்விற்கு என்ன நிகழ்கிறது?

**ம:** உணர்ந்தறிவதற்குண்டான வெறும் வகையே புலன்கள். பெரியதும், முரட்டுத்தனமானதுமான வகைகள் மறைந்தால் விழிப்புணர்வின் நேர்த்தியான, பண்பட்ட வகைகள் வெளிப்படும்.

**கே:** இறப்பிற்குப் பிறகு அது பிரக்ஞை என்பதாக நிலைமாற்றம் பெறாதா?

**ம:** விழிப்புணர்விலிருந்து பிரக்ஞைக்கு என்ற நிலைமாற்றம் இருக்காது. ஏனெனில் பிரக்ஞை விழிப்புணர்வின் ஒரு வடிவம் அல்ல. விழிப்புணர்வு அதிக நுட்பமானதாகவும், பண்பட்டதாகவும் வேண்டுமானால் ஆகலாம். அதுதான் இறப்பிற்குப் பிறகு நிகழ்கிறது. மனிதனின் பல்வேறு புலன் உணர்வுகள் இறக்கும் போது அவற்றால் தூண்டப்பட்ட விழிப்புணர்வின் வகைகளும் மங்கிப் போய்விடும்.

**கே:** அதுவரை மட்டும் விழிப்புணர்வற்ற தன்மை மிஞ்சுகிறதா?

**ம:** விழிப்புணர்வற்ற நிலையை வந்து போகக் கூடிய ஒன்றாக நீ பேசுவதைப் பார்! விழிப்புணர்வற்றதைப் பற்றி உணர்வுடன் இருக்க யார் இருக்கிறார்கள்? ஜன்னல் திறந்திருக்கும்வரை அறையில் வெளிச்சம் இருக்கும். ஜன்னல் மூடியிருந்தாலும் சூரியன் இருக்கிறது. ஆனால் அது அறைக்குள் இருக்கும் இருளைப் போக்குமா? சூரியனுக்கு இருள் என்று ஒன்று உண்டா? விழிப்புணர்வற்ற நிலை என்று ஒன்று கிடையாது. ஏனெனில் விழிப்புணர்வற்ற நிலையை அனுபவப்பட முடியாது. நாம் விழிப்புணர்வற்ற நிலையை, ஞாபகத்திலோ அல்லது செய்தி மற்றும் உணர்வுப் பரிமாற்றத்திலோ சிறு விடுபாடு ஏற்படும்போதுதான் உணர்கிறோம். நான் எதிர்வினை புரியாவிட்டால் என்னை விழிப்புணர்வற்றவன் என்று நீ சொல்வாய். நிஜத்தில் நான் அதிகபட்ச முனைப்பான விழிப்புணர்வுடன் இருக்கலாம். அதை வெளிப்படுத்தவோ, ஞாபகம் வைத்துக் கொள்ளவோ மட்டுமே முடியாமல் இருப்பேன்.

**கே:** நான் ஒரு எளிய கேள்வியைக் கேட்கிறேன்: உலகில் சுமாராக நானூறு கோடி மக்கள் இருக்கிறார்கள். அவர்கள் இறக்கக் கூடியவர்கள். இறப்பிற்குப் பிறகு உடல் ரீதியாக அல்லாமல் மனோ ரீதியாக அவர்களுடைய நிலை என்ன? அவர்களுடைய விழிப்புணர்வு தொடருமா? அப்படித் தொடர்ந்தால் எந்த வடிவத்தில் தொடரும்? நான் சரியான கேள்வியைக் கேட்கவில்லை என்றோ, அல்லது உங்களுக்கு பதில் தெரியாது என்றோ, அல்லது உங்கள் உலகத்தில் என் கேள்வி அர்த்தமற்றது என்றோ என்னிடம் சொல்லாதீர்கள். உங்கள் உலகமும் என் உலகமும் வித்தியாச மானவை, முரண்பாடானவை என்று நீங்கள் பேச ஆரம்பிக்கும் கணத்திலேயே நமக்குள் ஒரு சுவற்றை நீங்கள் எழுப்புகிறீர்கள். நாம் ஒரே உலகில் வாழவேண்டும். இல்லாவிட்டால் உங்கள் அனுபவத்தால் எங்களுக்கு எந்தப் பயனும் இல்லை.

**ம:** நாம் ஒரே உலகத்தில்தான் வாழ்கிறோம். நான் அதை உள்ளவாறு பார்க்கிறேன். நீ அவ்வாறு பார்ப்பதில்லை. நீ உன்னை உலகத்தில் இருப்பதாகப் பார்க்கிறாய். ஆனால் நான் உலகத்தை

என்னுள் பார்க்கிறேன். உனக்கு நீ பிறந்து, இறப்பதாகத் தெரிகிறது. ஆனால் எனக்கு உலகம் தோன்றி மறைகிறது. நம் உலகம் மெய்யானது. ஆனால் நீ பார்க்கும் விதம்தான் தவறு. நமக்கிடையில் உன்னால் ஏற்படுத்தப்பட்ட சுவரைத் தவிர வேறு ஒன்றும் இல்லை. புலன்களில் எந்தத் தவறும் இல்லை. உன் கற்பனைதான் தவறாக உன்னை வழி நடத்துகிறது. நீ கற்பனை செய்தவாறு உன்னிலிருந்து சுதந்திரமாக உள்ள, ஆனாலும் உன் பரம்பரையான அல்லது முயன்று பெறப்பட்ட படிவங்களுக்கு நெருக்கமான ஒன்றால் அது உலகத்தை மூடுகிறது. உன் மனப்பாங்கில் ஒரு ஆழமான முரண்பாடு இருக்கிறது. அதை நீ பார்ப்பதில்லை. அதுதான் உன் துயரத்திற்குக் காரணம். நீ ஒரு வலியும் துயரமுமான உலகத்தில் பிறந்துள்ளதான கருத்தைப் பற்றிக் கொண்டிருக்கிறாய்; உலகம் அன்பின் குழந்தை என்று எனக்குத் தெரியும். அது அதன் ஆரம்பம், வளர்ச்சி மற்றும் நிறைவை அன்பில் கொண்டுள்ளது. ஆனால் நான் அன்பையும்கூடக் கடந்தவன்.

**கே:** நீங்கள் உங்கள் உலகத்தை அன்பால் உருவாக்கியிருந்தால், அது ஏன் இவ்வளவு வலியைக் கொண்டிருக்கிறது?

**ம:** உடல் சார்ந்த பார்வையில் நீ சொல்வது சரி. ஆனால் நீ உடல் அல்ல. நீ விழிப்புணர்வின் அடர்த்தியான மற்றும் எல்லையற்ற தன்மை. உண்மையற்றதை நீ அனுமானிக்காதே. அப்போது உள்ளவற்றை நான் பார்ப்பதைப் போன்று நீ பார்ப்பாய். துன்பம் மற்றும் இன்பம், நல்லது மற்றும் கெட்டது, சரி மற்றும் தவறு - இவை எல்லாம் சார்புடைய சொற்கள். அவற்றைத் தீர்க்கமானவையாக எடுத்துக் கொள்ளக் கூடாது. அவை அளவானவை மற்றும் தற்காலிகமானவை.

**கே:** புத்த மரபில், ஒரு நிர்வாணி, ஒரு ஞானமடைந்த புத்தர், பிரபஞ்சத்தின் சுதந்திரத்தை உடையவர் என்று சொல்லப்படுகிறது. அவர் இருக்கின்ற எல்லாவற்றையும் அறியவும், அனுபவப்படவும் கூடியவர். அவர் இயற்கையையும், காரண காரியத் தொடர்பையும் அதிகாரம் செய்யவும், குறுக்கிடவும் முடியும். அவர் நிகழ்வுகளின் வரிசையை மாற்ற முடியும். கடந்த காலத்தில் நிகழ்ந்தவைகளைக் கூட இல்லாமல் செய்ய முடியும்! உலகம் இன்னும் அவருடன் இருக்கிறது. ஆனால் அவர் அதில் சுதந்திரமாக இருக்கிறார்.

**ம:** நீ விவரிப்பது கடவுளை. ஒரு பிரபஞ்சம் இருக்கும் போது, அதன் சரிநேர் படிவமும் இருக்கும். அதுதான் கடவுள். நான் இரண்டிற்கும் அப்பாற்பட்டவன். ஒரு அரசனைத் தேடிக் கொண்டு ஒரு ராஜாங்கம் இருந்தது. அவர்கள் சரியான ஒருவரைக் கண்டுபிடித்து அவனை அரசனாக்கினார்கள். அவன் எந்த வகையிலும் மாறவில்லை. வெறுமனே அவனுக்கு அரசனுக்கான பட்டமும், உரிமைகளும், கடமைகளும் கொடுக்கப்பட்டன. அவன் இயல்பு பாதிக்கப்படவில்லை. அவன் செயல்கள் மட்டுமே பாதிக்கப்பட்டன. அதேபோல்தான் ஞானமடைந்தவரும். அவருடைய விழிப்புணர்வின் உள்ளடக்கம் ஒரு தீவிரமான மாற்றமடையும். ஆனால் அவர் தவறாக வழிநடத்தப் படமாட்டார். மாற்றமில்லாததை அவர் அறிவார்.

**கே:** மாற்றமில்லாதது விழிப்புணர்வுடன் இருக்காது. விழிப்புணர்வு எப்போதும் மாறுவது. மாற்றமில்லாதது விழிப்புணர்வில் எந்தத் தடயத்தையும் விட்டு வைக்காது.

**ம:** ஆம் மற்றும் இல்லை. காகிதம் எழுதப்பட்ட கருத்து அல்ல. இருப்பினும் அது எழுதப்பட்டதைக் கொண்டிருக்கிறது. மையோ அல்லது வாசிப்பவரின் மனமோ எழுதப்பட்ட கருத்து அல்ல - ஆனால் இவை எல்லாம் எழுதப்பட்ட கருத்தைச் சாத்தியமாக்கு கின்றன.

**கே:** விழிப்புணர்வு மெய்மையிலிருந்து வருகிறதா அல்லது ஜடப்பொருளின் ஒரு குணாதிசயமா?

**ம:** உள்ளபடியே பருப் பொருளின் நுட்பமான சரிநேர் படிவம் விழிப்புணர்வு. எப்படி தாமசமும், ராஜசமும் பருப்பொருளின் குணாதிசயங்களோ, அப்படி சாத்வீகம் தன்னை விழிப்புணர்வாக வெளிப்படுத்திக் கொள்கிறது. அதை மிக நுட்பமான சக்தியின் ஒரு வடிவமாக நீ கருதலாம். எங்கெல்லாம் பொருள் தன்னை ஒரு நிலையான உயிரினமாக அமைத்துக் கொள்கிறதோ அங்கு விழிப்புணர்வு தன்னிச்சையாகத் தோன்றுகிறது. உயிரினம் அழிக்கப்படும்போது விழிப்புணர்வு மறைகிறது.

**கே:** பிறகு என்ன வாழ்கிறது?

**ம:** பருப்பொருளும், விழிப்புணர்வும் எதன் தன்மைகளோ, எது பிறப்பதோ, இறப்பதோ இல்லையோ, அது வாழ்கிறது.

**கே:** அது பருப்பொருளுக்கும், விழிப்புணர்விற்கும் அப்பாற் பட்டது என்றால் அதை எப்படி அனுபவப்படுவது?

**ம:** இரண்டின் மேலும் அது ஏற்படுத்தும் தாக்கத்தைக் கொண்டு; அதை அழகிலும், ஆனந்தத்திலும் பார். ஆனால் உடல் மற்றும் விழிப்புணர்வை அவற்றைக் கடந்து சென்றால் ஒழிய புரிந்து கொள்ள முடியாது.

**கே:** எங்களுக்குத் தெளிவாகச் சொல்லுங்கள்: நீங்கள் விழிப்புணர்வு உடையவரா, அல்லவா?

**ம:** ஞானி இரண்டுமே அல்ல. ஆனால் அவருடைய ஞானத்தில் எல்லாமும் அடங்கி உள்ளன. பிரக்ஞை ஒவ்வொரு அனுபவத்தையும் உள்ளடக்கியது. ஆனால் பிரக்ஞை உடையவர் ஒவ்வொரு அனுபவத்திற்கும் அப்பாற்பட்டவர். அவர் பிரக்ஞைக்குமே அப்பாற்பட்டவர்.

**கே:** அனுபவத்தின் பின்புலம் அங்கு உள்ளது. அதைப் பொருள் என்று சொல்லலாம். அனுபவிப்பவர் அங்கு உள்ளார். அதை மனம் என்று சொல்லலாம். இரண்டிற்கும் இடையில் எது பாலமாக இருக்கிறது?

**ம:** இரண்டிற்கும் இடையில் உள்ள இடைவெளிதான் பாலம். ஒரு முனையில் பொருளாகவும், மறு முனையில் மனமாகவும் காணப்படுகின்றது எதுவோ அதுதான் பாலம். மெய்மையை மனமாகவும் உடலாகவும் பிரிக்காதே. அப்போது பாலம் தேவைப் படாது.

விழிப்புணர்வு தோன்றும்போது உலகம் தோன்றுகிறது. உலகத்தின் அறிவையும், அழகையும் கருத்தில் கொண்டால் நீ அதைக் கடவுள் என்று சொல்கிறாய். அவை எல்லாவற்றின் மூலத்தையும் அறி. அது உனக்குள்ளேயே இருக்கிறது. அப்போது உன் எல்லாக் கேள்விகளுக்கும் விடை கிடைக்கும்.

**கே:** பார்ப்பவரும் பார்க்கப்படுவதும் ஒன்றேவா அல்லது இரண்டா?

**ம:** பார்ப்பது என்பது மட்டுமே உள்ளது; பார்ப்பவரும், பார்க்கப் படுவதும் அதில் அடங்கி உள்ளன. இல்லாத வித்தியாசங்களை உருவாக்காதே.

**கே:** நான் இறந்து போன மனிதனைப் பற்றிய கேள்வியில் ஆரம்பித்தேன். அவனுடைய எதிர்பார்ப்புகளையும், நம்பிக்கை களையும் பொருத்து அவனுடைய அனுபவங்கள் தங்களை வடிவமைத்துக் கொள்ளும் என்று நீங்கள் சொன்னீர்கள்.

**ம:** நீ பிறப்பதற்குமுன்பு நீயே வகுத்துக்கொண்ட ஒரு திட்டத்தின்படி வாழ எதிர்பார்த்தாய். தீவிரமான உன் சொந்த விருப்பம்தான் உன் விதியின் முதுகெலும்பு.

**கே:** கண்டிப்பாகக் கர்மா குறுக்கிடுகிறது.

**ம:** கர்மா சூழ்நிலைகளை வடிவமைக்கிறது. மனோபாவங்கள் உன்னுடையவை. முடிவாக உன் சுபாவம் உன் வாழ்க்கையை வடிவமைக்கிறது. நீ மட்டுமே உன் சுபாவத்தை வடிவமைக்க முடியும்.

**கே:** ஒருவர் எப்படித் தன்னுடைய சுபாவத்தை வடிவமைக்க முடியும்?

**ம:** அதை உள்ளவாறு பார்ப்பதாலும், உண்மையாக உன்மேல் பச்சாதாபப்பட்டு, முழுமையாக முயற்சிப்பதாலும். இந்த ஒருங்கிணைந்த பார்ப்பதும், பச்சாதாபப்பட்டு முயற்சிப்பதும் அதிசயங்களை ஏற்படுத்தும். அது ஒரு வெண்கல உருவத்தை வடிப்பது போல. உலோகம் மட்டுமே அல்லது தீ மட்டுமே போதாது; அல்லது அச்சு மட்டுமே எதற்கும் உதவாது; நீ உலோகத்தைத் தீயில் உருக்கி, அச்சில் வார்க்க வேண்டும்.

# 57. மனதிற்கு அப்பால் துன்பம் என்பது இல்லை

**கேட்பவர்:** நீங்கள் உங்கள் மகனின் வீட்டில் அமர்ந்துகொண்டு மதிய உணவு வழங்கப்படுவதற்காகக் காத்திருப்பதை நான் பார்க்கிறேன். உங்கள் விழிப்புணர்வின் உள்ளடக்கம் என்னுடையதைப் போன்றதா அல்லது ஒரு பகுதி மட்டும் வித்தியாசமானதா அல்லது முற்றிலும் வித்தியாசமானதா என்று வியக்கிறேன். என்னைப் போலவே நீங்களும் பசியுடனும், தாகத்துடனும் உணவிற்காகப் பொறுமையற்று காத்துக்கொண்டு இருக்கிறீர்களா அல்லது முற்றிலும் மாறுபட்ட மனோ நிலையில் நீங்கள் இருக்கிறீர்களா?

**மஹராஜ்:** மேலோட்டமாக அதிக வித்தியாசமில்லை. ஆனால் ஆழத்தில் மிகுந்த வித்தியாசம் உள்ளது. உனக்கு உன்னைப் பற்றி புலன்கள் மூலமாகவும், மனதின் மூலமாகவும் மட்டும்தான் தெரியும். அவை தெரிவிக்கும் விதமாகத்தான் உன்னை நீ எடுத்துக் கொள்கிறாய்; உன்னைப் பற்றிய நேரடி அறிவு உனக்குக் கிடையாது. வெறும் கருத்துக்கள் மட்டுமே உள்ளன. எல்லாமும் சுமாரான, இரண்டாம் கை மாறிய, செவிவழியாகப் பெறப் பட்டவை. நீ உன்னைப் பற்றி என்னவாக நினைக்கின்றாயோ அதை உண்மை என்று எடுத்துக் கொள்கிறாய். உன்னை அனுமானிக்கக் கூடியவனாகவும், விவரிக்கக் கூடியவனாகவும் கற்பனை செய்யும் வழக்கம் உன்னிடம் உறுதியாக உள்ளது.

நீ பார்ப்பதைப்போல்தான் நானும் பார்க்கிறேன். நீ கேட்பதைப்போல்தான் கேட்கிறேன், சுவைப்பதைப் போல்தான் சுவைக்கிறேன், உண்பதைப்போல்தான் உண்கிறேன். நானும் தாகத்தையும், பசியையும் உணர்கிறேன்; உணவு சரியான நேரத்திற்கு வழங்கப்பட எதிர்பார்க்கிறேன். பட்டினியாய்

இருந்தாலும், நோய்வாய்ப்பட்டாலும் என் உடலும், மனமும் வலுவிழக்கின்றன. இவை எல்லாவற்றையும் நான் தெளிவாக அனுமானிக்கிறேன். ஆனால் எப்படியோ நான் அதில் இல்லை. என்னை அதன்மேல் விட்டேத்தியாக, பற்றற்று மிதப்பதைப் போல் உணர்கிறேன். விட்டேத்தியாக, பற்றற்றுக்கூட அல்ல. தாகமும், பசியும் இருப்பது போல விட்டேத்தித் தன்மையும், பற்றற்ற தன்மையும் உள்ளன; இவை எல்லாவற்றைப் பற்றிய பிரக்ஞையும், உடலும், மனமும் அவற்றில் நடப்பவைகளும் ஏதோ மிகத் தொலைவில் உள்ள தொடுவானத்தில் நிகழ்வது போல, ஒரு மிக அதிக அளவிலான தூரத்தில் இருப்பது போன்ற உணர்வும் உள்ளன. நான் தெளிவாகவும், காலியாகவும் உள்ள சினிமாத் திரை போன்றவன் - படங்கள் அதன் மேல் கடந்து போய் மறைந்துவிடும், திரையை முன்பு இருந்தது போலத் தெளிவாகவும், வெறுமையாகவும் விட்டுவிட்டு. படங்களால் திரை எந்த விதத்திலும் பாதிக்கப் படுவதில்லை. படங்களும் திரையால் பாதிக்கப்படுவதில்லை. திரை, படங்களைக் குறுக்கிட்டு, பிரதிபலிக்கிறது. அது அவற்றை வடிவமைப்பதில்லை. அதற்குப் படச் சுருள்களுடன் செய்வதற்கு எதுவும் இல்லை. இவை எல்லாம் அவை உள்ளவாறே உள்ளன - விதியின் தொகுதியான பிரராப்தமாக - ஆனால் என் விதி அல்ல; திரையின் மேல் உள்ள மக்களின் விதியாக.

**கே:** ஒரு படத்தில் உள்ள மக்களுக்கு விதி உள்ளது என்று நீங்கள் சொல்லவில்லை அல்லவா! அவை கதையைச் சார்ந்தவை. கதை அவர்களுடையது அல்ல.

**ம:** உன்னைப் பற்றி எப்படி? நீ உன் வாழ்க்கையை வடிவமைக்கிறாயா அல்லது நீ அதனால் வடிவமைக்கப்படுகிறாயா?

**கே:** ஆமாம், நீங்கள் சொல்வது சரி. ஒரு வாழ்க்கைக் கதை தன்னை விரித்துக் கொள்கிறது. அதில் நான் ஒரு நடிகன். அதற்கு வெளியே எனக்கு எந்த இருத்தலும் இல்லை. ஏனெனில் நான் இல்லாமல் அதற்கு இருத்தல் இல்லை. நான் வெறுமனே ஒரு காதா பாத்திரம் மட்டுமே. ஒரு நபர் அல்ல.

**ம:** கதாபாத்திரம் ஒரு நபராகும் - வாழ்க்கையை அது வந்தவாறே ஏற்றுக் கொள்ளாமல், அதனுடன் ஒன்றாகத் தன்னை அடையாளப்

படுத்திக் கொள்ளாமல், அவன் அதை வடிவமைக்க ஆரம்பிக்கும் போது.

**கே:** நான் ஒரு கேள்வியைக் கேட்டால் நீங்கள் பதிலளிக்கிறீர்கள். அப்போது என்ன நடக்கிறது?

**ம:** கேள்வி, பதில் - இரண்டுமே திரையின் மேல் தோன்று கின்றன. உதடுகள் அசைகின்றன, உடல் பேசுகிறது - மறுபடியும் திரை தெளிவாகவும், வெறுமையாகவும் ஆகிவிடும்.

**கே:** நீங்கள் தெளிவு மற்றும் வெறுமை என்று சொல்வதின் அர்த்தம் என்ன?

**ம:** உள்ளடக்கம் எதுவுமில்லாததை நான் குறிக்கிறேன். என்னைப் பொருத்தவரை நான் அனுமானிக்கப்படக் கூடியவனும் அல்ல; உருவகிக்கப் படக் கூடியவனும் அல்ல. 'இதுதான் நான்' என்று நான் சுட்டிக் காண்பிக்கக் கூடியது எதுவும் இல்லை. நீ உன்னை ஒவ்வொன்றுடனும் சுலபமாக அடையாளப்படுத்திக் கொள்கிறாய். எனக்கு அது சாத்தியமில்லாதது. 'நான் இதுவோ அல்லது அதுவோ இல்லை, மற்றும் என்னுடையது எதுவும் இல்லை' என்னும் உணர்வு எனக்குள் உறுதியாக உள்ளது. ஏதோ ஒன்றோ அல்லது ஒரு எண்ணமோ தோன்றியவுடன் 'இது நான் அல்ல' என்னும் உணர்வு உடனே வருகிறது.

**கே:** உங்கள் நேரத்தை 'நான் இது அல்ல, நான் இது அல்ல' என்று திரும்பத் திரும்பச் சொல்லிக் கழிப்பதாகச் சொல்கிறீர்களா?

**ம:** இல்லவே இல்லை. உனக்காக நான் வார்த்தைகளில் சொல்கிறேன். என் குருவின் அருளால் நான் புறப்பொருளும் அல்ல, அகப் பொருளும் அல்ல என்று ஒரே தடவையிலும், நல்லதற்காகவும் அறிந்து கொண்டேன். நான் என்னை எல்லா நேரமும் ஞாபகப்படுத்திக் கொள்ள வேண்டியதில்லை.

**கே:** நீங்கள் புறப்பொருளும் அல்ல, அகப் பொருளும் அல்ல என்று சொல்வதை என்னால் புரிந்து கொள்ள முடியவில்லை. இந்தக் கணத்தில், நாம் பேசிக் கொண்டிருக்கும்போது, உங்கள் அனுபவத்தின் நோக்கப் பொருளாக நானும், உட்பொருளாக நீங்களும் இல்லையா?

**ம:** என் ஆட்காட்டி விரல் என் சுட்டுவிரலைத் தொடுவதைப் பார். இரண்டும் தொடுகின்றன, தொடப்படுகின்றன. என் கவனம் பெருவிரல் மீது இருக்கும் போது பெருவிரல் உணர்வது, சுட்டு விரல் - சுயம். கவனத்தின் குவிப்பை மாற்றினால் இரண்டிற்கும் இடையில் உள்ள தொடர்பும் நேரெதிராக மாறிவிடும். எப்படியோ நான் கவனத்தின் குவிப்பை மாற்றினால் நான் எதைப் பார்க்கிறேனோ அதுவாக ஆகி, அதற்கு இருக்கும் விழிப்புணர்வை அனுபவிக்கிறேன்; நான் அந்தப் பொருளின் உட்புற சாட்சியாகிறேன். மற்ற விழிப்புணர்வின் குவிமையங்களுக்குள் நுழையும் இந்தத் திறமையை நான் 'அன்பு' என்று சொல்கிறேன்; நீ வேண்டுமானால் அதற்கு நீ விரும்பும் பெயரைக் கொடுக்கலாம். அன்பு சொல்கிறது 'நான்தான் எல்லாமும்' என்று. அறிவு சொல்கிறது 'நான் எதுவுமில்லை' என்று. இரண்டிற்கும் இடையில் என் வாழ்க்கை ஓடுகிறது. எந்த ஒரு காலம் மற்றும் இடத்தின் புள்ளியிலும் நான் அனுபவத்தின் அகப்பொருளாகவும், புறப் பொருளாகவும் இருக்க முடிவதால், நான் இரண்டுமே, இரண்டுமே இல்லை மற்றும் இரண்டையும் கடந்தவன் என்று சொல்வதின் மூலம் அதை வெளிப்படுத்துகிறேன்.

**கே:** *நீங்கள் உங்களைப் பற்றி இந்த மாதிரியான அசாதாரணமான வார்த்தைகளைச் சொல்கிறீர்கள். எது உங்களை இந்த மாதிரி சொல்ல வைக்கிறது? நீங்கள் காலத்தையும், இடத்தையும் கடந்தவர் என்று சொல்வதன் அர்த்தம் என்ன?*

**ம:** நீ கேட்கிறாய். பதில் வருகிறது. நான் என்னைக் கவனிக் கிறேன் - என் பதிலைக் கவனிக்கிறேன். அதில் எந்த முரண் பாட்டையும் காண்பதில்லை. நான் உண்மையைச் சொல்கிறேன் என்று எனக்குத் தெளிவாகத் தெரிகிறது. இது எல்லாம் மிகவும் எளிதானவை. நான் சொல்வதை உணர்ந்து சொல்கிறேன் என்றும், மிகவும் பொறுப்புடன் இருப்பதாகவும் நீ நம்ப மட்டும் வேண்டும். நான் உனக்கு முன்பே சொன்னது போல என் குரு என்னுடைய உண்மையான இயல்பையும், உலகத்தின் உண்மையான இயல்பையும் காண்பித்தார். நான் உலகத்தோடு ஒன்று என்றும், இருப்பினும் உலகத்திற்கு அப்பாற்பட்டவன் என்றும் அறிந்த பிறகு எல்லா ஆசைகளிலிருந்தும், அச்சங்களிலிருந்தும் விடுபட்டு

விட்டேன். நான் சுதந்திரமாக இருக்கத் திட்டமிடவில்லை - மிகக் குறைவான முயற்சி கூட இல்லாமல், எதிர்பாராமல் நான் சுதந்திர மானேன். அப்போதிருந்து ஆசையிலிருந்தும், அச்சத்திலிருந்துமான சுதந்திரம் என்னோடு தங்கிவிட்டது. நான் கவனித்த மற்றொரு விஷயம் என்னவென்றால், நான் எந்த முயற்சியும் செய்ய வேண்டியதில்லை; எந்த ஒரு தாமதமும், உரசலும் இல்லாமல் செயல் எண்ணத்தைத் தொடர்கிறது. எண்ணங்கள் சுய நிறைவு பெற்றவையாக இருப்பதையும் நான் கண்டுகொண்டேன்; ஒவ்வொன்றும் அதனதன் இடத்தில் இயல்பாகவும், சரியாகவும் பொருந்திவிடுகின்றன. முக்கியமான மாற்றம் மனதில்தான் உள்ளது; உடனடியாக எதிர்வினையாற்றி, ஆனால் எதிர் வினையைத் தொடராமல் அது அசைவற்றும், மௌனமாகவும் ஆகிவிட்டது. தன்னிச்சை ஒரு வாழ்க்கை முறையாகவே ஆகிவிட்டது. மெய்யானது இயல்பாகவும், இயல்பானது மெய்யாகவும் ஆகிவிட்டது. எல்லாவற்றிற்கும் மேலாக இயல்பான மற்றும் நிசப்தமான, எல்லையில்லாத பற்றும், அன்பும் எல்லாத் திசைகளிலும் பிரகாசித்து, சுய நிறைவானதாகி, எல்லாவற்றிலும் ஊடுருவி, எல்லாவற்றையும் ஆர்வமுள்ளதாகவும், அழகான தாகவும், முக்கியமானதாகவும், புனிதமானதாகவும் ஆக்குகிறது.

**கே:** தன் சுயத்தை அறிந்த ஒருவருக்குப் பலவிதமான யோக சக்திகள் தன்னிச்சையாகத் தோன்றும் என்று எங்களுக்குச் சொல்லியிருக்கிறார்கள். இவைகளைப் பற்றி உங்களுடைய அனுபவம் என்ன?

**ம:** மனிதனின் ஐந்து வகையான (பௌதீகமான, இன்ன பிற) உடலுக்கு அதீதமான கற்பனைக்கும் எட்டாத சக்தியின் சாத்தியக்கூறு உள்ளது. மனிதனில் மொத்தப் பிரபஞ்சமும் பிரதிபலிப்பது மட்டுமில்லாமல் பிரபஞ்சத்தைக் கட்டுப்படுத்தக் கூடிய சக்தியும் அவனால் உபயோகிக்கப்படக் காத்துக் கொண்டிருக்கிறது. அவசியமான சூழ்நிலைகள் ஏற்பட்டால் ஒழிய ஞானி அம்மாதிரியான சக்திகளை உபயோகிக்க ஆர்வத்துடன் இருக்க மாட்டார். தினசரி வாழ்க்கைக்குப் போதுமான மனிதனுக்குள்ள சாமர்த்தியத்தையும், திறமையையும் அவர் கண்டுபிடிப்பார். சில சக்திகளைச் சிறப்பான பயிற்சியின் மூலம்

பெருக்கிக் கொள்ளலாம். ஆனால் அந்த மாதிரியான சக்திகளை உபயோகிக்கும் மனிதன் இன்னும் கட்டுப்பட்டே இருப்பான். ஞானி தன்னுடையதாக எதையும் கணக்கில் எடுத்துக் கொள்ள மாட்டார். சில சமயத்திலும், இடத்திலும் சில அற்புதங்கள் சில மனிதர்களுக்குண்டானது என்று சொல்லப்பட்டால் நிகழ்ச்சிகளுக்கும், மனிதர்களுக்கும் இடையில் எந்தவிதமான எதேச்சையான தொடர்பையும் ஏற்படுத்தவோ, எந்த முடிவிற்கும் வர அனுமதிக்கவோ மாட்டார். எல்லாமும் நிகழ வேண்டியபடி, ஒவ்வொன்றும் அது நடக்க வேண்டியபடி நடக்கிறது. ஏனெனில் பிரபஞ்சம் அது உள்ளபடியே இருக்கிறது.

**கே:** வாழ்வதற்குப் பிரபஞ்சம் ஒரு மகிழ்ச்சியான இடம் போலத் தெரியவில்லை. ஏன் இத்தனை துக்கங்கள்?

**ம:** வலி உடல் சார்ந்தது; துக்கம் மனம் சார்ந்தது. மனதைத் தாண்டி துக்கம் என்பது இல்லை. வலி என்பது உடல் அபாயத்தில் உள்ளது, அதற்குக் கவனிப்பு தேவை என்பதற்கான வெறும் அறிகுறி. அதேபோல, நாம் நபர் (வியக்தி) என்று சொல்கிற ஞாபகங்கள் மற்றும் பழக்க வழக்கங்களின் கட்டமைப்பு, இழப்பினாலோ அல்லது மாற்றத்தினாலோ அச்சுருத்தப்படுகிறது என்று துக்கம் எச்சரிக்கிறது. உடல் உயிர்வாழ்வதற்கு வலி அவசியம்; ஆனால் உன்னைத் துக்கப்படும்படி யாரும் வற்புறுத்துவதில்லை. துக்கப் படுவது முற்றிலுமாகப் பற்று கொண்டிருப்பதாலும், தடுப்பதாலும் தான்; அது தொடர்ந்து மேற்கொண்டு நகரவும், வாழ்க்கையோடு மிதந்து செல்லவும் நம்முடைய விருப்பமின்மையின் ஒரு அறிகுறி.

எப்படி ஒரு புத்தியுள்ள வாழ்க்கை வலியற்று இருக்குமோ அப்படி ஒரு புனித வாழ்க்கை துன்பமற்று இருக்கும்.

**கே:** புனிதர்களை விட அதிகமாகத் துன்பப்பட்டவர்கள் கிடையாது.

**ம:** அவர்கள் உன்னிடம் சொன்னார்களா அல்லது நீயே சுயமாக அவ்வாறு சொல்கிறாயா? புனிதத்துவத்தின் சாரமே நிகழ்கால கணத்தை அப்படியே முழுமையாக ஏற்றுக்கொள்வது, நிகழ்வனவற்றுடன் அவை நிகழும்போதே ஒத்திசைவுடன் இருப்பது. ஒவ்வொன்றும் அவை இருக்கும் தன்மையிலிருந்து வேறு

பட்டிருக்க புனிதர் வேண்டமாட்டார்; எல்லாக் காரணிகளையும் கருத்தில் கொண்டு அவை தவிர்க்க முடியாதவை என்று அவருக்குத் தெரியும். அவர் தவிர்க்க முடியாதவைகளுடன் நட்புடன் இருப்பார். அதனால் அவர் துக்கப்பட மாட்டார். வலியைப் பற்றி அவருக்குத் தெரியும். ஆனால் அது அவரை உருக்குலையச் செய்யாது. அவரால் முடிந்தால் இழந்த சம நிலையைத் திரும்பக் கொண்டுவருவதற்குத் தேவையானவற்றைச் செய்வார். இல்லையேல் நடப்பவற்றை அவை நடக்கும்படி விட்டுவிடுவார்.

**கே:** அவர் இறக்கலாம்.

**ம:** அதனால் என்ன? அவர் தொடர்ந்து வாழ்வதால் அடைவது என்ன? அவர் இறப்பதால் இழப்பது என்ன? எது பிறந்ததோ அது கண்டிப்பாக இறக்க வேண்டும். எது எப்போதும் பிறக்க வில்லையோ அது இறக்க முடியாது. இவை எல்லாம் தன்னை என்னவாக எடுத்துக் கொள்கிறாரோ அதைப் பொருத்தது.

**கே:** நீங்கள் இறக்குமளவிற்கு நோய்வாய்ப்பட்டிருப்பதாகக் கற்பனை செய்வோம். நீங்கள் வருத்தப்படவும், மறுதலிக்கவும் மாட்டீர்களா?

**ம:** ஆனால் நான் முன்பே இறந்துவிட்டேன் அல்லது பிறக்கவோ, இறக்கவோ இல்லை எனலாம். என் உடல் வழக்கமான வழியில் நடந்துகொள்வதை நீ பார்த்து, உன் சொந்த முடிவுகளை நீ எடுத்துக் கொள்ளலாம். உன் முடிவுகள் உன்னைத் தவிர வேறு யாரையும் கட்டுப்படுத்துவதில்லை என்பதை நீ ஒப்புக் கொள்ள மாட்டாய். என்னைப் பற்றி நீ கொண்டிருக்கும் உருவகம் முற்றிலும் தவறாகக் கூட இருக்கலாம் என்பதை நீ பார். உன்னைப் பற்றிய உன் உருவகமும் தவறானது. ஆனால் அது உன் பிரச்சனை. ஆனால் நீ எனக்குப் பிரச்சனைகளை உருவாக்கிவிட்டு, பிறகு என்னை அவற்றைத் தீர்த்துவைக்கச் சொல்லக்கூடாது. நான் பிரச்சனைகளை உருவாக்குவதும் இல்லை, அவற்றைத் தீர்த்து வைப்பதும் இல்லை.

# 58. பரிபூரணம் - எல்லாவற்றின் விதி.

**கேட்பவர்:** சுயம் அறிதலுக்கான வழிமுறைகளைப் பற்றிக் கேட்டால், நீங்கள் எப்போதுமே 'நான்' என்னும் உணர்வில் மனம் ஆழ்ந்திருப்பதன் முக்கியத்துவத்தை வலியுருத்துகிறீர்கள். அதில் உள்ள காரணத்தன்மை என்ன? இந்தக் குறிப்பிட்ட எண்ணம் எதனால் சுயம் அறிதலை விளைவிக்க வேண்டும்? 'நான்' என்பதைக் கைக்கொள்வது எப்படி என்னைப் பாதிக்கும்?

**மஹராஜ்:** கவனிப்பது என்னும் உண்மையே கவனிப்பவரையும், கவனிக்கப்படுவதையும் மாற்றும். ஒருவர் தன் உண்மையான இயல்பிற்குள் பார்ப்பதை எது தடுக்கிறது என்றால் மனதின் பலவீனமும், மந்தமான தன்மையும், அதன் நுட்பமானதைத் தவிர்த்துவிட்டு, மொத்தமானதின் மேல் கவனத்தைச் செலுத்தும் இயல்பும்தான். நான் சொல்லும் அறிவுரையை நீ பின்பற்றி, உன் மனதை 'நான்' என்பதின் மேல் மட்டும் வைத்திருக்க முயற்சி செய்தால் உன் மனதைப் பற்றியும், அதன் முரண்பாடுகளைப் பற்றியும் நீ முழுவதும் அறிவாய். விழிப்புணர்வு செயல்படும் நிலையில் உள்ள சாத்வீக குணமாக இருப்பதால் மனதின் சோர்வைக் கரைத்து, அமைதியற்ற தன்மையை சாந்தப் படுத்துகிறது. மற்றும் அதன் மூல உள்ளடக்கத்தை மென்மை யாகவும், ஆனால் ஸ்திரமாகவும் மாற்றும். இந்த மாற்றம் வெளிப்படையாகத் தெரிய வேண்டியதில்லை; அது கவனிக்கப் படாது. இருப்பினும் அது ஆழமான மற்றும் அடிப்படையான மாற்றம் - இருளிலிருந்து வெளிச்சத்திற்கு, அறியாமையிலிருந்து தூய விழிப்புணர்விற்கு.

**கே:** அது ஏன் 'நான்' என்னும் சூத்திரமாகத்தான் இருக்க வேண்டும்? வேறு வார்த்தை அதைச் செய்யாதா? 'ஒரு மேசை

இருக்கிறது' என்பதில் கவனத்தைச் செலுத்தினால் அது அதே நோக்கத்தை ஈடு செய்யாதா?

**ம:** கவனத்தைச் செலுத்துவதற்கான பயிற்சி என்னும் வகையில் - ஆம். ஆனால் அது உன்னை ஒரு மேசை என்னும் கருத்திற்கு அப்பால் கொண்டு செல்லாது. உனக்கு மேசையின் மேல் ஆர்வம் கிடையாது. உனக்கு உன்னை அறிய வேண்டும். அதற்கு உன் விழிப்புணர்வின் குவிமையத்திற்குள் உன்னிடம் உள்ள ஒரே குறிப்பை ஸ்திரமாக வைத்திரு: இருத்தலைப் பற்றிய உன் உறுதி. அறியாமையின் ஓடு உடைந்து, மெய்மையின் இராஜ்ஜியத்திற்குள் வெளிப்படும் வரை அதனுடன் இரு, அதனுடன் விளையாடு, அதைத் தீர்க்கமாக எண்ணிப்பார். அதில் ஆழ்ந்து அமிழ்.

**கே:** 'நான்' என்பதின் மீது எண்ணத்தைக் குவிப்பதற்கும், ஓட்டை உடைப்பதற்கும் ஏதாவது தற்செயலான தொடர்பு உள்ளதா?

**ம:** தன்னை அறிய வேண்டும் என்னும் உந்துதலே நீ தயாராகிக் கொண்டிருக்கிறாய் என்பதற்கான அறிகுறி. உந்துதல் எப்போதும் உள்ளிருந்துதான் வரும். உனக்கு நேரம் வந்தால் ஒழிய, முழு மனதுடன் சுயம் அறிதலுக்கான ஆசையோ, வலிமையோ உனக்கு இருக்காது.

**கே:** ஆசைக்கும், அதன் நிறைவேற்றத்திற்கும் குருவின் அருள் காரணமில்லையா? குருவின் ஒளிவீசும் முகம் நாம் தூண்டிலில் பிடிக்கப்பட்டு, துன்பச் சகதியிலிருந்து வெளியே இழுக்கப் படுவதற்கான தூண்டில் இரை அல்லவா?

**ம:** ஒரு தாய் தன் குழந்தையை ஆசிரியரிடம் அழைத்துச் செல்வது போல உனக்குள் இருக்கும் உள் குரு (சத்குரு) உன்னை வெளியில் இருக்கும் குருவிடம் அழைத்துச் செல்லும். உன் குருவை நம்பிக் கீழ்ப்படி. ஏனெனில் அவர் உன் மெய்யான சுயத்தின் தூதுவர்.

**கே:** நான் நம்பக்கூடிய ஒரு குருவை எப்படி கண்டுபிடிப்பது?

**ம:** உன் இதயம் உனக்குச் சொல்லும். ஒரு குருவைக் கண்டுபிடிப்பது கடினமல்ல. ஏனெனில் குரு உன்னைத் தேடுகிறார். குரு எப்போதும் தயார்; நீ தான் தயாராக இல்லை. கற்றுக் கொள்ள நீ தயாராக இருக்க வேண்டும். இல்லையென்றால் உன் குருவைச்

சந்திக்கும்போது கவனமில்லாமையினாலும், வீண் பிடிவாதத்தாலும் உன் வாய்ப்பைத் தவறவிடுவாய். என் உதாரணத்தை எடுத்துக் கொள். என்னிடம் நம்பிக்கையூட்டக் கூடியவை அதிகம் இல்லை. ஆனால் நான் என் குருவைச் சந்தித்தபோது அவர் சொல்வதைக் கவனமாகக் கேட்டேன், நம்பினேன், கீழ்ப்படிந்தேன்.

**கே:** என்னை முழுவதுமாக ஒரு ஆசிரியரின் கைகளுக்குள் ஒப்படைத்துக் கொள்வதற்கு முன்பாக நான் அவரைப் பரிசோதிக்க வேண்டாமா?

**ம:** எல்லா வகையிலும் பரிசோதி! ஆனால் என்ன கண்டு பிடிப்பாய்? உன் அளவில் அவர் எப்படித் தோன்றுகிறாரோ அப்படி.

**கே:** அவர் தொடர்ந்து ஒரே மாதிரி இருக்கிறாரா, அவருடைய வாழ்க்கைக்கும், போதனைகளுக்கும் ஒத்திசைவு இருக்கிறதா என்று நான் கவனிப்பேன்.

**ம:** நீ நிறைய ஒத்திசைவற்ற தன்மையைப் பார்க்கலாம். அதனால் என்ன? அது எதையும் நிரூபிப்பதில்லை. நோக்கம் மட்டுமே முக்கியம். அவருடைய நோக்கங்கள் உனக்கு எப்படித் தெரியும்?

**கே:** குறைந்தபட்சம் அவர் ஒரு சரியான வாழ்க்கையை வாழ்கின்ற, சுயக் கட்டுப்பாடுடையவராக எதிர்பார்க்கிறேன்.

**ம:** அப்படிப்பட்ட பலபேரை நீ பார்க்கலாம். அதனால் உனக்கு எந்தப் பயனும் இல்லை. ஒரு குரு நீ வீடு திரும்ப, உன் மெய்யான சுயத்திற்கான வழியைக் காண்பிப்பார். இதற்கும் ஒரு நபரிடம் தெரிகின்ற குணாதிசயத்திற்கும் அல்லது மனோபாவத்திற்கும் என்ன சம்பந்தம்? அவருடன் இருக்கும் போது உனக்குள் நிகழும் மாற்றத்தின் மூலமாகத்தான் நீ அதைத் தீர்மானிக்க முடியும். நீ அதிகமான அமைதியுடனும், மகிழ்ச்சியுடனும் இருப்பதாக உணர்ந்தால், வழக்கமான தெளிவையும், ஆழத்தையும் விட அதிகமாக உன்னைப் புரிந்து கொள்ள முடிந்தால் நீ சரியானவரைச் சந்தித்துவிட்டாய் என்று அர்த்தம். தேவையான நேரத்தை எடுத்துக் கொள். ஆனால் அவரை நம்புவது என்று முடிவெடுத்துவிட்ட பிறகு

அவரைப் பூரணமாக நம்பி, அவருடைய ஒவ்வொரு அறிவுரையையும் முழுமையாகவும், நம்பிக்கையுடனும் தொடர வேண்டும். அவரை நீ குருவாக ஏற்றுக் கொள்ளாவிட்டாலும் பரவாயில்லை. அவருடைய அருகாமையில் இருப்பதால் நீ திருப்தி அடைந்தால் போதும். சத்சங்கம் மட்டுமே கூட உன்னை உன் குறிக்கோளுக்கு எடுத்துச் செல்லும் - குழப்பப்படாமலும், இடைஞ்சலில்லாமலும் இருந்தால். ஆனால் ஒருமுறை யாரை யாவது உன் குருவாக ஒப்புக் கொண்டால் அவர் சொல்வதைக் கேள், ஞாபகம் வைத்திரு, கீழ்ப்படி. அரைகுறை மனதோடிருப்பது ஒரு தீவிரமான தடை. அது சுயமாக உருவாகும் அனேக துக்கத்திற்குக் காரணம். தவறு ஒருபோதும் குருவினுடையது அல்ல. எப்போதும் சீடரின் அறிவில்லாமையும், கெட்ட எண்ணமும்தான் தவறுக்குக் காரணம்.

**கே:** அப்படியானால் குரு ஒரு சிஷ்யனை ஒதுக்கவோ, தகுதியற்றவனாகவோ செய்து விடுவாரா?

**ம:** அப்படிச் செய்தால் அவர் ஒரு குருவே அல்ல! அவர் தன் நேரத்தை நீடித்து, சிஷ்யன் தெளிவும் அமைதியும் அடைந்து, அதிகமான பெற்றுக் கொள்ளும் மனோ நிலையில் அவரிடம் திரும்ப வரும் வரை பொறுமையுடன் காத்திருப்பார்.

**கே:** அதன் நோக்கம் என்ன? குரு ஏன் அவ்வளவு தொந்தரவுபட வேண்டும்?

**ம:** துக்கமும், துக்கம் முடிவதும். மக்கள் தங்களுடைய கனவில் துன்பப்படுவதை அவர் கண்டு, அவர்கள் விழிக்க வேண்டுகிறார். வலியையும், துக்கப்படுவதையும் தாங்க முடியாததுதான் அன்பு. குருவின் பொறுமைக்கு எல்லை கிடையாது. ஆகவே அதைத் தோற்கடிக்க முடியாது. குரு எப்போதும் தோற்க மாட்டார்.

**கே:** என் முதல் குருதான் என் கடைசி குருவா அல்லது குருவிலிருந்து குருவிற்கு நான் மாற வேண்டுமா?

**ம:** முழுப் பிரபஞ்சமுமே உன் குரு. நீ உஷாராகவும், புத்திசாலித்தனத்துடனும் இருந்தால் ஒவ்வொன்றிலிருந்தும் கற்றுக் கொள்ளலாம். உன் மனம் தெளிவாகவும், இதயம் சுத்தமாகவும்

இருந்தால் ஒவ்வொரு கடந்து போவோரிடமிருந்தும் நீ கற்றுக் கொள்வாய். நீ சோம்பலாகவோ அல்லது அமைதியற்றோ இருப்பதால்தான் உன் உட்புற சுயம் வெளிப்புற குருவாக வெளிப்பட்டு, அவரை நம்பவும், கீழ்ப்படியவும் செய்கிறது.

**கே:** *ஒரு குரு தவிர்க்க முடியாதவரா?*

**ம:** இது 'ஒரு தாய் தவிர்க்க முடியாதவரா' என்று கேட்பதைப் போல் இருக்கிறது. விழிப்புணர்வின் ஒரு பரிமாணத்திலிருந்து மற்றொரு பரிமாணத்திற்கு உயர உனக்கு உதவி தேவை. உதவி எப்போதும் ஒரு மனித உருவில் இருக்க வேண்டியதில்லை. அது நுட்பமாக இருக்கும் ஒன்றாகவோ, அல்லது ஒரு உள் உணர்வாகவோ இருக்கலாம். ஆனால் உதவி கண்டிப்பாக வரும். மகன் திரும்பத் தந்தையிடம் வர உள்ளிருக்கும் சுயம் கவனித்துக் கொண்டும், காத்துக் கொண்டும் இருக்கும். சரியான சமயத்தில் அது ஒவ்வொன்றையும் அன்புடனும், பயனுள்ளவாறும் ஏற்பாடு செய்யும். ஒரு தூதுவரோ, ஒரு வழிகாட்டியோ தேவைப்பட்டால் வேண்டியவற்றைச் செய்ய அது குருவை அனுப்பும்.

**கே:** *என்னால் ஒன்றை மட்டும் புரிந்து கொள்ள முடியவில்லை. நீங்கள் உள்ளிருக்கும் குருவை அறிவானது, நல்லது, அழகானது, எல்லா விதத்திலும் முழு நிறைவானது என்றும், நபரை சொந்தமாக இருத்தல் இல்லாத, வெறும் பிரதிபலிப்பு என்றும் சொல்கிறீர்கள். மற்றொரு வகையில் நபர் தன் சுயத்தை அறிந்து கொள்ள உதவ அவ்வளவு தொந்தரவுபடுகிறீர்கள். நபர் அவ்வளவு முக்கிய மற்றதாக இருந்தால் அதன் நலத்தைப் பற்றி ஏன் அவ்வளவு அக்கறை? ஒரு நிழலை யார் பொருட்படுத்துவார்கள்?*

**ம:** இல்லாத இருமையை நீ உள்ளே கொண்டுவருகிறாய். உடல் இருக்கிறது, சுயம் இருக்கிறது. அவற்றிற்கு இடையில் மனம் இருக்கிறது. அதில் சுயம் 'நான்' ஆக பிரதிபலிக்கிறது. மனதிலுள்ள குறைகளின் காரணத்தினால், அதன் குரூரத் தன்மை மற்றும் அமைதி இன்மையினால், பகுத்தறிதலும் உள்முகப் பார்வையும் இல்லாததால், அது தன்னைச் சுயமாகக் கருதாமல் உடலாகக் கருதுகிறது. தேவையானதெல்லாம் சுயத்துடனான தன் அடையாளத்தை அறியும்விதமாக மனதைத் தூய்மைப்

படுத்துவதுதான். மனம் சுயத்துடன் கலக்கும்போது உடல் ஒரு பிரச்சனையையும் செய்வதில்லை. அது உணர்ந்துகொள்ளும் மற்றும் செயல்படும் ஒரு கருவியாக, உள்ளிருக்கும் உருவாக்கும் கருவியாகவும், வெளிப்பாடாகவும், இருப்பதுபோல் இருக்கும். உடலின் அதிகபட்ச மதிப்பு என்னவென்றால் அது முழுமையான, பிரபஞ்ச உடலான அண்ட உடலைக் கண்டுபிடிக்க உதவுகிறது என்பதுதான். வெளிப்பாட்டில் உன்னை அறியும்போது, நீ கற்பனை செய்ததை விட எப்போதும் பெரியவன் என்பதைக் கண்டுபிடித்துக் கொண்டே இருப்பாய்.

**கே:** சுயம் அறிதலுக்கு முடிவே இல்லையா?

**ம:** எப்படி ஆரம்பம் இல்லையோ அப்படி முடிவும் இல்லை. ஆனால் என் குருவின் அருளினால் நான் என்ன கண்டுபிடித்தேன் என்றால்: நான் குறிப்பிட்டுச் சொல்லக்கூடிய எதுவும் அல்ல என்று. நான் ஒரு 'இது'வோ அல்லது 'அது' வோ அல்ல. இது தீர்க்கமாகச் சரி.

**கே:** அப்படியானால், முடிவே இல்லாத கண்டுபிடிப்பில், புதிய பரிமாணங்களுக்குள் ஒருவரின் முடிவற்ற கடந்து செல்லுதல் எங்கு வருகிறது?

**ம:** இவை எல்லாம் வெளிப்பாட்டின் இராஜ்யத்தைச் சார்ந்தவை. கீழானதிலிருந்து விடுதலை அடைவதால் மட்டுமே உயர்வானதைப் பெற முடியும் என்பது பிரபஞ்சத்தின் அடிப்படைக் கட்டமைப் பிலேயே இருக்கிறது.

**கே:** எது கீழானது, எது மேலானது?

**ம:** அதை பிரக்ஞையின் நியதிப்படி பார். அகண்ட, மற்றும் ஆழமான விழிப்புணர்வு உயர்ந்தது. உயிர் வாழ்கின்ற அனைத்தும் விழிப்புணர்வைப் பாதுகாக்க, மென்மேலும் தொடரவைக்க, விரிவாக்க வேலை செய்கிறது. இதுதான் உலகத்தின் ஒரே அர்த்தமும், காரணமும். விழிப்புணர்வின் அளவை எப்போதும் உயர்த்துவது, புதுப் பரிமாணங்களை அவற்றின் குணாதிசயங்கள், தன்மைகள், சக்திகள் ஆகியவற்றுடன் கண்டுபிடிப்பது -

இவைதான் யோகாவின் அடிப்படைச் சாரம். இந்த அர்த்தத்தில் முழுப் பிரபஞ்சமுமே ஒரு யோக க்ஷேத்ரமாக மாறுகிறது.

**கே:** *பரிபூரணம்தான் மனிதர்களின் விதியா?*

**ம:** ஆம் - முடிவாக எல்லா உயிர் வாழ்பவைகளுக்கும். மனதில் சுயம் அறிதல் என்னும் உணர்வு தோன்றும் போது சாத்தியக் கூறு ஒரு உறுதியான ஒன்றாகிறது. ஒருமுறை மீட்சி என்பது தனக்கு எட்டக் கூடியது என்று ஒரு உயிர் வாழும் ஒருவர் கேட்டும், புரிந்தும் கொண்டால் அவர் எப்பொழுதும் மறக்க மாட்டார். ஏனெனில் அது உள்ளுக்குள்ளிருந்து வரும் முதல் செய்தி. அது வேர்விட்டு, வளர்ந்து, நாளடைவில் குருவின் ஆசீர்வதிக்கப்பட்ட வடிவத்தை எடுக்கும்.

**கே:** *அப்படியானால் நாம் எல்லோரும் அக்கறையோடிருப்பது மனதின் மீட்சியைப் பற்றித்தானா?*

**ம:** வேறு என்ன? மனம் வீணாகிப் போகிறது; மனம் வீடு திரும்புகிறது. வீணாகிப் போகிறது என்னும் வார்த்தைகூட சரியில்லை. மனம் எல்லா மனோபாவத்திலும் தான் யார் என்பதை அறிய வேண்டும்.



# 59. ஆசை மற்றும் அச்சம்: சுயநலமான நிலைகள்

**கேட்பவர்:** நான் மறுபடியும் புலன் நுகர்வு சார்ந்த மகிழ்ச்சியாகிய இன்பம் மற்றும் வலி, ஆசை மற்றும் அச்சம் பற்றிய கேள்விக்கே வர வேண்டுகிறேன். அச்சம் என்பது ஞாபகம் மற்றும் வலியின் எதிர்பார்ப்பு என்று நான் புரிந்து கொள்கிறேன். அது உயிரினத்தையும், அதன் வாழும் வகையினையும் பாதுகாத்துப் பேண அவசியம். தேவைகள், அவை உணரப்படும்போது வலி மிகுந்தவை. அவற்றை எதிர்பார்ப்பது அச்சம் நிறைந்தது. எங்களுடைய அடிப்படைத் தேவைகளைப் பூர்த்தி செய்ய முடியாமல் போவதைப் பற்றி நாங்கள் பயப்படுவது சரி. ஒரு தேவையைப் பூர்த்தி செய்யும் போது, அல்லது ஒரு பரபரப்பான எதிர்பார்ப்பு நீக்கப் படும் போது அனுபவிக்கப்படும் நிம்மதியான உணர்விற்கு முற்றிலுமான காரணம் வலி முடிவதுதான். சுகம், சந்தோஷம், மகிழ்ச்சி என்று எந்தமாதிரியான நேர்மறைப் பெயரை வேண்டுமானாலும் அதற்கு நாம் கொடுக்கலாம். ஆனால் அது முக்கியமாக வலியிலிருந்து விடுதலை. வலியைப் பற்றிய அச்சம்தான் நம் சமூக, பொருளாதார, அரசியல் அமைப்புகளை இணைத்துப் பிடிக்கிறது.

எது எனக்குப் புதிராக இருக்கிறது என்றால் நாம் பொருட்களிலிருந்தும், மனோநிலைகளிலிருந்தும் இன்பத்தைப் பெறுகிறோம். உயிர் வாழ்வதற்கும் அதற்கும் சம்பந்தமே இல்லை. மாறாக, நம் இன்பங்கள் பெரும்பாலும் அழிக்கக் கூடியவை. அவை கருவிகளான புற பொருட்களையும், இன்பத்தின் உட்பொருளையும் சேதப்படுத்தவோ, அழிக்கவோ செய்கின்றன. மற்றபடி இன்பங்களும், அவற்றைத் தேடுவதும் பிரச்சனையே அல்ல. இது என் கேள்வியின் மூலத்திற்குக் கொண்டு செல்கிறது: இன்பம் ஏன்

அழிக்கக் கூடியது? அது அழிக்கக் கூடியதாக இருந்தும் எதனால் வேண்டப்படுகிறது?

இயற்கை அதன் வழியில் செல்ல வைக்க வலியுறுத்தும் இன்பம் - துன்பம் என்னும் படிவம் என் மனதில் இல்லை. நான் மனிதனால் உருவாக்கப்படும் புலன் சார்ந்த மற்றும் நுட்பமான, அதிகமாகச் சாப்பிடுவது போன்ற முரட்டுத்தனமானதிலிருந்து மிகவும் பண்பட்ட இன்பங்களைப் பற்றி எண்ணுகிறேன். இன்பம் எவ்வளவுதான் விலை அதிகமானதாக இருந்தாலும் அதன் மேல் உள்ள பழக்க அடிமைத்தனம் பரவலாக உலகம் முழுவதும் உள்ளது. ஆகையால் அதன் மூலத்தில் முக்கியமான ஏதாவது ஒன்று இருக்க வேண்டும்.

மனிதனின் ஒவ்வொரு செயலும் அவனின் தேவையைப் பூர்த்தி செய்வதற்கானது அல்ல. உதாரணத்திற்கு விளையாட்டு என்பது இயற்கை. இருப்பவற்றுள் மனிதன்தான் மிகவும் விளையாட்டுத் தன்மை உடையவன். சுயம் அறிதலுக்கும், சுய முன்னேற்றத்திற்கு மான தேவையை விளையாட்டு பூர்த்தி செய்கிறது. ஆனால் விளையாட்டில்கூட மனிதன் மற்றவர்களுடைய மற்றும் தன்னுடைய இயல்பை அழிப்பவனாகிறான்.

**மஹராஜ்:** சுருக்கமாக, நீ இன்பத்தை எதிர்க்கவில்லை. அதற்காக வலியாகவும், துன்பமாகவும் கொடுக்கப்படும் விலையைத்தான் எதிர்க்கிறாய்.

**கே:** மெய்மையே ஆனந்தமாக இருந்தால், இன்பம் ஏதாவது ஒரு வழியில் அதனோடு தொடர்புடையதாக இருக்க வேண்டும்.

**ம:** வார்த்தைகளால் ஆன தர்க்கத்தால் தொடர வேண்டாம். மெய்மையின் ஆனந்தம் துன்பத்தை தவிர்ப்பதில்லை. தவிர, உனக்கு இன்பம் மட்டும்தான் தெரியும். தூய இருத்தலின் ஆனந்தம் தெரியாது. ஆகையால் இன்பத்தை அதன் நிலையில் ஆராயலாம்.

இன்பம் அல்லது துன்பமுள்ள கணங்களில் உன்னை நீ பார்த்தால் துன்பமானது அல்லது இன்பமானது அதுவாகவே அவ்வாறு இல்லை என்பதையும், ஆனால் அது ஒரு பகுதியாக இருக்கும் சூழ்நிலையையும் தவறாமல் நீ பார்ப்பாய். அனுபவிப்பவர் மற்றும்

அனுபவிக்கப்படுவது ஆகியவற்றிற்கு இடையிலான உறவில் சந்தோஷம் இருக்கிறது. ஏற்றுக் கொள்வது என்பது அதன் சாரம். எந்த மாதிரியான சூழ்நிலையாக இருந்தாலும், அது ஏற்றுக் கொள்ளக்கூடியதாக இருந்தால் அது சந்தோஷமானது. ஏற்றுக் கொள்ள முடியாததாக இருந்தால் அது துன்பம் மிகுந்தது. எது அதை ஏற்றுக்கொள்ளும்படி செய்கிறது என்பது முக்கியமில்லை. காரணம் பௌதீகமானதாகவோ, உளவியல் சார்ந்ததாகவோ, அல்லது கண்டு பிடிக்க முடியாததாகவோ இருக்கலாம்; ஏற்றுக் கொள்வதுதான் தீர்மானிக்கும் காரணி. மாறாக துன்பம் ஏற்றுக் கொள்ளாததால் தான் வருகிறது.

**கே:** துன்பம் ஏற்றுக் கொள்ளக்கூடியது அல்ல.

**ம:** ஏன் கூடாது? நீ எப்போதாவது முயற்சி செய்துள்ளாயா? முயற்சி செய்து பார். அப்போது இன்பத்தால் கொடுக்க முடியாத சந்தோசத்தைத் துன்பத்தில் காண்பாய். ஏனெனில் துன்பத்தை ஏற்றுக் கொள்வது இன்பத்தை விட அதிக ஆழத்திற்கு உன்னை எடுத்துச் செல்லும் என்னும் எளிய காரணத்தினால். ஒருவரின் தனிப்பட்ட சுயம் அதன் சுபாவத்திலேயே தொடர்ந்து இன்பத்தை நாடி, துன்பத்தைத் தவிர்க்கிறது. இந்தப் படிவத்தை முடிப்பது தனிப்பட்ட சுயத்தின் முடிவு. அதன் ஆசைகளோடும், அச்சங் களோடும் தனிப்பட்ட சுயம் முடிவது உன்னை எல்லாச் சந்தோஷம் மற்றும் அமைதிக்கு ஆதாரமான உன் மெய்யான இயல்பிற்குத் திரும்பவைக்கும். சுகத்திற்கான நிலையான ஆசை உனக்குள் இருக்கும் கால அளவற்ற ஒத்திசைவின் பிரதிபலிப்பு. இன்பத் திற்கும், துன்பத்திற்கும் இடையே உள்ள, தெரிவு செய்தலையும், முடிவெடுத்தலையும் நிர்ப்பந்திக்கின்ற முரண்பாட்டில் சிக்கிக் கொண்டால் மட்டுமே ஒருவர் சுய உணர்வு பெறுகிறார் என்பது ஒரு கவனிக்கக் கூடிய உண்மை. ஆசைக்கும் அச்சத்திற்கும் இடையே ஏற்படும் இந்த மோதல்தான் கோபத்திற்குக் காரணம். அது வாழ்க்கையின் அறிவுள்ள தன்மையை அழிக்கும் மாபெரும் காரணி. துன்பம் என்னவாக இருக்கிறதோ அதுவாக, ஒரு படிப்பினை மற்றும் ஒரு எச்சரிக்கையாக ஏற்றுக் கொள்ளப் பட்டால், ஆழமாகப் பார்க்கப்பட்டு, துன்பத்திற்கும் இன்பத்திற்கும் இடையே உள்ள பிரிவு உடைந்து, இரண்டுமே அனுபவமாகின்றன

- எதிர்க்கப்பட்டால் துன்பமாகவும், ஏற்றுக்கொள்ளப்பட்டால் மகிழ்ச்சியாகவும்.

**கே:** நீங்கள் இன்பத்தை விட்டுவிட்டு, துன்பத்தை நாடச் சொல்கிறீர்களா?

**ம:** இல்லை. அதேபோல் இன்பத்தை நாடவும், துன்பத்தை விடச் சொல்லவும் இல்லை. இரண்டையும் அவை வருவதுபோல் ஏற்றுக்கொள். இரண்டையும் அவை இருக்கும்வரை அனுபவி. அவை அவசியமாகப் போகும்போது அவற்றைப் போகவிடு.

**கே:** நான் எப்படித் துன்பத்தை அனுபவிக்கமுடியும்? உடல்ரீதியான வலி செயல்பட வேண்டுகிறது.

**ம:** ஆமாம். அதே போல்தான் மனோ வலியும். ஆனந்தம் அதைப் பற்றிய விழிப்புணர்வில் இருக்கிறது - சுருங்குவதில் அல்ல. அல்லது எந்த விதத்திலாவது அதிலிருந்து விலகிச் செல்வதில் அல்ல. எல்லா ஆனந்தமும் விழிப்புணர்வில் இருக்கிறது. நாம் எந்த அளவு விழிப்புணர்வுடன் இருக்கிறோமோ அந்த அளவு மகிழ்ச்சி ஆழமாக இருக்கும். வலியை ஏற்றுக் கொள்வது, எதிர்க்காமல் இருப்பது, தைரியமும், பொறுத்துக் கொள்வதும் - இவை எல்லாம் மெய்யான மகிழ்ச்சி மற்றும் உண்மையான ஆனந்தம் ஆகியவற்றின் ஆழமான மற்றும் நிலைத்திருக்கிற ஆதாரங்களைத் திறக்கும்.

**கே:** வலி ஏன் இன்பத்தை விட அதிகச் செயலூக்கமுடையதாக இருக்க வேண்டும்?

**ம:** இன்பம் உடனடியாக ஏற்றுக் கொள்ளப்படுகிறது. ஆனால் சுயத்தின் முழு பலமும் வலியை நிராகரிக்கச் செய்கிறது. வலியை ஏற்றுக் கொள்வது என்பது தனி நபர்த்தன்மையை இல்லாமல் செய்வதால் நபர்த்தன்மை உண்மையான மகிழ்ச்சிக்குக் குறுக்கே நிற்கும். ஆகையால் முழுமனதோடு வலியை ஏற்றுக் கொள்வது மகிழ்ச்சியின் ஊற்றுக்களைத் திறக்கும்.

**கே:** துன்பப்படுவதை ஏற்றுக் கொள்வதும் அதே மாதிரிதான் வேலை செய்கிறதா?

**ம:** வலியைப் பற்றிய உண்மை எளிதாக விழிப்புணர்வின் குவியத்திற்குள் கொண்டுவரப்படுகிறது. மனத்துக்கத்துடன் அது

அவ்வளவு எளிதானதல்ல. மனதைக் குவிக்க துக்கப்படுதல் போதுமானதல்ல. ஏனெனில் மனோ வாழ்க்கை, நமக்குத் தெரிந்தாற்போல, ஒரு தொடர்ந்த துக்க ஓடை. துக்கத்தின் ஆழமான படிமங்களை அடைய நீ அதன் வேர்களுக்குச் சென்று, அவற்றின் அகண்ட, மறைமுகமான வலைப் பின்னலை விலக்கிப் பார்க்க வேண்டும். அங்கு அச்சமும், ஆசையும் நெருக்கமாகப் பின்னப்பட்டு, உயிர்ச்சக்தி ஓட்டங்கள் ஒன்றை ஒன்று எதிர்த்து, தடை செய்து, அழித்துக் கொண்டிருக்கும்.

**கே:** முற்றிலுமாக என் விழிப்புணர்விற்குக் கீழே உள்ள சிக்கலை என்னால் எப்படி சரி செய்ய முடியும்?

**ம:** 'நான்' ஆகிய உன்னுடன் இருப்பதால்; உன்னை, உன் தினசரி வாழ்க்கையில் விழிப்பான ஆர்வத்துடன், மதிப்பிட அல்லாமல் புரிந்துகொள்ளும் நோக்கத்துடன் கவனிப்பதால்; எது வெளிப் பட்டாலும் அதை முழுவதுமாக ஏற்றுக்கொள்வதால். அது அங்கு இருப்பதால், நீ அழமானதை மேற்பரப்பிற்கு வர ஊக்குவித்து, உன் வாழ்க்கையையும், விழிப்புணர்வையும் அதன் அடக்கிவைக்கப் பட்ட சக்திகளால் வளமூட்டச் செய்வாய். இதுதான் விழிப் புணர்வின் உன்னதமான வேலை. அது உயிர் மற்றும் மனதின் இயல்பைப் புரிந்துகொள்வதால் தடைகளை விலக்கி, ஆற்றலை விடுவிக்கிறது. புத்திசாலித்தனம் விடுதலைக்கான கதவு. விழிப்பான கவனம்தான் புத்திசாலித்தனத்தின் தாய்.

**கே:** இன்னும் ஒரு கேள்வி. ஏன் சுகம் துக்கத்தில் முடிய வேண்டும்?

**ம:** ஒவ்வொன்றிற்கும் ஒரு ஆரம்பமும், ஒரு முடிவும் இருக்கும். அதேபோல்தான் சுகமும். எதிர்பார்க்காமலும் வருத்தப்படாமலும் இருந்தால் துக்கம் இருக்காது. ஞாபகமும், கற்பனையும்தான் துக்கத்தை உருவாக்குகின்றன.

இன்பத்திற்குப் பிறகான வலி உடல் அல்லது மனதைத் தவறாக உபயோகப்படுத்துவதால் வருகிறது. உடலுக்கு அதன் அளவு தெரியும். ஆனால் மனதிற்குத் தெரியாது. மனதின் பசி எண்ணற்றது மற்றும் அளவற்றது. உன் மனதை மிகுந்த ஜாக்கிரதையுடன் கவனி.

ஏனெனில் அங்கு உன்னைக் கட்டுப் படுத்தி அடிமைப்படுத்துவதும், கூடவே விடுதலைக்கான திறவுகோலும் இருக்கிறது.

**கே:** என் கேள்வி இன்னும் முழுவதுமாகப் பதிலளிக்கப் படவில்லை: ஏன் மனிதனின் இன்பங்கள் அழிக்கக் கூடியவையாக இருக்கின்றன? அழிப்பதில் அவன் ஏன் அவ்வளவு இன்பம் காண்கிறான்? உயிர்வாழ்தலின் அக்கறை தன்னைப் பாதுகாத்துக் கொள்வதிலும், தொடர்வதிலும், விரிவுபடுத்திக் கொள்வதிலும் இருக்கிறது. இதில் அது துக்கத்தாலும் இன்பத்தாலும் வழி நடத்தப் படுகிறது. எந்த நிலையில் அவை அழிக்கக் கூடியவையாகின்றன?

**ம:** மனம் பொறுப்பெடுத்துக் கொள்ளும் போது, அது ஞாபகப் படுத்திக் கொள்கிறது மற்றும் எதிர்பார்க்கிறது, மிகைப்படுத்துகிறது, திரிக்கிறது, புறக்கணிக்கிறது. கடந்ததை எதிர்காலத்திற்குள் முன்னிறுத்துகிறது. எதிர்காலம் எதிர்பார்ப்புகளுக்கு வஞ்சனை செய்கிறது. புலன் உணர்வு மற்றும் செயல் புரிவதற்கான உறுப்புகள் அவற்றின் செயல் திறத்திற்கு மேல் தூண்டப்பட்டு, அவை தவிர்க்க முடியாமல் பழுதாகின்றன. இன்பங்களுக்கான கருவிகள் அவற்றிலிருந்து எதிர்பார்க்கப்படுவதைக் கொடுக்க முடியவில்லை. அவை தவறாக உபயோகிக்கப்படுவதால் தேய்ந்து போகின்றன அல்லது அழிகின்றன. இது இன்பத்தைத் தேடும் இடத்தில் அதிகமான வலியை விளைவிக்கிறது.

**கே:** நாங்கள் எங்களை மட்டுமல்ல, மற்றவர்களையும் அழிக்கிறோம்.

**ம:** இயற்கையாகவே, சுயநலம் எப்போதும் அழிக்கக் கூடியது. ஆசை, அச்சம் - இரண்டுமே சுயநலமான நிலைகள். ஆசைக்கும் அச்சத்திற்கும் இடையில் கோபம் எழுகிறது, கோபத்துடன் வெறுப்பு, வெறுப்புடன் அழிவிற்கான அதிகமான விருப்பம். போர் என்பது சாவிற்கான எல்லா ஆயுதங்களுடன் ஆயத்தப்படுத்தப் பட்டு, ஒருங்கிணைக்கப்பட்ட, செயல்படும் வெறுப்பு.

**கே:** இம்மாதிரியான கொடூரங்களை முடிக்க ஒரு வழி இல்லையா?

**ம:** நிறைய மனிதர்கள் அவர்களுடைய மெய்யான தன்மையைத் தெரிந்துகொள்ளும்போது, அவர்களுடைய தாக்கம் எவ்வளவுதான்

நுட்பமாக இருந்தாலும் அது மேலோங்கி நின்று, உலகத்தின் உணர்ச்சிபூர்வமான சூழ்நிலை இனிமை பெறும். மக்கள் அவர்களுடைய தலைவர்களைப் பின்பற்றுவார்கள். தலைவர் களுக்குள் உள்ளத்திலும், மனதிலும் மிக உயர்ந்த, சுயநலமே இல்லாத சிலர் தோன்றுவார்கள். அப்போது அவர்களுடைய தாக்கம் நிகழ்காலத்தில் உள்ள வக்கிரங்களையும், குற்றங்களையும் சாத்தியமில்லாமல் போகச் செய்யப் போதுமானது. ஒரு புதிய பொற்காலம் வரலாம், அது சில காலம் நீடிக்கலாம், பிறகு அதன் பூரணத்தன்மைக்கே அது பலியாகலாம். ஏனெனில் அலையின் உச்சியில் அதன் இறக்கம் ஆரம்பிக்கிறது.

**கே:** நிலையான பூரணத்துவம் என்று ஒன்று இல்லையா?

**ம:** ஆமாம். இருக்கிறது. ஆனால் அது பூரணமற்றதையும் உள்ளடக்கியது. நம் சுயத்தின் தன்மையான பூரணம்தான் எல்லாவற்றையும் சாத்தியமாக்குகிறது, அனுமானிக்கக் கூடிய தாக்குகிறது, ஆர்வமுள்ளதாக்குகிறது. அது எந்தத் துக்கத்தையும் அறியாது. ஏனெனில் அது விரும்புவதோ, வெறுப்பதோ இல்லை. ஏற்றுக் கொள்வதோ, நிராகரிப்பதோ இல்லை. உருவாக்குவதும் அழிப்பதும் இரு முனைகள். அவற்றிற்கிடையில் அதன் எப்போதுமே மாறிக் கொண்டிருக்கின்ற படிவத்தை அது நெய்கிறது. பாரபட்சத்திலிருந்தும், விருப்பத் தேர்வுகளிலிருந்தும் விடுபட்டு இரு. அப்போது மனம் அதன் துக்கத்தின் பாரத்தோடு இல்லாமல் போய் விடும்.

**கே:** துக்கப்பட நான் மட்டும் தனியாக இல்லை. மற்றவர்களும் இருக்கிறார்கள்.

**ம:** உன்னுடைய ஆசைகளோடும் அச்சங்களோடும் அவர்களிடம் நீ சென்றால் அவர்களுடைய துக்கத்தை அதிகப் படுத்துவாய். முதலில் நீ துக்கப்படாமல் இரு. பிறகு மற்றவர்களுக்கு உதவ நம்பிக்கை கொள். அப்போது நீ நம்பிக்கை கூட கொண்டிருக்க வேண்டியதில்லை - உன் இருத்தலே ஒரு மனிதன் சக மனிதனுக்குக் கொடுக்கக் கூடிய மாபெரும் உதவியாக இருக்கும்.

# 60. நிஜத்துடன் வாழ், கற்பனைகளுடன் அல்ல

**கேட்பவர்:** *நீங்கள் எதைப் பார்த்தாலும் அது நீங்கள்தான் என்று சொல்கிறீர்கள். நாங்கள் பார்ப்பதுபோல்தான் நீங்களும் பார்ப்பதாகவும் ஒப்புக் கொள்கிறீர்கள். இதோ இன்றய செய்தித் தாள், நடக்கின்ற எல்லாக் கொடூரங்களைப் பற்றிய செய்திகளுடன் இருக்கிறது. நீங்களே உலகமானபடியால் இந்த மாதிரியான தவறான நடப்புகளை எப்படி விளக்குவீர்கள்?*

**மஹராஜ்:** உன் மனதில் எந்த உலகம் உள்ளது?

**கே:** *நாம் வாழுகின்ற பொதுவான உலகம்.*

**ம:** நாம் ஒரே உலகத்தில் வாழ்வதாக நீ நிச்சயமாக நம்புகிறாயா? நான் இயற்கையை, கடல் மற்றும் நிலம், தாவரங்கள் மற்றும் விலங்குகள் ஆகியவற்றைச் சொல்லவில்லை. அவை பிரச்சனை அல்ல. எல்லையற்ற வெளியும் (இடமும்), முடிவற்ற காலமும், தீராத சக்தியும் பிரச்சனை அல்ல. நான் சாப்பிடுவது, புகைப்பது, படிப்பது, பேசுவது ஆகியவற்றைப் பார்த்துத் தவறாக எண்ணி விடாதே. என் புத்தி இங்கு இல்லை. என் உயிர் இங்கு இல்லை. ஆசைகள், அவற்றின் நிறைவேறல்கள், அச்சங்கள், அவற்றிலிருந்து தப்பித்தல் ஆகியவற்றால் ஆன உன் உலகம் கண்டிப்பாக என்னுடையது அல்ல. அதைப் பற்றி என்னிடம் என்ன சொல்கிறாயோ அதைத் தவிர நான் அதைப் பற்றி அனுமானிப்பது கூட இல்லை. அது உன்னுடைய தனிப்பட்ட கனவு உலகம். அதற்கு என்னுடைய ஒரே எதிர்வினை, உன்னைக் கனவு காண வேண்டாம் என்று சொல்வது தான்.

**கே:** *கண்டிப்பாகப் போர்களும், புரட்சிகளும் கனவு அல்ல. நோய்வாய்ப்பட்ட தாய்மார்களும், பசியோடிருக்கும் குழந்தை*

களும் கனவு அல்ல. அநியாயமாகச் சேர்க்கப்பட்டு, தவறாகச் செலவிடப்படும் சொத்தும் ஒரு கனவு அல்ல.

**ம:** வேறு என்ன?

**கே:** ஒரு கனவைப் பகிர்ந்து கொள்ள முடியாது.

**ம:** விழிப்பு நிலையைக் கூடத்தான். விழித்தல், கனவு காணுதல், உறங்குதல் ஆகிய மூன்று நிலைகளும் தனிப்பட்டவை, அகவயப் பட்டவை, நெருக்கமானவை. 'நான்' என்று சொல்லப்படுகின்ற விழிப்புணர்வின் சிறிய குமிழிக்குள் இவையெல்லாம் நடக்கின்றன, அடங்கி உள்ளன. மெய்யான உலகம் சுயத்திற்கு அப்பால் இருக்கிறது.

**கே:** சுயமோ, சுயமில்லையோ, நிகழ்ச்சிகள் உண்மையானவை.

**ம:** ஆமாம், நிகழ்ச்சிகள் உண்மையானவை. நான் அவற்றுடன் வாழ்கிறேன். ஆனால் நீ கற்பனைகளுடன் வாழ்கிறாய், நிகழ்ச்சி களுடன் அல்ல. நிகழ்ச்சிகள் முட்டிக் கொள்வதில்லை. ஆனால் உன் வாழ்க்கையும், உலகமும் முழுவதும் முரண்பாடுகளால் நிறைந்துள்ளன. முரண்பாடு பொய்யின் அறிகுறி. மெய் ஒருபோதும் தன்னோடு முரண்படாது.

உதாரணத்திற்கு, மக்கள் பரம ஏழைகளாக இருக்கிறார்கள் என்று நீ குறைகூறுகிறாய். இருப்பினும், நீ உன் செல்வங்களை அவர்களுடன் பகிர்வதில்லை. நீ அருகில் உள்ள சண்டையைப் பொருட்படுத்துகிறாய். ஆனால் தூர தேசத்தில் அது நடந்தால் நீ எந்தவித அக்கறையையும் காட்டுவதில்லை. உன் தன்முனைப்பின் உள்ளடக்கத்தை மாற்றுவது உன் மதிப்பீடுகளைத் தீர்மானிக்கிறது; 'நான் நினைக்கிறேன்', 'எனக்கு வேண்டும்', 'நான் செய்ய வேண்டும்' என்பவை வரம்பற்றவை ஆக்கப்படுகின்றன.

**கே:** எப்படி இருந்தாலும் கொடூரம் என்பது உண்மையானது.

**ம:** உன்னை விட மெய்யானதல்ல. தவறான புரிதலாலும், தவறான உபயோகத்தாலும் உருவாக்கப்பட்ட பிரச்சனைகளைத் தவறாக அணுகுவதுதான் கொடூரம். தீமை. அது ஒரு முடிவில்லா வட்டச் சுற்று.

**கே:** அந்த வட்டத்தை உடைக்க முடியுமா?

**ம:** ஒரு பொய்யான வட்டத்தை உடைக்க வேண்டியதில்லை. அதை உள்ளவாறு பார்த்தால் போதும் - இல்லாததாக.

**கே:** ஆனால் நம்மை அவமானத்திற்கும், அட்டூழியத்திற்கும் கீழ்ப்படிய வைக்கவும், கட்டாயமாக ஏற்றுக்கொள்ள வைக்கவும் அது போதுமான அளவிற்கு மெய்யானது.

**ம:** பைத்தியகாரத்தனம் எங்கும் இருப்பது. தெளிந்த புத்தி அறிதானது. இருப்பினும் நம்பிக்கை இருக்கிறது. ஏனெனில் நாம் நம் பைத்தியக்காரத்தனத்தை உணரும் கணமே தெளிந்த புத்திக்கான வழியில் இருப்போம். இதுதான் குருவின் செயல் - நம் தினசரி வாழ்வின் மடத்தனத்தை நாம் பார்க்கும்படி செய்வது. உயிர் வாழ்வது உன்னை உணர்வுடையவனாக்குகிறது. ஆனால் குரு உன்னைப் பிரக்ஞை உடையவனாக்குகிறார்.

**கே:** ஐயா, நீங்கள் முதன் முதலானவரும் அல்ல, கடைசியான வரும் அல்ல. தொன்று தொட்டு மெய்மையைப் பலர் அறிந்து கொண்டுதான் இருக்கிறார்கள். இருப்பினும் நம் வாழ்க்கையை மிகக் குறைவாகவே அது பாதித்துள்ளது. ராமர்களும், கிருஷ்ணர் களும், புத்தர்களும், இயேசுக்களும் வந்தார்கள், போனார்கள்; நாம் இருப்பதுபோல்தான் இருக்கிறோம்; வியர்வையிலும், கண்ணீரிலும் உழன்று கொண்டு. நாம் பார்த்த மாமனிதர்கள் என்ன செய்தார்கள்? உலகத்தின் கஷ்டங்களைப் போக்க நீங்கள் என்ன செய்தீர்கள் ஐயா?

**ம:** நீ உருவாக்கிய கொடுமையை நீயேதான் இல்லாமல் செய்ய வேண்டும். உன் சொந்த, மரத்துப் போன சுய நலம் அதன் வேரில் இருக்கிறது. முதலில் உன் சொந்த வீட்டைச் சரி செய். அப்போது உன் வேலை முடிக்கப்பட்டதைப் பார்ப்பாய்.

**கே:** நமக்கு முன்னால் வந்த ஞானமும், அன்பும் கொண்டிருந் தவர்கள் மிகுந்த விலைகொடுத்துத் தங்களைச் சரிசெய்து கொண்டார்கள். அதன் விளைவு என்ன? ஒரு ஒளிர்கின்ற நட்சத்திரம் எவ்வளவுதான் பிரகாசமாக இருந்தாலும் இரவின் இருளைக் குறைக்காது.

**ம:** அவர்களையும், அவர்கள் செய்த வேலையையும் கணிக்க நீ அவர்களில் ஒருவனாக வேண்டும். கிணற்றில் இருக்கும் தவளைக்கு வானத்தில் இருக்கும் பறவைகளைப் பற்றி எதுவும் தெரியாது. உன்னால் அதைப் புரிந்துகொள்ள முடியாது. ஏனெனில் நீ தனிப் பட்ட ஆசைகளிலும், அச்சங்களிலும் கட்டுப்பட்டிருக்கிறாய். நீ விரிந்த மனப்பான்மையுடன் சிந்தித்து, அனுபவப்படு. பிறகு ஆழமான புரிதல் வரும்.

**கே:** நல்லதற்கும் கெட்டதற்கும் இடையில் சுவர் எதுவும் இல்லை என்று நீங்கள் சொல்கிறீர்களா?

**ம:** சுவர் எதுவும் கிடையாது. ஏனெனில் நல்லது என்றும் கெட்டது என்றும் எதுவும் கிடையாது. ஒவ்வொரு உண்மையான சூழ்நிலையிலும் தேவையானது மற்றும் தேவையற்றது என்பவை மட்டுமே உள்ளன. தேவையானது சரி, தேவையற்றது தவறு.

**கே:** யார் முடிவுசெய்கிறார்கள்?

**ம:** சூழ்நிலை முடிவு செய்கிறது. ஒவ்வொரு சூழ்நிலையும் ஒரு சவால். அது சரியான எதிர்வினையை வேண்டுகிறது. எதிர்வினை சரியானதாக இருந்தால் சவால் சந்திக்கப்பட்டு, பிரச்சனை தீர்க்கப் படும். எதிர்வினை தவறாக இருந்து, சவாலைச் சந்திக்காமல் போனால் பிரச்சனை தீர்க்கப்படாமல் இருக்கும். உன் தீர்க்கப் படாத பிரச்சனைகள்தான் கர்மாவாகின்றன. அவற்றைச் சரியாகத் தீர்த்து சுதந்திரமாக இரு.

**கே:** நீங்கள் எப்போதும் என்னை எனக்குள் திருப்பிவிடுகிறீர்கள். உலகப் பிரச்சனைகளுக்கு வெளிப்படையான தீர்வு கிடையாதா?

**ம:** உலகப் பிரச்சனைகள் உன்னைப் போன்ற தன் சொந்த ஆசைகளாலும் அச்சங்களாலும் நிறைந்துள்ள எண்ணற்ற மக்களால் உருவாக்கப் படுகிறது. உன்னைத் தவிர யாரால் உன் தனிப்பட்ட மற்றும் சமூகம் சார்ந்த, கடந்த காலத்தவைகளிலிருந்து விடுவிக்க முடியும்? மாயைகளால் உருவாகும் அபிலாசைகளிலிருந்து முதலில் விடுபட வேண்டும் என்னும் அவசரமான தேவையை நீ பார்க்கா விட்டால் அதை எவ்வாறு செய்வாய்? உனக்கே உதவி தேவைப்

படும்போது நீ எப்படி மற்றவர்களுக்கு உண்மையாக உதவ முடியும்?

**கே:**பழங்காலத்து முனிவர்கள் எவ்வாறு உதவினார்கள்? நீங்கள் எப்படி உதவுகிறீர்கள்? ஒரு சிலர் பயனடைவார்கள், அதில் சந்தேகமில்லை. உங்கள் வழிகாட்டுதலும், முன் உதாரணமும் அவர்களுக்கு நிறையவே அர்த்தமுள்ளதாக இருக்கும். ஆனால் எந்த விதத்தில் நீங்கள் மனித குலத்தை, உயிர் வாழ்தல் மற்றும் விழிப்புணர்வின் மொத்தத்தைப் பாதிக்கிறீர்கள்? நீங்கள்தான் உலகம், உலகம் நீங்கள் என்று சொல்கிறீர்கள். அதன் மேல் என்ன தாக்கத்தை ஏற்படுத்தியுள்ளீர்கள்?

**ம:** எந்த மாதிரியான தாக்கத்தை எதிர்பார்க்கிறாய்?

**கே:** மனிதன் முட்டாள், சுயநலமானவன், கொடூரமானவன்.

**ம:** மனிதன் புத்திசாலி, பாசமுள்ளவன், இரக்கமுள்ளவனும் கூட.

**கே:** ஏன் நல்ல தன்மை நிலவுவது இல்லை?

**ம:** என் மெய்யான உலகில் அது இருக்கிறது. என் உலகத்தில் நீ தீமையானது என்று சொல்கின்றது கூட நல்லதின் சேவகன். எனவே அதுவும் அவசியம். அது கொப்புளங்களும், காய்ச்சல்களும் உடலின் அசுத்தங்களைச் சுத்தம் செய்வது போல. நோய் வலி மிகுந்தது, அபாயமானதும் கூட. ஆனால் அது சரியாகக் கையாளப்பட்டால் அது குணப்படுத்தும்.

**கே:** அல்லது கொல்லும்.

**ம:** சில சமயம் இறப்பு என்பது சிறந்த நிவாரணி. ஒரு உயிர் வாழ்தல் இறப்பை விட மோசமாக இருக்கலாம். ஆனால் எப்படித் தோன்றினாலும் அரிதாகத்தான் இறத்தல் ஒரு விரும்பத்தகாத அனுபவம். ஆகையால் வாழ்பவர்கள்மீது அனுதாபப்படு, இறந்தவர்கள்மேல் அல்ல. தங்களுக்குள்ளாகவே நல்லதாகவும், கெட்டதாகவும் இருக்கும் பிரச்சனை எனக்குக் கிடையாது. அவசியமானது நல்லது, அவசியமற்றது தீயது. உன் உலகில் இனிமையானது நல்லது, வலிமிகுந்தது தீயது.

**கே:** எது அவசியமானது?

**ம:** வளர்வது அவசியமானது. விஞ்சி வளர்வது அவசியமானது. சிறந்ததற்காகச் சுமாரானதை விட்டுவிடுவது அவசியமானது.

**கே:** எந்த அளவு?

**ம:** ஆரம்பத்திலேயே முடிவு இருக்கிறது. நீ எங்கு ஆரம்பித்தாயோ அங்கு முடிகிறாய் - பூரணத்தில் (பரமகாஷ்த்தில்).

**கே:** பிறகு எதற்கு இத்தனை தொல்லைகளும்? நான் ஆரம்பித்த இடத்திற்கே திரும்ப வருவதற்கா?

**ம:** யாருடைய தொல்லை? எந்தத் தொல்லை? வளர்ந்து, ஒரு பெரிய காடாகும் வரை பெருகும் விதையைப் பார்த்து அனுதாபப் படுவாயா? வாழ்வதால் ஏற்படும் பிரச்சனைகளில் இருந்து காப்பாற்றுவதற்காக ஒரு குழந்தையைக் கொல்வாயா? வளர் வதற்கான தடைகளை நீக்கு. அப்போது உன் எல்லாத் தனிப்பட்ட, சமூக, பொருளாதார, அரசியல் பிரச்சனைகளும் கரைந்து விடும். மொத்தமாக பிரபஞ்சம் முழு நிறைவானது. பகுதிகள் முழு நிறைவிற்காக முயற்சிப்பது மகிழ்ச்சியான ஒரு வழி. நிறைவற்றதை முழு நிறைவானதற்காக மனம் ஒப்பித் தியாகம் செய். அப்போது நல்லது, கெட்டதைப் பற்றிய பேச்சு இருக்காது.

**கே:** இருப்பினும் நாம் சிறந்ததைப் பார்த்துப் பயப்பட்டு மோசமானதைப் பிடித்துக் கொண்டிருக்கிறோம்.

**ம:** இது பைத்தியக்காரத்தனத்தின் எல்லையில் இருக்கும் நம்முடைய அறிவீனம்.

# 61. பொருள் என்பது விழிப்புணர்வேதான்

**கேட்பவர்:** எனக்கு அதிர்ஷ்டம் இருப்பதால் என் வாழ்நாள் முழுவதும் புனிதமானவர்களுடன் இருக்கிறேன். சுயம் அறிவதற்கு அது போதுமா?

**மஹராஜ்:** அதை நீ எப்படி உபயோகிக்கிறாய் என்பதைப் பொறுத்தது.

**கே:** சத்சங்கத்தின் விடுதலை அளிக்கும் செயல் தானாகவே நடப்பது என்று எனக்குச் சொல்லியிருக்கிறார்கள். எப்படி நதி ஒருவரைக் கடலில் கலக்கும் இடத்திற்குக் கொண்டு செல்கிறதோ அப்படி, நல்ல மனிதர்களின் மறைமுகமான மற்றும் அமைதியான தாக்கம் என்னை மெய்மையிடம் கொண்டுபோய்ச் சேர்க்கும்.

**ம:** அது உன்னை நதியிடம் எடுத்துச் செல்லும். ஆனால் கடப்பதை நீதான் செய்ய வேண்டும். விடுதலைக்கான தீராத ஆர்வம் இல்லாமல் விடுதலையைப் பெறவோ, தக்க வைத்துக் கொள்ளவோ முடியாது. விடுதலைக்காக நீ விடா முயற்சி செய்ய வேண்டும். குறைந்த பட்சமாக நீ செய்யக்கூடியதெல்லாம் கவனமாகத் தடைகளை விலக்கி நீக்கலாம். உனக்கு அமைதி வேண்டும் என்றால் அதற்காக நீ கடும் முயற்சி செய்ய வேண்டும். வெறுமனே எதுவும் செய்யாமல் இருப்பதால் உனக்கு அமைதி கிடைக்காது.

**கே:** ஒரு குழந்தை தானாகவே வளர்கிறது. அது வளரத் திட்டமிடுவதில்லை. அதனிடம் ஒரு படிவம் கிடையாது. அது ஒரு கால் இங்கேயும், ஒரு கை அங்கேயுமாகப் பகுதி பகுதியாக வளர்வது இல்லை. அது ஒருங்கிணைந்து, வளர்கிறோம் என்னும் உணர்வில்லாமல் வளர்கிறது.

**ம:** ஏனெனில் அது கற்பனையிலிருந்து விடுபட்டு இருக்கிறது. நீயும் அதுபோல் வளரலாம். ஆனால் ஞாபகத்தாலும், எதிர்பார்ப்பாலும் பிறக்கின்ற முன் கணிப்பிலும், திட்டமிடுதலிலும் நீ ஈடுபடாமல் இருக்க வேண்டும். எதிர் காலத்தைப் பற்றி ஒருபோதும் கவலைப்படாமல் இருப்பது ஞானத்தின் தனித்துவங்களில் ஒன்று. உன் எதிர்காலத்தைப் பற்றிய அக்கறை வலியைப் பற்றிய அச்சத்தினாலும், புலனின்பத்தின் மேல் உள்ள ஆசையினாலும் வருவது. ஞானிக்கு எல்லாமும் பேரின்பம்; எது வந்தாலும் அவருக்குத் திருப்தியும், மகிழ்ச்சியுமே.

**கே:** கண்டிப்பாக ஒரு ஞானியைக் கூட துயர்மிகுந்தவராக்கும் பல உள்ளன.

**ம:** ஒரு ஞானி கஷ்டத்தைச் சந்திக்கலாம். ஆனால் அவை அவரைத் துன்பப்பட வைக்க மாட்டா. ஒரு குழந்தையைப் பிறந்ததிலிருந்து முதிரும்வரை வளர்ப்பது ஒரு கடினமான வேலையாகத் தோன்றலாம். ஆனால் ஒரு தாய்க்கு கஷ்டங்களைப் பற்றிய ஞாபகங்கள் சந்தோசமானவை. உலகத்திடம் எதுவும் தவறில்லை. நீ அதைப் பார்க்கும் விதத்தில்தான் தவறு இருக்கிறது. உன் சொந்தக் கற்பனைதான் உன்னைத் தவறாகச் செலுத்துகிறது. உலகத்திற்குத் தானாகவே சுதந்திரமான இருப்பே இல்லை. நீ உலகமாகப் பார்ப்பது உன்னுடைய கற்பனையே. நீ உலகம் அல்லது பொருள் என்று சொல்வது உன்னுடைய கற்பனையே. நீதான் அது நகர்கின்ற இடம், அது நீடித்திருக்கிற காலம், அதற்கு உயிர் கொடுக்கின்ற அன்பு. கற்பனையையும், பற்றுதலையும் விட்டுவிட்டால் என்ன மிஞ்சும்?

**கே:** உலகம் மிஞ்சுகிறது. நான் மிஞ்சுகிறேன்.

**ம:** ஆமாம். ஆனால் அதை ஆசை மற்றும் அச்சங்களால் ஆன திரைகளின் வழியாகப் பார்க்காமல் உள்ளவாறு பார்த்தால் எவ்வளவு வித்தியாசமாக உள்ளது பார்!

**கே:** மெய்மை - மாயை, அறிவு - அறியாமை, புனிதர் - பாவி என்னும் இந்த மாதிரியான வேறுபாடுகள் எதற்காக? ஒவ்வொருவரும் ஆனந்தத்தைத் தேடுகிறார்கள்; ஒவ்வொருவரும்

வெறித்தனமாகக் கடும் முயற்சி செய்கிறார்கள்; ஒவ்வொருவரும் ஒரு யோகி; அவருடைய வாழ்க்கை ஒரு அறிவுப் பள்ளி. ஒவ்வொரு வரும் தனக்குத் தேவையான பாடத்தைத் தன் சொந்த வழியில் கற்றுக் கொள்கிறார்கள். சமுதாயம் சிலரை அங்கீகரிக்கிறது. சிலரை நிராகரிக்கிறது. எல்லா இடத்திலும், எல்லா நேரத்திலும் பொருந்தக் கூடிய விதிமுறைகள் இல்லை.

**ம:** என் உலகத்தில் அன்புதான் ஒரே சட்டம். நான் அன்பை வேண்டுவதில்லை, கொடுக்கிறேன். என் இயல்பு அதுதான்.

**கே:** நீங்கள் உங்கள் வாழ்க்கையை ஒரு படிவத்தின்படி வாழ்வதைப் பார்க்கிறேன். காலையில் தியான வகுப்பை நடத்து கிறீர்கள்; வழக்கமாகச் சொற்பொழிவும், கலந்துரையாடலும் செய்கிறீர்கள்; தினமும் இருமுறை பூஜையும், மாலையில் பஜனும் இருக்கிறது. வழக்கத்தை நீங்கள் பிழையில்லாமல் பின்பற்றுவது போலத் தோன்றுகிறது.

**ம:**பிரார்த்தனையும், பஜனும் அவை நடப்பதுபோல் நடக்கின்றன; அதில் குறுக்கிட எந்தக் காரணமும் எனக்கு இல்லை. வழக்கமான நடைமுறை என்னைச் சுற்றி இருப்பவர்கள் அல்லது கவனிக்க வருபவர்களுடைய விருப்பத்திற்கேற்ப நடக்கிறது. அவர்கள் நிறையக் கடமைகளுடன் வேலைக்குச் செல்பவர்கள். நேர அட்டவணை அவர்களுடைய சௌகரியத்திற்காக அமைக்கப் படுகிறது. சில திரும்பத் திரும்பச் செய்யப்படும் வழிமுறை தவிர்க்க முடியாதது. மிருகங்களும், தாவரங்களும்கூட நேர அட்டவணையைக் கொண்டிருக்கின்றன.

**கே:** ஆமாம், எல்லா வாழ்க்கையிலும் ஒரு வழக்கமான வரிசைமுறை இருக்கிறது. யார் இந்த ஒழுங்கைப் பராமரிப்பது? சட்டத்தை ஏற்படுத்தி, அதை அமல்படுத்தும் ஒரு உள் ஆட்சியாளர் உள்ளாரா?

**ம:** ஒவ்வொன்றும் அதன் இயல்புப்படி இயங்குகின்றது. காவல்காரருக்கான அவசியம் என்ன? ஒவ்வொரு வினையும் ஒரு எதிர்வினையை உருவாக்கும். அது வினையை சமநிலைப்படுத்தி, நடுநிலைப்படுத்தும். ஒவ்வொன்றும் நிகழ்கிறது; ஆனால் ஒரு

தொடர்ச்சியான நீக்குதல் நிகழ்ந்து, முடிவில் எதுவுமே நடக்காதது போல் அது இருக்கிறது.

**கே:** முடிவான ஒத்திசைவுகளால் என்னைத் தேற்றாதீர்கள். கணக்குகள் நேராகின்றன. ஆனால் இழப்பு எனக்குத்தான்.

**ம:** பொறுத்திருந்து பார். அவசரப்படாதே. முடிவில் நடப்பவற்றை நியாயப்படுத்தும் விதமாக லாபத்தில் முடிவாய்.

**கே:** எனக்குப் பின்னால் ஒரு நீண்ட வாழ்க்கை இருக்கிறது. அதன் பல நிகழ்வுகள் விபத்துப் போல ஏற்படுகின்றனவா அல்லது ஒரு திட்டம் இருக்கிறதா என்று நான் அடிக்கடி ஆச்சரியப்படுகிறேன். நான் பிறப்பதற்கு முன்பே என் வாழ்க்கையை வாழும் விதம் ஒரு படிவமாக வடிவமைக்கப்பட்டுள்ளதா? ஆம் என்றால், யார் திட்டமிட்டது? யார் செயல்படுத்துவது? அதிலிருந்து விலகல்களும், தவறுகளும் இருக்க முடியுமா? சிலர், விதி மாற்ற முடியாதது என்றும், வாழ்க்கையின் ஒவ்வொரு வினாடியும் முன்பே தீர்மானிக்கப் பட்டது என்றும் சொல்கிறார்கள்; மற்றவர்கள், தன்னிச்சையான விபத்துக்களே ஒவ்வொன்றையும் தீர்மானிக்கின்றன என்று சொல்கிறார்கள்.

**ம:** உனக்கு விருப்பப்பட்டபடி எடுத்துக் கொள்ளலாம். உன் வாழ்க்கையில் ஒரு படிவத்தைக் காணலாம். அல்லது வெறுமனே விபத்துக்களின் ஒரு தொடர்ச்சியைப் பார்க்கலாம். விளக்கங்கள் மனதை மகிழ்விக்கவே உள்ளன. அவை உண்மையாக இருக்க வேண்டியதில்லை. மெய்மை வரையறுக்கப்படவோ, விவரிக்கப் படவோ முடியாதது. அது இவற்றிற்கு அப்பாற்பட்டது.

**கே:** ஐயா. நீங்கள் என் கேள்வியைத் தவிர்க்கிறீர்கள்! நீங்கள் எப்படி அதைப் பார்க்கிறீர்கள் என்று நான் அறிய விரும்புகிறேன். நாம் எங்கு பார்த்தாலும் நம்ப முடியாத புத்திசாளித்தனம் மற்றும் அழகின் வடிவத்தைப் பார்க்கிறோம். பிரபஞ்சம் வடிவமற்றது மற்றும் குழப்பமானது என்று நான் எப்படி நம்புவது? நீங்கள் வாழுகின்ற உங்களுடைய உலகம் வடிவமற்று இருக்கலாம். ஆனால் அது குழப்பமாக இருக்க வேண்டியதில்லை.

**ம:** வடிவத்தைக் கொண்டுள்ள புறவயப்பட்ட உலகம் ஒழுங்காகவும், அழகாகவும் உள்ளது. யாரும் அதை மறுக்க முடியாது. ஆனால் வடிவமும், படிவமும் கட்டுப்பாடுகளையும், நிர்பந்தங்களையும் குறிக்கின்றன. என் உலகம் தீர்க்கமாகச் சுதந்திரமானது; அதில் உள்ள ஒவ்வொன்றும் சுயமாக முடிவு செய்யப்பட்டது. ஆகையால் நான் எல்லாமும் தானாக நடக்கின்றன என்று சொல்கிறேன். என் உலகத்திலும் ஒழுங்கு உள்ளது. ஆனால் அது வெளியிலிருந்து திணிக்கப்பட்டதல்ல. அதன் காலவரம்பற்ற தன்மையால் அது தன்னிச்சையாகவும், உடனடியாகவும் வருகிறது. முழுநிறைவு எதிர்காலத்தில் உள்ளதல்ல. அது இப்போதே உள்ளது.

**கே:** *மஹராஜ், உங்களுடைய உலகமும், என்னுடைய உலகமும் எப்போதாவது ஒன்றாக இருக்குமா?*

**ம:** ஆமாம், ஒரு நிலையில் மட்டுமே - தற்போது என்னும் நிலையில். ஒரு கண நேரத்திற்கு மட்டுமே என் உலகம் உன் உலகத்திற்கு இருத்தல் உணர்வைக் கொடுக்கிறது. இதை ஒப்புக் கொள்பவர் மெய்மையின் முத்திரையை அதற்குக் கொடுக்கிறார். தூய விழிப்புணர்வாகிய நிலையில் மட்டுமே உன் உலகமும், என் உலகமும் ஒரே நிலையில் இருக்கும். அதற்கு நீ தன்னிச்சையாக நீயாக இருக்க வேண்டும், இதுவாக அல்லது அதுவாக இருப்பதான உணர்வு சிறிதுகூட இல்லாமல். இந்தத் தூய விழிப்புணர்வு நிலையில் ஆழ்ந்திருக்க வேண்டும்.

**கே:** *இந்தத் தியானத்தில் இருப்பது மனதின் ஒரு மாற்றம் அல்லவா?*

**ம:** ஆமாம். மனம் மெய்மைக்கு எப்போது ஆவலுடன் இருக்கிறதோ அப்போது அது அந்த மாற்றத்தைக் கொடுக்கிறது. உன் உலகத்திடம் எதுவும் தவறல்ல. அது முழுமையாகவும், ஏக ரூபமாகவும் உள்ளது. நீ அதிலிருந்து தனித்திருப்பதாக நினைப்பது தான் ஒழுங்கின்மையை உருவாக்குகிறது. எல்லாத் துக்கங்களுக்கும் நீ தனித்திருப்பதாக நினைப்பதுதான் காரணம்.

**கே:** *நான் என் கேள்விக்கே திரும்ப வருகிறேன். நான் பிறப்பதற்கு முன்பே என் உள்சுயம் என் வாழ்க்கையை முடிவு செய்கிறதா*

கொண்டுவந்தன. அவள் ஒரு சாமர்த்தியமுள்ள அழகான பெண்ணாக உருவானாள். அந்த மருத்துவருக்கு ஐந்து வருடத்திற்கும் அதிகமான காலம் எடுத்துக் கொண்டது. ஆனாலும் வேலை முடிந்தது. அவர் ஒரு நிஜமான குரு! அவர் எந்த நிபந்தனையையும் விதிக்கவில்லை. அவளுடைய தயார்த் தன்மையைப் பற்றியோ, தகுதியைப் பற்றியோ அவர் பேசவில்லை. நம்பிக்கையோடு, எதிர்பார்ப்பில்லாமல், அன்பால் மட்டுமே அவர் மேலும் மேலும் முயற்சி செய்தார்.

**ம:** ஆமாம். அதுதான் குருவின் இயல்பு. அவர் ஒருபோதும் கைவிட மாட்டார். ஆனால் வெற்றிபெற, அவர் மிக அதிகமான எதிர்ப்புகளைச் சந்திக்கக் கூடாது. சந்தேகமும், கீழ்ப்படியாமையும் கண்டிப்பாகத் தாமதப்படுத்தும். உறுதியான நம்பிக்கையும், நெகிழ்ச்சியும் கொண்டிருந்தால் அவர் சீடரிடத்தில் ஒரு மாபெரும் மாற்றத்தை வேகமாகக் கொண்டுவந்துவிடுவார். குருவிடம் ஆழமான உள்முகப் பார்வையும், சீடரிடத்தில் உள்ளார்ந்த ஈடுபாடும் ஆகிய இரண்டுமே தேவை. அவளுடைய நிலைமை எதுவாக இருந்தலும், உன் கதையிலுள்ள சிறுமி மக்களிடம் ஈடுபாடில்லாததால் துன்பப்பட்டாள். அறிவுஜீவிகள்தான் மிகவும் கடினமானவர்கள். அவர்கள் நிறையப் பேசுவார்கள்; ஆனால் அவர்கள் செய்வது மிகவும் குறைவு.

நீ மெய்யறிதல் என்று சொல்வது ஒரு இயல்பான காரியம். நீ தயாராக இருந்தால் உன் சத்குரு காத்திருப்பார். சாதனா என்பது பிரயத்தனமற்றது. அதில் நீ செய்ய வேண்டியது எதுவுமே இல்லை. அதற்குப் பதிலாக ஒன்றுமே செய்யாதிருப்பதுதான் நீ செய்ய வேண்டியது. குருவிடம் உன் உறவு சரியானதாக இருந்தால் நீ வளர்வாய். எல்லாவற்றிற்கும் மேலாக அவருடைய வார்த்தைகளில் மாறாத நம்பிக்கையைக் கொண்டிரு. அவர் உன்னைத் தவறாக வழி நடத்த மாட்டார்.

**கே:** அப்பட்டமாகத் தவறாகத் தெரியும் ஏதாவது ஒன்றை அவர் செய்யச் சொன்னாலுமா?

**ம:** அதைச் செய். ஒரு சன்னியாசியை அவருடைய குரு திருமணம் செய்துகொள்ளுமாறு சொன்னார். அவர் அதற்குச்

கீழ்ப்படிந்து, அதனால் மிகவும் துன்பப்பட்டார். ஆனால் அவருடைய நான்கு குழந்தைகளும் மஹாராஷ்ட்டிரத்திலேயே சிறந்த மகான்களாகவும், ஞானிகளாகவும் இருந்தார்கள். உன் குருவிடமிருந்து எது வந்தாலும் அதனால் மகிழ்ச்சியாக இரு. அப்போது முயற்சியில்லாமல் முழுநிறைவிற்கு வளர்வாய்.

**கே:** ஐயா, உங்களுக்கு ஏதாவது தேவையோ, ஆசையோ இருக்கிறதா? நான் உங்களுக்கு ஏதாவது செய்ய முடியுமா?

**ம:** என்னிடம் இல்லாத எதை நீ எனக்குக் கொடுக்க முடியும்? திருப்திக்குப் பொருட்கள் தேவை. ஆனால் நான் என்னோடு திருப்தியாக இருக்கிறேன். எனக்கு வேறு என்ன தேவை?

**கே:** கண்டிப்பாக, நீங்கள் பசியுடன் இருந்தால் உணவு தேவை. நோய்வாய்ப்பட்டிருந்தால் உங்களுக்கு மருந்து தேவை.

**ம:** பசி உணவைக் கொண்டு வரும். நோய்வாய்ப்பட்டிருந்தால் அது மருந்தைக் கொண்டுவரும். இவையெல்லாம் இயற்கையின் வேலை.

**கே:** உங்களுக்குத் தேவை என்று நான் நம்புவதைக் கொண்டுவந்தால் நீங்கள் ஏற்றுக் கொள்வீர்களா?

**ம:** உன்னைக் கொடுக்க வைத்த அன்பு என்னை ஏற்கவைக்கும்.

**கே:** யாராவது ஒரு அழகான ஆசிரமத்தைக் கட்டிக் கொடுத்தால்?

**ம:** எல்லாவகையிலும் செய்யட்டும். பெருந்தொகையைச் செலவு செய்யட்டும். நூற்றுக் கணக்கானவர்களை வேலைக்கு அமர்த்தட்டும். ஆயிரக் கணக்கானவர்களுக்கு உணவு அளிக்கட்டும்.

**கே:** அது ஒரு ஆசை அல்லவா?

**ம:** இல்லவே இல்லை. நான் அவரைச் சரியாக, கஞ்சத்தனமில்லாமல், அரை மனதுடன் இல்லாமல் செய்யச் சொல்கிறேன். அவர் தன்னுடைய ஆசையைப் பூர்த்தி செய்கிறார். என்னுடையதை அல்ல. அதை அவர் சரியாகச் செய்து, மக்களிடத்திலும், கடவுள்களிடத்திலும் பிரபலமாகட்டும்.

**கே:** ஆனால் நீங்கள் அதை வேண்டுகிறீர்களா?

**ம:** நான் அதை வேண்டுவதில்லை.

**கே:** நீங்கள் அதை ஏற்றுக் கொள்வீர்களா?

**ம:** எனக்கு அது தேவையில்லை.

**கே:** நீங்கள் அதில் தங்குவீர்களா?

**ம:** நிர்பந்திக்கப்பட்டால் தங்குவேன்.

**கே:** எது உங்களை நிர்பந்திக்கும்?

**ம:** யார் சுயஒளியைத் தேடிக்கொண்டிருக்கிறார்களோ அவர்களுடைய பக்தி.

**கே:** ஆமாம். உங்களுடைய கருத்து எனக்குப் புரிகிறது. நான் சமாதி நிலைக்கு எப்படிச் செல்வது?

**ம:** நீ சரியான நிலையில் இருந்தால், நீ எதைப் பார்த்தாலும் அது உன்னைச் சமாதி நிலையில் வைக்கும். சமாதி என்பது வழக்கத்திற்கு மாறானது அல்ல. மனம் தீவிரமாக ஆர்வத்துடன் இருந்தால் அது ஆர்வத்துடன் இருப்பதுடன் ஒன்றாகிவிடும் - பார்ப்பதில் பார்ப்பவரும், பார்க்கப்படுவதும் ஒன்றாகிவிடுவார்கள். கேட்பதில் கேட்பவரும், கேட்கப்படுவதும் ஒன்றாகிவிடுவார்கள். நேசிப்பதில் நேசிப்பவரும், நேசிக்கப்படுவதும் ஒன்றாகிவிடுவார்கள். ஒவ்வொரு அனுபவமும் சமாதிக்கான அடிப்படையாகலாம்.

**கே:** நீங்கள் எப்போதும் சமாதி நிலையில் இருக்கிறீர்களா?

**ம:** நிச்சயமாக இல்லை. எப்படியிருந்தாலும், சமாதி மனதின் ஒரு நிலை. நான் சமாதி உட்பட எல்லா அனுபவங்களுக்கும் அப்பாற்பட்டவன். நான் மாபெரும் சுபளீகரம் செய்பவன் மற்றும் அழிப்பவன்; நான் எதைத் தொட்டாலும் அது ஆகாசத்தில் மறைந்துவிடும்.

**கே:** எனக்கு மெய்யறிய சமாதி நிலைகள் தேவை.

**ம:** சுயம் அறிதலாகிய ஞானம் உன்னிடம் உள்ளது. ஆனால் நீ அதை நம்புவதில்லை. தைரியமாக இரு, உன்னை நம்பு, போ, பேசு, செயல்படு; தன்னை நிரூபிக்க அதற்கு ஒரு சந்தர்ப்பம் கொடு. சிலருக்குச் சுயம் அறிதல் புலன்களால் உணரத்தக்கவிதமாய்

அல்லாமல் வரும். ஆனால் எப்படியாவது அவர்களை நம்ப வைக்க வேண்டும். அவர்கள் மாறிவிட்டார்கள். ஆனால் அவர்கள் அதைக் கவனிப்பதில்லை. அம்மாதிரியான ஞானம் பெரும்பாலும் நுட்பமாகவும், சலனமில்லாமலும், உறுதியாகவும் இருக்கும்.

**கே:** மெய்யறியாமல் ஒருவர், தன்னை மெய்யறிந்தவராக நம்பினால் அது தவறாகுமா?

**ம:** நிச்சயமாக. 'நான் மெய்யறிந்துவிட்டேன்' என்னும் கற்பனையே ஒரு தவறு. மெய்யறிந்த, சகஜமான நிலையில் 'நான் இது', 'நான் அது' என்னும் எண்ணத்திற்குச் சாத்தியமில்லை..



# 62. உச்ச உயர்வானதில் சாட்சி தோன்றுகிறது

**கேட்பவர்:** சுமார் 40 வருடங்களுக்கு முன்பு ஜே.கிருஷ்ணமூர்த்தி, உயிர் மட்டுமே உள்ளது, நபர்த்தன்மைகளைப் பற்றிப் பேசுவதற்கும், நபரின் தனிப்பட்ட தன்மைகளைப் பற்றிப் பேசுவதற்கும் மெய்மையில் அடிப்படை முகாந்திரம் இல்லை என்று சொல்லியிருக்கிறார். அவர் வாழ்க்கையை விவரிக்க முயலவில்லை. வாழ்க்கையை விவரிக்கத் தேவையும் இல்லை, விவரிக்கவும் முடியாது என்றும், ஆனால் அனுபவப்படுவதற்கான தடைகளை நீக்கினால் முழுவதும் அனுபவப்பட முடியும் என்றும் சொன்னார். முக்கியமான தடை நமக்கு காலம் மற்றும் கடந்த காலத்தை வைத்து ஒரு வருங்காலத்தை எதிர்பார்க்கும் பழக்கம் ஆகியவற்றைப் பற்றிய நம்முடைய கருத்திலும், பழக்க அடிமைத்தனத்திலும் இருக்கிறது. கடந்தகாலத்தின் மொத்தமும் சேர்ந்து 'நான் இருந்தேன்' என்றும், எதிர்காலத்தின்மேல் கொண்டுள்ள நம்பிக்கை 'நான் இருப்பேன்' என்றும் ஆகிறது. வாழ்க்கை என்பது 'நான் இருந்தேன்' என்பதிலிருந்து 'நான் இருப்பேன்' என்பதாக மாறுவதற்கான ஒரு நிரந்தரமான முயற்சி. நிகழ்காலக் கணம், 'இப்போது' என்பது கண்ணுக்குத் தெரியாமல் போய்விட்டது. மஹராஜ் 'நான்' என்பதைப் பற்றிப் பேசுகிறீர்கள். அது, 'நான் இருந்தேன்', 'நான் இருப்பேன்' என்பவைகளைப் போல மாயையா அல்லது அதில் ஏதாவது மெய்த்தன்மை இருக்கிறதா? 'நான்' என்பதும் மாயை என்றால், எப்படி ஒருவர் அதிலிருந்து தன்னை விடுவிப்பது? 'நான்' என்பதிலிருந்து ஒருவர் விடுபட்டிருக்கிறார் என்பதே ஒரு அபத்தம். சேர்க்கப்படுகின்ற ஞாபகங்கள் உருவாக்குகின்ற புது எதிர்பார்ப்புகளால் காலத்தோடு சேர்ந்து மாறுகின்ற 'நான் இருந்தேன்' அல்லது 'நான் இருப்பேன்'

என்பவற்றிலிருந்து வித்தியாசமாக 'நான்' என்பதில் ஏதாவது மெய்யானதோ, நீடித்திருப்பதோ உள்ளதா?

**மஹராஜ்:** தற்பொழுதிலுள்ள 'நான்', 'நான் இருந்தேன்' மற்றும் 'நான் இருப்பேன்' என்பவற்றைப் போலவே கற்பனையானது. அது மனதிலுள்ள வெறும் கருத்து மட்டுமே, அது ஞாபகத்தால் விடப்பட்ட ஒரு பதிவு. அது உருவாக்கும் தனித்த அடையாளம் பொய்யானது. ஒரு பொய்யான மையத்தைக் குறிப்பிடும் இந்தப் பழக்கத்தை விட்டுவிட வேண்டும். 'நான் பார்க்கிறேன்', 'நான் உணர்கிறேன்', 'நான் சிந்திக்கிறேன்', 'நான் செய்கிறேன்' என்னும் பொய்க்கருத்து விழிப்புணர்வுப் புலத்திலிருந்து மறைய வேண்டும். பொய்யானது மேற்கொண்டு இல்லாதபோது என்ன மிஞ்சுகிறதோ அது மெய்.

**கே:** சுயம் தனித்திருப்பது என்னும் இந்தப் பேச்சின் அர்த்தம் என்ன? எந்த மாதிரியான மனம் சார்ந்த மல்யுத்தம், மல்யுத்தம் செய்பவரையே வெல்லும்? நாம் அவர் தோற்றதாகக் கருதினால், கடைசியில் அவர் புது வலிமையுடன் திரும்ப எழுந்து நிற்க மாட்டாரா?

**ம:** 'நான்' ஐக் கொல்ல நீ அதைத் துரத்த வேண்டியதில்லை. அது உன்னால் முடியாது. அந்த வலையில் விழாமல் இருப்பதற்கு உனக்குத் தேவையானதெல்லாம் மெய்மைக்காக மனமார்ந்த, நேர்மையான ஏக்கம்தான். அதை நாம் 'ஆத்ம பக்தி' - உச்ச உயர்வின் மீது கொண்டுள்ள நேசம் அல்லது 'மோட்ச சங்கல்பம்' - பொய்யிலிருந்து விடுதலையாவதற்கான மன உறுதி என்று சொல்கிறோம். பக்தியில்லாமல், பக்தியால் ஊக்கமளிக்கப்பட்ட மனோதிடம் இல்லாமல் எதுவுமே செய்ய முடியாது. அது வேறு எதற்கான பக்தியும் அல்ல. வேறு தெய்வத்தின் மீதான பக்தியும் அல்ல. ஆனால் அது பிரிதொன்றின்மீது அல்லாத பக்தி. அதில் பக்தர், தெய்வம் என்னும் வேறுபாடில்லை. அது பரம பக்தி, பரமாத்ம பக்தி, பரம - ஆத்ம பக்தி, தன் மீதான பக்தி.

அதற்காக எதுவுமே செய்யாமல், வெறுமனே மெய்மையைப் பற்றிப் பேசுவது சுயமாகத் தோல்வியடைவது. 'நான்' என்று

சொல்கின்ற நபருக்கும், 'நான்'ஐச் சாட்சியாகப் பார்க்கின்ற வருக்கும் இடையிலுள்ள தொடர்பில் அன்பு இருக்க வேண்டும்; பக்தி இருக்க வேண்டும். உள் சுயத்தையும், அதைச் சாட்சியாகப் பார்ப்பவரையும் வேறாகக் கருதும்வரை பக்தி சாத்தியம் இல்லை. அதில் விபக்திதான் இருக்கும். தனிநபர்த் தன்மை தன்னைத் தனித்துப் பார்க்காமல் நட்புடன் இருக்கவேண்டும். தனித்துவத்தால் அடக்கப்பட்ட சாட்சி(வியக்தா) விடுபடும்போது, அகம் மற்றும் புறம் என்று அறியப்படும் இருமைத்தன்மை (துவைதம்) இல்லாமல் போகும். அப்போது இருமையற்ற அவியக்த பரமாத்மா தன்னுடைய சுயம் பிரகாசத்தினால் கடவுளாக (பிரகாசமாக) தனக்குள்ளே உணரப்படும்.

பார்ப்பவர், தான் பார்ப்பதாக அல்லாமல், எதைப் பார்க்கிறாரோ அதையே தானாக அறிவதில் அன்பின் இனிமை ஏற்படும். அப்போது பார்க்கப்படுவதின் மேலும், பார்ப்பதின் மேலும் விருப்பம் ஏற்படும். தான் அறிவதாக அறிவதில் அவருக்கு விருப்பம் ஏற்படும். பரமாத்மாவை அறிவதற்கு ஆத்ம பக்தியைப் போல வேறு எந்தச் சாதனமும் இல்லை.

**கே:** தத்துவ இயலாளர்கள் மற்றும் அவர்கள் போன்றவர்களின் கூற்றுப்படி, மனிதன் மூன்று குணாதிசயங்களை உடையவன்: அசுரத்தன்மை, மனிதத்தன்மை, தெய்வீகத்தன்மை ஆகியன. ஆன்மீகத் தன்மை இவற்றிற்கும் மேலானது. அசுரத்தன்மை கண்டிப்பாகத் தற்காலிகமானது. அது ஒரு பிறவிக்குத்தான் செல்லுபடியாகும். அது உடல் பிறக்கும்போது ஆரம்பித்து, அடுத்த உடல் பிறக்கும்போது முடிகிறது. ஒருமுறை முடிந்தால் அது நிரந்தரமாக முடியும்; ஒருசில இனிய அல்லது கசப்பான ஞாபகங்களைத் தவிர அதில் எதுவுமே மிஞ்சாது.

மனிதத்தன்மை விலங்கு-மனிதனில் ஆரம்பித்து, முழு மனிதனில் முடிகிறது. அசுரத்தன்மைக்கும், மனிதத்தன்மைக்கும் இடையே உள்ள முரண்பாடுதான் நம் தற்கால மனித குலத்தின் குணாதிசயம்.

ஒருபக்கம் மனிதத்தன்மை உண்மை, நன்மை, அழகு ஆகியவற்றிற்கான அதன் ஏக்கத்துடன் இருக்கிறது. மறு பக்கம் அது

பழக்கத்திற்கும், முன்னேற்றத்திற்கான ஆவலுக்கும் இடையிலும், அச்சத்திற்கும், பேராசைக்கும் இடையிலும், சாந்தத்திற்கும், குரூரத்திற்கும் இடையிலும் ஒரு அசிங்கமான போராட்டத்துடன் இருக்கிறது.

தெய்வீகத் தன்மை இன்னும் செயலற்ற நிலையிலேயே இருக்கிறது. இருமைத் தன்மைச் சூழ்நிலையில் அது தன்னை வெளிப்படுத்த முடியாது. அசுரத்தன்மை தன் இயல்பை விட்டு விட்டு, மனிதத்தன்மையுடன் திரும்ப இணையும்போதுதான் தெய்வீக ஸ்வரூபம் தன் பக்தி சௌந்தர்யத்தினால் சுயம் பிரகாசமாக ஒளிரும்.

*வியக்தி, வியக்தா, அவியக்தா (பார்ப்பவர், பார்க்கப்படுவது, பார்ப்பதின் ஆதாரம்) ஆகியவற்றைப் பற்றி போதிக்கிறீர்கள். அது மேற்கண்ட கருத்துக்களோடு ஒத்துப் போகிறதா?*

**ம:** ஆமாம். உடலையும், உடலின் பெயரையும் நான் என்று பிடித்துக் கொண்டிருக்கின்ற தனிநபர்த் தன்மை, தான் உடலோ, மனமோ அல்ல என்றும், தான் சித்த ரூபம், தூய விழிப்புணர்வு மற்றும் சுத்த ஞான ஸ்வரூபம் என்றும் வியத்தத்துவத்தில் எப்போது அறிகிறதோ அப்போது அவியக்தாவின் முனைப்பான அமைதி உணர்ந்தறியப்படுகிறது. அடிப்படையில், வியக்தா மற்றும் அவியக்தா ஆகியவை ஒன்றே. வியக்தாவும், அவியக்தாவும் வேறு வேறான தன்மையானவை அல்ல. மற்றும் வியக்தி என்பது பஞ்ச பூதங்களால் ஆன மனேந்திரியம் மற்றும் தேகேந்திரியத்தால் உணரவும், அறியவும், சிந்திக்கவும்பட்ட கற்பனையான செயல்பாடு.

**கே:** *வியக்தாவிற்கும், அவியக்தாவிற்கும் இடையில் என்ன தொடர்பு?*

**ம:** அவை இரண்டுமே ஒன்றாக இருக்கும்போது தொடர்பு எப்படி இருக்கமுடியும்? பிரிவினை மற்றும் தொடர்பு ஆகியவற்றைப் பேசுவதே 'நான் உடல்' என்னும் கருத்தின் திரிக்கப் பட்ட மற்றும் சீரழிந்த கற்பனையால்தான். புற சுயம் (வியக்தி) வெறுமனே உள் சுயத்தின் (வியக்தாவின்), மனோ-உடலின் மேல்

ஒரு உருவாக்கம். அது எல்லாமுமாகவும் மற்றும் ஒன்றுமில்லாதது மான உச்ச உயர்வான சுயத்தின் (அவியக்தாவின்) ஒரு வெளிப்பாடு மட்டுமே. இங்கேயும், அங்கேயும் சேர்ந்து எல்லாமும் ஒன்றுதான்.

**கே:** உயர்வான சுயம் மற்றும் கீழான சுயம் ஆகியவற்றைப் பற்றிப் பேசாத ஆசிரியர்கள் உள்ளனர். அவர்கள் கீழான சுயம் மட்டுமே உடையவனாக மனிதனைக் குறிக்கின்றார்கள். புத்தரும், இயேசுவும் ஒரு உயர்ந்த சுயத்தைப் பற்றி எங்குமே குறிப்பிட வில்லை. ஜே.கிருஷ்ணமூர்த்தியும் கூட உயர்ந்த சுயத்தைப் பற்றிப் பேசுவதைத் தவிர்கிறார். அது எதனால் இப்படி?

**ம:** ஒரு உடலில் எப்படி இரண்டு சுயங்கள் இருக்க முடியும்? 'நான்' என்பது ஒன்று. 'உயர்ந்த நான்' மற்றும் 'தாழ்ந்த நான்' என்று கிடையாது. எல்லாவிதமான மனதின் நிலைகளும் விழிப்புணர் விற்குள் சமர்ப்பிக்கப்பட்டு அவற்றுடன் நான் என்னும் சுய அடையாளம் உள்ளது. பார்க்கப்படுபவை அவை தோன்றுவது போல் இல்லை. அவற்றின் மேலான மனப்பாங்கு எவ்வாறு இருக்க வேண்டுமோ அவ்வாறில்லை.

புத்தரோ, இயேசுவோ, கிருஷ்ணமூர்த்தியோ நபருடன் பேசுவதாக நீ நினைத்தால் அது தவறு. அவர்களுக்கு வியக்தி, (புற சுயம்) வியக்தாவின் (உள் சுயத்தின்) ஒரு நிழல் என்று நன்கு தெரியும். அவர்கள் பேசுவதும், அறிவுறுத்துவதும் வியக்தாவிடம் தான். அதற்கு வழி காட்டவும், உதவவும், அதற்குப் பொறுப்பாக உணரவும் அவர்கள் புற சுயத்தின்மேல் கவனத்தைச் செலுத்தச் சொல்கிறார்கள். சுருக்கமாகச் சொன்னால், அதைப் பற்றி முழுவதுமாகத் தெரிந்திருக்க வேண்டுகிறார்கள். தூய விழிப்புணர்வு உச்ச உயர்விலிருந்து வந்து, உள் சுயத்தை ஊடுருவுகிறது; புற சுயம் என்று சொல்லப்படுவது ஒருவரின் இருத்தலின் தெரிந்து கொள்ளப்படாத ஒரு பகுதி. ஒருவர் உணர்வுடன் இருக்கலாம். ஏனெனில் ஒவ்வொருவரும் உணர்வுடையவர்களே. ஆனால் எல்லோரும் பிரக்ஞை உடையவர்கள் அல்ல. பிரக்ஞைக்குள் சேர்க்கப்பட்ட எதுவானாலும் அது உட்புறமாகி, அதன் ஒரு பகுதியாகி விடுகிறது. அதை நீ வேறுவிதமாகவும் சொல்லலாம்: உடல் புற சுயத்தையும், விழிப்புணர்வு உள் சுயத்தையும்

வரையறுக்கிறது. தூய பிரக்ஞையில் உச்ச உயர்வு தொடர்பு கொள்ளப் படுகிறது.

**கே:** உடல் புற சுயத்தை வரையறுப்பதாகச் சொல்கிறீர்கள். உங்களுக்கும் உடல் இருப்பதால் உங்களுக்கும் ஒரு புற சுயம் இருக்கிறதா?

**ம:** நான் உடலோடு இணைந்திருந்தாலும், அதை நானாக எடுத்துக் கொண்டிருந்தால் எனக்குப் புற சுயம் இருந்திருக்கும்.

**கே:** ஆனால் நீங்கள் அதைப் பற்றித் தெரிந்தும், அதன் தேவைகளைத் தீர்த்தும் வைக்கிறீர்கள்.

**ம:** இதற்கு மாறானது உண்மைக்குச் சமீபமானது - உடலுக்கு என்னைத் தெரியும். அதற்கு என் தேவைகளைப் பற்றித் தெரியும். ஆனால் இரண்டுமே அவ்வாறில்லை. இந்த உடல் உன் மனதில் தோன்றுகிறது; என் மனதில் எதுவும் இல்லை.

**கே:** நீங்கள் ஒரு உடலைக் கொண்டிருப்பதைப் பற்றிய உணர்வற்றிருப்பதாகச் சொல்கிறீர்களா?

**ம:** மாறாக, ஒரு உடலைக் கொண்டில்லாததைப் பற்றிய உணர்வுடன் இருக்கிறேன்.

**கே:** நீங்கள் புகை பிடிப்பதை நான் பார்க்கிறேன்.

**ம:** சரியாக அப்படித்தான். நான் புகை பிடிப்பதை நீ பார்க்கிறாய். நான் புகை பிடிப்பதை நீ எப்படிப் பார்க்க முடிகிறது என்பதைக் கண்டுபிடி. அப்போது சுலபமாக உன்னுடைய 'நான் - உடல்' என்னும் மனோ நிலைதான் 'நான் - நீங்கள் - புகைப்பதைப் பார்க்கிறேன்' என்னும் கருத்திற்குக் காரணம் என்பதை அறிவாய்.

**கே:** உடல் இருக்கிறது; நானும் இருக்கிறேன். எனக்கு உடலைத் தெரியும். அதைத் தவிர நான் என்ன?

**ம:** உடலைத் தவிர்த்து 'நான்' என்பதோ, உலகமோ இல்லை. இந்த மூன்றும் ஒன்றாகத் தோன்றி, ஒன்றாக மறைகின்றன. இவற்றின் வேரில் 'நான் இருக்கிறேன்' என்னும் உணர்வு இருக்கிறது. அதற்கு அப்பால் செல். 'நான் - உடல் - அல்ல' என்னும் கருத்து பொய்யான

'நான் - உடல்' என்னும் கருத்திற்கு வெறுமனே ஒரு மாற்றுக் கருத்து. 'நான்' என்பது என்ன? உன்னை நீ அறியாவிட்டால் வேறு எதை நீ அறிய முடியும்?

**கே:** நீங்கள் சொல்வதிலிருந்து உடல் இல்லாமல் விடுதலை என்பது இருக்க முடியாது என்று நான் முடிவு செய்கிறேன். 'நான் - உடல் - அல்ல' என்னும் கருத்து விடுதலைக்குக் கொண்டு செல்கிறது என்றால், உடலின் இருத்தல் அவசியம்.

**ம:** மிகச் சரி. உடல் இல்லாமல், 'நான் - உடல் - அல்ல' என்னும் கருத்து எவ்வாறு வரும்? 'நான் - கட்டுண்டு - இருக்கிறேன்' என்னும் கருத்தைப் போல, 'நான் - சுதந்திரமானவன்' என்னும் கருத்தும் பொய்யானது. இரண்டிற்கும் பொதுவான 'நான்' என்பதைக் கண்டுபிடித்து, அப்பால் செல்.

**கே:** எல்லாமும் கனவு மட்டுமே.

**ம:** எல்லாமும் வெறும் வார்த்தைகளே; அவற்றால் என்ன பயன் உனக்கு? நீ வாய் வார்த்தைகளாலான வரையறைகள் மற்றும் வாய்ப்பாடுகளால் ஆன வலையில் சிக்கிக் கொண்டிருக்கிறாய். உன்னுடைய கோட்பாடுகளுக்கும், கருத்துக்களுக்கும் அப்பால் செல்; கற்பனையான ஆசையும், எண்ணமும் அடங்கும்போது உண்மை கண்டுபிடிக்கப்படும்.

**கே:** ஞாபகம் வைத்திருக்கக் கூடாது என்று ஞாபகம் வைத்திருக்க வேண்டும். என்ன ஒரு வேலை!

**ம:** கண்டிப்பாக அதைச் செய்ய முடியாது. அது நிகழ வேண்டும். ஆனால் நீ நிஜமாகவே அதன் தேவையை உணர்ந்தால் அது நிகழும். மறுபடியும், உளமார்ந்த முயற்சிதான் முக்கியக் காரணி.

**கே:** என் மனதின் பின்புலத்தில் எல்லா நேரமும் ஒரு ஓசை கேட்டுக் கொண்டிருக்கிறது. எண்ணற்ற வலுவிழந்த எண்ணங்கள் மொய்த்துக் கொண்டும், ரீங்காரமிட்டுக் கொண்டும் இருக்கின்றன. இந்த வடிவமற்ற மேகம் எப்போதும் என்னோடு இருக்கிறது. உங்களுக்கும் அப்படித்தானா? உங்களுடைய மனதின் பின்புலத்தில் என்ன உள்ளது?

**ம:** மனம் எங்கு இல்லையோ அங்கு அதற்குப் பின்புலம் இருக்காது. என்னிடம் எல்லாமும் முன்புறம்தான். பின்புறம் என்பது கிடையாது! வெறுமை பேசுகிறது, வெறுமை மிஞ்சுகிறது.

**கே:** ஞாபகம் எதுவும் இருக்காதா?

**ம:** கடந்தகால மகிழ்ச்சி அல்லது வலியின் ஞாபகம் எதுவும் இருக்காது. ஒவ்வொரு கணமும் புதிதாகப் பிறக்கும்.

**கே:** ஞாபகம் இல்லாமல் நீங்கள் விழிப்புணர்வுடன் இருக்க முடியாது.

**ம:** கண்டிப்பாக நான் விழிப்புணர்வுடன் இருக்கிறேன். மற்றும் அதைப் பற்றிய பிரக்ஞையுடனும் இருக்கிறேன். நான் ஒரு மரச் சட்டம் அல்ல! விழிப்புணர்வையும், அதன் உள்ளடக்கத்தையும் ஒரு மேகத்தோடு ஒப்பிடு. நான் பார்க்கும்போது நீ மேகத்திற்குள் இருக்கிறாய். நீ அதில் காணாமல் போய், உன் விரல் நுனியைக் கூட உன்னால் பார்க்க முடியாது. நானோ அந்த மேகத்தையும், பல மேகங்களையும், நீல வானத்தையும், சூரியன், சந்திரன், நட்சத்திரங் களையும் கூட பார்க்கிறேன். மெய்மை நம் இருவருக்கும் ஒன்றுதான். ஆனால் உனக்கு அது ஒரு சிறை. எனக்கோ அது ஒரு வீடு.

**கே:** *நீங்கள் பார்ப்பவர்(வியக்தி), சாட்சி (வியக்தா), உச்ச உயர்வு (அவியக்தா) ஆகியவற்றைப் பற்றிச் சொன்னீர்கள். எது முதலில் வருகிறது?*

**ம:** உச்ச உயர்வில் சாட்சி தோன்றுகிறது. சாட்சி பார்ப்பவரை உருவாக்கி, தன்னை அதிலிருந்து தனித்ததாக நினைக்கிறது. பார்ப்பவர் விழிப்புணர்வில் தோன்றுவதாகச் சாட்சி காண்கிறது. அது மறுபடியும் சாட்சியில் தோன்றுகிறது. இந்த அடிப்படை ஒற்றுமையை அறிவது உச்ச உயர்வின் செயல்பாடு. சாட்சிக்குப் பின்னால் இருக்கும் ஆதாரமான சக்தியில்தான் எல்லாமும் ஊற்றெடுக்கின்றன. தனி நபருக்கும், சாட்சிக்கும் இடையில் ஒற்றுமையும், அன்பும், பரஸ்பர உதவியும் இல்லாவிட்டாலும், செயல் புரிதல் என்பது இருத்தல் மற்றும் அறிதலோடு ஒத்திசைவாக இல்லாவிட்டாலும் அதைத் தொடர்பு கொள்ள முடியாது. உச்ச

உயர்வு அம்மாதிரியான ஒத்திசைவின் ஆதாரமும், பலனும் ஆகும். உன்னுடன் நான் இப்போது பேசிக் கொண்டிருக்கும்போது ஒரு விடுபட்ட, ஆனால் வாஞ்சையான பிரக்ஞை (துரிய) நிலையில் இருக்கிறேன். இந்தப் பிரக்ஞை தன் மீதே திரும்பும் போது, அதை நீ உச்ச உயர்வான (துரியாதீத) நிலை என்று சொல்லலாம். ஆனால் அடிப்படையான மெய்மை, பிரக்ஞைக்கும் உருவாகுதல், இருத்தல், இல்லாதிருத்தல் ஆகிய மூன்று நிலைகளுக்கும் அப்பாற் பட்டது.

**கே:** அதெப்படி இங்கு என் மனம் உயர்வான சமாச்சாரங்களில் ஈடுபட்டு, அவற்றோடு இருப்பது சுலபமாகவும், மகிழ்ச்சியாகவும் இருக்கிறது? நான் வீட்டிற்குத் திரும்பினால் இங்கு கற்ற அனைத்தையும் மறந்துவிட்டு, கவலையும், புலம்பலும் கொண்டு, என் மெய்யான இயல்பை ஒரு கணம் கூட ஞாபகம் வைத்திருக்க முடியவில்லை. இதற்கு என்ன காரணம்?

**ம:** நீ உன் குழந்தைத்தனத்திற்குத் திரும்புகிறாய். நீ முழுவதும் வளரவில்லை; கவனம் இல்லாததால் வளராத நிலைகள் உள்ளன. உனக்குள் உள்ள கரடு முரடான மற்றும் பழமையான, நியாயமற்ற மற்றும் இரக்கமற்ற, மொத்தத்தில் குழந்தைத்தனமானவற்றின்மேல் கவனத்தைச் செலுத்து. அப்போது நீ கனிவாய். இதயம் மற்றும் மனதின் முதிர்ச்சிதான் அவசியம். கவனமின்மை மற்றும் விழிப்புணர்வின்மை ஆகிய முக்கியமான தடைகள் நீங்கினால் நீ இயல்பாக வளர்வாய். உன் ஸ்வரூபத்தில் நீ தானாக வளர்வாய்.



# 63. செயல்புரிவது என்னும் கருத்து தளை

**கேட்பவர்:** நாங்கள் சில காலம் சத்யசாய் ஆஷ்ரமத்தில் தங்கி இருந்தோம். இரண்டு மாத காலம் திருவண்ணாமலையில் இருக்கும் ஸ்ரீ ரமணாஸ்ரமத்திலும் இருந்தோம். இப்போது அமெரிக்காவிற்குத் திரும்பிக் கொண்டிருக்கிறோம்.

**மஹராஜ்:** உனக்குள் இந்தியா ஏதாவது மாற்றத்தை ஏற்படுத்தியதா?

**கே:** எங்கள் பாரத்தை இறக்கி வைத்தாற்போல் உணர்கிறோம். ஸ்ரீ சத்ய சாய்பாபா எல்லாவற்றையும் அவரிடம் விட்டுவிடவும், ஒவ்வொரு நாளும் எவ்வளவு சரியாக வாழ முடியுமோ அவ்வளவு சரியாக வாழவும் சொன்னார். 'நல்லவனாக இரு, மீதி எல்லாவற்றையும் என்னிடம் விட்டு விடு' என்று அவர் எங்களிடம் சொல்வது வழக்கம்.

**ம:** ஸ்ரீ ரமணாஸ்ரமத்தில் என்ன செய்து கொண்டிருந்தீர்கள்?

**கே:** குருவால் எங்களுக்குக் கொடுக்கப்பட்ட மந்திரத்துடன் இருந்தோம். சில தியானங்களையும் செய்தோம். அதிக அளவில் சிந்தனையோ, வாசிப்போ கிடையாது. நாங்கள் அமைதியாக இருக்க முயற்சி செய்தோம். நாங்கள் பக்திமார்க்கத்தில் இருந்தோம். தத்துவத்தில் அவ்வளவாக இல்லை. நாங்கள் சிந்திக்க அதிகமாக எதுவும் இல்லை - எங்கள் குருவை நம்பி, வாழ்க்கையை வாழ்கிறோம்.

**ம:** தங்களுடன் எல்லாமும் நன்றாக இருக்கும்வரை பெரும்பாலான பக்தர்கள் தங்கள் குருவை நம்புகிறார்கள். பிரச்சனைகள் வரும்போது தாங்கள் கைவிடப்பட்டதாக நினைத்து, வேறு குருவைத் தேடிப் போகிறார்கள்.

**கே:** ஆமாம். இந்த அபாயத்தைப் பற்றி நாங்கள் எச்சரிக்கப் பட்டிருக்கிறோம். நாங்கள் கடினமானதை, மிருதுவானதுடன் சேர்த்து எடுத்துக்கொள்ள முயற்சிக்கிறோம். 'எல்லாமும் கருணையே' என்னும் உணர்வு மிக உறுதியாக இருக்க வேண்டும். ஒரு சாது கிழக்குநோக்கி நடக்கும்போது ஒரு பலமான காற்று எதிர்த்து வீசத் தொடங்கியது. அப்போது அவர் திரும்பி மேற்கு நோக்கி நடக்க ஆரம்பித்தார். நாங்கள் அதுபோல வாழ நம்பிக்கையுடன் இருக்கிறோம் - எங்கள் குருவால் அனுப்பப்படும் சூழ்நிலைகளுக்கு எங்களைப் பொருத்திக் கொண்டு.

**ம:** இருப்பதெல்லாம் வாழ்க்கை மட்டுமே. அந்த வாழ்க்கை இதுவோ, அதுவோ அல்ல.

**கே:** இது எங்களுக்குப் புரிகிறது. இருப்பினும் நாங்கள் வெறுமனே வாழாமல், எங்கள் வாழ்க்கையை வாழத் தொடர்ந்து முயற்சிக் கிறோம். எதிர்காலத்தைப் பற்றித் திட்டமிடுவதே என்னிடம் இருக்கும் பரம சத்துருவான பழக்கம் போல் தெரிகிறது.

**ம:** நீ திட்டமிடுகிறாயோ இல்லையோ, வாழ்க்கை தொடர்கிறது. ஆனால் வாழும்போது கூட மனதில் ஒரு சிறு சுருள் தோன்றுகிறது. அது மனக்கண் வடிவங்களில் ஆழ்ந்து, தான் வாழ்க்கையை ஆதிக்கம் செலுத்துவதாகவும், கட்டுப்படுத்துவதாகவும் கற்பனை செய்கிறது.

வாழ்க்கை அதாகவே ஆசையற்றது. ஆனால் பொய்யான சுயம் தான் தொடர விரும்புகிறது - சந்தோசமாக. எனவே தொடர்ச்சியை உறுதிப்படுத்துவதிலேயே அது எப்போதும் ஈடுபட்டிருக்கிறது. உயிர் வாழ்வது என்பது பயமற்றது மற்றும் சுதந்திரமானது. நிகழ்வுகளின் மேல் ஆதிக்கம் செலுத்தலாம் என்னும் கருத்து உன்னிடம் இருக்கும்வரையில் விடுதலை என்பது உனக்குக் கிடையாது. செயல்புரிவது என்னும் கருத்துப் பாங்கு, ஒரு காரணமாக இருப்பது என்று கருதுவது கட்டுப்படுத்தும் தளை.

**கே:** நாங்கள் எப்படி செய்பவர், செய்யப்படுவது என்னும் இருமைத்தன்மையை வெல்வது?

**ம:** உயிர்வாழ்வதை முடிவற்றது, பகுபடாதது, எப்போதும் இருப்பது, எப்போதும் செயல்படுவது என்று உன்னை அதனுடன் ஒன்று என்று அறியும் வரை ஆழ்ந்து சிந்தனை செய். அது ஒன்றும் கடினமே அல்ல. ஏனெனில் நீ உன் இயல்பான நிலைக்குத்தான் திரும்புவாய்.

எல்லாமும் உனக்குள் இருந்து வருகின்றது என்றும், நீ வாழ்கின்ற உலகம் உன்மேல் உருவாக்கப்பட்டதல்ல, ஆனால் உன்னால் உருவாக்கப்பட்டது என்றும் அறிந்தவுடன் உன் அச்சம் முடிவிற்கு வரும். இந்த அறிதல் இல்லாததால் நீ உன்னை உன் புறத் தன்மைகளான உடல், மனம், சமுதாயம், நாடு, மானுடம், கடவுள் அல்லது பூரணம் போன்றவைகளுடன் அடையாளப்படுத்திக் கொள்வாய். ஆனால் இவையெல்லாம் அச்சத்திலிருந்து தப்பிப்பது. நீ வாழ்ந்துகொண்டு, அதன் உருவாக்கம், பேணிக்காத்தல், அழிவு ஆகியவற்றைப் பார்த்துக்கொண்டு இருக்கும் சிறு உலகத்திற்கு நீதான் முழுவதும் காரணம் என்று ஒப்புக் கொள்ளும்போதுதான் உன் கற்பனையான அடிமைத்தனத்திலிருந்து விடுபடுவாய்.

**கே:** என்னை ஏன் நான் அவ்வளவு துயர் மிகுந்த கீழானவனாகக் கற்பனை செய்து கொள்ள வேண்டும்?

**ம:** உன் பழக்கத்தினால்தான் அவ்வாறு செய்கிறாய். நீ குழந்தையாக இருக்கும்போது மற்றவர்கள் நீ பிறந்ததாகவும், இது உன் தந்தை, இது உன் மாமா, அதுபோல நீ என்ன கேட்டாயோ அது உன் மனதில் செலுத்தப்பட்டு, புத்தியால் அதைத் தக்கவைத்து, அது விழிப்புணர்விற்குள் நுழைகிறது. அது பழக்கத்தால் தீவிரமாகிறது. உடல் உன் ஸ்வரூபம் என்பது பலமாகிறது. மனமார்ந்த முயற்சியுடன் இது சூட்சுமமாகத் திரும்ப ஆராயப் பட்டு, வேறுபடுத்தப்பட வேண்டும். தெரியாத்தனமாக நீ இந்த உடல் என்னும் கட்டுக்குள் அடிமைப்பட்டிருக்கிறாய். வெளிப்புறப் பார்வையை விட்டுவிட்டு, உள்முகமாகச் செல்லவேண்டும். காதாலும், மனதாலும் எவையெல்லாம் கேட்கப்பட்டனவோ அவை சார்புடையவை. காதாலும், மனதாலும் கேட்கப் பட்டவையை விட்டுவிட்டு, விவேகமாக 'நான் யார்' என்று

விசாரம் செய்ய வேண்டும். அம்மாதிரியான விவேகம் விடுதலை அளிப்பது.

நீ இதுவரை கேட்ட கதைகளை உண்மை என்று எடுத்துக் கொள்கிறாய். இப்போது விசாரம் செய். எவையெல்லாம் தெளிவாகத் தெரிகின்றனவோ அவை அவ்வாறில்லை. 'நான் உண்மையிலேயே பிறந்துள்ளேனா?' 'நான் உண்மையிலேயே இன்னாரா' 'நான் இருக்கிறேன் என்று எனக்கு எப்படித் தெரியும்?' 'என் பெற்றோர்கள் யார்?' 'அவர்கள் என்னை உருவாக்கினார்களா அல்லது நான் அவர்களை உருவாக்கினேனா?' 'என்னைப் பற்றிச் சொல்லப்பட்டவைகளை எல்லாம் நான் நம்ப வேண்டுமா?' 'எப்படியாயினும் நான் யார்? மற்றும் என்ன?' என்பன போன்ற கேள்விகளை நீயே உனக்குக் கேட்டுக்கொள். உனக்கு ஒரு சிறையைக் கட்டிக்கொள்ள மிகுந்த சக்தியைச் செலவிட்டுள்ளாய். அதைத் தகர்க்க அதே அளவு சக்தியைச் செலவிடு. மெய்யாக, தகர்ப்பது சுலபம். ஏனெனில் பொய் கண்டுபிடிக்கப்பட்டால் கரைந்துவிடும். கயிற்றைப் பாம்பாகப் பார்த்தால் அதைக் கொல்ல எந்தவிதமான முயற்சியும் தேவையில்லை. கயிற்றைக் கயிறாகப் பார்ப்பதே பாம்பைக் கொன்றுவிடும். எல்லாமும் 'நான்' என்னும் கருத்தில்தான் தொங்குகின்றன. அதைத் தீர்க்கமாக ஆராய். அது எல்லாத் தொந்தரவுகளின் ஆதாரம். அது மெய்மையிலிருந்து உன்னைப் பிரிக்கின்ற ஒருமாதிரியான திரை. மெய் திரைக்கு உள்ளும், திரைக்கு வெளியேயும் இருக்கிறது. ஆனால் திரையே மெய்யானதல்ல. இந்த 'நான்' என்னும் கருத்து உன்னோடு பிறந்ததல்ல. அது இல்லாமலே நீ நன்றாக வாழலாம். உன் உடலுடன் உன்னைச் சுய அடையாளப்படுத்திக் கொள்வதால் அது பிறகு வருகிறது. அது பிரிந்திருப்பது என்னும் மாயையை உருவாக்குகிறது. ஆனால் அப்படி ஒன்றும் இல்லை. அது உன் சொந்த உலகத்திலேயே உன்னை அன்னியனாக்கி, உலகத்தை அன்னியமானதாகவும், விரோதமானதாகவும் ஆக்கிவிட்டது. 'நான்' என்னும் உணர்வு இல்லாமலே வாழ்க்கை தொடர்கிறது. 'நான்' என்னும் உணர்வில்லாமல் அமைதியுடனும், ஆனந்தமாகவும் நாம் இருந்த தருணங்கள் உண்டு. 'நான்' திரும்ப வரும்போது தொல்லை ஆரம்பிக்கிறது.

**கே:** *'நான்' என்னும் உணர்விலிருந்து ஒருவர் எப்படி விடுபடுவது?*

**ம:** 'நான்' என்னும் உணர்விலிருந்து விடுபட அதை நீ கையாள வேண்டும். அது செயல்படும் போதும், அமைதியாக இருக்கும் போதும் கவனி. அது எப்படி ஆரம்பிக்கிறது, எப்போது முடிகிறது, எதை வேண்டுகிறது, அதை எப்படிப் பெறுகிறது என்று தெளிவாகத் தெரிந்து கொள்ளும் வரையிலும், முழுவதும் புரிந்து கொள்ளும் வரையிலும் கவனி. எல்லா யோகங்களும், அவற்றின் ஆதாரமும், குணாதிசயங்களும் எதுவாக இருந்தாலும் ஒரே ஒரு குறிக்கோளைத் தான் கொண்டுள்ளன: உன்னைத் தனித்த இருத்தல் என்னும் பேரிடரிலிருந்தும், ஒரு பரந்த, அழகான படத்திலிருக்கும் ஒரு அர்த்தமற்ற புள்ளியாக இருப்பதிலிருந்தும் காப்பது என்பது.

உன்னை மெய்மையிலிருந்து அன்னியப்படுத்திக் கொண்டதால் நீ துன்பப்படுகிறாய். இப்போது நீ இந்த அன்னியத் தன்மையிலிருந்து தப்பிக்க ஒரு வழியைத் தேடுகிறாய். நீ உன் சுய மனோ உறுத்தல்களிலிருந்து தப்பிக்கமுடியாது. அவற்றைப் பாதுகாப்பதைமட்டும் நிறுத்த முடியும்.

'நான்' என்பது இதுவாகவோ, அதுவாகவோ இருப்பதாகக் கற்பனை செய்வதால் அது தொடர எத்தனிக்கிறது. மெய்மை தொடர வேண்டியதில்லை - அது எப்போதும் இருப்பது. அது உருவங்கள் மற்றும் வெளிப்பாடுகளின் அழிவில் அக்கறையற்றது. 'நான்' என்பதைப் பலப்படுத்தவும், நிலைப்படுத்தவும் நாம் எல்லாவிதமானவற்றையும் செய்கிறோம். எல்லாமும் வீண். ஏனெனில் 'நான்' என்பது கணத்திற்குக் கணம் புதுப்பிக்கப்படுகிறது. அது முடிவற்ற வேலை. இதற்கு அதிரடியான ஒரே தீர்வு என்னவென்றால் 'நான் இன்னார்' என்னும் தனித்த உணர்வை ஒரேயடியாகக் கரைத்துவிடுவதுதான். இருத்தல் மிஞ்சுகிறது. ஆனால் சுய இருத்தல் அல்ல.

**கே:** நான் தெளிவான ஆன்மீகப் பேராவல்களைக் கொண்டுள்ளேன். அவற்றை நிறைவேற்ற நான் பாடுபட வேண்டியதில்லையா?

**ம:** எந்தப் பேராவலும் ஆன்மீகமானதல்ல. எல்லாப் பேராவல்களும் 'நான்' என்பதற்காகவே. நீ உண்மையாகவே முன்னேற

வேண்டுமானால் தனிப்பட்ட அடைதல் என்னும் எல்லாக் கருத்தையும் விடவேண்டும். யோகிகள் என்று சொல்லிக் கொள்கின்றவர்களுடைய பேராவல்கள் இயற்கைக்கு மாறானவை. நிலையான, தனிப்பட்ட பேரானந்தத்திற்கு இச்சைப்படுவதுடன் ஒப்பிட்டால் ஒருவன் ஒரு பெண்ணின்மேல் கொள்ளும் ஆசை அப்பாவித்தனமானது. மனம் மோசடி செய்வது. அது எவ்வளவிற்கு எவ்வளவு கடமை வேணுவதாக, பக்தியுள்ளதாகத் தோன்றுகிறதோ அவ்வளவிற்கு அதன் வஞ்சனை மோசமாக இருக்கும்.

**கே:** அடிக்கடி மக்கள் உங்களிடம் தங்கள் லோகாயதப் பிரச்சனைகளுடன் வந்து உதவியைக் கேட்கிறார்கள். அவர்களுக்கு என்ன சொல்லவேண்டும் என்று உங்களுக்கு எப்படித் தெரியும்?

**ம:** அந்தக் கணத்தில் என் மனதிற்கு என்ன வருகிறதோ அதைச் சொல்வேன். மக்களைக் கையாள்வதற்கு என்னிடம் நிலையான வழிமுறை எதுவும் கிடையாது.

**கே:** நீங்கள் உங்களைப் பற்றிச் சந்தேகம் இல்லாமல் உறுதியாக இருக்கிறீர்கள். ஆனால் மக்கள் என்னிடம் ஆலோசனை கேட்டு வரும்போது என் ஆலோசனை சரியானது என்று நான் எப்படி உறுதியாக இருப்பது?

**ம:** நீ எந்தத் தன்மையில், நிலையில் இருக்கிறாய், எந்த நிலையிலிருந்து பேசுகிறாய் என்று கவனி. மனதிலிருந்து பேசினால் நீ தவறாக இருக்கலாம். சூழ்நிலையின் முழு ஆழத்திலிருந்து, உன் சொந்த மனோ வழக்கங்களை ஒதுக்கி வைத்து விட்டு நீ பேசினால் உன் ஆலோசனை ஒரு உண்மையான கருத்தாக இருக்கும். முக்கியமான கருத்து என்னவென்றால் நீயோ, உனக்கு முன்னால் இருக்கும் நபரோ வெறும் உடல்கள் மட்டுமல்ல என்று முழு விழிப்புணர்வுடன் இருப்பது. உன் விழிப்புணர்வு தெளிவாகவும், முழுதாகவும் இருந்தால் தவறு நிகழ வாய்ப்பு குறைவு.

# 64. உன்னை சந்தோஷப் படுத்துகிறதெல்லாம் பின்தங்க வைக்கும்

**கேட்பவர்:** நான் பணியிலிருந்து ஓய்வுபெற்ற ஒரு பட்டயக் கணக்காயர் (ஆடிட்டர்). என் மனைவி ஏழைப் பெண்களுக்கான சமுதாயப் பணியில் ஈடுபட்டிருக்கிறார். எங்கள் மகன் அமெரிக்காவிற்குப் புறப்பட்டுக் கொண்டிருக்கிறான். அவனை வழியனுப்ப வந்துள்ளோம். நாங்கள் பஞ்சாபிகள். ஆனால் டில்லியில் வசிக்கிறோம். எங்களுக்கு ராதா சோமி வழிமுறையைச் சேர்ந்த ஒரு குரு இருக்கிறார். நாங்கள் சத்சங்கிற்கு மிகுந்த மதிப்பளிக்கிறோம். இங்கு வந்ததற்கு மிகவும் அதிர்ஷ்டசாலிகளாக உணர்கிறோம். நாங்கள் புனிதமான மனிதர்கள் பலரைச் சந்தித்திருக்கிறோம். மேலும் ஒருவரைச் சந்திப்பதில் எங்களுக்கு மகிழ்ச்சி.

**மஹராஜ்:** நீங்கள் பல துறவிகளையும், சன்னியாசிகளையும் சந்தித்திருப்பீர்கள். ஆனால் ஒரு முழு ஞானம் அடைந்த, தன் ஸ்வரூபத்தைப் பற்றிய விழிப்புணர்வுடைய மனிதரைப் பார்ப்பது கடினம். அளவற்ற முயற்சிகளாலும், தியாகங்களாலும் துறவிகளும், யோகிகளும் பல அற்புத சக்திகளைப் பெறுவார்கள். அதன் மூலம் மக்களுக்கு உதவியும், நம்பிக்கையை அளித்தும் நல்லது செய்யலாம். இருப்பினும் அது அவர்களை முழு நிறைவானவர்களாக்காது. அது மெய்மைக்கான ஒரு வழி அல்ல. ஆனால் அது வெறுமனே பொய்மையைச் செழிப்பூட்டுவது. எல்லா முயற்சிகளும் மேலும் முயற்சிக்கு வழிவகுக்கின்றன; என்னவெல்லாம் கட்டப்பட்டதோ அவற்றைப் பராமரிக்க வேண்டும். எவையெல்லாம் பெறப் பட்டதோ அவற்றைச் சிதையாமலும், தொலையாமலும் பாதுகாக்க வேண்டும். எதுவெல்லாம் தொலையக்கூடியதோ அது உண்மையாக ஒருவருடையதல்ல; உனக்குச் சொந்தமில்லாததால் உனக்கு என்ன

பயன் இருக்க முடியும்? என் உலகத்தில் எதுவும் முயற்சிக்கப் படுவதில்லை. எல்லாமும் தானாகவே நடக்கின்றன. எல்லா இருப்பவைகளும் காலத்திலும், இடத்திலும் அளவானதாகவும், தற்காலிகமானவையாகவும் உள்ளன. யார் இருத்தலை அனுபவப் படுகிறாரோ அவரும் அளவானவர் மற்றும் தற்காலிகமானவர். 'என்ன இருக்கிறது' அல்லது 'யார் இருக்கிறார்கள்' என்பதை நான் பொருட்படுத்துவதில்லை. நான் என் நிலையை அப்பால் வைத்துள்ளேன். அங்கு நான் இரண்டுமே அல்ல மற்றும் ஏதாவது ஒன்றும் அல்ல.

அதிகமான முயற்சியாலும், தவத்தாலும் தங்கள் பேராவலை நிறைவேற்றி, உயர்நிலை அனுபவங்களையும், செயல்களையும் அடைந்தவர்கள் வழக்கமாகத் தங்கள் நிலைப்பாட்டைப் பற்றித் தீவிரமான விழிப்புணர்வுடன் இருப்பார்கள்; அவர்கள் மனிதர் களைக் கீழான, முயன்று அடையாதவர்கள் முதல், மேலான, முயன்று அடைந்தவர்கள்வரை பலதரமாகப் பிரித்துப் பார்க்கின்றனர். எனக்கு எல்லோரும் சமம். தோற்றத்திலும், வெளிப்பாட்டிலும் வித்தியாசங்கள் உள்ளன. ஆனால் அவை பொருட்டல்ல. எப்படி நகையின் வடிவம் தங்கத்தைப் பாதிப்பதில்லையோ அப்படி மனிதனின் சாரம் பாதிக்கப்படாமல் இருக்கும். இந்தச் சமத்துவ உணர்வு எங்கு இல்லையோ, அங்கு மெய்மை தொடப்படவில்லை என்று அர்த்தம்.

வெறும் அறிவுமட்டும் போதாது; அறிபவர் அறியப்பட வேண்டும். பண்டிதர்களும், யோகிகளும் பலவற்றை அறிவார்கள்; ஆனால் சுயம் அறியப்படாவிட்டால் வெறும் அறிவால் என்ன பயன்? அது கண்டிப்பாகத் தவறாக உபயோகிக்கப்படும். அறிபவரைப் பற்றிய அறிவு இல்லாமல் அமைதி இருக்க முடியாது.

கே: அறிபவரை ஒருவர் எப்படித் தெரிந்து கொள்வது?

ம: என் சொந்த அனுபவத்திலிருந்து நான் என்ன தெரிந்து கொண்டேனோ அதைத்தான் நான் உன்னிடம் சொல்ல முடியும். நான் என் குருவைச் சந்தித்தபோது அவர் சொன்னார்: 'உன்னை என்னவாக நீ எடுத்துக் கொள்கிறாயோ அதுவல்ல நீ. நீ என்ன என்பதைக் கண்டுபிடி. 'நான்' என்னும் உணர்வைக் கவனி. உன்

மெய்யான சுயத்தைக் கண்டுபிடி' என்று. நான் அவருக்குக் கீழ்ப்படிந்தேன். ஏனெனில் நான் அவரை நம்பினேன். அவர் சொன்னதுபோலச் செய்தேன். நேரம் கிடைத்தபோதெல்லாம் அமைதியாக என்னைப் பார்ப்பதிலேயே செலவிட்டேன். அது அவ்வளவு வித்தியாசத்தை ஏற்படுத்தியது, வெகு விரைவாக! என் மெய்யான சுயத்தை அறிய மூன்று வருடங்கள்தான் ஆயிற்று. என் குரு நான் அவரைச் சந்தித்தபிறகு சீக்கிரமே இறந்துவிட்டார். ஆனால் அது எந்த வித்தியாசத்தையும் எனக்கு ஏற்படுத்தவில்லை. அவர் என்னிடம் சொன்னதை நான் ஞாபகம் வைத்திருந்து, அதற்காகப் பிரயத்தனப்பட்டேன். அதன் பலன் இங்கு, என்னிடம் உள்ளது.

**கே:** அது என்ன?

**ம:** நான் என்னை மெய்மையில் உள்ளதாக அறிகிறேன். நான் உடலும் அல்ல, மனமும் அல்ல, மனதின் பாங்குகளும் அல்ல. நான் இவற்றிற்கெல்லாம் அப்பால் உள்ளேன்.

**கே:** நீங்கள் வெறுமனே ஒன்றுமே இல்லையா?

**ம:** நியாயமாகப் பேசு. மிகவும் தொட்டு உணரக் கூடியவனாக ஐயத்திற்கிடமின்றி நான் இருக்கிறேன். நீ என்னவாறு நினைக்கிறாயோ அப்படி மட்டும் நான் இல்லை. இது எல்லாவற்றையும் விளக்குகிறது.

**கே:** இது எதையுமே விளக்கவில்லை.

**ம:** ஏனெனில் அதைச் சொல்லமுடியாது. உன் சொந்த அனுபவத்தை நீதான் பெற வேண்டும். நீ பௌதீகமான, மற்றும் மனோவயப்பட்ட பொருட்களைக் கையாளப் பழகியுள்ளாய். நானும் நீயும் ஒரு பொருளல்ல. நாம் பருப்பொருளும் அல்ல, சக்தியும் அல்ல. உடலும் அல்ல, மனமும் அல்ல. உன் சொந்தச் சுயத்தின் கண நேரத் தோற்றத்தை நீ ஒருமுறை பெற்றாயானால் என்னைப் புரிந்து கொள்ள உனக்குச் சிரமமாக இருக்காது.

செவி வழியாகக் கேட்கப்படும் பலவற்றை நாம் நம்புகிறோம். தூர தேசங்களையும், அதன் மக்களையும், ஸ்வர்கத்தையும், நரகத்தையும், ஆண் தெய்வங்களையும், பெண் தெய்வங்களையும்

நாம் நம்புகிறோம். ஏனெனில் நமக்கு அவ்வாறு சொல்லப் பட்டிருக்கிறது. அது போலவே நம்மைப் பற்றியும், நம் பெற்றோர், பெயர், அந்தஸ்து, கடமைகள், இன்னும் பலவற்றைப் பற்றியும் சொல்லப்பட்டிருக்கிறோம். அதைச் சரிபார்க்க நாம் ஒருபோதும் பொருட்படுத்தியதில்லை. மெய்மைக்கான வழி பொய்மையை அழிப்பதன் ஊடாக இருக்கிறது. பொய்மையை அழிக்க நீ உன் மிக அதிகப்படியான முதிர்ந்த நம்பிக்கைகளைக் கேள்விகேட்க வேண்டும். அந்த நம்பிக்கைகளுள் நீ உடல் என்னும் கருத்துதான் மிகவும் மோசமானது. உடலுடன் உலகம் வருகிறது. உலகத்துடன் - உலகத்தை உருவாக்கியதாக நம்பப்படும் கடவுள். இப்படியாக அச்சங்கள், மதங்கள், பிரார்த்தனைகள், பலிகள், எல்லாவிதமான வழிமுறைகளும் ஆரம்பிக்கின்றன. இவை எல்லாமும் தானே உருவாக்கிய பூதாகாரமானவற்றால் பயந்துள்ள குழந்தைத் தனமான மனிதனைக் காப்பாற்றவும், ஆதரிக்கவும்தான். நீ என்னவோ அது பிறக்கவோ, இறக்கவோ முடியாது என்பதை அறிந்துகொள். அச்சம் விலகிவிட்டால் எல்லாத் துன்பமும் முடிவுறும்.

மனம் எதைக் கண்டு பிடிக்கிறதோ அதை அழிக்கிறது. ஆனால் மெய் உருவாக்கப்படுவதில்லை. அதை அழிக்கவும் முடியாது. மனதிற்கு எதன்மேல் ஆளுமை இல்லையோ அதைப் பிடித்துக் கொள். நான் சொல்கின்ற விஷயம் கடந்தகாலத்திலோ, எதிர் காலத்திலோ இல்லை. அது தினசரி வாழ்க்கையிலும் இல்லை. ஏனெனில் அது தற்பொழுதில் உள்ளது. அது காலமற்றது. அதன் முற்றிலுமான காலமற்ற தன்மை மனதிற்கு அப்பாற்பட்டது. என் குருவும், அவருடைய வார்த்தைகளான 'நீதான் அந்த நான்' என்பவையும் என்னோடு காலமற்று இருக்கின்றன. ஆரம்பத்தில் நான் என் மனதை அவற்றின்மீது செலுத்தவேண்டி இருந்தது. ஆனால் அது இப்போது இயல்பாகவும், எளிதாகவும் ஆகிவிட்டது. குருவின் வார்த்தைகளை உண்மை என்று மனம் ஒப்புக் கொண்டு, அவற்றுடன் தன்னிச்சையாக வாழ்வதிலும், தினசரி வாழ்க்கையின் ஒவ்வொரு அம்சத்திலும் அதனோடு வாழ்வதிலும்தான் மெய்யறிதலுக்கான சாத்தியக் கூறு இருக்கிறது. ஒரு விதத்தில் அது நம்பிக்கையான செயல்பாட்டால் பெறப்படும் மீட்சி. ஆனால்

நம்பிக்கையான செயல்பாடு (ஸ்ரத்தை) தீவிரமாகவும், உறுதியானதாகவும், உயர்வாகவும் இருக்க வேண்டும்.

எப்படியாயினும் ஸ்ரத்தை மட்டுமே போதும் என்று நீ நினைக்கக்கூடாது. செயல்பாட்டில் வெளிப்படுத்தப்படும் ஸ்ரத்தைதான் மெய்யறிதலுக்கான ஒரு உறுதியான வழி. எல்லா வழிகளிலும் அதுதான் மிகவும் பயனுள்ள வழி. ஸ்ரத்தையை மறுத்து, காரணத்தை நம்புகிற ஆசிரியர்கள் உள்ளனர். உண்மையில் அவர்கள் மறுப்பது ஸ்ரத்தையை அல்ல. குருட்டுத்தனமான கோட்பாடுகளை. ஸ்ரத்தை குருட்டுத்தனமானதல்ல. அது முயற்சிப்பதற்கான மனோ விருப்பம். சத்குருவின் உபதேசங்களை நேரடியான அனுபவத்தால் உணர்ந்து, மகிழ்ச்சியாக ஏற்றுக்கொள்ளலாம்.

**கே:** எல்லா ஆன்மீகப் பயிற்சிகளிலும் வெறுமனே ஒரு சாட்சிபாவ மனப்பாங்கைப் பயிற்சிப்பதுதான் மிகவும் பயனுள்ளது என்று சொல்லக் கேள்விப்பட்டிருக்கிறோம். நம்பிக்கை என்பதுடன் ஒப்பிட்டால் அதன் நிலை என்ன?

**ம:** சாட்சிபாவ மனப் பாங்கும் நம்பிக்கையான செயல்பாடு. அது தன்மேல் கொண்டுள்ள நம்பிக்கை. நீ என்ன அனுபவப் படுகிறாயோ அது நீ அல்ல என்று நம்புகிறாய். நீ ஒவ்வொன்றையும் தூரத்திலிருந்து பார்க்கிறாய். சாட்சி பாவத்தில் பிரயத்தனம் எதுவும் இல்லை. நீ சாட்சி மட்டுமே என்று புரிந்துகொள்கிறாய். அந்தப் புரிதல் செயல்படுகிறது. வெறுமனே நீ சாட்சிமட்டுமே என்று ஞாபகம் வைத்திரு. வேறு எதுவும் உனக்குத் தேவை இல்லை. சாட்சிபாவ நிலையில் நீ உன்னை 'நான் யார்?' என்று கேட்டாயானால் பதில் உடனே வரும், அது வார்த்தையற்றும், நிசப்தமாகவும் இருந்தாலும்கூட. புறப்பொருளாக இருப்பதை விட்டுவிட்டு, நிகழும் அனைத்திற்கும் உட்பொருளாக மாறு. உள்ளுக்குள் திரும்பிவிட்டாயானால், உன்னை உட்பொருளுக்கு அப்பால் காண்பாய். உன்னை நீ கண்டுபிடிக்கும்போது, நீ புறப்பொருளுக்கும் அப்பால் உன்னைக் காண்பாய். மற்றும் உட்பொருள், புறப்பொருள் இரண்டுமே உனக்குள் இருப்பதையும், நீ அவை இரண்டுமே அல்ல என்பதையும் காண்பாய்.

**கே:** நீங்கள் மனதைப் பற்றியும், மனதிற்கு அப்பால் உள்ள சாட்சிபாவ விழிப்புணர்வையும், அதற்கு அப்பால் உள்ள உச்ச உயர்வைப் பற்றியும் பேசுகிறீர்கள். விழிப்புணர்வும்கூட மெய்யானதல்ல என்று சொல்கிறீர்களா?

**ம:** மெய்யானது - மெய்யற்றது என்னும் வார்த்தைகளைக் கையாளும்போது, விழிப்புணர்வுமட்டும்தான் ஒரே மெய்யானதாக இருக்கமுடியும். ஆனால் உச்ச உயர்வு எல்லா வேறுபாடுகளுக்கும் அப்பாற்பட்டது. அதற்கு 'மெய்' என்னும் வார்த்தை செல்லு படியாகாது. ஏனெனில், அதற்குள் எல்லாமுமே மெய்யானவை. எனவே அதை அவ்வாறு பெயரிட வேண்டிய தில்லை. அதுதான் மெய்மையின் அடிப்படை ஆதாரம். அது எதைத் தொட்டாலும் அதற்கு மெய்மையைக் கொடுக்கிறது. அதை வெறுமனே வார்த்தைகளால் புரிந்துகொள்ள முடியாது. ஒரு நேரடி அனுபவம்கூட, எவ்வளவுதான் நுட்பமானதாக இருந்தாலும் அது அத்தாட்சிதானே தவிர வேறு ஒன்றும் இல்லை.

**கே:** ஆனால் யார் உலகத்தை உருவாக்குவது?

**ம:** சித்தஹாசம் (பிரபஞ்ச மனம்) எல்லாவற்றையும் உருவாக்கு கிறது, அழிக்கிறது. எதுவெல்லாம் இருத்தலுக்கு வருகிறதோ அதற்கு உச்ச உயர்வு (பரமஹாசம்) மெய்மையைக் கொடுக்கிறது. வார்த்தைகளில் சொல்வதானால் அதைப் பிரபஞ்ச அன்பு என்று சொல்வது அதிகபட்ச அருகாமையில் இருக்கும். அன்பைப் போல அது ஒவ்வொன்றையும் மெய்யானதாகவும், அழகானதாகவும், விரும்பத்தக்கதாகவும் ஆக்குகிறது.

**கே:** விரும்பத்தக்கதாக ஏன்?

**ம:** ஏன் கூடாது? உச்ச உயர்விடமிருந்து அல்லாமல் வேறு எங்கிருந்து மக்களை ஒன்று சேர்க்கின்ற, எல்லா உருவாக்கப் பட்டவைகளையும் ஒன்றுக்கொன்று எதிர்வினை புரியச் செய்கின்ற எல்லாச் சக்திவாய்ந்த ஈர்ப்புகளும் வருகின்றன? ஆசையைக் கைவிடாதே; அது சரியான பாதையில் செலுத்தப்படுகிறதா என்று மட்டும் பார்த்துக் கொள். ஆசையில்லாமல் நீ இறந்தவன்

ஆகிவிடுவாய். ஆனால் கீழ்த்தரமான ஆசைகளால் நீ பிசாசு போன்றவனாகிவிடுவாய்.

**கே:** *எந்த அனுபவம் உச்ச உயர்விற்கு மிக அருகாமையிலானது?*

**ம:** அளவற்ற அமைதியும், எல்லையற்ற அன்பும். பிரபஞ்சத்தில் உண்மையாக, உன்னதமாக, அழகாக எதுவெல்லாம் இருக்கிறதோ அவையெல்லாம் உன்னிடமிருந்து வருகிறதென்றும், நீதான் அவற்றின் மூல ஆதாரம் என்றும் அறி. உலகை மேற்பார்வையிடு கின்ற ஆண் தெய்வங்களும். பெண் தெய்வங்களும் மிகவும் அற்புதமானவைகளாகவும், மகிமை வாய்ந்தவைகளாகவும் இருக்கலாம்; இருப்பினும் அவையெல்லாம் தங்களுடைய எஜமானின் வல்லமையையும், வளமையையும் பறைசாற்றுகின்ற, படாடோபமாக உடை உடுத்திக்கொண்டிருக்கும் வேலை ஆட்களைப் போன்றவர்கள்.

**கே:** *உச்ச உயர் நிலையை ஒருவர் எப்படி அடைவது?*

**ம:** கீழான ஆசைகளைத் துறப்பதன்மூலம். நீ கீழானவற்றுடன் மகிழ்ச்சி அடைந்திருக்கும் வரை மேலானவற்றைப் பெற முடியாது. எதுவெல்லாம் உன்னை மகிழ்விக்கிறதோ அது உன்னைப் பின்னடைவாக வைத்திருக்கும். ஒவ்வொன்றிலும் உள்ள திருப்தியற்ற தன்மையையும், அதன் கடந்துபோகும் மற்றும் அளவான தன்மையையும் நீ அறிந்து, உன் சக்தி முழுவதையும் ஒரு பெரும் ஏக்கத்திற்காகத் திரட்டும் வரை முதல் அடி கூட எடுத்து வைக்கப்படாது. மற்றபடி, உச்ச உயர் நிலைக்கான ஆசையின் நேர்மையே உச்ச உயர்நிலைக்கு ஒரு அழைப்புதான். பௌதீக அல்லது மனோவயமான எதுவுமே உனக்குச் சுதந்திரத்தைத் தர முடியாது. உன் கற்பனையான கட்டுக்கள் உன்னால் ஏற்படுத்தப் பட்டவை என்று புரிந்துகொண்டு, உன்னைக் கட்டியிருக்கும் சங்கலிகளை உறுதிப் படுத்தாமல் இருந்தாலே நீ சுதந்திரமானவன்.

**கே:** *ஒரு குருவிடம் ஒருவர் எப்படி நம்பிக்கை வைப்பது?*

**ம:** குருவைக் கண்டுபிடித்து, அவரிடம் நம்பிக்கை வைப்பது என்பது அரிதான அதிர்ஷ்டம். அது அடிக்கடி நடப்பதில்லை.

**கே:** விதி நிர்ணயிக்கிறதா?

**ம:** அதை விதி என்று சொல்வது சிறிதளவே விளக்குகிறது. அது நிகழும் போது ஏன் நிகழ்ந்தது என்று உன்னால் சொல்ல முடியாது. அதைக் கர்மா அல்லது கருணை அல்லது கடவுளின் விருப்பம் என்று சொல்லி உன் அறியாமையைத்தான் வெறுமனே மூடி மறைக்கிறாய்.

**கே:** ஜே.கிருஷ்ணமூர்த்தி குரு தேவையில்லை என்று சொல்கிறார்.

**ம:** யாராவது உன்னிடம் உச்ச உயர்வான மெய்மையைப் பற்றியும், அதற்கான வழியையும் சொல்லவேண்டும். கிருஷ்ணமூர்த்தி வேறு எதையும் செய்வதில்லை. ஒருவகையில் அவர் சரி. ஏனெனில் சீடர்கள் என்று சொல்லிக்கொள்பவர்கள் தங்கள் குருக்களை நம்புவதில்லை; அவர்கள் குருக்களுக்குக் கீழ்ப்படிவதில்லை. இறுதியில் அவர்களைக் கைவிட்டு விடுகிறார்கள். அப்படிப்பட்ட சீடர்களுக்கு குரு இல்லாததே பன்மடங்கு சிறப்பானது. அவர்கள் வழிகாட்டுதலுக்குத் தங்களுக்குள் பார்ப்பதே சிறந்தது. ஒரு வாழும் குருவைக் காண்பது அரிதான சந்தர்ப்பம். மற்றும் ஒரு மாபெரும் பொறுப்பு. இந்தச் சமாச்சாரங்களை ஒருவர் சாதாரணமாக எடுத்துக் கொள்ளக் கூடாது. நீங்கள் சொர்கத்தை வாங்க எத்தனித்து, குரு ஒரு விலைக்கு அதைக் கொடுப்பார் என்று கற்பனை செய்கிறீர்கள். சிறிய அளவில் கொடுத்து, நிறைய வாங்கப் பேரம் பேசுகிறீர்கள். நீங்கள் உங்களைத் தவிர வேறு யாரையும் ஏமாற்றிக் கொள்வதில்லை.

**கே:** உங்கள் குரு நீங்களே உச்ச உயர்வு என்று சொன்னார். நீங்கள் அதை நம்பி, அதன் மேல் செயல்பட்டீர்கள். யார் உங்களுக்கு இந்த நம்பிக்கையைக் கொடுத்தது?

**ம:** நான் அறிவோடு இருந்தேன் என்று சொல். அவரை நம்பாமல் இருப்பது முட்டாள்தனம். என்னைத் தவறாக வழி நடத்த அவருக்கு என்ன அவசியம்?

**கே:** ஒரு கேள்விக்கு நாம் ஒன்றே, நாம் சமமானவர்கள் என்று நீங்கள் சொன்னீர்கள். என்னால் அதை நம்ப முடியவில்லை. நான் அதை நம்பாததால் நீங்கள் சொல்வதால் எனக்கு என்ன பயன்?

**ம:** நீ நம்பாதது ஒரு பொருட்டல்ல. என் வார்த்தைகள் உண்மையானவை. அவை அவற்றின் வேலையைச் செய்யும். சத்சங்கத்தின் சிறப்பே இதுதான்.

**கே:** உங்கள் அருகாமையில் அமர்ந்திருப்பதை ஒரு ஆன்மீகப் பயிற்சி என்று கருதலாமா?

**ம:** கண்டிப்பாக. வாழ்க்கை என்னும் நதி ஓடுகிறது. அதன் சிறிதளவு நீர் இங்கு உள்ளது. ஆனால் பெருமளவு அதன் குறிக்கோளை அடைந்துவிட்டது. உனக்குத் தற்காலம் மட்டுமே தெரியும். நான் கடந்தகாலத்திற்குள்ளும், எதிர்காலத்திற்குள்ளும், நீ என்னவாக இருந்தாய், என்னவாகப் போகிறாய் என்றும் பார்க்கிறேன். உன்னை நானாகப் பார்க்காமல் இருக்கமுடியாது. வித்தியாசங்களைப் பார்க்காமல் இருப்பது அன்பின் அடிப்படை இயல்பு.

**கே:** நீங்கள் என்னைப் பார்ப்பதுபோல் நான் எப்போது பார்ப்பது?

**ம:** நீ உன்னை உடலாகக் கற்பனைசெய்யாமல் இருந்தால் போதுமானது. 'நான் உடல்' என்னும் கருத்துதான் பேரழிவானது. அது உன் மெய்யான தன்மையிலிருந்து உன்னை முற்றிலும் குருடாக்குகிறது. ஒரு கணமாவது நீ உடல் என்று நினைக்காதே. உனக்கு ஒரு பெயரையோ, வடிவத்தையோ கொடுக்காதே. தீவிரமான மௌனத்தின் இருளில் மெய்மை கண்டுபிடிக்கப் படுகிறது.

கே; நான் உடல் அல்ல என்று உறுதியுடன் நான் நினைக்க வேண்டாமா? அந்த உறுதியை நான் எங்கு கண்டுபிடிப்பது?

**ம:** நீ முழுவதும் நம்பினாற்போல் நடந்துகொள். அப்போது மனோதிடம் வரும். வெறும் வார்த்தைகளால் என்ன பயன்? ஒரு சூத்திரம், ஒரு மனோ வடிவம் உனக்கு உதவாது. ஆனால் உடல் மற்றும் அதன் தேவைகளிலிருந்து விடுபட்ட, சுயநலமில்லாத செயல் உன்னை மெய்மையின் மையத்திற்கே எடுத்துச் செல்லும்.

**கே:** திட நம்பிக்கை இல்லாமல் செயல்படும் தைரியத்தை நான் எங்கு பெறுவது?

**ம:** அன்பு அந்தத் தைரியத்தை உனக்குக் கொடுக்கும். நீ முழுவதும் மதிக்கக் கூடிய, அன்பிற்குத் தகுதியான, உயர்வான ஒருவரைச் சந்தித்தால், உன் அன்பும், மதிப்பும் உன்னை மேன்மையுடன் செயல்படச் செய்யும்.

**கே:** எல்லோருக்கும் மதிக்கத் தக்கவர்களை மதிக்கத் தெரியாது. பெரும்பாலானவர்கள் முற்றிலும் உணர்வற்றவர்கள்.

**ம:** வாழ்க்கை அவர்களைப் பாராட்ட வைக்கும். சேர்த்து வைக்கப்பட்ட அனுபவங்களின் கனமே அவர்களுக்குப் பார்க்கும் கண்களைக் கொடுக்கும். நீ ஒரு மதிப்பான மனிதரைச் சந்தித்தால் அவரை நேசிக்கவும், நம்பவும் செய்து, அவருடைய அறிவுரையைப் பின்பற்றவும் செய்வாய். இதுதான் மெய்யறிந்தவர்களுடைய பாங்கு - மற்றவர்கள் மதிக்கவும், நேசிக்கவும் ஒரு பூரணமான மாதிரியை ஏற்படுத்துவது. வாழ்க்கை மற்றும் குணத்தின் அழகு பொதுவான நன்மைக்கு ஒரு மாபெரும் பங்களிப்பு.

**கே:** வளர நாம் துக்கப்பட வேண்டியதில்லையா?

**ம:** துக்கம் உள்ளதென்றும், உலகம் துக்கப்படுகின்றதென்றும் தெரிந்தால் போதுமானது. இன்பமோ, வலியோ அவைகளாகவே மெய்ஞானத்தைத் தரமாட்டா. புரிதல்மட்டுமே தரும். உலகம் துன்பத்தால் நிரம்பி உள்ளது, பிறப்பதே ஒரு பேரிடர் என்னும் உண்மையை ஒருமுறை நீ கிரகித்துவிட்டால் அதைத் தாண்டிப் போவதற்கான உந்துதலையும், சக்தியையும் பெறுவாய். இன்பம் உன்னைத் தூக்கத்தில் ஆழ்த்துகிறது. வலி விழிக்கச் செய்கிறது. நீ துன்பப்படாமல் இருக்கவேண்டுமானால் தூங்கச் செல்லாதே. நீ உன்னை ஆனந்தத்தில்மட்டுமே அறிந்துகொள்ள முடியாது. ஏனெனில் ஆனந்தம் உன் இயல்பு. மெய்ஞானம் பெற நீ என்னவாக இல்லையோ அந்த எதிரானதை நீ எதிர்கொள்ள வேண்டும்.

# 65. உனக்குத் தேவையானதெல்லாம் ஒரு அமைதியான மனம்

**கேட்பவர்:** எனக்கு உடல்நலமில்லை. நான் வலிமையற்று இருக்கிறேன். நான் என்ன செய்வது?

**மஹராஜ்:** யாருக்கு உடல்நலம் இல்லை - உனக்கா அல்லது உடலுக்கா?

**கே:** கண்டிப்பாக என் உடலுக்குத்தான்.

**ம:** நேற்று நீ நலமுடன் இருப்பதாக உணர்ந்தாய். எது நலமாக இருப்பதாக உணர்ந்தது?

**கே:** உடல்.

**ம:** உடல் நலமுடன் இருந்த போது நீ சந்தோஷப்பட்டாய். உடல் நலமில்லாதபோது வருத்தப்பட்டாய். யார் ஒரு நாள் சந்தோஷ மாகவும், மறு நாள் வருத்தமாகவும் இருந்தது?

**கே:** மனம்.

**ம:** மாறுகின்ற மனதை அறிவது யார்?

**கே:** மனம்.

**ம:** மனம்தான் அறிபவர். அறிபவரை அறிபவர் யார்?

**கே:** அறிபவர் தன்னையே அறியமாட்டாரா?

**ம:** மனம் தொடர்ச்சியானது அல்ல. தூக்கத்திலோ அல்லது மயக்கமடையும்போதோ அல்லது கவனம் சிதறும்போதோ இருப்பதுபோல அது மறுபடியும், மறுபடியும் வெறுமையாகிறது. தொடர்ச்சி இல்லாததைப் பதிந்துகொள்ள தொடர்ச்சியான ஏதோ ஒன்று இருக்கவேண்டும்.

**கே:** மனம் ஞாபகம் வைத்திருக்கும். அது தொடர்ச்சிக்கு அத்தாட்சி.

**ம:** ஞாபகம் எப்போதும் ஒருதலைப் பட்சமானது, நம்பத்தகுந்த தல்ல, மறையக் கூடியது. அது விழிப்புணர்வை ஊடுருவுகின்ற உறுதியான அடையாள உணர்வை, 'நான்' என்னும் உணர்வை விவரிக்காது. அதன் ஆழத்தில் என்ன இருக்கின்றதென்று கண்டுபிடி.

**கே:** நான் எவ்வளவுதான் ஆழமாகப் பார்த்தாலும், மனதைத்தான் கண்டுபிடிக்கிறேன். 'மனதிற்கு அப்பால்' என்னும் உங்களுடைய வார்த்தைகள் எனக்கு எந்தக் குறிப்பையும் தருவதில்லை.

**ம:** மனதால் பார்க்கும்பொழுது உன்னால் அதைத் தாண்டிப் போகமுடியாது. அதைத் தாண்டிப் போக மனம் மற்றும் அதன் உள்ளடக்கத்திற்கு அப்பால் நீ பார்க்க வேண்டும்.

**கே:** எந்தத் திசையில் நான் பார்க்க வேண்டும்?

**ம:** எல்லாத் திசைகளும் மனதிற்குள்தான் இருக்கின்றன. நான் உன்னை எந்த ஒரு குறிப்பிட்ட திசையிலும் பார்க்கச் சொல்ல வில்லை. உன் மனதிற்குள் நடப்பனவற்றிற்கு அப்பால் பார்த்து, அதை 'நான்' என்னும் உணர்விற்குள் கொண்டு வா. 'நான்' என்பது திசை அல்ல. அது எல்லாத் திசைகளையும் மறுப்பது. இறுதியாக 'நான்' என்பதும் போக வேண்டியதுதான். ஏனெனில் வெளிப் படையான ஒன்றை உறுதிப்படுத்திக்கொண்டே இருக்க வேண்டி யதில்லை. 'நான்' என்னும் உணர்விற்குள் மனதைக் கொண்டு வருவது வெறுமனே மனதை மற்றவற்றிலிருந்து திருப்ப உதவுகிறது.

**கே:** இவை எல்லாம் என்னை எங்கு கொண்டுபோகின்றன?

**ம:** மனதை அதன் முன் ஈடுபாடுகளிலிருந்து விலக்கி அப்பால் வைத்தால் அது அமைதி அடையும். அந்த அமைதியை நீ தொந்தரவு செய்யாமல், அதற்குள் இருந்தால், அது இதுவரை நீ அறியாத ஒரு சுயம்ப்ரகாசத்தினாலும், அன்பாலும் ஊடுருவப்பட்டிருப்பதைக் காண்பாய்; உடனே அது உன் அசலான சொந்த இயல்பு என்பதை அங்கீகரி. ஒருமுறை நீ இந்த அனுபவத்திற்குள் கடந்து சென்றால் நீ பழைய மனிதனாக ஒருபோதும் இருக்கமுடியாது. கட்டுக்கடங்காத

மனம் அதன் அமைதியை உடைத்து, அதன் பார்வையை அழித்துவிடலாம். ஆனால் எல்லாக் கட்டுக்களும் உடைக்கப்பட்டு, மாயைகளும், பந்தங்களும் முடிந்து, வாழ்க்கை இப்பொழுதில், உச்ச உயர்வான அளவில் கவனம் செலுத்தப்படும் வரை முயற்சி தொடர்ந்து இருந்தால் மனம் கண்டிப்பாக அடங்கும்.

**கே:** அது என்ன வித்தியாசத்தை ஏற்படுத்தும்?

**ம:** மனம் மேற்கொண்டு இருக்காது. செயலில் அன்பு மட்டுமே இருக்கும்.

**கே:** அந்த நிலையை நான் அடைந்தால் அதை எப்படி நான் அறிந்து கொள்வது?

**ம:** அச்சம் இருக்காது.

**கே:** புதிர்களாலும், அபாயங்களாலும் நிறைந்த ஒரு உலகத்தால் சூழப்பட்டிருக்கும்போது நான் எப்படி பயப்படாமல் இருக்க முடியும்?

**ம:** உன் சிறிய உடல்கூட புதிர்களாலும், அபாயங்களாலும் நிறைந்திருக்கிறது. இருப்பினும் நீ அதைப் பற்றிப் பயப்படுவதில்லை. ஏனெனில் அதை நீ உன்னுடையது என்று கருதுகிறாய். உனக்குத் தெரியாதது என்னவென்றால் முழுப் பிரபஞ்சமும் உன் உடல் என்றும், நீ அதைப் பற்றிப் பயப்பட வேண்டியதில்லை என்றும் அறியாததுதான். தனிப்பட்டது மற்றும் பிரபஞ்சமயமானது என்னும் இரு உடல்கள் உனக்கு இருப்பதாக நீ சொல்லலாம். தனிப்பட்டது வந்து போகின்றது. பிரபஞ்சமயமானது எப்போதும் உன்னுடன் இருக்கிறது. முழுப் படைப்பும் உன் பிரபஞ்ச உடல். உன் தனிப்பட்டது எதுவோ அதனால் குருடாக்கப் பட்டு, நீ பிரபஞ்ச மயமானதைப் பார்ப்பதில்லை. இந்தக் குருட்டுத்தனம் தானாகவே முடியாது - அதைச் சாமர்த்தியமாகவும், வெளிப் படையாகவும் நீக்க வேண்டும். எல்லா மாயைகளும் புரிந்து கொள்ளப்பட்டு, கைவிடப்பட்டால் தனிப்பட்டவைகளுக்கும், பிரபஞ்சமயமானவைகளுக்கும் இடையே எந்த வித்தியாமும் இல்லாத பிழையற்ற, பரிபூரணமான நிலையை நீ அடைவாய்.

**கே:** நான் ஒரு நபர். அதனால் இடத்தாலும், காலத்தாலும் குறுக்கப்பட்டுள்ளேன். நான் சிறு இடத்தை ஆக்கிரமித்து, சில கணங்கள் நீடிக்கிறேன்; என்னைச் சாசுவதமானவனாகவும், சர்வ வியாபியாகவும் என்னால் அனுமானிக்க முடியாது.

**ம:** எப்போதும் நீ அப்படித்தான். உன் உண்மையான இயல்பைத் தெரிந்துகொள்ள உனக்குள் ஆழமாகச் சென்றாயானால், உன் உடல் மட்டும்தான் சிறியது என்றும், ஞாபகம் மட்டும்தான் குறுகியது என்றும் நீ கண்டுபிடிப்பாய். ஆனால் மிகப் பரந்த கடல் போன்ற வாழ்க்கை உன்னுடையது.

**கே:** 'நான்' மற்றும் 'பிரபஞ்சமயமான' என்னும் வார்த்தைகள் முரண்பாடானவை. ஒன்று மற்றொன்றைத் தவிர்க்கிறது.

**ம:** அவை முரண்பட்டவை அல்ல. அடையாளப்படுத்துகின்ற உணர்வு பிரபஞ்சமயமானதை ஊடுருவுகிறது. தேடு. தேடினால் பிரபஞ்ச நபரைக் காண்பாய். அது நீதான், அளவற்றதற்கும் அதிகமாக.

எப்படியாயினும், உலகம் உனக்குள் இருக்கிறது என்றும், நீ அதனுள் இல்லை என்றும் அறிந்து கொள்ள ஆரம்பி.

**கே:** அது எப்படி முடியும்? நான் உலகத்தின் ஒரு பகுதி. எப்படி முழு உலகமும் ஒரு பகுதிக்குள் இருக்க முடியும், கண்ணாடியைப் போல் பிரதிபலிப்பதைத் தவிர?

**ம:** நீ சொல்வது நிஜம். உன் தனிப்பட்ட உடல் ஒரு பகுதி. அதில் முழு உலகமும் அற்புதமாகப் பிரதிபலிக்கப்படுகிறது. ஆனால் உன்னிடம் ஒரு பிரபஞ்ச உடலும் இருக்கிறது. அதைப் பற்றி உனக்குத் தெரியாது என்று நீ சொல்ல முடியாது. ஏனெனில் அதை நீ சதா காலமும் பார்த்துக்கொண்டும், அனுபவப்பட்டுக் கொண்டும் இருக்கிறாய். அதை நீ 'உலகம்' என்று சொல்லி, அதற்குப் பயப்படுகிறாய்.

**கே:** என் சிறு உடலைப் பற்றி எனக்குத் தெரியும் என்று நினைக்கிறேன். மற்றதைப் பற்றி விஞ்ஞானத்தின் மூலமாக அல்லாமல் எனக்கு வேறொன்றும் தெரியாது.

**ம:** உன் சிறு உடல் புதிர்களாலும், அற்புதங்களாலும் நிறைந் துள்ளது. அது உனக்குத் தெரியாது. இதிலும்கூட விஞ்ஞானம்தான் உன் ஒரே வழிகாட்டி. உடற்கூறியலும், வான சாஸ்திரமும் உன்னை விவரிக்கின்றன.

**கே:** உங்களுடைய பிரபஞ்ச உடல் என்னும் கோட்பாட்டை ஒரு செயல்படும் தத்துவமாக நான் ஏற்றுக் கொண்டாலும் கூட, நான் எந்தவழியில் அதைச் சோதிப்பது மற்றும் அதனால் எனக்கு என்ன பயன்?

**ம:** உன்னை இரண்டு உடல்களிலும் வசிப்பவராக அறிவதால் நீ எதையும் கைவிடுவதில்லை. முழுப் பிரபஞ்சத்தின் மேலும் நீ அக்கறையுடன் இருப்பாய்; உயிர் வாழும் ஒவ்வொன்றின் மேலும் நீ அன்புடன் இருப்பாய். அவற்றிற்கு மிகவும் மென்மையாகவும், புத்திசாலித்தனத்துடனும் உதவுவாய். உனக்கும் மற்றவர்களுக்கும் எதை முன்னிட்டும் முரண்பாடு இருக்காது. எல்லாச் சுரண்டல் களும் முற்றிலும் நின்றுவிடும். உன் ஒவ்வொரு செயலும் நன்மை பயக்கும். ஒவ்வொரு அசைவும் ஒரு ஆசீர்வாதமாக இருக்கும்.

**கே:**இவை எல்லாம் மிகவும் ஆவலைத் தூண்டுகின்றன. ஆனால் நான் எப்படி என் பிரபஞ்ச இருத்தலை அறிய முற்படுவது?

**ம:** உனக்கு இரண்டு வழிகள் உள்ளன: உன் இதயத்தையும், மனதையும் சுயம் அறிதலுக்காகக் கொடுக்கலாம்; அல்லது நம்பிக்கையைப் பற்றிய என் வார்த்தைகளை ஏற்றுக் கொண்டு அதன்படி நட. வேறு மாதிரி சொல்வதானால் ஒன்று நீ முழுவதும் சுய அக்கறையுடன் இரு; அல்லது முற்றிலும் சுய அக்கறை இல்லாமல் இரு. 'முழுவதும்' என்னும் வார்த்தைதான் முக்கியம். உச்ச உயர்வை அடைய நீ உச்ச எல்லையில் இருக்க வேண்டும்.

**கே:** சிறியவனாகவும், அளவானவனாகவும் இருக்கும் நான் எப்படி அவ்வளவு உயர்வை ஆசைப்பட முடியும்?

**ம:** உன்னை அனைத்தும் நடக்கின்ற விழிப்புணர்வுக் கடல் என்று அறி. இது ஒன்றும் கடினமல்ல. ஒரு சிறிதளவு கவனமும், தன்னை நெருக்கமாகக் கவனித்தலும் இருந்தால் போதும். அப்போது எந்த

நிகழ்வும் உன் விழிப்புணர்விற்கு அப்பாற்பட்டது அல்ல என்று நீ காண்பாய்.

**கே:** இந்த உலகம் நிகழ்வுகளால் நிரம்பி உள்ளது. அவை என் விழிப்புணர்விற்குள் தோன்றுவதில்லை.

**ம:** உன் உடல்கூட நிகழ்வுகளால் நிரம்பி உள்ளது. அவைகளும் உன் விழிப்புணர்வில் தோன்றுவதில்லை. அது உன் உடலை உனக்குச் சொந்தமானதாகச் சொல்வதைத் தடுப்பதில்லை. நீ உன் உடலை எப்படி உன் புலன்கள்மூலம் அறிந்துள்ளாயோ அதே மாதிரிதான் உன் உலகத்தை நீ அறிவாய். உன் மனம்தான் உனக்கு வெளியே இருக்கின்ற உலகத்தை உனக்கு உள்ளே இருக்கும் உலகத்திலிருந்து பிரித்து, அவற்றை எதிர் எதிராக வைக்கிறது. இது அச்சத்தையும், வெறுப்பையும், வாழ்தலின் எல்லாத் துன்பங்களையும் உருவாக்குகிறது.

**கே:** எனக்கு என்ன புரியவில்லை என்றால் நீங்கள் விழிப்புணர்விற்கு அப்பால் செல்வது என்பதைப் பற்றி பேசுவதுதான். எனக்கு வார்த்தைகள் புரிகின்றன. ஆனால் என்னால் அந்த அனுபவத்தைக் கற்பனை செய்ய முடியவில்லை. நீங்களேகூட எல்லா அனுபவங்களும் விழிப்புணர்வில்தான் உள்ளன என்று சொல்லி இருக்கிறீர்கள்.

**ம:** நீ சொல்வது சரி. விழிப்புணர்விற்கு அப்பால் எந்த அனுபவமும் இருக்க முடியாது. இருப்பினும் வெறுமனே இருத்தல் என்னும் அனுபவம் உள்ளது. விழிப்புணர்விற்கு அப்பால் ஒரு நிலை உள்ளது. அது நினைவற்றது அல்ல. சிலர் அதைச் சிறந்த விழிப்புணர்வு அல்லது தூய விழிப்புணர்வு அல்லது உச்ச உயர்வான விழிப்புணர்வு என்று சொல்கின்றனர். அது அகம் மற்றும் புறத் தொடர்புகளிலிருந்து சுதந்திரமான தூய பிரக்ஞை.

**கே:** நான் பிரம்மஞானத்தைப் படித்திருக்கிறேன். நீங்கள் சொல்வதில் எதுவுமே எனக்குத் தெரிந்ததாக இல்லை. பிரம்மஞானம் வெளிப்பாட்டைப் பற்றி மட்டுமே கையாள்கிறது என்று நான் ஒப்புக்கொள்கிறேன். அது பிரபஞ்சத்தையும், அதில் வசிப்பவர்களையும் மிகவும் விளக்கமாக விவரிக்கிறது. அது

பொருளின் பல நிலைகளையும், அதற்கு இணையான அனுபவங்களையும் ஒப்புக் கொள்கிறது. ஆனால் அதைத் தாண்டிப் போவது போல் தெரியவில்லை. நீங்கள் சொல்வது எல்லா அனுபவங்களுக்கும் அப்பால் செல்கிறது. அதை அனுபவப்பட முடியவில்லை என்றால் அதைப் பற்றி ஏன் பேச வேண்டும்?

**ம:** விழிப்புணர்வு, இடைவெளிகள் இருக்கும் இடைப்பட்ட தன்மையானது. இருப்பினும், சுயத்தின் அடையாளத்தின் தொடர்ச்சி இருக்கிறது. விழிப்புணர்விற்கு அப்பால் உள்ள ஏதோ ஒன்றால் அல்லாமல், இந்த அடையாள உணர்வு ஏற்பட முடியுமா?

**கே:** நான் மனதிற்கு அப்பாற்பட்டவனானால் என்னை எப்படி மாற்றுவது?

**ம:** எதையாவது மாற்ற என்ன அவசியம்? எப்படியாயினும் மனம் எப்போதும் மாறிக்கொண்டிருக்கிறது. மனதை அக்கறையில்லாமல் கவனி; அதை அமைதிப்படுத்த அது போதும். அது அமைதியாயிருந்தால் நீ அதற்கு அப்பால் போகலாம். அதை எப்போதும் வேலையில் ஈடுபட்டதாக வைத்திருக்காதே. அதை நிறுத்து - வெறுமனே இரு. அதற்கு ஓய்வு கொடுத்தால் அது அடங்கி, அதன் தூய்மையையும், வலிமையையும் திரும்பப் பெறும். தொடர்ந்த சிந்தனை அதை இற்றுப் போகச் செய்யும்.

**கே:** என்னுடைய உண்மையான இருத்தல் என்னோடு எப்போதும் இருந்தால் எப்படி அதை நான் அறியாமல் இருக்கிறேன்?

**ம:** ஏனெனில் அது மிகவும் நுட்பமானது. உன் மனமோ மொத்தமானது. மொத்தமான எண்ணங்களாலும், உணர்ச்சிகளாலும் நிறைந்துள்ளது. உன் மனதை அமைதிப்படுத்தி, தெளிவுபடுத்து. அப்போது உன்னை உள்ளபடி அறிவாய்.

**கே:** என்னைப் பற்றி அறிய எனக்கு மனம் தேவையா?

**ம:** நீ மனதிற்கு அப்பாற்பட்டவன். ஆனால் அதை மனதால்தான் அறிவாய். நீ எந்த உபகரணத்தை உபயோகப்படுத்துகிறாயோ அதைப் பொருத்துதான் உன் அறிவின் அளவும், ஆழமும்,

தன்மையும் இருக்கும் என்பது வெளிப்படை. உன் உபகரணத்தை மேம்படுத்து; அப்போது உன் அறிவும் மேம்படும்.

**கே:** தூய ஸ்வரூபத்தை அறிய எனக்கு ஒரு சுத்தமான மனம் தேவை.

**ம:** ஒரு அமைதியான மனம்தான் உனக்குத் தேவை. உன் மனம் அமைதியானால் மற்றவை எல்லாமும் சரியாக நடக்கும். எப்படி சூரியன் உதித்தால் உலகம் செயல்பட ஆரம்பிக்கிறதோ அப்படி சுய பிரக்ஞை மனதின் மாற்றங்களைப் பாதிக்கிறது. அமைதியான மற்றும் உறுதியான சுய பிரக்ஞையின் ஒளியில் உள்ளே இருக்கும் சக்திகள் விழித்து, உன் பங்கில் எந்தப் பிரயத்தனமும் இல்லாமல் அதிசயங்களை விளைவிக்கும்.

**கே:** மாபெரும் செயல்கள் செயல்படாமல் இருப்பதால் நடக்கின்றன என்று சொல்கிறீர்களா?

**ம:** மிகச் சரி. நீ மெய்ஞானம் அடைய விதிக்கப்பட்டிருக்கிறாய் என்று புரிந்துகொள். உன் விதியுடன் ஒத்துழை. அதற்கு எதிராகப் போகாதே. அதை அடக்காதே. அதைத் தடுக்காதே. அது தன்னை நிறைவேற்ற அனுமதி. நீ செய்யவேண்டியதெல்லாம் முட்டாள் தனமான மனதால் உருவாக்கப்பட்ட தடைகளின்மேல் கவனத்தைச் செலுத்துவதே.



# 66. சந்தோஷத்திற்கான எல்லாத் தேடல்களுமே துன்பம்தான்

**கேட்பவர்:** நான் இங்கிலாந்திலிருந்து வருகிறேன். மதராஸுக்குச் செல்லப் போகிறேன். அங்கு என் தந்தையைச் சந்தித்து, அவரோடு தரைவழியாக நாங்கள் லண்டனுக்குப் போகப் போகிறோம். நான் உளவியல் கற்கப் போகிறேன். ஆனால் பட்டம் பெற்ற பிறகு என்ன செய்யப் போகிறேன் என்று எனக்கு இன்னும் தெரியாது. நான் தொழிற்சாலை உளவியலை அல்லது உளவியல் மருத்துவத்தை முயற்சிக்கலாம். என் தந்தை ஒரு பொது மருத்துவர். நானும் அதையே தொடரலாம்.

ஆனால் இது என் ஆர்வத்தைத் தீர்க்கவில்லை. சில கேள்விகள் காலத்தோடு மாறுவதில்லை. அது மாதிரியான கேள்விகளுக்கு உங்களிடம் சில பதில்கள் இருக்கின்றன என்று எனக்குப் புரிகிறது. அதனால் உங்களைப் பார்க்க நான் வந்துள்ளேன்.

**மஹராஜ்:** உன் கேள்விகளுக்குப் பதில் சொல்ல நான் சரியான மனிதன்தானா என்று ஆச்சரியப்படுகிறேன். எனக்குப் பொருள் களைப் பற்றியும், மனிதர்களைப் பற்றியும் சிறிதளவே தெரியும். நான் உள்ளேன் என்றுமட்டும் எனக்குத் தெரியும். அந்த அளவு உனக்கும் தெரியும். நாம் சமமானவர்கள்.

**கே:** நான் உள்ளேன் என்பதை நானும் அறிவேன். ஆனால் அதன் அர்த்தம் என்ன என்று எனக்குத் தெரியாது.

**ம:** 'நான் உள்ளேன்' என்பதில் உள்ள 'நான்' நீ கருதுவதுபோல் நீ அல்ல. நீ உள்ளாய் என்று அறிவது இயற்கையானது. நீ யார் என்று அறிவது மிகுந்த விசாரத்தால் வருவது. நீ விழிப்புணர்வின் முழுப்பிரதேசத்தையும் நன்றாக ஆராய்ச்சி செய்து அதற்கு அப்பால் செல்ல வேண்டும். இதற்கு நீ சரியான ஆசிரியரைத் தேடி அறிந்து,

கண்டுபிடிப்பிற்குத் தேவையான சூழ்நிலைகளை நீ உருவாக்க வேண்டும். பொதுவாகச் சொன்னால், இரண்டு வழிகள் உள்ளன: வெளிப்புறமாக மற்றும் உட்புறமாக. ஒன்று, நீ மெய்யை அறிந்தவருடன் வாழ்ந்து, உன்னை முழுவதுமாக அவருடைய வழிகாட்டுகின்ற, மற்றும் வடிவமைக்கின்ற தாக்கத்திற்கு ஒப்படைக்க வேண்டும். அல்லது உள்வழிகாட்டியை நீ நாடி, உள் ஒளியை அது எங்கு உன்னைக் கொண்டு செல்கிறதோ அங்கு அதைப் பின்தொடர்ந்து செல். இரண்டு வழியிலும் உன் தனிப்பட்ட ஆசைகளும், அச்சங்களும் கண்டு கொள்ளப்படக் கூடாது. நீ அருகாமையினாலோ அல்லது ஆராய்ச்சியினாலோ கற்றுக் கொள் - இவை சாந்தமான வழி அல்லது துடிப்பான வழி. உன் குருவால் உணர்த்தப்படுகின்ற வாழ்க்கையும், அன்புமான ஆறு உன்னைக் கொண்டு செல்ல அனுமதி. அல்லது உன் உள் ஒளியால் வழிகாட்டப்பட்டு உன் சொந்த முயற்சியைச் செய். இரண்டு வழிகளில் எந்த வழியாக இருந்தாலும் நீ மேற்கொண்டு நகர வேண்டும்; மெய்யான உள்ளார்வத்தோடு இருக்க வேண்டும். நம்பவும், நேசிக்கவும் தகுதியான ஒருவரைக் கண்டுபிடிக்கும் அதிர்ஷ்டசாலிகள் மிகவும் அரிதானவர்கள். பெரும்பாலானவர்கள் கடினமான வழியைத்தான் எடுத்துக்கொள்ள வேண்டும் - புத்திசாலித்தனமும், புரிதலும் உள்ள வழி; விவேகமும், பற்றற்ற தன்மையும் உள்ள வழி. இந்த வழி எல்லோருக்கும் ஏதுவான வழி.

**கே:** இங்கு வர நான் அதிர்ஷ்டம் செய்தவன். நான் நாளையே திரும்ப வேண்டி இருந்தாலும், உங்களுடனான ஒரு உரையாடல் என் முழு வாழ்க்கையையுமே பாதிக்கும்.

**ம:** ஆமாம். 'நான் மெய்யை அறிய வேண்டும்' என்று ஒருமுறை சொன்னால் உன் முழு வாழ்க்கையுமே ஆழமாக அதனால் பாதிக்கப்படும். உன் மனம் மற்றும் உடலின் பழக்கங்கள், உணர்ச்சிகள் மற்றும் மனக்கிளர்ச்சிகள், ஆசைகள் மற்றும் அச்சங்கள், திட்டங்கள் மற்றும் முடிவுகள் எல்லாம் மிகவும் தீவிரமான மாற்றத்திற்கு உள்ளாகும்.

**கே:** ஒருமுறை மெய்மையைக் கண்டுபிடிக்க வேண்டும் என்று நான் முடிவெடுத்துவிட்டால், அடுத்து நான் என்ன செய்ய வேண்டும்?

**ம:** அது உன் மனோபாவத்தைப் பொருத்தது. நீ தீவிரமான உள்ளார்வத்துடன் இருந்தால் நீ எதைத் தேர்ந்தெடுத்தாலும் அது உன் குறிக்கோளுக்குக் கொண்டுபோய்ச் சேர்க்கும். உள்ளார்வம் தான் முடிவுசெய்யும் காரணி.

**கே:** தீவிரமான உள்ளார்வத்தின் ஆதாரம் என்ன?

**ம:** அது, பறவையை அதன் கூட்டிற்குத் திரும்ப வைக்கின்ற, மீனை அது பிறந்த மலைச் சுனைக்குத் திரும்பவைக்கின்ற, வீடு அடையும் உள்ளுணர்வு. பழம் பழுத்தால் அதன் விதை மண்ணிற்குத் திரும்பும். பழுப்பதுதான் முக்கியம்.

**கே:** எது என்னைப் பழுக்கச் செய்யும்? எனக்கு அனுபவம் தேவையா?

**ம:** உனக்குத் தேவையான எல்லா அனுபவங்களும் முன்பே உன்னிடம் உள்ளன. இல்லாவிட்டால் நீ இங்கு வந்திருக்க மாட்டாய். நீ மேற்கொண்டு எதுவும் சேகரிக்க வேண்டியதில்லை. சரியாகச் சொன்னால் நீ அனுபவங்களுக்கு அப்பால் செல்ல வேண்டும். நீ என்ன முயற்சி செய்தாலும், எந்த முறையைப் (சாதனாவை) பின்பற்றினாலும் அது வெறுமனே அதிக அனுபவத்தைத்தான் தரும். ஆனால் அது உன்னை அப்பால் கொண்டுசெல்லாது. புத்தகங்களைப் படிப்பதும் உனக்கு உதவாது. அவை உன் மனதை மேம்படுத்தும். ஆனால் நபராக நீ அப்படியே இருப்பாய். நீ உன் தேடலால் பொருளளவிலோ, மனதளவிலோ, ஆன்மீக அளவிலோ ஏதாவது பலனை எதிர்பார்த்தால் முக்கியக் கருத்தைத் தவற விட்டுவிடுவாய். மெய் எந்த அனுகூலத்தையும் தராது. அது உனக்கு எந்த உயர்வான அந்தஸ்தையும் தராது. மற்றவர்களின் மேல் பிரயோகிக்க எந்தச் சக்தியையும் தராது; உனக்குக் கிடைப்பதெல்லாம் மெய்யும், பொய்யானதிலிருந்து விடுதலையும்தான்.

**கே:** கண்டிப்பாக, மற்றவர்களுக்கு உதவ மெய் சக்தியைத் தரும்.

**ம:** இது எவ்வளவுதான் உன்னதமானதாக இருந்தாலும் வெறும் கற்பனைதான். மெய்யாக நீ மற்றவர்களுக்கு உதவுவதில்லை. ஏனெனில் மற்றவர்கள் என்று யாரும் இல்லை. நீ மனிதர்களை உயர்ந்தவர்கள் மற்றும் கீழானவர்கள் என்று பிரித்து, உயர்ந்தவர்களைக் கீழானவர்களுக்கு உதவச் சொல்கிறாய். நீ பிரிக்கிறாய்; மதிப்பீடு செய்கிறாய்; ஒதுக்கித் தள்ளுகிறாய் - மெய்யின் பெயரால் அதை அழிக்கிறாய். மெய்யை முறைப்படுத்த முயலும் உன் ஆசையே அதை மறுக்கச் செய்கிறது. ஏனெனில் அதை வார்த்தைகளில் அடக்க முடியாது. இல்லை - இல்லை (நேதி - நேதி) என்னும் செயல்பாட்டால், பொய்யை மறுப்பதன் மூலம் மட்டுமே மெய்யை வெளிப்படுத்தலாம். அதற்கு பொய்யைப் பொய்யாக - விவேகத்துடன் பார்த்து, பற்றற்ற தன்மையோடு மறுக்க வேண்டும். பொய்யைத் துறப்பது விடுதலை அளிப்பது மற்றும் சக்தியூட்டுவது. அது பூரணத்திற்கான பாதையைத் திறந்து விடுகிறது.

**கே:** மெய்யைக் கண்டுபிடித்ததை நான் எப்போது அறிவேன்?

**ம:** எப்போது 'இது மெய்', 'அது மெய்' என்னும் கருத்து தோன்றவில்லையோ அப்போது மெய் தன்னையே உறுதிப் படுத்திக் கொள்ளும். சத்தியத்திற்குத் தன் இருத்தலின் மேல் ஆர்வம் இருக்காது. ஆகையால் பொய்யைப் பொய்யாகப் பார்த்தால் மெய் வெளிப்படும். மனம் பொய்யைப் பார்க்காமல் குருடாக இருந்தால் மெய்யைத் தேடுவதில் அர்த்தம் இல்லை. மெய் அதன் மேல் எழ, அது பொய்யை முற்றிலுமாகத் துறக்க வேண்டும்.

**கே:** ஆனால், பொய் என்பது என்ன?

**ம:** கண்டிப்பாக, எதில் இருத்தல் என்பது இல்லையோ அது பொய்யானது.

**கே:** இருத்தல் இல்லாதது என்றால் என்ன அர்த்தம்? ஒரு ஆணியைப் போல கடினமாகப் பொய் அங்கு இருக்கிறது.

**ம:** எது தன்னுடனேயே முரண்படுகிறதோ அதற்கு இருத்தல் இல்லை. அல்லது அது கண நேர இருத்தலை மட்டுமே

கொண்டிருக்கும். இதுவும் அதற்கேதான் வருகிறது. ஏனெனில் எது ஒரு ஆரம்பத்தையும், முடிவையும் கொண்டிருக்கிறதோ அதற்கு நடுவில் ஒன்றும் இருக்காது. அது உள்ளீடற்றது. அது மனதால் கொடுக்கப்பட்ட பெயரையும், வடிவத்தையும் மட்டுமே கொண்டிருக்கும். ஆனால் அதற்குச் செறிவோ, சாரமோ இருக்காது.

**கே:** கடந்து போகின்ற எல்லாவற்றிற்கும் இருத்தல் இல்லை யென்றால், பிரபஞ்சத்திற்கும் இருத்தல் என்பது இருக்காது.

**ம:** யார் அதை மறுக்கிறார்கள்? பிரபஞ்சத்திற்கும் இருத்தல் என்பது கிடையாது.

**கே:** எது இருத்தலைக் கொண்டிருக்கிறது?

**ம:** எது தான் இருப்பதற்குச் சார்ந்திருக்காதோ, எது பிரபஞ்சம் தோன்றுவதோடு தோன்றாதோ, மறைவதோடு மறையாதோ, எதற்கு எந்த அத்தாட்சியும் தேவையில்லையோ, ஆனால் அது தொடுகின்ற எல்லாவற்றிலும் மெய்மையை வெளிப்படச் செய்கிறதோ, அது இருத்தலைக் கொண்டிருக்கும். பொய்மையின் தன்மை அது ஒரு கண நேரத்திற்கு மெய்யாகத் தோன்றுவது. உண்மை பொய்யின் தகப்பனாக மாறுகிறது என்றுகூட ஒருவர் சொல்லலாம். ஆனால் பொய் காலத்தாலும், இடத்தாலும் வரையறுக்கப் படுகிறது. அது சூழ்நிலைகளால் உருவாக்கப் படுகிறது.

**கே:** நான் எப்படிப் பொய்யை விட்டுவிட்டு மெய்யை அடைவது?

**ம:** எதற்காக?

**கே:** ஒருங்கிணைந்த, மகிழ்ச்சியான ஒரு மேம்பட்ட, ஒரு அதிகத் திருப்தியான வாழ்க்கையை வாழ.

**ம:** மனதால் உருவகப் படுத்தப்படும் எதுவானாலும் அது பொய்யாகத்தான் இருக்க வேண்டும். ஏனெனில் அது இன்னொன்றைச் சார்ந்ததாகவும், அளவானதாகவும்தான் இருக்கும். மெய்யை உருவகிக்க முடியாது. அதை ஒரு நோக்கத்திற்காக உபயோகிக்க முடியாது. அதை அதற்காகவேதான் தேடவேண்டும்.

**கே:** உருவகிக்க முடியாத ஒன்றை நான் எப்படி வேண்டித் தேட முடியும்?

**ம:** வேறு என்ன வேண்டித் தேடுவதற்குத் தகுதியாக இருக்கிறது? ஒரு பொருளை வேண்டுவது போல மெய்யை வேண்டித் தேட முடியாது என்றே எடுத்துக் கொள்வோம். ஆனால் நீ மெய்யற்றதை மெய்யற்றதாகப் பார்த்து, அதை விட்டொழித்துவிடலாம். பொய்யை விட்டொழித்துவிடுவது மெய்யிற்கான வழியைத் திறக்கும்.

**கே:** எனக்குப் புரிகிறது. ஆனால் அது தினசரி நடைமுறை வாழ்க்கையில் எவ்வாறு இருக்கும்?

**ம:** சுய ஆர்வமும், சுய அக்கறையும்தான் பொய்யின் ஆதாரம். உன் தினசரி வாழ்க்கை ஆசைக்கும், அச்சத்திற்கும் இடையில் ஆடுகிறது. அதைக் கூர்ந்து கவனி. அப்போது ஒரு ஆறு பாறைகளுக்கு இடையில் நுரைத்துக் கொண்டு செல்வதைப் போல, மனம் கணக்கற்ற பெயர்களையும், வடிவங்களையும் எவ்வாறு எடுக்கிறது என்று பார்ப்பாய். ஒவ்வொரு செயலின் சுய நோக்கத்தையும் கண்டுபிடித்து, அந்த நோக்கம் கரையும் வரை அதைக் கூர்ந்து கவனி.

**கே:** வாழ, ஒருவர் தன்னைக் கவனித்துக் கொள்ள வேண்டும். ஒருவர் தனக்காகப் பணம் சம்பாதிக்க வேண்டும்.

**ம:** உனக்காகச் சம்பாதிக்க வேண்டியதில்லை. ஆனால் மனைவிக்காகவும், குழந்தைக்காகவும் வேண்டி இருக்கலாம். மற்றவர்களுக்காக நீ தொடர்ந்து உழைக்க வேண்டி இருக்கலாம். உயிர்வாழ்வதே கூட ஒரு தியாகமாக இருக்கலாம். எப்படியாக இருந்தாலும் சுயநலமாக இருக்க வேண்டியதில்லை. ஒவ்வொரு சுயநல நோக்கத்தையும் அதைப் பார்த்த உடனேயே விட்டொழி. நீ மெய்யைத் தேட வேண்டியதில்லை; மெய் உன்னைக் கண்டு பிடிக்கும்.

**கே:** அடிப்படையான தேவைகள் இருக்கின்றன.

**ம:** நீ கருவாக உருவாகும் போதே அவை நிறைவேறத் தேவையானவை வழங்கப்படவில்லையா? சுய அக்கறை என்னும் பந்தத்தை விட்டு விட்டு, நீ என்னவோ அதுவாக இரு - செயல்படும் அறிவும், அன்புமாக.

**கே:** ஆனால் ஒருவர் உயிர்வாழ வேண்டும்!

**ம:** உன்னால் உயிர்வாழ ஒன்றும் செய்ய முடியாது! மெய்யான நீ காலமற்றவன் மற்றும் பிறப்பு இறப்பிற்கு அப்பாற்பட்டவன். தேவைப்படும் காலம் வரை உடல் வாழும். நீ நீண்ட காலம் வாழ வேண்டும் என்பது முக்கியமல்ல. ஒரு முழுமையான வாழ்க்கை நீண்ட வாழ்க்கையை விடச் சிறந்தது.

**கே:** ஒரு முழுமையான வாழ்க்கை எது என்று யார் சொல்வது? அது என்னுடைய கலாச்சாரப் பின்னணியைச் சார்ந்தது.

**ம:** நீ மெய்யைத் தேடினால், எல்லாப் பின்னணிகளிலிருந்தும், கலாச்சாரங்களிலிருந்தும், சிந்திக்கும் மற்றும் உணரும் படிவங்களிலிருந்தும் நீ உன்னை விடுவிக்க வேண்டும். ஆண் அல்லது பெண் அல்லது மானிடன் என்னும் கருத்தைக் கூட நீ விட்டு விட வேண்டும். உயிர் வாழ்தல் என்னும் கடல் மானிடர்களை மட்டுமல்ல, எல்லாவற்றையும் உள்ளடக்கியது. எனவே, முதலில் எல்லாச் சுய அடையாளங்களையும் விட்டுவிடு. உன்னை இன்னதென்றும், இன்னாரென்றும், இது அல்லது அது என்றும் நினைப்பதை நிறுத்து. எல்லாச் சுய அக்கறையையும் விட்டுவிடு. உன் பொருளாதார மற்றும் ஆன்மீக நலத்தைப் பற்றிக் கவலைப் படாதே. வெளிப்படையான அல்லது மறைமுகமான எல்லா ஆசைகளையும் விட்டுவிடு. எந்தவிதமான சாதனையாக இருந்தாலும் அதைப் பற்றிச் சிந்திப்பதை நிறுத்து. இங்கு, இப்போது நீ முழுமையானவன். உனக்கு எதுவுமே தேவையில்லை. அதனால் நீ மூளையில்லாமல் முட்டாளாகவும், வருங்காலத்தைப் பற்றி அக்கறையில்லாமலோ, அலட்சியமாகவோ இருக்கவேண்டும் என்றும் அர்த்தம் அல்ல. தன்னைப் பற்றிய அடிப்படையான மிகுந்த ஆர்வம் மட்டுமே நீங்க வேண்டும். உனக்கும், உன்னுடையவர் களுக்கும் உணவு, உடை, இருப்பிடம் ஆகியவை தேவை. ஆனால் இவை பிரச்சனையாக இருக்க மாட்டா - பேராசையைத் தேவை

என்று எடுத்துக் கொண்டால் ஒழிய. ஒவ்வொன்றையும், கற்பனை செய்யப்பட்டவாறு அல்லாமல் அவற்றை உள்ளவாறே எடுத்துக் கொண்டு, ஒத்திசைந்து வாழ்.

**கே:** நான் மானிடன் அல்ல என்றால் வேறு என்ன?

**ம:** எது உன்னை ஒரு மனிதன் என்று நினைக்க வைக்கிறதோ அது மனிதன் அல்ல. ஆனால் அது விழிப்புணர்வின் பரிமாணமற்ற ஒரு புள்ளி - ஒரு விழிப்புணர்வான வெறுமை; நீ உன்னைப் பற்றி சொல்லக் கூடியதெல்லாம்: 'நான்' என்று மட்டுமே. நீ தூய சத்(இருத்தல்) - சித்(பிரக்ஞை) - ஆனந்தம். இதை அறிவதுதான் எல்லாத் தேடலின் முடிவு. உன்னைப் பற்றி நீ நினைப்பதெல்லாம் வெறும் கற்பனை என்றும், கடந்து போவதைக் கடந்து போவ தாகவும், கற்பனையானதைக் கற்பனை என்றும், மெய்யற்றதை மெய்யற்றது என்றும் நீ பார்த்து, தூய பிரக்ஞையில் விட்டேத்தியாக நீ நின்றால் அதை அடைவாய். இது ஒன்றும் கடினம் அல்ல. ஆனால் பட்டற்று இருக்க வேண்டும். பொய்யானதைப் பிடித்துக் கொண்டிருப்பதுதான் மெய்யைக் காண மிகவும் கடினப்படுத்துகிறது. பொய்யானதற்குக் கால அவகாசம் தேவை என்றும், எதற்குக் கால அவகாசம் தேவையோ அது பொய்யானது என்றும் நீ புரிந்து கொண்டவுடன் காலமற்ற, எப்போதும் தற்பொழுதில் இருக்கின்ற மெய்மைக்கு அருகில் இருப்பாய். கடிகாரத்தின் அசைவைப் போல, காலத்தில் சாசுவதம் என்பது வெறும் திரும்பத் திரும்ப நிகழ்வது. அது முடிவற்று கடந்த காலத்திலிருந்து, எதிர்காலத்திற்கு ஓடுகிறது - அது ஒரு உள்ளீடற்ற தொடர்ச்சி. மெய்மை என்பது தற்பொழுதை மிக இன்றியமையாத தாக, வெறும் மனோபாவங்களான கடந்த காலத்தவற்றிலிருந்தும், எதிர்காலத்தவற்றிலிருந்தும் மிகவும் வித்தியாசமானதாக்குகிறது. எதையாவது அடைய உனக்குக் கால அவகாசம் தேவையென்றால் அது பொய்யானதாகத்தான் இருக்க வேண்டும். மெய் எப்போதும் உன்னோடு இருக்கும்; நீ என்னவோ அதாக இருக்கக் காத்திருக்க வேண்டியதில்லை. தேடிக்கொண்டு உன் மனம் உன்னைவிட்டு வெளியே செல்ல மட்டும் நீ அனுமதிக்கக் கூடாது. உனக்கு ஏதாவது தேவையென்றால், உன்னைக் கேள்: 'எனக்கு உண்மையாலுமே

அது தேவையா?' என்று. அதற்கான பதில் - இல்லை என்றால் அதை வெறுமனே விட்டுவிடு.

**கே:** நான் மகிழ்ச்சியாக இருக்க வேண்டாமா? ஒரு பொருள் எனக்குத் தேவையில்லாமல் இருக்கலாம். இருப்பினும் அது என்னை மகிழ்ச்சிப்படுத்தக்கூடியதாக இருந்தால் அதை நான் கைக்கொள்ள வேண்டாமா?

**ம:** எதுவுமே உன்னை நீ இருப்பதைவிட அதிகமாக மகிழ்ச்சிப் படுத்த முடியாது. மகிழ்ச்சிக்கான எல்லாத் தேடல்களுமே துன்பம் தான். அது இன்னும் அதிகமான துன்பத்திற்குத்தான் கொண்டு செல்கிறது. குறிப்பிட்டுச் சொல்லக்கூடிய அளவிற்கு மதிப்பு வாய்ந்த ஒரே மகிழ்ச்சி விழிப்புணர்வுடைய இருத்தலின் இயற்கையான மகிழ்ச்சிதான்.

**கே:** நான் அந்தமாதிரியான உயர்ந்த நிலையிலுள்ள பிரக்ஞையை அடைவதற்கு முன்பு எனக்கு அதிகமான அனுபவம் தேவை யில்லையா?

**ம:** அனுபவம் ஞாபகங்களை மட்டுமே விட்டுச் செல்கிறது. அது மிகுந்த சுமையை மேலும் அதிகப்படுத்துகிறது. உனக்கு மேற் கொண்டு அனுபவங்கள் தேவையில்லை. முன்பே இருப்பவையே போதும். உனக்கு மேலும் தேவையென்று நினைத்தால், உன்னைச் சுற்றி இருக்கும் மக்களின் இதயத்திற்குள் பார். ஒரு ஆயிரம் வருடங்கள் ஆனாலும் உன்னால் மேற்கொள்ள முடியாத அளவிற்கு வகைவகையான அனுபவங்களை நீ காண்பாய். மற்றவர்களின் துன்பங்களிலிருந்து கற்றுக் கொள். உன்னுடையதை நீயே வைத்திரு. உனக்கு வேண்டியது அனுபவம் அல்ல. எல்லா அனுபவங்களிலிருந்தும் விடுதலைதான் உனக்கு வேண்டும். அனுபவங்களுக்காகப் பேராசைப்படாதே; உனக்கு எதுவுமே தேவையில்லை.

**கே:** நீங்கள் அனுபவங்களைக் கடந்து செல்லவில்லையா?

**ம:** என்னைச் சுற்றி காரியங்கள் நடக்கின்றன. ஆனால் நான் அவற்றில் பங்கெடுப்பதில்லை. ஒரு நிகழ்வு நான் உணர்ச்சி பூர்வமாக ஈடுபட்டால்தான் அனுபவமாகிறது. மேற்கொண்டு

மேம்படுத்தத் தேவையில்லாத, முழுமையான ஒரு நிலையில் நான் இருக்கிறேன். அனுபவத்தால் எனக்கு என்ன பயன்?

**கே:** அறிவும், கல்வியும் ஒருவருக்குத் தேவை.

**ம:** பொருட்களைக் கையாள பொருட்களைப் பற்றிய அறிவு தேவை. மக்களைக் கையாள உனக்கு உள்முகப் பார்வையும், இரக்கமும் தேவை. உன்னைக் கையாள உனக்கு எதுவுமே தேவை யில்லை. நீ என்னவோ அதுவாக இரு - விழிப்புணர்வுள்ளவனாக. உனக்கு அப்பால் சுற்றித் திரியாதே.

**கே:** பல்கலைக் கழகப் படிப்பு மிகவும் பயனுள்ளது.

**ம:** அதில் சந்தேகமே இல்லை. வாழ்வதற்குச் சம்பாதிக்க அது உனக்கு உதவுகிறது. ஆனால் எப்படி வாழ வேண்டும் என்று உனக்கு அது சொல்லித் தருவதில்லை. நீ ஒரு மனோதத்துவ மாணவன். அது உனக்குச் சில சூழ்நிலைகளில் உதவலாம். ஆனால் நீ மனோதத்துவத்தாலேயே வாழ முடியுமா? மெய்மையைச் செயல்பாட்டில் பிரதிபலித்தால்தான் வாழ்க்கை பெயர் சொல்லக் கூடியதாக இருக்கும். இறக்கும் தருவாயில் 'நான் நன்கு வாழ்ந்தேன். மறுபடியும் வாழ வேண்டியதில்லை' என்று நீ சொல்லும்வகையாக எந்தப் பல்கலைக் கழகமும் நீ எப்படி வாழ வேண்டும் என்று சொல்லித் தருவதில்லை. நம்மில் பெரும்பாலானவர்கள் மறுபடியும் வாழ வேண்டும் என்னும் ஆசையுடன் இறப்போம். பலப்பல தவறுகள் செய்யப்படுகின்றன. செய்து முடிக்க வேண்டியவை நிறைய இருக்கும். பெரும்பாலானவர்கள் தாவரம்போல் இருக்கிறார்கள். ஆனால் வாழ்வதில்லை. அவர்கள் வெறுமனே அனுபவத்தைச் சேகரித்து, தங்களின் ஞாபகத்தைச் செறிவூட்டிக் கொள்கிறார்கள். ஆனால் அனுபவம் என்பது மெய்மையைப் பற்றிய பார்வையைத் தராது. மெய் என்பது புலனுணர்வு சார்ந்ததோ அல்லது உருவகிக்கக் கூடியதோ அல்ல; உடலோ, மனமோ அல்ல; ஆனாலும் மனதையும், உடலையும் உள்ளடக்கிய மற்றும் கடந்து போகின்ற ஒன்று.

**கே:** ஆனால் அனுபவம் மிகவும் உபயோகமானது. அனுபவத்தால் தீயைத் தொடக்கூடாது என்று நீங்கள் கற்றுக் கொள்கிறீர்கள்.

**ம:** பொருட்களைக் கையாள்வதற்கு அறிவு மிகவும் உபயோகமானது என்று முன்பே நான் உனக்குச் சொல்லியிருக்கிறேன். ஆனால் அது மக்களையும், உன்னையும் எப்படிக் கையாள்வது என்றும், எப்படி ஒரு வாழ்க்கையை வாழ்வது என்றும் சொல்வதில்லை. ஒரு வாகனத்தை எப்படி ஓட்டுவது என்றோ, அல்லது பணம் சம்பாதிப்பது எப்படி என்றோ நாம் பேசிக் கொண்டிருக்கவில்லை. இதற்கு உனக்கு அனுபவம் தேவை. ஆனால் உனக்கே நீ ஒளியாக இருக்க பொருட்களைப் பற்றிய அறிவு உனக்கு உதவாது. உண்மையான அர்த்தத்தில் நீயாக இருக்க பொருட்களைப் பற்றிய அறிவைவிட மிக அதிகமாக நெருக்கமானதாகவும், ஆழமானதாகவுமான ஒன்று தேவை. வெளிப்புற வாழ்க்கை முக்கியமானதல்ல. நீ ஒரு இரவுக் காவலனாக இருந்துகொண்டு சந்தோசமாக வாழலாம். உள்ளுக்குள் நீ என்னவோ அதுதான் முக்கியம். உன் உள் அமைதியையும், மகிழ்ச்சியையும் நீதான் சம்பாதிக்க வேண்டும். பணம் சம்பாதிப்பதை விட அது கடினமானது. நீயாக இருக்க எந்தப் பல்கலைக் கழகமும் சொல்லித் தராது. கற்றுக் கொள்ள ஒரே வழி பயிற்சி மட்டுமே. உடனடியாக நீயாக இருக்க ஆரம்பி. நீ என்னவாகவெல்லாம் இல்லையோ அவற்றைக் கைவிட்டு, ஆழமாகச் செல். எப்படி கிணற்றைத் தோண்டும் ஒரு மனிதன் தண்ணீர் கிடைக்கும்வரை தண்ணீர் அல்லாதவற்றை ஒதுக்கி விடுவானோ அப்படி, நீ சொந்தம் கொண்டாட ஒன்றுமே இல்லாதவரையில் உன்னுடையது அல்லாததை நீ ஒதுக்கிவிட வேண்டும். மனம் தொக்கி நிற்க மிஞ்சுவது ஒன்றுமே இல்லை என்று நீ காண்பாய். நீ ஒரு மானிடன்கூட அல்ல. நீ வெறுமனே ஒரு கால அளவிற்கும், ஒரு இட அளவிற்கும் நீடித்திருக்கின்ற, காலம் மற்றும் இடத்திற்கு அப்பால் உள்ள, உச்ச முடிவான காரணமான, தனக்கே காரணமற்ற பிரக்ஞையின் ஒரு புள்ளி. நீ என்னை 'யார் நீ' என்று கேட்டால் என் பதில்: 'குறிப்பிட்டவாறு ஒன்றும் இல்லை. இருப்பினும் நான் உள்ளேன்' என்பது.

**கே:** நீங்கள் குறிப்பிட்டவாறு ஒன்றும் இல்லை என்றால், பிரபஞ்சமயமானவராக இருக்க வேண்டும்.

**ம:** ஒரு கருத்தாக அல்லாமல், ஒரு வாழும் வகையாக பிரபஞ்சமயம் என்பது என்ன? பிரிக்காமல், எதிர்க்காமல், ஆனால் எதுவெல்லாம் உன்னைத் தொடர்பு கொள்கிறதோ அதையெல்லாம் புரிந்துகொள்வதும், நேசிப்பதும்தான் பிரபஞ்சமயமாக வாழ்வது. நான்தான் உலகம். உலகம்தான் நான். உலகம் என்னுடைய வீடு. உலகம் எனக்குச் சொந்தமானது. ஒவ்வொரு இருத்தலும் என்னுடைய இருத்தல். ஒவ்வொரு விழிப்புணர்வும் என்னுடைய விழிப்புணர்வு. ஒவ்வொரு துக்கமும் என்னுடைய துக்கம். ஒவ்வொரு மகிழ்ச்சியும் என்னுடைய மகிழ்ச்சி - இதுதான் பிரபஞ்ச வாழ்க்கை. இருப்பினும் என் மெய்யான இருத்தல் மற்றும் உன்னுடையதும் கூட பிரபஞ்சத்திற்கு அப்பாற்பட்டது. ஆகையால் குறிப்பிட்டது மற்றும் பிரபஞ்சமயமானது என்னும் வகைகளுக்கு அப்பாற்பட்டது. முற்றிலும் தன்னிறைவான, சுதந்திரமான அது என்னவோ அதுதான்.

**கே:** எனக்குப் புரிந்துகொள்ளக் கடினமாக இருக்கிறது.

**ம:** இந்தமாதிரியான சமாச்சாரங்களைப் பற்றி சிந்திக்க நீ கால அவகாசம் எடுத்துக் கொள்ள வேண்டும். உன் மூளையில் புதிய படிமங்களை ஏற்படுத்தாமல் பழைய படிமங்களை அழித்துவிட வேண்டும். உன்னை நீ அசைகின்றதற்குப் பின்னாலும், அப்பாலும் இருக்கின்ற, நிகழ்கின்ற எல்லாவற்றிற்கும் அமைதியான சாட்சியான அசைவற்றதாக அறிய வேண்டும்.

**கே:** ஒரு துடிப்பான வாழ்க்கையைப் பற்றிய எல்லாக் கருத்துக் களையும் நான் விட்டுவிட வேண்டும் என்று அதற்கு அர்த்தமா?

**ம:** இல்லவே இல்லை. கல்யாணம் இருக்கும், குழந்தைகள் இருப்பார்கள், ஒரு குடும்பத்தை போஷிக்க வருமானம் இருக்கும்; இவையெல்லாம் இயல்பான செயல்பாடுகளாக நிகழும். ஏனெனில் விதி தன்னை நிறைவேற்றிக் கொள்ளவேண்டும். நீ அதற்குள் எந்தவிதமான எதிர்ப்பும் இல்லாமல், சிறிய காரியமானாலும், பெரிய காரியமானாலும் அவற்றில் ஈடுபாட்டுடனும், முழுமை யாகவும் வேலைகளை அவை வரும்போது எதிர்கொள்ள வேண்டும். ஆனால் பொதுவான மனோபாவம் பாசத்துடன் பற்றற்று இருப்பது, மிக அதிகமான நன்மதிப்பு, பிரதிபலன்

எதிர்பாராமல் இருப்பது, எதையும் வேண்டாமல் கொடுத்துக் கொண்டே இருப்பது ஆகியனவாக இருக்கும். திருமணத்தில் நீ கணவனாகவோ, மனைவியாகவோ இருக்கமாட்டாய்; நீ இரண்டு பேருக்கும் இடையிலான அன்பாக இருப்பாய். ஒவ்வொன்றையும் ஒழுங்காகவும், மகிழ்ச்சியாகவும் ஆக்குகின்ற தெளிவும், பரிவும் நீ. இது உனக்குத் தெளிவற்றதாகத் தெரியலாம்; ஆனால் நீ சிறிது சிந்தித்தால், மறைபொருளாக இருப்பது மிகவும் நடைமுறை சாத்தியமானது என்று காண்பாய். ஏனெனில், அது உன் வாழ்க்கையைப் படைக்கும் திறனுடைய மகிழ்ச்சியானதாக்கும். உன் விழிப்புணர்வு உயர்ந்த பரிமாணத்திற்கு உயர்த்தப்பட்டு, அங்கிருந்து ஒவ்வொன்றையும் மிகவும் தெளிவாகவும், மிகுந்த தீவிரத்துடனும் நீ காண்பாய். நீ பிறக்கும்போது உருவாகி, இறக்கும்போது இல்லாமல் போகின்ற நபர்த் தன்மை தற்காலிக மானது மற்றும் பொய்யானது என்று அறிவாய். ஆசைகளாலும், அச்சங்களாலும் இறுக்கப்பட்ட புலன் உணர்வு சார்ந்த, உணர்ச்சிவயப்பட்ட, அறிவார்ந்த மனிதன் நீ அல்ல. உன் உண்மையான இருத்தலைக் கண்டுபிடி. 'நான் யார்' என்பதுதான் எல்லாத் தத்துவங்களுக்கும், மனோதத்துவங்களுக்கும் அடிப்படைக் கேள்வி. அதற்குள் ஆழமாகச் செல்.



# 67. அனுபவம் என்பது உண்மையானதல்ல

**மஹராஜ்:** ஆன்மீகத் தேடல் உடையவர் என்பவர் தன்னையே தேடுபவர். விரைவாகத் தான் தன் உடல் அல்ல என்று கண்டு பிடிப்பார். 'நான் உடல் அல்ல' என்னும் முடிவு நன்கு நிலைபெற்ற பின் மேற்கொண்டு அவர் உடல்சார்பாக உணரவோ, சிந்திக்கவோ, செயல்படவோ முடியாது. தான் பிரபஞ்ச இருத்தல், அறிதல், செயல் படுதல் என்றும், தன்னுள் மற்றும் தன் மூலம் முழுப் பிரபஞ்சமும் மெய்யாகவும், விழிப்புணர்வுடனும், துடிப்பாகவும் இருக்கிறது என்றும் அவர் எளிதில் அறிவார். இதுதான் பிரச்சனையின் மையம். ஒன்று, நீ உடல் உணர்வுடன் சூழ்நிலைகளின் அடிமையாக இருப்பாய். அல்லது ஒவ்வொரு நிகழ்வின் மீதும் முழுக் கட்டுப்பாட்டுள்ள பிரபஞ்ச விழிப்புணர்வே நீதான்.

இருப்பினும், தனிப்பட்ட அல்லது பிரபஞ்சமயமான விழிப்புணர்வு என்னுடைய உண்மையான இருப்பிடம் அல்ல; நான் அதில் இல்லை. அது என்னுடையது அல்ல. அதில் 'என்னுடையது' என்பது எதுவும் இல்லை. எப்படி ஒருவர் விழிப்புணர்வாகவும் இல்லாமல், விழிப்புணர்வற்றும் இல்லாமல், ஆனால் வெறுமனே அப்பால் இருப்பது என்று விளக்குவது சுலபமல்ல என்றாலும், நான் அப்பால் உள்ளேன். நான் கடவுளில் உள்ளேன் என்றோ, அல்லது நான் கடவுள் என்றோ என்னால் சொல்ல முடியாது. கடவுள் பிரபஞ்ச ஒளி மற்றும் அன்பு; பிரபஞ்ச சாட்சி. நான் பிரபஞ்சத்தையும் கடந்தவன்.

**கேட்பவர்:** அப்படியானால் நீங்கள் பெயரும், உருவமும் அற்றவர். எந்தமாதிரியான இருத்தலை நீங்கள் கொண்டிருக்கிறீர்கள்?

**ம:** நான் என்னவோ அதுதான் நான் - வடிவம் உடையவனும் அல்ல, வடிவமற்றவனும் அல்ல. விழிப்புணர்வு உடையவனும்

அல்ல, விழிப்புணர்வு அற்றவனும் அல்ல. நான் இந்தப் பிரிவினைகளுக்கெல்லாம் அப்பாற்பட்டவன்.

**கே:** நீங்கள் 'இது அல்ல, இது அல்ல' என்னும் அணுகுமுறையைக் கைக்கொள்வதாகத் தெரிகிறது.

**ம:** வெறுமனே மறுப்பதால் என்னைக் கண்டுபிடிக்க முடியாது. நான் ஒன்றுமில்லாதது போலவே ஒவ்வொன்றுமானவன். இரண்டுமே அல்ல. இரண்டில் ஒன்றும் அல்ல. இந்த வரையறைகளெல்லாம் பிரபஞ்சத்தின் கடவுளுக்குப் பொருந்தும். எனக்கு அல்ல.

**கே:** நீங்கள் வெறுமனே ஒன்றுமில்லை என்று தெரிவிக்க முற்படுகிறீர்களா?

**ம:** இல்லை, இல்லை. நான் முழுமையானவன் மற்றும் பூரணமானவன். நான் இருத்தலின் இருத்தல் தன்மை; அறிதலின் அறியும் தன்மை; மகிழ்ச்சியின் முழுமைத் தன்மை. என்னை வெறுமை என்று குறுக்க முடியாது!

**கே:** நீங்கள் வார்த்தைகளுக்கு அப்பாற்பட்டவர் என்றால் நாம் எதைப் பற்றிப் பேசுவது? தத்துவ சாஸ்திரப்படி நீங்கள் சொல்வது பொருந்துகிறது; உள் முரண்பாடு எதுவும் இல்லை. ஆனால் நீங்கள் சொல்வதில் எனக்குத் தேவையானது எதுவும் இல்லை. அவை என்னுடைய அவசரத்தேவைகளுக்கு முற்றிலும் அப்பால் உள்ளன. நான் ரொட்டியைக் கேட்டால் நீங்கள் நகைகளைத் தருகிறீர்கள். அவை சந்தேகமில்லாமல் அழகானவை. ஆனால் நான் பசியோடிருக்கிறேன்.

**ம:** அது அவ்வாறில்லை. நான் உனக்குச் சரியாக என்ன தேவையோ அதைத்தான் தருகிறேன் - விழித்தலை. உனக்குப் பசி இல்லை. உனக்கு ரொட்டி தேவை இல்லை. உனக்குத் தேவை தவிர்த்தல், கைவிடுதல், சிக்கலற்று இருத்தல். உனக்குத் தேவை என்று நீ நம்புவது உனக்குத் தேவையில்லை. உன் உண்மையான தேவையை நான் அறிவேன். நீ அறியமாட்டாய். நான் இருக்கும் நிலைக்கு, உன் இயற்கையான நிலைக்கு நீ திரும்ப வேண்டும். நீ நினைக்கும் வேறு எதுவானாலும் அது ஒரு மாயை மற்றும் ஒரு

தடை. என்னை நம்பு. நீ என்னவோ அதைத் தவிர உனக்கு வேறு எதுவும் தேவையில்லை. சேர்த்துக்கொள்வதால் உன் மதிப்பை அதிகப்படுத்திக் கொள்ளலாம் என்று நீ கற்பனை செய்கிறாய். இது தாமிரத்தைச் சேர்த்துக்கொள்வதால் மேம்படலாம் என்று தங்கம் நினைப்பது போல் இருக்கிறது. உன் இயல்பிற்கு அன்னியமான எல்லாவற்றையும் வெளியேற்றுவது, தூய்மைப்படுத்துவது, துறப்பது போதும். மற்ற அனைத்தும் வெற்று ஆரவாரம்.

**கே:** செய்வதை விடச் சொல்வது எளிது. ஒரு மனிதன் வயிற்று வலியுடன் உங்களிடம் வந்தால், நீங்கள் அவனை வாந்தியெடுக்கச் சொல்கிறீர்கள். மனம் இல்லாவிட்டால் பிரச்சனைகள் இருக்காது என்பது வாஸ்த்தவம். ஆனால் மனம் அங்கு இருக்கிறது - மிகவும் உறுதியாக.

**ம:** மனம்தான் தான் இருப்பதாக உனக்குச் சொல்கிறது. ஏமாறாதே. மனதைப் பற்றிய எல்லா விவாதங்களும் அதன் சொந்தப் பாதுகாப்பிற்காகவும், தொடர்ச்சிக்காகவும், விரிவிற்காகவும் மனதாலேயே உருவாக்கப்படுகின்றன. மனதின் மடக்கித் திணித்தலையும், குமுறல்களையும் தீர்மானமாக மறுப்பதுதான் உன்னை அப்பால் கொண்டு செல்லும்.

**கே:** ஐயா, நான் ஒரு எளிமையான ஆன்மீகத் தேடல் உடையவன். நீங்களோ உச்ச உயர்வான மெய்மையே. தேடுபவர் ஞானம் அடைவதற்காக உச்ச உயர்வை அணுகுகிறார். உச்ச உயர்வு அதற்கு என்ன செய்கிறது?

**ம:** நான் உனக்குச் சொல்லிக் கொண்டே இருப்பதைக் கேள். அதைவிட்டு அப்பால் செல்லாதே. அதை எல்லா நேரமும் சிந்தி. வேறெதையும் நினைக்காதே. அவ்வளவு தூரம் அடைந்தபிறகு, உலகத்துடையது மட்டுமல்லாமல் உன்னுடையது உட்பட எல்லா எண்ணங்களையும் கைவிடு. எல்லா எண்ணங்களுக்கும் அப்பால், நிசப்தமான இருத்தல் - விழிப்புணர்வில் இரு. அது முன்னேற்ற மல்ல. ஏனெனில் நீ சென்று அடைவது முன்பே உன்னிடம் இருப்பது. அது உனக்காகக் காத்திருக்கும்.

**கே:** நான் சிந்திப்பதை நிறுத்த முயற்சிக்கவேண்டும் என்றும், 'நான்' என்னும் கருத்தில் ஸ்திரமாக இருக்கவேண்டும் என்றும் சொல்கிறீர்களா?

**ம:** ஆமாம். 'நான்' என்பதன் தொடர்பாக எந்த எண்ணம் வந்தாலும் அதைக் காலி செய்து, எந்தக் கவனத்தையும் அதற்குக் கொடுக்காதே.

**கே:** நான் மேற்கத்திய இளைஞர்கள் பலரைச் சந்திக்க நேர்கிறது. அவர்களை இந்தியர்களுடன் ஒப்பிட்டுப் பார்த்தால் நான் ஒரு அடிப்படை வேறுபாட்டைக் காண்கிறேன். அவர்களுடைய அந்தகர்ணா வித்தியாசமானதாகத் தெரிகிறது. சுயம், மெய்மை, தூய மனம், பிரபஞ்ச விழிப்புணர்வு போன்ற கோட்பாடுகளை இந்திய மனம் எளிதாகக் கிரகித்துக் கொள்கிறது. அவை பரிச்சயமானவையாகவும், இனிமையானவையாகவும் இருக்கின்றன. மேற்கத்திய மனம் எதிர்வினை புரிவதில்லை. அல்லது வெறுமனே ஒதுக்குகிறது. அது கடினப்படுத்தி, ஏற்றுக் கொள்ளப்பட்ட மதிப்பீடுகளை உடனடியாக உபயோகிக்க வேண்டுகிறது. இந்த மதிப்பீடுகள் பெரும்பாலும் தனி நபர்ப்பட்டவை; ஆரோக்கியம், நலமாக இருத்தல், வளமை தொடர்பானவை. சில சமயம் அவை சமுதாயத்தைச் சார்ந்தவை; ஒரு சிறப்பான சமுதாயம், எல்லோருக்கும் மகிழ்ச்சியான வாழ்க்கை என்பன. எல்லோரும் தனிப்பட்ட அல்லது தனிப்பட்டதல்லாத உலகாயதப் பிரச்சனை களால் தொடர்புற்று இருக்கிறோம். மேற்கத்திய மக்களுடன் பேசும்போது ஒருவர் அடிக்கடி சந்திக்கும் ஒரு பிரச்சனை என்னவென்றால் அவர்களுக்கு எல்லாமுமே அனுபவம் - எப்படி அவர்கள் உணவு, மது, பெண்கள், கலை மற்றும் பயணம் ஆகியவற்றை அனுபவிக்கிறார்களோ அப்படி அவர்கள் யோகா, மெய்யறிதல், விடுதலை ஆகியவற்றையும் அனுபவிக்க வேண்டு கிறார்கள். அவர்களுக்கு அது விலைகொடுத்து வாங்கக்கூடிய வெறுமனே மற்றுமொரு அனுபவம். அந்தமாதிரியான அனுப வத்தை வாங்கிவிடலாம் என்று கற்பனை செய்து, விலையைப் பற்றி பேரம் பேசுகிறார்கள். ஒரு குரு நேரத்தையும், முயற்சியையும் மிக அதிகமாகச் செலவிடச் சொன்னால் அவர்கள் மிகவும் சுலபமான தவணை முறை வழிமுறைகளைத் தரும் மற்றொரு குருவிடம் செல்வார்கள். ஆனால் நிறைவேற்ற முடியாத நிபந்தனைகளால் திகைப்படைகிறார்கள். இது மருந்தைச் சாப்பிடும்போது குரங்கை நினைக்கக் கூடாது என்னும் பழைய கதையைப் போன்றது. இங்கு,

உலகைப் பற்றி நினைக்கக் கூடாது என்பதல்ல முக்கியம். 'சுயம் பற்றியவற்றைக் கைவிடுவது', 'ஒவ்வொரு ஆசையையும் இல்லாமல் செய்வது', 'பூரணமான ப்ரம்மச்சாரியாக ஆவது' என்பவைதான். இயல்பாக எல்லா நிலைகளிலும் பெரும் ஏமாற்றுதல் நடைபெற்றுக் கொண்டிருக்கிறது. ஆனால் முடிவுகள் ஒன்றுமில்லை. சில குருக்கள் வெறுமனே நம்பிக்கை இழந்து, எல்லாக் கட்டுப்பாடுகளையும் கைவிட்டு, எந்த நிபந்தனையையும் விதிக்காமல், முயற்சியற்ற தன்மையையும், இயல்பான தன்மையையும், 'அவசியம்' மற்றும் 'அவசியமற்றது' என்னும் படிவங்கள் இல்லாமல் எளிமையாக, சாத்வீகமான பிரக்ஞையில் வாழ்வதையும் போதிக்கிறார்கள். பல சிஷ்யர்களுக்கு அவர்களுடைய பழைய அனுபவங்கள் அவர்களை தங்களைப் பார்க்கவேகூடாத அளவிற்கு மிகவும் மோசமாக வெறுக்கச் செய்கிறது. அவர்கள் வெறுப்படையாவிட்டாலும் சலிப்படைவார்கள். அவர்களிடம் மிதமிஞ்சிய சுய அறிவு இருக்கிறது. அவர்களுக்கு வேறு ஏதாவது தேவை.

**ம:** அவர்களுக்குப் பிடிக்கவில்லை என்றால் தங்களைப் பற்றி நினைக்கவேண்டாம். அவர்கள் ஒரு குருவிடம் தங்கி, அவரைக் கவனிக்கட்டும், அவரைப் பற்றிச் சிந்திக்கட்டும். விரைவில் அவர்கள் புதிய, முன்பே அனுபவித்திராத, குழந்தையாய் இருந்தபோது வேண்டுமானால் அனுபவித்திருக்கக் கூடிய ஒருவிதமான ஆனந்தத்தை அனுபவிப்பார்கள். அந்த அனுபவம் சந்தேகமில்லாமல் புதியது. அது அவர்கள் கவனத்தை ஈர்த்து, ஆர்வத்தை உருவாக்குகிறது. ஒருமுறை ஆர்வம் எழுப்பப்பட்டால் ஒழுங்கான செயல்பாடு தொடரும்.

**கே:** அந்த மக்கள் மிகவும் நுண்ணாய்வுத் திறன் உடையவர்கள் மற்றும் சந்தேகப்படுபவர்கள். மிகுந்த கற்றலையும், மிகுந்த ஏமாற்றத்தையும் கடந்து வந்ததால் அவர்கள் வேறு மாதிரி இருக்க முடியாது. ஒருபுறம் அவர்கள் அனுபவத்தை வேண்டுகிறார்கள். மறுபுறம் அவர்கள் நம்புவதில்லை. அவர்களை எப்படி நெருங்குவது என்பது கடவுளுக்குத்தான் தெரியும்!

**ம:** உண்மையான உள்முகப் பார்வையும், அன்பும் அவர்களை நெருங்கச் செய்யும்.

**கே:** அவர்கள் சில ஆன்மீக அனுபவங்களைப் பெற்றால், வேறொரு பிரச்சனை வருகிறது. அந்த அனுபவம் நிலைத்து இருப்பதில்லை என்றும், அது ஒரு தாறுமாறான விதத்தில் வந்து போகின்றதென்றும் அவர்கள் புகார் சொல்கிறார்கள். குச்சி மிட்டாய் கிடைத்தவுடன் அதை எந்நேரமும் வாயில் வைத்திருக்க வேண்டுகிறர்கள்.

**ம:** அனுபவம் எவ்வளவுதான் உன்னதமானதாக இருந்தாலும் மெய்யானதில்லை. அதன் இயல்பில் அது வந்து போகிறது. சுயம் அறிதல் என்பது தேடிச் சேர்க்கும் ஒன்று அல்ல. அது புரிதல் என்னும் இயல்பை அதிகமாக உடையது. ஒருமுறை அடைந்துவிட்டால் அதை இழக்க முடியாது. ஆனால் நேர்மாறாக, உலகாயதமான அனுபவம் மாறக்கூடியது, பிரவகிப்பது, கணத்திற்குக் கணம் மாற்றத்திற்கு உள்ளாவது. அனுபவங்களையும், அதன் உள்ளடக் கத்தையும் பிடித்து வைத்துக் கொள்ளாதே. ஞாபகங்களைப் பிடித்துக்கொண்டாலும் முடிவுற்றுவிடும். உள்முகப் பார்வையின் ஒரு ஒளிக்கீற்றை நினைவில் நிலைத்திருக்கச் செய்ய முயற்சிப்பது அல்லது மகிழ்ச்சியின் ஒரு வெடிப்பு, அது எதைப் பேணிக்காக்க வேண்டுகிறதோ அதை அழித்துவிடும். எது வருகிறதோ அது போகவேண்டும். நிலையானது எல்லா வந்து போகின்றவை களுக்கும் அப்பாற்பட்டது. எல்லா அனுபவங்களின் ஆணி வேருக்கு, இருத்தல் என்னும் உணர்விற்குச் செல். இருத்தல் மற்றும் இருத்தல் அல்லாததிற்கு அப்பால் மெய்யின் எல்லையற்ற பேரளவு இருக்கிறது. மேலும் மேலும் முயற்சி செய்.

**கே:** முயற்சி செய்ய ஒருவருக்கு நம்பிக்கை தேவை.

**ம:** ஆசை முதலில் இருக்கவேண்டும். ஆசை உறுதியாக இருந்தால் முயற்சிக்க விருப்பம் வரும். ஆசை உறுதியாக இருந்தால் உனக்கு வெற்றியைப் பற்றிய உத்தரவாதம் தேவையில்லை. சூதாட நீ தயாராக இருப்பாய்.

**கே:** உறுதியான ஆசை, உறுதியான நம்பிக்கை - இரண்டுமே ஒன்றைத்தான் குறிக்கின்றன. இந்த மக்கள் தங்கள் பெற்றோர் களையோ, அல்லது சமுதாயத்தையோ, அல்லது தங்களையோ கூட

நம்புவதில்லை. அவர்கள் தொடும் அனைத்துமே சாம்பலாகி விடுகின்றன. தீர்க்கமாக மெய்யான, சந்தேகப்பட முடியாத, மனதின் வாக்குவாதங்களுக்கு அப்பாற்பட்ட ஒரு அனுபவத்தை அவர்களுக்குக் கொடுத்தால் உலகின் இறுதிவரை உங்களைப் பின் தொடர்வார்கள்.

**ம:** ஆனால் நான் வேறு எதையும் செய்வதில்லை! ஓயாமல் நான் அவர்கள் கவனத்தை கருத்து மாறுபாடில்லாத, இருத்தல் என்னும் ஒரு காரணிக்குத் திருப்புகிறேன். இருத்தலுக்கு அத்தாட்சி எதுவும் தேவையில்லை. அது மற்ற எல்லாவற்றையும் நிரூபிக்கிறது. 'நான்' என்பது கதவாக இருக்கும் இருத்தல் என்னும் நிஜத்திற்குள் ஆழமாகச் சென்று, அதன் மிகுந்த விரிவையும், மகிமையையும் கண்டுபிடித்து, கதவைக் கடந்து, அப்பால் சென்றால் அவர்கள் வாழ்க்கை மகிழ்ச்சியும், ஒளியும் நிறைந்ததாக இருக்கும். கண்டுபிடிப்பவைகளுடன் ஒப்பிட்டால் அதற்குத் தேவைப்படும் பிரயத்தனம் ஒன்றுமே இல்லை. என்னை நம்பு.

**கே:** நீங்கள் சொல்வது சரி. ஆனால் இந்த மக்களுக்கு நம்பிக்கையோ, பொறுமையோ கிடையாது. ஒரு சிறிய பிரயத்தனம் கூட அவர்களைச் சோர்வடையச் செய்கிறது. அவர்கள் கண் தெரியாமல் தட்டுத் தடவிக்கொண்டிருப்பதையும், உதவும் கரத்தைப் பற்றிக் கொள்ள முடியாதிருப்பதைப் பார்க்கவும் உண்மையாகவே பரிதாபமாக இருக்கிறது. அவர்கள் அடிப் படையில் நல்ல மனிதர்கள். ஆனால் முற்றிலும் குழம்பிப் போய் இருக்கிறார்கள். 'நீங்கள் உங்கள் வரையறையின்படி மெய்யைக் கொண்டிருக்க முடியாது; நிபந்தனைகளை நீங்கள் ஒப்புக் கொள்ள வேண்டும்' என்று நான் அவர்களிடம் சொல்கிறேன். அதற்கு அவர்களில் சிலர் நிபந்தனைகளை ஒப்புக் கொள்வார்கள். சிலர் மாட்டார்கள். ஒப்புக் கொள்வதும், ஒப்புக் கொள்ளாததும் மேலோட்டமானது மற்றும் தற்செயலானது; 'மெய் எல்லா வற்றிலும் இருக்கிறது; எல்லோரும் பின்தொடர, நிபந்தனையற்ற ஒரு வழி இருக்க வேண்டும்' என்று பதில் அளிப்பார்கள்.

**ம:** எல்லோருக்கும் திறந்திருக்கும், எல்லா நிலையிலும், ஒவ்வொரு வாழும் வகையிலும் உள்ள ஒரு வழி உள்ளது.

ஒவ்வொருவரும் தன்னைப் பற்றிய பிரக்ஞை உடையவர்கள். சுய பிரக்ஞையை ஆழமும், அகலமும் படுத்துவது சிறப்பான வழி. அதை மனக் குவிப்பு அல்லது சாட்சிபாவம் அல்லது வெறும் கவனம் என்று சொல். இது எல்லோருக்குமானது. யாருமே அதற்குத் தகுதியற்ற வர்கள் அல்ல. யாரும் தோல்வி அடைய முடியாது.

ஆனால் நீ வெறுமனே உஷாராக இருந்தால் மட்டும் போதாது. உன் மனக் குவிப்பு மனதையும் உள்ளடக்க வேண்டும். சாட்சிபாவம் என்பது அடிப்படையில் விழிப்புணர்வையும், அதன் அசைவுகளையும் பற்றிய பிரக்ஞையே.



# 68. விழிப்புணர்வின் ஆதாரத்தைத் தேடு

**கேட்பவர்:** முன்பு ஒரு நாள் நாம் நவீன மேற்கத்திய மனதின் வழிமுறைகளைப் பற்றியும், வேதாந்தத்தின் நெறிமுறைகள் மற்றும் அறிவார்ந்த ஒழுங்குக்கு உட்படுவதில் உள்ள சிரமங்களைப் பற்றியும் பேசிக்கொண்டிருந்தோம். இளம் ஐரோப்பியன் அல்லது அமெரிக்கனின் முன்னீடுபாடு உலகத்தின் அவலமான நிலையிலும் மற்றும் அதைச் சரிப்படுத்த வேண்டியதன் அவசரத் தேவையிலும் இருப்பது அம்மாதிரியான தடைகளில் ஒன்று.

உலகத்தை மேம்படுத்தத் தனிப்பட்ட முன்னேற்றம் அவசியம் என்று போதிக்கும் உங்களைப் போன்றவர்களுடன் அவர்களுக்குப் பொறுமை இல்லை. அவர்கள் அது சாத்தியமும் அல்ல, அவசியமும் அல்ல என்று சொல்கிறார்கள். மனிதகுலம் சமூக, பொருளாதார, அரசியல் அமைப்புகளில் ஒரு மாற்றத்திற்குத் தயாராக உள்ளது. ஒரு உலக அரசாங்கம், உலகக் காவலர்கள், உலகத் திட்டமிடல், பொருள் சார்ந்த மற்றும் கருத்துசார்ந்த எல்லாத் தடைகளையும் ஒழித்தல் ஆகியவை போதும். தனிப்பட்ட மாற்றம் தேவையில்லை. சந்தேகமில்லாமல் மக்கள் சமுதாயத்தை வடிவமைக்கிறார்கள்; ஆனால் சமுதாயமும் மக்களை வடிவமைக்கிறது. மனிதாபிமானமுள்ள சமுதாயத்தில் மக்கள் மனிதாபிமானத்துடன் இருப்பார்கள். தவிர, முன்பு மதங்களின் பிரதேசத்தில் இருந்த பல கேள்விகளுக்கு விஞ்ஞானம் பதில் தருகிறது. அது ஒவ்வொருவரின் வாழ்க்கையிலும் சுகத்தையும், செழிப்பையும் கொடுக்கும் அளவிற்கு வளர்ந்துள்ளது.

**மஹராஜ்:** சந்தேகமில்லாமல் உலகத்தை முன்னேற்ற முயற்சிப்பது ஒரு மிகவும் பாராட்டக் கூடிய ஈடுபாடு. சுய அக்கறை இல்லாமல் செய்தால் அது மனதைத் தெளிவாக்கி, இதயத்தைத் தூய்மைப்

படுத்துகிறது. ஆனால் மனிதன் சீக்கிரமாகவே அவன் ஒரு கானல் நீரைப் பின்தொடர்வதை அறிவான். உள்ளூர் மற்றும் தற்காலிகமான மேம்பாடு எப்போதும் சாத்தியம். ஒரு மாபெரும் அரசனாலோ அல்லது ஆசிரியராலோ அது திரும்பத் திரும்ப அடையப்படும்; ஆனால் அது மனித குலத்தை ஒரு புதிய துன்பச் சுழலில் விட்டுவிட்டு விரைவில் முடிவிற்கு வரும். நல்லதும் தீயதும் ஒன்றை ஒன்று தொடர்வதும், சம அளவில் இருப்பதும் எல்லா வெளிப்பட்டிருப்பவைகளின் இயல்பில் உள்ளது. உண்மையான புகலிடம் வெளிப்படாததில் இருக்கிறது.

**கே:** நீங்கள் தப்பிப்பதை அறிவுறுத்துகிறீர்களா?

**ம:** மாறாக, புதுப்பிப்பதற்கான ஒரே வழி அழிப்பதில்தான் இருக்கிறது. புது நகையை உருவாக்குவதற்கு முன்பாக பழைய நகையை உருவமில்லாத தங்கமாக உருக்க வேண்டும். உலகத்திற்கு அப்பால் சென்றவர்களால் மட்டுமே உலகத்தை மாற்றமுடியும். வேறுவிதமாக எப்போதும் நடந்ததில்லை. எந்தச் சிலருடைய தாக்கம் நீடித்து இருக்குமோ அவர்கள் எல்லோரும் மெய்மையை அறிந்தவர்கள். அவர்களுடைய நிலையை அடை. பிறகு மட்டுமே உலகத்திற்கு உதவுவதைப் பற்றி பேசு.

**கே:** நாங்கள் ஆறுகளுக்கும், மலைகளுக்கும் உதவ விரும்ப வில்லை. மக்களுக்கு உதவ வேண்டுகிறோம்.

**ம:** எந்த மக்கள் அதை மோசமாக்குகிறார்களோ அவர்களைத் தவிர உலகத்தில் தவறு எதுவும் இல்லை. அவர்களிடத்தில் சென்று சரியாக நடந்துகொள்ளச் சொல்.

**கே:** ஆசைகளும், அச்சங்களும் அவர்களை அவ்வாறு நடந்து கொள்ளச் செய்கின்றன.

**ம:** மிகச் சரி. மனிதப் பழக்க வழக்கங்கள் ஆசையாலும், அச்சத்தாலும் ஆதிக்கம் செலுத்தப்பட்டிருக்கும்வரை அதிக அளவு நம்பிக்கைக்கு வாய்ப்பு இல்லை. மக்களை எப்படிப் பயனுள்ளவாறு அணுகுவது என்று அறிய நீ எல்லா ஆசைகள் மற்றும் அச்சங்களிலிருந்தும் விடுபட்டிருக்க வேண்டும்.

**கே:** உணவு, பாலுணர்ச்சி போன்றவற்றுடன் தொடர்புடைய சில அடிப்படை ஆசைகளும், இறப்பைப் பற்றிய அச்சமும் தவிர்க்க முடியாதவை.

**ம:** இவையெல்லாம் தேவைகள். தேவைகளானதால் அவை சுலபமாக நிறைவேற்றப்படும்.

**கே:** இறத்தல்கூட ஒரு தேவையா?

**ம:** ஒரு நீண்ட, பயனுள்ள வாழ்க்கையை வாழ்ந்தபிறகு நீ இறக்க வேண்டியதன் தேவையை உணர்வாய். தவறாக உபயோகித்தால் மட்டுமே ஆசையும், அச்சமும் கேடு விளைவிப்பவை. எல்லா வகையிலும் சரியானதற்கு ஆசைப்படு; தவறானதற்கு அச்சப்படு. ஆனால் மக்கள் தவறானதற்கு ஆசைப்பட்டு, சரியானதற்கு அச்சப் படுவதால் குழப்பத்தையும், மனக் கசப்பையும் உருவாக்கு கிறார்கள்.

**கே:** எது தவறானது? எது சரியானது?

**ம:** ஒப்பிட்டுப் பார்த்தால் எது துன்பத்தை உருவாக்குகிறதோ அது தவறானது. எது அதைப் போக்குகிறதோ அது சரியானது. தீர்க்கமாகப் பார்த்தால் எது மெய்மைக்கு உன்னைத் திரும்பக் கொண்டுபோய்ச் சேர்க்கிறதோ அது சரியானது. எது மெய்மையை மங்கச் செய்கிறதோ அது தவறானது.

**கே:** நாம் மனித குலத்திற்கு உதவுவதைப் பற்றி பேசும்போது ஒழுங்கற்ற தன்மைக்கும், துன்பத்திற்கும் எதிரான ஒரு போராட்டத்தைக் குறிக்கிறோம்.

**ம:** நீ வெறுமனே உதவுவதைப் பற்றிப் பேசுகிறாய். ஒருவருக் காவது நீ எப்போதாவது மெய்யாலுமே உதவியிருக்கிறாயா? ஒரு ஆன்மாவையாவது மேற்கொண்டு உதவி தேவைப்படாதவாறு எப்போதாவது செய்திருக்கிறாயா? அவருடைய மெய்யான இருத்தலைப் பற்றிய உள்முகப் பார்வையால் இல்லாவிட்டாலும் கூட, தன்னுடைய கடமைகளையும், வாய்ப்புகளையும் முழுவதும் அறிவதை அடிப்படையாகக் கொண்டு ஒருவருக்கு நீ நடத்தையைக் கற்பிக்க முடியுமா? உனக்கே எது நல்லது என்று நீ அறியாதபோது, மற்றவர்களுக்கு எது நல்லது என்று நீ எப்படி அறிவாய்?

**கே:** வாழ்வதற்குத் தேவையானவற்றைப் போதுமான அளவிற்குக் கிடைக்கச் செய்தால் அது எல்லோருக்கும் நல்லது. நீங்கள் கடவுளாகவே இருக்கலாம். ஆனால் எங்களுடன் பேச ஒரு நன்கு போஷிக்கப்பட்ட உடல் உங்களுக்குத் தேவை.

**ம:** உன்னிடம் பேச உனக்குத்தான் என் உடல் தேவை. நான் என் உடல் அல்ல. எனக்கு அது தேவையும் அல்ல. நான் சாட்சி மட்டுமே. எனக்கு என்னுடைய சொந்த வடிவம் எதுவும் கிடையாது. உன்னை விழிப்புணர்வைக் கொண்டுள்ள உடலாகச் சிந்திப்பதற்கு நீ பழகிப் போயிருப்பதால் விழிப்புணர்வு உடலைக் கொண்டிருப்பதாக உன்னால் கற்பனை செய்ய முடியாது. உடலோடு வாழ்தல் ஒரு மனோ நிலை, விழிப்புணர்வில் ஒரு சலனம் என்றும், விழிப்புணர்வுக் கடல் அளவற்றது மற்றும் சாசுவதமானது என்றும், விழிப்புணர்வோடு தொடர்பில் இருக்கும்போது நீ சாட்சி மட்டுமே என்றும் நீ அறிந்தவுடன் உன்னால் விழிப்புணர்விற்கு அப்பால் முற்றிலுமாகப் பின்வாங்க முடியும்.

**கே:** பல நிலைகளில் இருத்தல் என்பது உள்ளதென்று எங்களுக்குச் சொல்லியிருக்கிறார்கள். நீங்கள் எல்லா நிலைகளிலும் இருந்து, செயல்புரிகிறீர்களா? பூமியில் இருக்கும்போதே நீங்கள் ஸ்வர்கத்திலும் இருக்கிறீர்களா?

**ம:** என்னை எங்கும் காண முடியாது! மற்ற பொருட்களோடு ஒரு இடம் கொடுத்து வைக்க நான் ஒரு பொருள் அல்ல. எல்லாப் பொருட்களும் என்னுள் உள்ளன. ஆனால் நான் பொருட்களுக்குள் இல்லை. நீ மேலே கட்டப்பட்டுள்ளவற்றைப் பற்றி என்னிடம் சொல்கிறாய். நானோ அஸ்திவாரங்களைப் பற்றி அக்கறை கொண்டுள்ளேன். மேலே கட்டப்பட்டுள்ளவை எழலாம். விழலாம். ஆனால் அஸ்திவாரம் நிலைத்திருக்கும். எனக்குக் கடந்து போவனவற்றைப் பற்றிக் கவலை இல்லை. ஆனால் நீயோ வேறு எதையும் பற்றிப் பேசுவதில்லை.

**கே:** ஒரு விநோதமான கேள்வியைக் கேட்பதற்கு மன்னிக்கவும். யாராவது ஒரு கூர்மையான கத்தியைக் கொண்டு உங்கள் தலையைச் சடாரென்று வெட்டிவிட்டால் அது என்ன வித்தியாசத்தை உங்களுக்கு ஏற்படுத்தும்?

**ம:** எதையுமே ஏற்படுத்தாது. உடல் அதன் தலையை இழந்து விடும். செய்திப் பரிமாற்றத் தொடர்பின் சில வழிகள் அறுபடும். அவ்வளவே. இருவர் தொலைபேசி மூலமாகப் பேசிக் கொண்டிருக்கும்போது கம்பி அறுக்கப்பட்டது. மக்களுக்கு எதுவும் நிகழ்வதில்லை. அவர்கள் செய்தித் தொடர்பிற்கான மாற்று வழியைக் கண்டுபிடிக்க வேண்டும். 'கத்தி ஆத்மாவை வெட்ட முடியாது' என்று பகவத் கீதை சொல்கிறது. சொற்களின் அர்த்தப்படி அது அவ்வாறு. விழிப்புணர்வின் இயல்பில் அதைக் கொண்டிருப் பவைகளைப் பிழைக்கச் செய்வது என்பது இருக்கிறது. அது தீயைப் போன்றது. தீ எரிபொருளை எரிக்கிறது. ஆனால் தன்னையே எரித்துக்கொள்வதில்லை. ஒரு மலையளவு எரிபொருளையும் தாண்டி ஒரு தீ நெடுங்காலம் நீடித்திருக்கும். அதைப் போல விழிப்புணர்வு எண்ணற்ற உடல்களில் பிழைத்திருக்கும்.

**கே:** எரிபொருள் நெருப்பைப் பாதிக்கும்.

**ம:** அது நீடித்திருக்கும்வரை. எரிபொருளின் தன்மையை மாற்றினால் நெருப்பின் வர்ணமும், தன்மையும் மாறும்.

நாம் இப்போது ஒருவரோடு ஒருவர் பேசிக் கொண்டிருக் கிறோம். இதற்கு இருத்தல் அவசியம்; நாம் இருக்கவில்லை என்றால் பேச முடியாது. ஆனால் இருத்தல் மட்டுமே போதாது. பேச வேண்டும் என்னும் ஆசையும் தேவை. எல்லாவற்றுக்கும் மேலாக நாம் உயிரோடு இருக்க வேண்டும். நாம் எல்லாத் துன்பங்களையும், அவமானத்தையும் தாங்கிக் கொள்வோம். ஆனாலும் நாம் உயிர்வாழும் ஆசையை விடமாட்டோம்; அதற்காகப் போராடிக் கொண்டிருப்போம். நாம் இந்த அனுபவத்திற்காக ஏங்குவதற்கு எதிராக வெகுண்டு, சிருஷ்டிக்கப்பட்டவைகளுடன் நம் அடையாளத்தை முற்றிலுமாகப் போகவிட்டால் ஒழிய நிவாரணம் என்பது கிடையாது. நாம் சிக்கிக் கொண்டுதான் இருப்போம்.

**கே:** நீங்கள் சப்தமில்லாத சாட்சி என்றும், அதே சமயம் விழிப்புணர்விற்கு அப்பாற்பட்டவர் என்றும் சொல்கிறீர்கள். இதில் முரண்பாடு எதுவும் இல்லையா? நீங்கள் விழிப்புணர்விற்கு அப்பாற்பட்டவர் என்றால் எதைச் சாட்சியாகப் பார்க்கிறீர்கள்?

**ம:** நான் உணர்வு மற்றும் உணர்வில்லாமை, உணர்வும் உணர்வில்லாமையும் ஆகிய இரண்டுமே, மற்றும் உணர்வுமல்ல, உணர்வில்லாமையுமல்ல ஆகிய இரண்டுமே. நான் இவை யெல்லாவற்றிற்கும் சாட்சி - ஆனால் மெய்யாலும் நான் சாட்சியும் இல்லை. ஏனெனில் சாட்சியாகப் பார்ப்பதற்கு எதுவும் இல்லை. நான் பூரணமாக எந்த மன உருவாக்கமும் இல்லாமலிருப்பவன். மனம் வெறுமையானவன் - ஆனாலும் முழுவதும் பிரக்ஞை யுடையவன். மனதிற்கு அப்பாற்பட்டவன் என்று சொல்வதால் இதை நான் வெளிப்படுத்த முயல்கிறேன்.

**கே:** நான் எப்படி உங்களை அடைவது?

**ம:** உணர்வோடு இருப்பதைப் பற்றிய விழிப்புணர்வுடன் இரு. விழிப்புணர்வின் ஆதாரத்தைத் தேடு. அவ்வளவுதான். வார்த்தை களால் சிறிதளவே தெரிவிக்க முடியும். நான் சொல்வதைப்போலச் செய்வதுதான் ஒளியைக் கொண்டுவரும். நான் சொல்வது அல்ல. வழிமுறை பெரிதும் முக்கியம் அல்ல; ஆசை, உந்துதல், உள்ளார்ந்த ஈடுபாடு இவையே முக்கியம்.



# 69. கடந்துபோகும் தன்மை மெய்யற்றதின் அத்தாட்சி

**கேட்பவர்:** என் நண்பர் ஒரு ஜெர்மானியர். நான் பிரெஞ்சுப் பெற்றோர்களுக்கு இங்கிலாந்தில் பிறந்தேன். இந்தியாவில் ஒரு வருடத்திற்கும் மேலாக ஆசிரமம் ஆசிரமமாக அலைந்து கொண்டிருக்கிறேன்.

**மஹராஜ்:** ஏதாவது சாதனாவைச் செய்தாயா?

**கே:** கற்றேன். தியானித்தேன்.

**ம:** எதைத் தியானித்தாய்?

**கே:** எதைக் கற்றேனோ அதை.

**ம:** நல்லது.

**கே:** நீங்கள் என்ன செய்கிறீர்கள் ஐயா?

**ம:** உட்கார்ந்திருக்கிறேன்.

**கே:** வேறு என்ன செய்துகொண்டிருக்கிறீர்கள்?

**ம:** பேசிக்கொண்டிருக்கிறேன்.

**கே:** எதைப் பற்றிப் பேசிக்கொண்டிருக்கிறீர்கள்?

**ம:** உனக்கு ஒரு சொற்பொழிவு வேண்டுமா? உன் உள்ளத்தை உண்மையாலுமே தொடுகின்ற ஒன்றைக் கேட்பது சிறந்தது. அப்போது நீ அதைப் பற்றி உறுதியாக உணர்வாய். நீ உணர்ச்சி பூர்வமாக ஈடுபட்டிருக்காவிட்டால் என்னோடு விவாதம் செய்வாய். ஆனால் நமக்கு இடையே மெய்யான புரிதல் இருக்காது. 'என்னை எதுவும் கவலைப்படுத்துவதில்லை. எனக்கு எந்தப் பிரச்சனையும் இல்லை' என்று நீ சொன்னால் என்னைப்

பொருத்தவரை சரி. நாம் அமைதியாக இருக்கலாம். ஆனால் எதாவது மெய்யாலுமே உன்னைத் தொட்டிருந்தால் பேசுவதில் அர்த்தம் இருக்கிறது.

நான் உன்னை ஒன்று கேட்கலாமா? ஒவ்வொரு இடமாக நீ நகர்ந்து கொண்டிருப்பதன் நோக்கம் என்ன?

**கே:** மக்களைச் சந்திப்பது, அவர்களைப் புரிந்துகொள்ள முயற்சிப்பது.

**ம:** எந்த மனிதர்களைப் புரிந்து கொள்ள முயற்சிக்கிறாய்? சரியாக எதற்குப் பின்னால் ஓடுகிறாய்?

**கே:** ஒருங்கிணைத்தலுக்காக.

**ம:** நீ ஒருங்கிணைப்பை வேண்டினால் யாரை ஒருங்கிணைக்க வேண்டுகிறாய் என்று நீ அறிய வேண்டும்.

**கே:** மக்களைச் சந்தித்து, அவர்களைக் கவனித்தால் ஒருவர் தன்னையும் கூட அறிய முடியும். இவை இரண்டும் ஒன்றாக நடக்கும்.

**ம:** இது ஒன்றாக நடக்க அவசியமில்லை.

**கே:** ஒன்று மற்றொன்றை மேம்படுத்தும்.

**ம:** அது அவ்வாறு நடப்பதில்லை. கண்ணாடி உருவத்தைப் பிரதிபலிக்கிறது. ஆனால் பிம்பம் கண்ணாடியை மேம்படுத்து வதில்லை. நீ கண்ணாடியுமல்ல. அதில் தோன்றும் பிம்பமுமல்ல. கண்ணாடியை அது சரியாகப் பிரதிபலிக்கும்படி சரி செய்த பிறகு, மெய்யாலுமே, நீ அதைத் திருப்பி உன் உண்மையான ஒரு பிரதிபலிப்பைப் பார்க்கலாம் - கண்ணாடி எந்த அளவிற்குப் பிரதிபலிக்க முடியுமோ அந்த அளவிற்கு மெய்யாக. ஆனால் பிரதிபலிப்பு நீ அல்ல - நீ பிரதிபலிப்பைப் பார்ப்பவர். இதைத் தெளிவாகப் புரிந்துகொள் - நீ எதை உணர்ந்தறிந்தாலும் உணர்ந்தறியப்படுவது நீ அல்ல.

**கே:** நான் கண்ணாடியா? உலகம் பிம்பமா?

**ம:** நீ பிம்பம், கண்ணாடி ஆகிய இரண்டையுமே பார்க்கலாம். நீ இரண்டுமே அல்ல. யார் நீ? சூத்திரங்களின்படி செல்லாதே. வார்த்தைகளில் விடை இல்லை. வார்த்தைகளால் நீ மிக நெருக்க மாகச் சொல்லக் கூடியதெல்லாம்: உணர்ந்தறிவதை எது சாத்திய மாக்குகிறதோ அது நான் - அனுபவிப்பவருக்கும், அவருடைய அனுபவத்திற்கும் அப்பாலிருக்கும் உயிர்.

இப்போது, உன்னைக் கண்ணாடியிலிருந்தும், அதிலுள்ள பிம்பத்திலிருந்தும் பிரித்து, முற்றிலுமாகத் தனித்து நிற்க முடியுமா, முழுவதும் நீயாகவே?

**கே:** இல்லை, என்னால் முடியாது.

**ம:** உன்னால் முடியாது என்று உனக்கு எப்படித் தெரியும்? எப்படிச் செய்வது என்று தெரியாமலே பல காரியங்களைச் செய்கிறாய். நீ ஜீரணிக்கிறாய், உன் இரத்தமும், நிண நீரும் சுழல்கின்றன, நீ உன் சதைகளை அசைக்கிறாய் - எல்லாவற்றையும் எப்படிச் செய்வது என்று தெரியாமலே. அதே போல, நீ ஏன் என்றும், எப்படி என்றும் தெரியாமல் நீ உணர்ந்தறிகிறாய், உணர்ச்சிவசப்படுகிறாய், சிந்திக்கிறாய். அதே போல நீ நீயேதான், அதை அறியாமலே. சுயத்தைப் பொருத்தவரை உன்னிடம் தவறாக எதுவும் இல்லை. பூரணத்திற்கு, அது என்னவோ அதுவேதான். கண்ணாடிதான் தெளிவில்லாமலும், மெய்யாக இல்லாமலும் இருக்கிறது. ஆகையால் அது உனக்குப் பொய்யான பிம்பங்களைக் கொடுக்கிறது. நீ உன்னைச் சரிசெய்ய வேண்டியதில்லை - உன்னைப் பற்றிய கருத்தை மட்டுமே சரிசெய்ய வேண்டும். உன்னை பிம்பத்திலிருந்தும், கண்ணாடியிலிருந்தும் பிரிக்கக் கற்றுக் கொள். 'நான் மனமுமல்ல, அதன் கருத்துக்களுமல்ல' என்று தொடர்ந்து ஞாபகம் வைத்திரு. இதைப் பொறுமையாகவும், உறுதியுடனும் செய். அப்போது நீ இருத்தல் - அறிதல் - நேசித்தலின் ஆதாரம், சாசுவதமானவன், எல்லாவற்றையும் அணைக்கின்ற, எல்லாவற்றிலும் ஊடுருவுகின்றவன் என்னும் உன்னைப் பற்றிய நேரடிப் பார்வையைக் கண்டிப்பாகப் பெறுவாய். நீ உடலில் குவிக்கப்பட்டுள்ள எல்லையற்றது. இப்போது உடலை மட்டுமே

பார்க்கிறாய். முழு ஆர்வ முயற்சியுடன் இரு. அப்போது எல்லையற்றதை மட்டுமே பார்ப்பாய்.

**கே:** மெய்மையைப் பற்றிய அனுபவம் வந்தால் நீடித்திருக்குமா?

**ம:** எல்லா அனுபவங்களும் கண்டிப்பாகக் கடந்து போகக் கூடியவையே. ஆனால் எல்லா அனுபவங்களின் ஆதாரமும் அசைக்க முடியாதவை. நிகழ்வு என்று சொல்லக் கூடிய எதுவும் நிலைத்திருக்காது. ஆனால் சில நிகழ்வுகள் மனதைத் தூய்மைப் படுத்துவன. சில கறைப்படுத்துவன. ஆழமான உட்பார்வை, எல்லாவற்றையும் அரவணைக்கின்ற அன்பு மனதைத் தூய்மைப் படுத்தும். ஆசைகள் மற்றும் அச்சங்கள், பொறாமை மற்றும் கோபம், குருட்டாம்போக்கான நம்பிக்கைகள் மற்றும் அறிவுபூர்வமான வன்மம் ஆகியவை மாசுபடுத்தி, மனோபாவத்தை மழுங்கச் செய்யும்.

**கே:** சுயம் அறிதல் அவ்வளவு முக்கியமானதா?

**ம:** அது இல்லாவிட்டால் நீ ஆசைகளாலும், அச்சங்களாலும் ஆட்கொள்ளப்பட்டு, முடிவில்லாத துன்பத்துடன் அர்த்த மில்லாமல் அவை திரும்பத் திரும்பச் செய்யப்படும். பெரும்பாலான மக்கள் வலிக்கு ஒரு முடிவு உண்டென்று அறியமாட்டார்கள். ஆனால் ஒருமுறை அவர்கள் நல்ல செய்தியைக் கேட்டுவிட்டால் எல்லாப் போராட்டங்களுக்கும், ஓட்டங்களுக்கும் அப்பால் செல்வதுதான் மிகவும் அவசரமான வேலையாக இருக்கும். நீ சுதந்திரமாக இருக்கமுடியும் என்று அறிவாய். இப்போது நீதான் முடிவு செய்யவேண்டும். ஒன்று, எப்போதும் பசியுடனும், தாகத்துடனும், ஏக்கத்துடனும், தேடிக்கொண்டும், அபகரித்துக் கொண்டும், வைத்துக் கொண்டும், இழந்து கொண்டும், துன்பப் பட்டுக்கொண்டும் இரு. அல்லது எதையும் அதனோடு சேர்க்க முடியாத, எதையும் அதிலிருந்து எடுக்க முடியாத, காலமற்ற, பூரண நிலையைத் தேடி முழு மனதுடன் வெளியே செல். அதில் ஆசைகள் மற்றும் அச்சங்கள் எதுவும் இருக்காது - அவற்றை விட்டுவிட்டதால் அல்ல; அவை அர்த்தத்தை இழந்துவிட்டதால்.

**கே:** இதுவரையில் நான் உங்களைத் தொடர்ந்து வருகிறேன். இப்போது நான் என்ன செய்யவேண்டும்?

**ம:** செய்யவேண்டியது எதுவும் இல்லை. வெறுமனே இரு. எதையும் செய்யாதே. இரு. மலைகளின்மேல் ஏறவேண்டிய தில்லை. குகைகளில் அமரவேண்டியதில்லை. 'நீயாக இரு' என்று கூட நான் சொல்லமாட்டேன். ஏனெனில் உன்னை நீ அறிய மாட்டாய். வெறுமனே இரு. நீ பார்க்கக்கூடிய புறமும், சிந்திக்கக் கூடிய அகமும் நீ அல்ல என்று பார்த்த பிறகு, நீ உடலோ, மனமோ அல்ல என்று நீ பார்த்த பிறகு - வெறுமனே இரு.

**கே:** கண்டிப்பாக, மெய்யறிதலில் பல அளவுகள் உள்ளன.

**ம:** சுயம் அறிதலில் பல படிகள் இல்லை. அதைப் பற்றி படிப்படியானது எதுவும் கிடையாது. அது திடீரென்று நிகழும். நிகழ்ந்த பிறகு பழையபடி மாற்றமுடியாது. நீ ஒரு புதிய பரிமாணத்திற்குத் திரும்பிவிடுவாய். அங்கிருந்து பார்த்தால் முந்தியவை மனக் கண் தோற்றமாகத் தோன்றும். எப்படி சூரிய உதயத்திற்குப் பிறகு பொருட்களை உள்ளது உள்ளபடி பார்க்கிறாயோ அப்படி சுயத்தை அறிந்த பிறகு, ஒவ்வொன்றையும் அது உள்ளபடியே பார்ப்பாய். மாயையினால் ஆன உலகம் பின்னால் விடப்படும்.

**கே:** மெய்யறிந்த நிலையில் பொருட்கள் மாற்றமடையுமா? அவை வர்ணமயமாகவும், அர்த்தமுள்ளவையாகவும் மாறுமா?

**ம:** அனுபவம் சரியானது. ஆனால் அது மெய்மையைப் பற்றிய அனுபவம் (சதானுபவம்) அல்ல. பிரபஞ்சத்தின் ஒருங்கிசைவைப் (சத்வானுபவம்) பற்றியது.

**கே:** எப்படியாயினும் முன்னேற்றமுள்ளது.

**ம:** தயாராவதில் (சாதனாவில்) வேண்டுமானால் முன்னேற்றம் இருக்கலாம். மெய்யறிதல் திடீரென்று ஏற்படுவது. பழம் மெதுவாகப் பழுக்கும். ஆனால் திடீரென்று விழும். திரும்பிச் செல்ல முடியாது.

**கே:** நான் உடலளவிலும், மனதளவிலும் அமைதியாக இருக்கிறேன். மேற்கொண்டு எனக்கு என்ன தேவை?

**ம:** உன்னுடையது உச்ச முடிவான நிலையல்ல. எல்லா ஆசையும், அச்சமும் முற்றிலுமாக இல்லாதிருந்தால் உன் இயல்பான நிலைக்குத் திரும்பி உள்ளதை நீ அடையாளம் கண்டு கொள்வாய். எல்லா ஆசை மற்றும் அச்சத்தின் வேரில் நீ என்னவோ அதுவாக இல்லாத உணர்ச்சி உள்ளது. எப்படி ஒரு பிசகின மூட்டு அது சரியாகப் பொருந்தாதவரை வலித்து, சரிப்படுத்தினவுடன் மறக்கப்படுமோ அப்படி, எல்லாச் சுய அக்கறையும் மனப் பிசகின் ஒரு அறிகுறி. ஒருவர் இயல்பான நிலையில் இருந்தால் அது மறைந்துவிடும்.

**கே:** சரி. ஆனால் இயல்பான நிலையை அடையத் தேவையான சாதனா என்ன?

**ம:** மற்ற எல்லாவற்றையும் விட்டுவிட்டு 'நான்' என்னும் உணர்வைமட்டும் பிடித்துக் கொண்டிரு. அப்படி மனம் முற்றிலுமாக அமைதியடையும்போது அது ஒரு புது ஒளியால் மிளிரும்; புது அறிவால் அதிரும். இவையெல்லாம் தன்னிச்சையாக வரும். நீ 'நான்' என்பதை மட்டுமே பிடித்துக்கொண்டிருக்க வேண்டும். தூக்கத்தில் இருந்து அல்லது பெருமகிழ்ச்சி நிலையிலிருந்து வெளியே வந்தால் நீ ஓய்வெடுத்தாற்போல் உணருவாய். இருப்பினும் ஏன் மற்றும் எதனால் இவ்வளவு நலமாக உணர்கிறாய் என்று உன்னால் விளக்கமுடியாது. அதே போல மெய்யறிந்த பிறகு, நீ முழுமையாகவும், நிறைவாகவும், இன்ப துன்பச் சிக்கலிலிருந்து விடுபட்டாற்போலும் உணர்வாய். இருப்பினும் உன்னால் என்ன நடந்தது, எதனால் நடந்தது, எப்படி நடந்தது என்று விளக்க முடியாது. 'என்னிடம் எதுவும் இனிமேற் கொண்டு தவறாக இல்லை' என்று எதிர்மறையாகத்தான் உன்னால் சொல்ல முடியும். கடந்ததோடு ஒப்பிட்டுப் பார்ப்பதால் மட்டுமே நீ அதிலிருந்து வெளியே உள்ளாய் என்று அறிவாய். வேறு மாதிரி சொன்னால் நீ வெறுமனே நீயாக இருப்பாய். அதை மற்றவர் களுக்குத் தெரியப்படுத்த முயற்சிக்காதே. உன்னால் தெரியப்படுத்த

முடிந்தால் அது மெய்யானதல்ல. அமைதியாக இருந்து, அது தன்னைச் செயலில் வெளிப்படுத்துவதைக் கவனி.

**கே:** நான் என்னவாக ஆவேன் என்று உங்களால் சொல்ல முடிந்தால் என் முன்னேற்றத்தைக் கவனிக்க அது எனக்கு உதவும்.

**ம:** ஏதோ ஒன்றாக ஆவது என்பதே இல்லை என்னும்போது எப்படி ஒருவர் நீ என்னவாக ஆவாய் என்று சொல்ல முடியும்? வெறுமனே நீ என்ன என்பதைக் கண்டுபிடிப்பாய். ஒருவரை ஒரு படிவத்திற்குள் வார்ப்பது என்பது ஒரு வருந்தத் தக்க நேர வீணடிப்பு. கடந்ததைப் பற்றியும், வரப் போவதைப் பற்றியும் சிந்திக்காமல் வெறுமனே இரு.

**கே:** நான் வெறுமனே எப்படி இருக்கமுடியும்? மாற்றங்கள் தவிர்க்க முடியாதவை.

**ம:** மாறக் கூடியவைகளில் மாற்றங்கள் தவிர்க்கமுடியாதவை. ஆனால் நீ அவற்றிற்கு உட்பட்டவன் அல்ல. நீ மாற்றமில்லாத பின்புலம். அதன்மேல் மாற்றங்கள் அனுமானிக்கப் படுகின்றன.

**கே:** ஒவ்வொன்றும் மாறக் கூடியது. பின்புலமும் மாறக் கூடியது. மாற்றங்களை அடையாளம் காண ஒரு மாற்றமில்லாத பின்புலம் அவசியமில்லை. சுயம் கண நேரத்தியது - அது வெறுமனே கடந்த காலத்தியதும், எதிர்காலத்தியதும் சந்திக்கின்ற ஒரு புள்ளி.

**ம:** ஞாபகத்தை அடிப்படையாகக்கொண்ட சுயம் வாஸ்தவமாகக் கண நேரத்தியது. ஆனால் அந்த மாதிரியான சுயம் அதற்குப் பின்னால் பிளவுபடாத தொடர்ச்சியை நிர்பந்திக்கிறது. உன் சுயம் மறக்கப்படும்போது இடைவெளிகள் உள்ளன என்று அனுபவத்தால் அறிவாய். எது அதைத் திரும்ப உயிர்ப்பிக்கிறது? எது உன்னைக் காலையில் விழித்து எழச் செய்கிறது? விழிப்புணர்வில் உள்ள இடைவெளிகளை இணைக்க ஒரு நிலையான காரணி இருக்க வேண்டும். நீ ஜாக்கிரதையாகக் கவனித்தால் உன் தினசரி விழிப்புணர்வைக்கூட எல்லா நேரமும் இடைவெளிகள் குறுக் கிட்டுக் கொண்டிருக்கும் ஒளிவீச்சுக்களாக இருப்பதைக் காணலாம். இடைவெளிகளில் என்ன உள்ளது? காலமற்ற,

உன்னுடைய மெய்யான இருத்தலைத் தவிர வேறு என்ன இருக்க முடியும்? அதற்கு மனமும், மனமற்ற தன்மையும் ஒன்றே.

**கே:** ஆன்மீக நிறைவிற்கு ஏதாவது ஒரு குறிப்பிட்ட இடத்திற்குச் செல்ல நீங்கள் அறிவுறுத்துகிறீர்களா?

**ம:** ஒரே சரியான இடம் உள்ளுக்குள்தான். புற உலகம் உதவவோ, தடுக்கவோ செய்யாது. எந்த வழிமுறையும், செயல்படும் படிவமும் உன்னுடைய இலக்கிற்கு உன்னைக் கொண்டுபோய்ச் சேர்க்காது. ஒரு எதிர்காலத்திற்காக வேலை செய்வதை விட்டுவிடு. கவனத்தை முழுவதும் 'தற்பொழுதில்' செழுத்து. வாழ்வின் ஒவ்வொரு அசைவும் அது நிகழும்போது உன்னுடைய எதிர்வினை என்னவோ அதைப் பற்றி மட்டும் அக்கறை கொண்டிரு.

**கே:** சுற்றித் திரிய வேண்டும் என்னும் உந்துதலுக்கு என்ன காரணம்?

**ம:** காரணம் ஒன்றும் கிடையாது. சுற்றிக் கொண்டிருப்பதாக நீ வெறுமனே கனவுகாண்கிறாய். ஒரு சில வருடங்களில் நீ இந்தியாவில் தங்கியிருப்பது உனக்கு ஒரு கனவாகத் தெரியும். அப்போது நீ வேறு ஏதோ ஒரு கனவைக் காண்பாய். ஒரு கனவிலிருந்து மற்றொன்றிற்கு நகர்வது நீ அல்ல என்றும், ஆனால் கனவுகள் உனக்கு முன்னால் ஓடுகின்றன என்றும், நீ மாற்ற முடியாத சாட்சி என்றும் அறி. எந்த நிகழ்வும் உன் மெய்யான இருத்தலைப் பாதிக்காது - இது தீர்க்கமான உண்மை.

**கே:** நான் உடலளவில் நகர்ந்துகொண்டும், உள்ளுக்குள் ஸ்திரமாகவும் இருக்க முடியாதா?

**ம:** நீ அவ்வாறு இருக்கலாம். ஆனால் என்ன பிரயோஜனம்? நீ உள்ளார்ந்த ஈடுபாட்டுடன் இருந்தால் கடைசியில் சுற்றித்திரிவதால் சலித்துப் போய், அதனால் சக்தியும், நேரமும்தான் விரயமாகிற்று என்று வருத்தப்படுவாய். உன்னை அறிய நீ ஒரு அடிகூட எடுத்து வைக்க வேண்டியதில்லை.

**கே:** சுயத்தை (ஆத்மாவை) அனுபவப்படுவதற்கும், பூரணத்தை (ப்ரம்மத்தை) அனுபவப்படுவதற்கும் ஏதாவது வித்தியாசம் உள்ளதா?

**ம:** ப்ரம்மத்தை அனுபவப்பட முடியாது. ஏனெனில் அது எல்லா அனுபவங்களுக்கும் அப்பாற்பட்டது. அதே சமயம், ஒவ்வொரு அனுபவத்திலும் சுயம்தான் அனுபவிக்கும் காரணி. ஆகையால், ஒருவகையில், அது பல்வேறான அனுபவங்களைச் செல்லுபடியாக்குகிறது. உலகம் மாபெரும் மதிப்புள்ள பொருட்களால் நிறைந்து இருக்கலாம். ஆனால் அதை வாங்க யாரும் இல்லையென்றால் அவற்றிற்கு விலைமதிப்பு கிடையாது. அனுபவப்படக்கூடிய எல்லாவற்றையும் ப்ரம்மம் கொண்டுள்ளது. ஆனால் அனுபவம் இல்லாவிட்டால் அது ஒன்றுமில்லாததைப் போன்றது. அனுபவத்தை எது சாத்தியமாக்குகிறதோ அது ப்ரம்மம். எது அதை நிஜமாக்குகிறதோ அது சுயம்.

**கே:** நாம் அனுபவங்களைத் தரம் பிரிப்பதால் ப்ரம்மத்தை அடைய முடியாதா? மிகவும் ஸ்தூலமானவைகளில் ஆரம்பித்து, மிகவும் நுட்பமானவைகளில் முடிக்கிறோம்.

**ம:** அனுபவத்தின்மேல் ஆசை இருந்தால்ஒழிய அனுபவம் இருக்க முடியாது. ஆசைகளுக்கிடையே தர வித்தியாசங்கள் இருக்கலாம். ஆனால் மிக நுட்பமான ஆசைக்கும், எல்லா ஆசைகளிலிருந்தும் விடுதலைக்கும் இடையே ஒரு ஆழங்கான முடியாத பள்ளத்தாக்கு உள்ளது. அதைக் கடக்கவேண்டும். மெய்யற்றது மெய்யானதைப் போலத் தோன்றும். ஆனால் அது கடந்துபோகக் கூடியது. மெய் காலத்திற்குப் பயப்படாது. அது சாசுவதமானது.

**கே:** மெய்யற்றது மெய்யின் வெளிப்பாடு அல்லவா?

**ம:** எப்படி இருக்கமுடியும்? அது, கனவில் மெய் தன்னை வெளிப்படுத்துகிறது என்று சொல்வதைப் போன்றது. மெய்யிற்கு மெய்யற்றது என்பது இல்லை. அது மெய்யைப் போலத் தோன்றுகிறது. ஏனெனில் நீ அதை நம்புகிறாய். சந்தேகப்பட்டால் அது இல்லாமல் போய்விடும். உனக்கு யாருடனாவது காதல் இருந்தால் அதற்கு நீ மெய்த்தன்மையைக் கொடுக்கிறாய் - உன் காதல் முழு வலிமையானது, நீடித்திருப்பது என்று நீ கற்பனை செய்கிறாய். அது முடிவிற்கு வரும்போது 'நான் அது நிஜமானது என்று நினைத்தேன். ஆனால் அப்படி அல்ல' என்று நீ சொல்வாய். கடந்துபோகும் தன்மை மெய்யற்றதின் சிறந்த அத்தாட்சி.

காலத்தாலும், இடத்தாலும் எது குறுக்கப்பட்டு, ஒரு நபருக்கு மட்டும் பொருந்தக் கூடியதோ அது மெய்யாக இருக்க முடியாது. மெய் எல்லோருக்கும், எப்போதைக்குமானது.

எல்லாவற்றிற்கும் மேலாக நீ உன்னைப் போற்று. உன்னுடைய இருத்தலுக்கு மாற்றாக எதையும் ஒத்துக் கொள்ளாதே. இருத்தலுக்கான ஆசைதான் ஆசைகளில் மிகவும் உறுதியான ஆசை. அது உன் உண்மையான இயல்பை அறியும் போதுதான் போகும்.

**கே:** மெய்யற்றதில் கூட மெய்யின் ஒரு தாக்கம் இருக்கிறது.

**ம:** ஆமாம். அதை மெய் என்று எடுத்துக் கொள்வதால் நீ அதற்குக் கொடுக்கும் மெய்த்தன்மை. உன்னைத் திருப்திப்படுத்திக் கொண்டதால், உன் முடிவால் நீ கட்டுப்பட்டிருக்கிறாய். சூரியன் ஒளிரும் போது வர்ணங்கள் தோன்றுகின்றன. சூரியன் மறையும் போது அவை மறைந்துவிடுகின்றன. ஒளி இல்லாவிட்டால் வர்ணங்கள் எங்கே?

**கே:** இது இருமைத் தன்மையில் சிந்திப்பது.

**ம:** எல்லாச் சிந்தனையும் இருமைத் தன்மையில்தான் உள்ளன. அடையாளம் காணும்போது எந்தச் சிந்தனையும் இருப்பதில்லை.



# 70. எல்லா ஆசை மற்றும் அறிவின் முடிவு கடவுள்

**மஹராஜ்:** நீ எங்கிருந்து வருகிறாய்? எதற்காக வந்துள்ளாய்?

**கேட்பவர்:** நான் அமெரிக்காவிலிருந்தும், என் நண்பர் அயர்லாந்திலிருந்தும் வந்துள்ளோம். நான் வந்து ஆறு மாதங்களாயிற்று. ஆசிரமம் ஆசிரமமாக நான் பயணித்துக் கொண்டிருக்கிறேன். என் நண்பர் அவராகவே வந்துள்ளார்.

**ம:** என்ன அறிந்தாய்?

**கே:** நான் ஸ்ரீ ரமணாஸ்ரமத்தில் இருந்தேன். ரிஷிகேஷிற்கும் சென்றேன். ஸ்ரீ ரமண மஹரிஷியைப் பற்றி உங்களுடைய கருத்து என்ன என்று நான் உங்களைக் கேட்கலாமா?

**ம:** நாங்கள் இருவரும் ஒரே புராதன நிலையில் இருக்கிறோம். ஆனால் மஹரிஷியைப் பற்றி உனக்கு என்ன தெரியும்? நீ உன்னை ஒரு பெயராகவும், ஒரு உடலாகவும் கருதுகிறாய். ஆகையால் நீ அனுமானிக்கும் அனைத்துமே பெயர்களும் உடல்களும்தான்.

**கே:** நீங்கள் மஹரிஷியைச் சந்திக்க நேர்ந்தால் என்ன நடக்கும்?

**ம:**நாங்கள் மிகவும் சந்தோசமாக உணருவோம். நாங்கள் சில வார்த்தைகளைப் பரிமாறிக் கொள்ளலாம்.

**கே:** ஆனால் அவர் உங்களை ஒரு விடுதலை அடைந்தவராக அடையாளம் காண்பாரா?

**ம:** கண்டிப்பாக. ஒரு மனிதன் மற்றொரு மனிதனை அடையாளம் காண்பது போல ஒரு ஞானி மற்றொரு ஞானியை அடையாளம் காண்பார். நீ அனுபவப்படாததை உன்னால் பாராட்ட முடியாது. உன்னை என்னவாக நினைக்கிறாயோ

அதுதான் நீ. ஆனால் நீ என்ன அனுபவப்படவில்லையோ அதுவாக உன்னை நீ நினைக்க முடியாது.

**கே:** ஒரு பொறியாளராக நான் பொறியியல் படிக்க வேண்டும். கடவுளாக நான் என்ன கற்க வேண்டும்?

**ம:** நீ கற்றது எல்லாவற்றையும் மறந்துவிடு. எல்லா ஆசை மற்றும் அறிவின் முடிவு கடவுள்.

**கே:** வெறுமனே கடவுளாகவேண்டும் என்னும் ஆசையை விட்டு விடுவதால் நான் கடவுளாகிவிடுவேன் என்று சொல்கிறீர்களா?

**ம:** எல்லா ஆசைகளும் விடப்பட வேண்டும். ஏனெனில் ஆசைப் படுவதால் நீ உன் ஆசைகளின் வடிவத்தைக் கொண்டிருப்பாய். எந்த ஆசையும் இல்லாதபோது நீ உன் இயல்பான நிலைக்குத் திரும்பி விடுவாய்.

**கே:** நான் பூரணத்துவத்தை அடைந்துவிட்டேன் என்று எப்படி அறிவேன்?

**ம:** நீ பூரணத்துவத்தை அறிய முடியாது. பூரணமற்ற தன்மையை மட்டுமே அறியமுடியும். அறிவு இருக்க பிரிவும், ஒத்திசை வில்லாமையும் கண்டிப்பாகத் தேவை. நீ என்னவாக இல்லையோ அதைத்தான் அறிய முடியும். ஆனால் நீ உன் மெய்யான இருத்தலை அறிய முடியாது. நீ என்னவோ அதுவாகத்தான் இருக்க முடியும். முழு அணுகுமுறையுமே பொய்யைப் பொய் என்று பார்க்கும் புரிதலின் மூலமாகத்தான். ஆனால் புரிந்துகொள்ள நீ வெளியிலிருந்து கவனிக்க வேண்டும்.

**கே:** எது பார்க்கப்பட்டதோ, எது உணரப்பட்டதோ அவையெல்லாம் உண்மையல்ல; ப்ரம்மை மட்டுமே. இந்த வேதாந்தக் கருத்தாகிய மாயை என்னும் சித்தாந்தம் பிரபஞ்ச அளவிலான பரிணமிப்பவைக்குப் (வியக்தாவிற்குப்) பொருந்து கிறது. ஆகையால் நம்முடைய பிரபஞ்ச அளவிலான பரிணமிப்ப வற்றைப் (வியக்தாவைப்) பற்றிய அறிவு நம்பத்தகுந்ததல்ல. ஆனால் பரிணமிக்காதவற்றைப் (அவியக்தாவைப்) பற்றிய நம் அறிவை நாம் நம்ப முடிய வேண்டும்.

**ம:** பரிணமிக்காதவற்றைப்(அவியக்தாவைப்) பற்றி எந்த அறிவும் இருக்க முடியாது. எது வெளிப்பட்டதோ அதை மட்டுமே அறிய முடியும். மீதி இருப்பதை அறிய முடியாது. அறியக் கூடியதை யார் அறிவார்? அறியப்படாததுதான் அறியக்கூடியதை அறியும்.

**கே:** ஏன் அறிபவர் அறியப்படாமலே இருக்க வேண்டும்?

**ம:** அறிபவர் அறிந்ததை அறிவார். உனக்கு அறிபவரைத் தெரியுமா? யார் அறிபவரை அறிபவர்? பரிணமிக்காததைப் (அவியக்தாவைப்) பற்றி நீ அறிய விரும்புகிறாய். பரிணமித்த வற்றை (வியக்தியை) நீ அறிவாய் என்று சொல்ல முடியுமா?

**கே:** எனக்குப் பொருட்களைப் பற்றியும், கருத்துக்களைப் பற்றியும், அவற்றிற்கிடையேயான தொடர்புகளைப் பற்றியும் தெரியும். அது என் எல்லா அனுபவங்களின் மொத்தமாகும்.

**ம:** எல்லாமுமா?

**கே:** ஆமாம், எல்லா நிஜமான அனுபவங்களின் மொத்தம். எது நிகழவில்லையோ அதை நான் அறியமுடியாது என்று ஒப்புக் கொள்கிறேன்.

**ம:** அவற்றை அனுபவிப்பவர் உட்பட, எல்லா நிஜ அனுபவங் களின் மொத்தம் பரிணமித்ததாக இருந்தால், மொத்தத்தின் எந்த அளவு உனக்குத் தெரியும்? உள்ளபடியே ஒரு மிகச் சிறிய அளவுதான். நீ அறிந்த அந்தச் சிறிய அளவு என்ன?

**கே:** என்னைச் சார்ந்த சில புலன் அனுபவங்கள்.

**ம:** அதுகூட இல்லை. நீ எதிர்வினை புரிவதை மட்டுமே அறிவாய். யார், எதற்கு எதிர்வினை புரிகிறார்கள் என்று நீ அறிய மாட்டாய். தொடர்பு கொள்ளும்போது 'நான்' இருப்பதாக நீ அறிவாய். 'நான் இது', 'நான் அது' என்பதெல்லாம் கற்பனையானவை.

**கே:** நான் பரிணமித்ததை அறிவேன். ஏனெனில் நான் அதில் பங்குகொள்கிறேன். அதில் என்னுடைய பங்கு மிகவும் சிறியது என்று ஒப்புக் கொள்கிறேன். இருப்பினும் அதன் மொத்தத்தைப் போலவே அது மெய்யானது. மேலும் எது மிக முக்கியமென்றால்

நான் அதற்கு அர்த்தத்தைக் கொடுக்கிறேன். நான் இல்லாமல் உலகம் இருண்டும், நிசப்தமாகவும் இருக்கும்.

**ம:** இது ஒரு மின்மினிப் பூச்சி உலகத்திற்கே வெளிச்சத்தைக் கொடுக்கிறது என்று சொல்வதைப் போல! நீ உலகத்திற்கு அர்த்தத்தைக் கொடுப்பதில்லை. அர்த்தத்தைக் கண்டுபிடிக்கிறாய். உனக்குள் ஆழமாக மூழ்கி, எங்கிருந்து எல்லா அர்த்தங்களும் ஊற்றெடுக்கின்றனவோ அந்த ஆதாரத்தைக் கண்டுபிடி. அர்த்தத்தைக் கொடுக்கக் கூடியது கண்டிப்பாக மேம்போக்கான மனம் அல்ல.

**கே:** எது என்னை அளவானவனாகவும், மேம்போக்கான வனாகவும் ஆக்குகிறது?

**ம:** மொத்தம் திறந்தும், கிடைக்கக் கூடியதாகவும் இருக்கிறது. ஆனால் நீ எடுத்துக் கொள்ள மாட்டாய். உன்னை என்னவென்று நினைத்துக் கொண்டிருக்கிறாயோ அந்தச் சிறிய நபரோடு ஒட்டிக் கொண்டிருக்கிறாய். உன் ஆசைகள் குறுகியவை; உன் குறிக் கோள்கள் அற்பமானவை. ஒரு உணர்ந்தறியும் மையம் இல்லாமல் பரிணமித்தது எங்கு இருக்கும்? உணர்ந்தறியப்படாவிட்டால், பரிணமித்தது, பரிணமிக்காததைப் போன்றதே. நீதான் அனுமானிக்கும் புள்ளி; எல்லாப் பரிமாணங்களின் பரிமாணமில்லாத ஆதாரம். உன்னை மொத்தம் என்று அறி.

**கே:** எப்படி ஒரு புள்ளி ஒரு பிரபஞ்சத்தைக் கொண்டிருக்க முடியும்?

**ம:** ஒரு புள்ளியில் எண்ணற்ற பிரபஞ்சங்களுக்குப் போதுமான இடம் உள்ளது. அதில் வெற்றிடம் நிறைந்துள்ளது. வெற்றிடத்தில் குறைவில்லை. இந்த வெற்றிடத்தைக் கொண்டிருக்கும் அளவான உடல்தான் நீ என்று கருதுகிறாய். இந்தச் சுய வரையறைதான் ஒரே பிரச்சனை. ஆனால் நீ உன்னிடமிருந்து அப்பால் ஓட முடியாது. நீ எவ்வளவுதான் தூரமாகச் சென்றாலும் நீ உன்னிடம்தான் திரும்பி வர வேண்டும். நீ ஒன்றுமே இல்லை என்றும், இருப்பினும் நீதான் எல்லாவற்றிற்கும் ஆதாரம் என்றும் அறிவது முக்கியம்.

கே: ஒரு யோகா ஆசிரியரைத் தேடி இந்தியாவிற்கு வந்தேன். இன்னும் தேடிக் கொண்டிருக்கிறேன்.

ம: எந்த மாதிரியான யோகாவைப் பயிற்சி செய்ய விரும்புகிறாய் - அடைகின்ற யோகாவையா அல்லது துறக்கின்ற யோகாவையா?

கே: அவை ஒரே முடிவிற்குத்தான் வருகின்றன. அல்லவா?

ம: எப்படி முடியும்? ஒன்று அடிமைப்படுத்துகிறது. மற்றொன்று விடுதலை அளிக்கிறது. நோக்கம்தான் மிக முக்கியம். துறப்பதனால் சுதந்திரம் கிடைக்கிறது. எல்லா உடைமைகளும் பந்தம்தான்.

கே: வைத்துக் கொண்டிருக்க எனக்கு வலிமையும், தைரியமும் இருந்தால் நான் ஏன் விட்டுவிட வேண்டும்? எனக்கு வலிமை இல்லாவிட்டால் நான் எப்படி விடுவது? இந்த விட்டுவிடுவதற்கான அவசியத்தை என்னால் புரிந்து கொள்ள முடியவில்லை. எனக்கு ஏதாவது வேண்டும் என்றால் அதை ஏன் தேடக் கூடாது? துறப்பது வலிமையற்றவர்களுக்கானது.

ம: விட்டுவிடுவதற்கான ஞானமும், வலிமையும் உனக்கு இல்லாவிட்டால் உன் உடைமைகளைப் பார். உன் பார்வையே அவற்றை எரித்துவிடும். நீ உன் மனதிற்கு வெளியே நிற்க முடிந்தால் உடைமைகளையும், ஆசைகளையும் முழுமையாகத் துறத்தல்தான் செய்ய வேண்டிய சரியான செயல் என்று நீ விரைவில் அறிவாய். நீ உலகத்தை உருவாக்கி, பிறகு அதைப் பற்றிக் கவலைப்படுகிறாய். சுயநலவாதியாக மாறுவது உன்னைப் பலவீனப்படுத்தும். ஆசைப்பட உனக்கு வலிமையும், தைரியமும் உள்ளதென்று நீ நினைத்தால் அது நீ இளமையாகவும், அனுபவமில்லாமலும் இருப்பதால் தான். எப்போதுமே ஆசையின் நோக்கம் அதை அடைவதற்கான வழியை அழித்துவிடுகிறது. பிறகு தானே இல்லாமல் போய் விடுகிறது. இது எல்லாம் நன்மைக்கே. ஏனெனில் அது ஆசையை விஷம் போல ஒதுக்கித்தள்ள உனக்குக் கற்பிக்கிறது.

கே: நான் எப்படி ஆசையற்றிருப்பதைப் பயிற்சிசெய்வது?

ம: பயிற்சிசெய்ய அவசியம் இல்லை. துறப்பதற்கு எந்தச் செயலும் தேவையில்லை. வெறுமனே உன் மனதை அப்பால் திருப்பு.

அவ்வளவுதான். ஆசை என்பது மனதை ஒரு கருத்தின்மேல் வைத்திருப்பதுதான். கவனத்தை மறுப்பதால் அதன் பிடியிலிருந்து வெளியே எடு.

**கே:** அவ்வளவுதானா?

**ம:** ஆமாம், அவ்வளவுதான். ஆசையோ, அச்சமோ எதுவானாலும் அதனோடு கூட இருந்துவிடாதே. உன்னைக் காண முயற்சி செய். நடுவில் நீ மறக்கலாம். அது முக்கியமல்ல. ஒவ்வொரு ஆசையையும், அச்சத்தையும், ஒவ்வொரு எதிர்வினையையும், தன்னிச்சையாக வருவதையும் ஒதுக்கித் தள்ளும் வரை உன் முயற்சிகளைத் தொடர்.

**கே:** எப்படி ஒருவர் உணர்ச்சிவசப்படாமல் வாழ முடியும்?

**ம:** நீ வேண்டுகின்ற எல்லா உணர்ச்சிகளையும் கொண்டிருக்கலாம். ஆனால் தூண்டப்பட்ட உணர்ச்சிவசப்படுதலால் ஏற்படும் எதிர்வினையைப் பற்றி மட்டும் எச்சரிக்கையாக இரு. முற்றிலுமாகச் சுய முடிவுடன், வெளியிலிருந்து அல்லாமல் உள்ளுக்குள் இருந்து ஆளப்படுபவனாக இரு.

வெறுமனே மேலும் சிறந்த ஒன்றைப் பெறுவதற்காக ஒன்றை விடுவது உண்மையான துறத்தல் அல்ல. அதன் மதிப்பின்மையை அறிந்து ஒன்றைக் கைவிடு. நீ கைவிட்டுக் கொண்டே இருப்பதால் நீ தன்னிச்சையாக அறிவிலும், வல்லமையிலும், தீராத அன்பிலும், மகிழ்ச்சியிலும் வளர்வதைக் காண்பாய்.

**கே:** ஏன் எல்லா ஆசைகளையும், அச்சங்களையும் விட்டு விடுவதற்கு இவ்வளவு முக்கியத்துவம்? அவை இயல்பானவை அல்லவா?

**ம:** அவை இயல்பானவை அல்ல. அவை முழுவதும் மனதால் ஏற்படுத்தப்பட்டவை. உனக்கு உன் உடல் உள்பட எதுவுமே தேவையில்லை என்று அறிய நீ எல்லாவற்றையும் கைவிட வேண்டும். உன் தேவைகள் மெய்யற்றவை. உன் முயற்சிகள் அர்த்தமற்றவை. உன் உடைமைகள் உன்னைப் பாதுகாக்கின்றன என்று நீ கற்பனை செய்கிறாய். உண்மையில் அவை உன்னைத் தாக்குதலுக்கு உள்ளாகக் கூடியவனாக்குகின்றன. 'இது' அல்லது

'அது' என்று சுட்டிக் காண்பிக்கக் கூடிய எல்லாவற்றிற்கும் அப்பால் நீ உள்ளதாக அறி. எந்தப் புலன் அனுபவத்தாலும், வாய் வார்த்தைகளாலும் உன்னை நெருங்க முடியாது. அவற்றிற்கு அப்பால் செல். உருவகப்படுத்த மறு.

**கே:** உங்களுடைய போதனைகளைக் கேட்ட பிறகு நான் என்ன செய்வது?

**ம:** கேட்பது மட்டுமே உனக்குப் பெரிதும் உதவாது. அதை உன் மனதில் வைத்துக் கொண்டு, அசை போட வேண்டும். நான் சொல்வதை என்னைச் சொல்ல வைக்கிற மனோ நிலையைப் புரிந்துகொள்ள முயற்சி செய். நான் உண்மையிலிருந்து பேசுகிறேன்; உன் கையை நீட்டி எடுத்துக் கொள். நீ என்னவென்று உன்னை நினைக்கிறாயோ அது நீ அல்ல என்று நான் உனக்கு உறுதியளிக்கிறேன். உன்னைப் பற்றி நீ கொண்டிருக்கும் பிம்பம் ஞாபகங்களால் ஏற்படுத்தப்பட்டது. அதை நீ அறியாமலே மெய் என்று அறிந்தவாறு உபயோகிக்கிறாய்.

**கே:** நான் என்னவோ அது என் கர்மாவின் பலன்.

**ம:** நீ என்னவாகத் தோன்றுகிறாயோ அது நீ அல்ல. கர்மா என்பது நீ திரும்பத் திரும்பச் சொல்லக் கற்றுக் கொண்ட ஒரு வார்த்தை. நீ எப்போதுமே ஒரு நபர் அல்ல. ஒருபோதும் நபராக இருக்கப் போவதும் இல்லை. உன்னை ஒரு நபராகக் கருத மறு. ஆனால் உன்னை இன்னாரென்று கருதுவதில் சந்தேகம்கூட கொள்ளாமல் இருக்கும் வரை சிறிதளவே வாய்ப்பு உள்ளது. நீ கண்ணைத் திறக்க மறுத்தால் எதை உனக்குக் காண்பிக்க முடியும்?

**கே:** நான் கர்மாவை பூரணத்துவத்திற்கு உந்துகின்ற ஒரு மர்மமான சக்தியாகக் கற்பனை செய்கிறேன்.

**ம:** மக்கள் உன்னிடம் இவ்வாறுதான் சொல்லியிருப்பார்கள். நீ இங்கேயே, இப்போதே பூரணமாகத்தான் இருக்கிறாய். பூரணமாக்கப்பட வேண்டியது நீ அல்ல. நீ என்னவாக இல்லையோ அதுவாக உன்னைக் கற்பனை செய்கிறாய் - அதை நிறுத்து. நிறுத்துவதுதான் முக்கியம், எதை நிறுத்துகிறாயோ அதுவல்ல.

**கே:** நான் என்னவோ அதுவாக ஆக கர்மா என்னை நிர்பந்திப் பதில்லையா?

**ம:** எதுவும் நிர்பந்திப்பதில்லை. நீ என்னவென்று உன்னை நம்புகின்றாயோ அதுதான் நீ. நம்புவதை நிறுத்து.

**கே:** நீங்கள் உங்கள் ஆசனத்தில் அமர்ந்து என்னுடன் பேசிக்கொண்டிருக்கிறீர்கள். எது உங்களை நிர்பந்திக்கிறதோ அது உங்கள் கர்மா.

**ம:** எதுவும் என்னை நிர்பந்திப்பதில்லை. எது செய்யப் பட வேண்டுமோ அதைச் செய்கிறேன். ஆனால் நீ பல தேவையில்லாத வற்றைச் செய்கிறாய். ஆராய்ந்து பார்க்க நீ மறுப்பதுதான் கர்மாவை உருவாக்குகிறது. உன்னுடைய துன்பத்தின்மேல் உனக்கிருக்கும் விட்டேத்தியான, கண்டுகொள்ளாத தன்மைதான் அதைத் தொடரச் செய்கிறது.

**கே:** ஆமாம். இது உண்மை. இந்த விட்டேத்தியான, கண்டு கொள்ளாத தன்மையை எது முடிவிற்குக் கொண்டுவரும்?

**ம:** ஒரு பற்றற்ற அல்லது வாஞ்சையான அலையாக உனக்குள்ளிருந்து உந்துதல் வர வேண்டும்.

**கே:** அந்த உந்துதலை நான் சிறிதளவாவது அனுபவிக்க முடியுமா?

**ம:** கண்டிப்பாக. உன் நிலைமையையும், உலகத்தின் நிலைமையையும் பார்.

**கே:** கர்மாவை மற்றும் மறு பிறவியைப் பற்றியும், பரிணாமம் மற்றும் யோகாவைப் பற்றியும், குரு சிஷ்யர்களைப் பற்றியும் எங்களுக்குச் சொல்லப்பட்டிருக்கிறது. இந்த அறிவைக் கொண்டு நாங்கள் என்ன செய்வது?

**ம:** இவை எல்லாவற்றையும் உனக்குப் பின்னால் விட்டு விடு. அவற்றை மறந்துவிடு. கருத்துக்களாலும், நம்பிக்கைகளாலும் சுமையாக்கப் படாமல் மேற்கொண்டு செல். வார்த்தைகளால் ஆன எல்லா வடிவங்களையும், சார்புடைய எல்லா உண்மைகளையும், தொட்டு உணரக் கூடிய எல்லாப் பொருள்களையும் விட்டு ஒழி.

பூரணத்தைப் பூரணமான முழு ஈடுபாட்டால் மட்டுமே அடைய முடியும். அரை மனதுடன் இருக்காதே.

**கே:**நான் ஒரு சில பூரணமான உண்மையில்தான் ஆரம்பிக்க வேண்டும். அப்படி ஏதாவது இருக்கிறதா?

**ம:** ஆமாம். 'நான்' என்னும் உணர்வு இருக்கிறது. அதனுடன் ஆரம்பி.

**கே:** வேறு எதுவும் உண்மையில்லையா?

**ம:** மற்ற எதுவுமே உண்மையோ, உண்மையற்றதோ கிடையாது. அது தோன்றும்போது அது மெய்யாகத் தெரிகிறது. அதை மறுக்கும் போது அது மறைந்துவிடுகிறது. கடந்து போகும் ஒன்று ஒரு புதிர்.

**கே:** நான் மெய்மையைத்தான் புதிரானது என்று நினைத்தேன்.

**ம:** அது எப்படி? மெய்மை எளிமையானது, திறந்திருப்பது, தெளிவானது மற்றும் அன்பானது, அழகானது மற்றும் மகிழ்ச்சி யானது. அது முற்றிலும் முரண்பாடுகளற்றது. அது எப்போதும் புதியது, எப்போதும் வாட்டமுறாதது, முடிவில்லாத படைப்புத் திறனுள்ளது. இருத்தல் மற்றும் இல்லாதிருத்தல், வாழ்தல் மற்றும் இறத்தல் ஆகிய எல்லா வேறுபாடுகளும் அதில் உட்கலந்துவிடும்.

**கே:** நான் எல்லாமும் மாயை என்று ஒப்புக் கொள்கிறேன். ஆனால் அது என் மனதை இல்லாததாகச் செய்யாது.

**ம:** மனம் எதைச் சிந்திக்கிறதோ அதுதான். அதை உண்மையான தாக்க உண்மையைச் சிந்தி.

**கே:** பொருட்களின் வடிவங்கள் வெறும் தோற்றம் என்றால், மெய்யாக அவை என்ன?

**ம:** மெய்யாக உணர்ந்தறிதல் மட்டுமே உள்ளது. உணர்ந்தறிப வரும், உணர்ந்தறியப்படுவதும் கருத்துக்கள் மட்டுமே. உணர்ந் தறிதல் என்னும் நிஜம்தான் உள்ளபடியானது.

**கே:** இங்கு பூரணம் எப்படி உள்ளே வருகிறது?

**ம:** உணர்ந்தறிதலின் பிறப்பிடம் பூரணம். அது உணர்ந்தறிதலைச் சாத்தியமாக்குகிறது.

ஆனால் அதிகப்படியான பகுப்பாய்வு உன்னை எங்கும் கொண்டுபோய்ச் சேர்க்காது. பகுப்பாய்வைக் கடந்த, மனதைக் கடந்த, இருத்தலின் அடிப்படை உனக்குள் இருக்கிறது. அதை நீ செயல்பாட்டினால்மட்டுமே அறியமுடியும். அதைத் தினசரி வாழ்க்கையில் வெளிப்படுத்து. அப்போது அதன் ஒளி மேலும் பிரகாசமாக அதிகரிக்கும்.

மனதின் நியாயமான செயல்பாடு என்னவென்றால், என்ன இல்லையோ அதைச் சொல்வதுதான். ஆனால் நேர்மறையான அறிவை நீ வேண்டினால், மனதைக் கடந்து நீ போக வேண்டும்.

**கே:** முழுப் பிரபஞ்சத்திலும் மதிப்புடைய ஏதேனும் ஒன்று உள்ளதா?

**ம:** ஆமாம், அன்பின் வலிமை உள்ளது.



# 71. சுய பிரக்ஞையால் நீ உன்னைப் பற்றி அறிவாய்

**கேட்பவர்:** சீடர்கள் தங்கள் குருவிற்கு அதிகமான தொல்லை களைக் கொடுக்கிறார்கள் என்பது எங்களுடைய தொடர்ந்த அனுபவம். அவர்கள் குருவின் ஆசைகளைப் பொருட்படுத்தாமல் திட்டங்களைத் தீட்டி, செயல்படுத்துகிறார்கள். முடிவில் குருவிற்குத் தீராத கவலையும், சீடர்களுக்குக் கசப்பும்தான் இருக்கிறது.

**மஹராஜ்:** ஆமாம். இம்மாதிரி நடக்கிறது.

**கே:** இந்த மாதிரியான கேவலமானவற்றிற்கு அடிபணிய யார் குருவை நிர்பந்திக்கிறார்கள்?

**ம:** அடிப்படையில் குரு ஆசைகள் அற்றவர். நடப்பவற்றை அவர் பார்க்கிறார். ஆனால் அதில் குறுக்கிட அவருக்கு எந்த உந்துதலும் கிடையாது. அவர் எந்த விருப்பத் தேர்வும் செய்வதில்லை; எந்த முடிவும் எடுப்பதில்லை. தூய சாட்சியாக அவர் என்ன நடக்கிறதோ அதைக் கவனிக்கிறார். அவற்றால் பாதிக்கப்படாமல் இருக்கிறார்.

**கே:** ஆனால் அவருடைய வேலை பாதிக்கப்படுகிறது.

**ம:** எப்போதும் முடிவில் வெற்றி அவருடையது. சீடர்கள் அவருடைய வார்த்தைகளால் கற்றுக் கொள்ளவில்லையென்றால், அவர்கள் தங்கள் தவறுகளிலிருந்து கற்றுக் கொள்வார்கள் என்று அவருக்குத் தெரியும். உள்ளுக்குள் அவர் அமைதியாகவும், மௌனமாகவும் இருப்பார். அவருக்குத் தான் ஒரு தனித்த நபர் என்னும் உணர்வு இருக்காது. சிறு திட்டங்களைக் கொண்டுள்ள அவருடைய சீடர்கள் உட்பட முழுப் பிரபஞ்சமும் அவருடையது. குறிப்பாக எதுவுமே அவரைப் பாதிக்காது. அதேபோல முழுப் பிரபஞ்சமும் அதே அளவில் அவரைப் பாதிக்கும்.

**கே:** குருவின் அருள் என்னும் ஒன்று இல்லையா?

**ம:** அவருடைய அருள் மாறாத தொடர்ச்சியானது மற்றும் பிரபஞ்சமயமானது. அது ஒருவருக்குக் கொடுக்கப்பட்டு மற்றவருக்கு மறுக்கப்படாது.

**கே:** அது எப்படி என்னைத் தனிப்பட்ட முறையில் பாதிக்கும்?

**ம:** குருவின் அருளினால்தான் உன் மனம் மெய்யைத் தேட ஈடுபட்டிருக்கிறது. அவரது அருளினால்தான் நீ அதைக் காண்பாய். அது வெளியே தெரியாமலே உன் உச்சமுடிவான நன்மைக்காக வேலை செய்யும். அது எல்லோருக்குமானது.

**கே:** சில சீடர்கள் தயாராகவும், பரிபக்குவத்துடனும் உள்ளனர். சிலர் அவ்வாறில்லை. அவர்களுக்காக குரு விருப்பத் தேர்வு செய்து, முடிவுகள் எடுக்க வேண்டாமா?

**ம:** குருவிற்கு உச்சமுடிவானாது தெரியும். அவர் தொய்வில்லாமல் சீடரை அதை நோக்கித் உந்துகிறார். சீடர் தன்னிடம் நிறைந்துள்ள தடைகளைத் தானேதான் தாண்டவேண்டும். குருவிற்கு சீடரின் வாழ்க்கையிலுள்ள மேம்போக்கானவற்றைப் பற்றி மிகுதியான அக்கறை கிடையாது. அது புவியீர்ப்பு விசையைப் போன்றது. பழத்தை மேற்கொண்டு மரம் வைத்திருக்க முடியாத போது, விழுந்துவிடும்.

**கே:** சீடருக்குக் குறிக்கோள் தெரியாதபோது அவருக்குத் தடைகள் எப்படித் தெரியும்?

**ம:** குறிக்கோளை குரு காட்டுவார். தடைகளைச் சீடர் கண்டு பிடிக்க வேண்டும். குருவிற்கு முன்னுரிமை எதுவும் கிடையாது. ஆனால் தடைகளைத் தாண்ட வேண்டியவர்கள் பின்னடைந்து இருப்பதாகத் தெரிகிறது.

மெய்யாக சீடர் சத்குருவிலிருந்து வித்தியாசமானவர் அல்ல. அவரும் அதே உருவமற்ற உணர்ந்தறியும் மற்றும் செயல்படும் அன்பின் மையம். அவர் அறியாமலே தான் உடல் என்று செய்யும் கற்பனையும், கற்பனை செய்யப்பட்டதுடன் அவருடைய சுய அடையாளமும்தான் அவரைச் சுற்றி, ஒரு நபராக மாற்றுகிறது.

சத்குருவிற்கு நபருடன் சிறிதளவே அக்கறை உள்ளது. அவருடைய கவனம் உள்ளே இருக்கும் கவனிப்பவர்மேல்தான். சத்குருவின் கிருபை பலனளிக்க சீடர் அவருடைய வார்த்தைகளை நம்பி அதன்படி செயல்பட வேண்டும்.

**கே:** ஆனால் நபர் நீக்கப்பட ஒப்புக் கொள்வதில்லை.

**ம:** நபர் என்பது தவறான புரிதலின் விளைவு. மெய்யாக, அப்படியான தனித்த இருத்தல் எதுவும் இல்லை. பலவிதமான உணர்ச்சிகள், எண்ணங்கள், செயல்கள் கவனிப்பவருக்கு முன்னால் முடிவில்லாத தொடர்ச்சியாக ஓடி, மூளையில் தடயங்களை விட்டு விட்டு, ஒரு தொடர்ச்சி என்னும் மாயையை உருவாக்குகின்றன. மனதிலுள்ள கவனிப்பவரின் பிரதிபலிப்பு 'நான்' என்னும் உணர்வை உருவாக்கி, நபர் ஒரு தனிப்பட்ட இருத்தலான தோற்றத்தைப் பெறுகிறது. மெய்யாக, நபர் என்று ஒன்று கிடையாது; 'நான்' மற்றும் 'எனது' என்பதுடன் தன்னை அடையாளப் படுத்திக் கொள்ளும் கவனிப்பவர் மட்டும்தான் உள்ளார். 'நீ இதுவல்ல, கவனிப்பவருக்கும், அவருடைய கனவிற்கும் பாலமாக இருக்கும் 'நான்' என்னும் சிறு புள்ளியைத் தவிர, உன்னுடையது எதுவும் இதில் இல்லை' என்று கவனிப் பவரைப் பார்த்து ஆசிரியர் சொல்வார். 'நான் இது, நான் அது' என்பது கனவு, ஆனால் தூய 'நான்' மெய்யின் முத்திரையை அதில் கொண்டிருக்கும். நீ பலவற்றை உடலாலும், மனதாலும் அனுபவித் துள்ளாய். எல்லாமும் ஒன்றுமில்லாததில்தான் முடிகிறது. 'நான்' என்னும் உணர்வுதான் நீடித்திருக்கிறது - மாற்றமில்லாமல். உன்னால் அப்பால் கடந்துபோக முடியும்வரை, மாறக்கூடியதில் உள்ள மாறாததுடன் தங்கியிரு.

**கே:** அது எப்போது நிகழும்?

**ம:** நீ தடைகளை நீக்கிய உடனேயே அது நிகழும்.

**கே:** எந்தத் தடைகள்?

**ம:** பொய்யானவற்றிற்கு ஆசைப் படுவதும், மெய்யானவற்றிற்கு அச்சப்படுவதும். உன்னை ஒரு நபராகக் கருதி உன்னிடத்தில் குரு ஆர்வத்துடன் இருப்பதாக நீ கற்பனை செய்கிறாய். இல்லவே

இல்லை. அவருக்கு நீ ஒரு தொல்லை; நீக்கப்பட வேண்டிய ஒரு தடங்கல். விழிப்புணர்வில் ஒரு காரணியாக நீ இருப்பதை நீக்க வேண்டும் என்பதைத்தான் அவர் மெய்யாகவே குறிவைக்கிறார்.

**கே:** 'நான்' நீக்கப்பட்டால் என்ன மிஞ்சும்?

**ம:** எதுவுமே மிஞ்சாது; எல்லாமுமே மிஞ்சும். அடையாளம் என்னும் உணர்வு மிஞ்சும், ஆனால் மேற்கொண்டு ஒரு குறிப்பிட்ட உடலுடன் கூடிய அடையாளம் அல்ல. இருத்தல் - பிரக்ஞை - அன்பு (சத் - சித் - ஆனந்தம்) முழு வீச்சில் மிளிரும். விடுதலை என்பது நபருடையது அல்ல; அது எப்போதும் நபரிலிருந்துதான்.

**கே:** நபரின் தடயம் எதுவும் மிஞ்சாதா?

**ம:** ஒரு கனவின் ஞாபகத்தைப் போல, அல்லது சிறு குழந்தைப் பருவத்தின் ஞாபகத்தைப் போல ஒரு தெளிவற்ற ஞாபகம் இருக்கும். ஞாபகம் வைத்திருக்க என்ன இருக்கிறது? பெரும்பாலும் தன்னிச்சையானதும், அர்த்தமற்றதுமான நிகழ்வு ஓட்டம்தான் இருக்கும். ஆசைகள், அச்சங்கள், அளவற்ற தவறுகளின் தொடர்ந்த நிகழ்வுகள்தான் உள்ளன. ஞாபகம் வைத்திருக்க மதிப்பான ஏதாவது உள்ளதா? நபர் என்பது உள்ளது. ஆனால் ஒரு உடல் என்னும் கவசம் உன்னைச் சிறை பிடித்திருக்கிறது. அந்தக் கவசத்தை உடை.

**கே:** யாரிடம் கவசத்தை உடைக்கச் சொல்கிறீர்கள்? கவசத்தை உடைக்க யார் இருக்கிறார்கள்?

**ம:** ஞாபகம் மற்றும் சுய அடையாளம் என்னும் கட்டுக்களை உடை. கவசம் அதாகவே உடைந்துவிடும். எதையெல்லாம் உணர்ந்தறிகிறதோ அதற்கு மெய்த் தன்மையைக் கொடுக்கும் ஒரு மையம் உனக்குள் உள்ளது. நீ புரிந்துகொள்ள வேண்டியதெல்லாம் - நீதான் மெய்மைக்கு ஆதாரம்; நீதான் மெய்த் தன்மையைப் பெறுவதற்குப் பதிலாக, கொடுக்கிறாய்; உனக்குத் துணையோ, உறுதிப் படுத்துதலோ தேவையில்லை என்பதுதான். ஒவ்வொன்றும் அவை உள்ளபடியே உள்ளன; ஏனெனில் நீ அவற்றை அவை உள்ளபடியே ஏற்றுக் கொள்கிறாய். ஏற்றுக் கொள்வதை நிறுத்து.

அவை கரைந்துவிடும். நீ ஆசையோடோ அல்லது அச்சத்தோடோ எதை நினைத்தாலும் அது மெய்யானதாக உனக்கு முன்னால் தோன்றும். அதை ஆசையோ, அச்சமோ இல்லாமல் பார். அப்போது அது அதன் உள்ளீட்டை இழந்துவிடும். இன்பமும், துன்பமும் கண நேரத்தவை. அவற்றைக் கண்டு கொள்ளாமல் ஒதுக்கித்தள்ளுவது அவற்றின் மேல் செயல்புரிவதை விட எளிது மற்றும் சுலபமானது.

**கே:** எல்லாமும் முடிவிற்கு வரும் என்றால் அவை ஏன் தோன்ற வேண்டும்?

**ம:** உருவாக்குவது என்பது விழிப்புணர்வின் அடிப்படை இயல்பு. விழிப்புணர்வு தோற்றத்தை உருவாக்குகிறது. மெய்மை விழிப் புணர்விற்கு அப்பால் உள்ளது.

**கே:** நாம் தோற்றங்களைப் பற்றி உணர்வுடன் இருந்தாலும், இவையெல்லாம் வெறும் தோற்றங்களே என்னும் உணர்வு நமக்கு ஏன் இல்லை?

**ம:** மனம் மெய்மையை மூடிவிடுகிறது, அதைப்பற்றி அறியாமலே. மனதின் இயல்பை அறிய உனக்கு புத்திசாலித்தனமும், மனதை ஸ்திரத்தோடும், பற்றற்ற விழிப்போடும் பார்க்கும் திறனும் தேவை.

**கே:** என் இயல்பு எல்லாவற்றிலும் ஊடுருவும் விழிப்புணர்வு என்றால், அறியாமையும், ப்ரம்மையும் எனக்கு எப்படி நிகழும்?

**ம:** அறியாமையோ, ப்ரம்மையோ ஒருபோதும் உனக்கு ஏற்படுவதில்லை. எந்தச் சுயத்திற்கு அறியாமையும், ப்ரம்மையும் உரித்தானதென்று சொல்கிறாயோ அந்தச் சுயத்தைக் கண்டுபிடி; அப்போது உன் கேள்விக்கு பதில் கிடைக்கும். உனக்கு சுயத்தைத் தெரியும் என்பது போலவும், அது அறியாமையிலும், ப்ரம்மையிலும் அசைந்தாடுவது போலவும் நீ பேசுகிறாய். ஆனால் நிஜத்தில் உனக்கு சுயத்தைத் தெரியாது; அறியாமையைப் பற்றிய விழிப்புணர்வும் கிடையாது. எல்லாவகையிலும் பிரக்ஞையைப் பெறு - இது உன்னை சுயத்திற்குக் கொண்டுவரும்; அப்போது அறியாமையோ, ப்ரம்மையோ அதில் இல்லை என்று நீ அறிவாய். இது, 'சூரியன் இருந்தால் இருள் எப்படி இருக்கமுடியும்?' என்று கேட்பதைப்

போல. சூரிய ஒளி எவ்வளவுதான் அடர்த்தியாக இருந்தாலும், ஒரு கல்லுக்கடியில் இருள் இருப்பதைப் போல, 'நான் - உடல்' என்னும் கற்பனையின் நிழலில் அறியாமையும், ப்ரம்மையும் இருக்கும்.

**கே:** ஆனால் உடல் உணர்வு ஏன் இருத்தலுக்கு வருகிறது?

**ம:** 'ஏன்' என்று கேட்காதே; 'எப்படி' என்று கேள். உருவாக்கக்கூடிய கற்பனையின் இயல்பில் அதன் படைப்புகளோடு தன்னை அடையாளப்படுத்திக்கொள்ளுதல் இருக்கிறது. கவனத்தைத் அப்பால் திருப்புவதால் அதை எந்தக் கணமும் நிறுத்தலாம். அல்லது விசாரம் செய்வதாலும் நிறுத்தலாம்.

**கே:** படைத்தல் விசாரத்திற்கு முன்பே வருமா?

**ம:** முதலில் நீ ஒரு உலகத்தை உருவாக்குகிறாய். பிறகு அகத்திற்கு உருவளித்து, 'நான்' என்னும் ஒரு அகங்காரம் நபராக உருவாகிறது. அதனோடு செயல்படும் உணர்வு வருகிறது. லாபம், நஷ்டம், பரிசு, தண்டனை ஆகிய அனைத்தும் அதனோடு இருக்கிறது. முடிவில் கணக்கெடுத்தால் மிஞ்சுவதெல்லாம் எப்போதும் துக்கமும், ஏமாற்றமும்தான். அப்போது நபர் மகிழ்ச்சியைத் தேடி வெளியே சென்று, ஒரு குருவைச் சந்திப்பார். குரு அவரிடம்: 'நீ நபரல்ல; நீ யார் என்று கண்டுபிடி' என்று சொல்வார். அவர் அதைச் சோதித்து, அப்பால் செல்வார்.

**கே:** அவர் ஏன் ஆரம்பத்திலேயே அதைச் செய்யவில்லை?

**ம:** அது அவருக்குத் தோன்றவில்லை. அவருக்குச் சொல்ல யாராவது ஒருவர் தேவை.

**கே:** அதுவே போதுமா?

**ம:** போதும்.

**கே:** என்னிடம் அது ஏன் வேலை செய்யவில்லை?

**ம:** நீ என்னை நம்பவில்லை.

**கே:** என் நம்பிக்கை ஏன் வலிமையற்று இருக்கிறது?

**ம:** ஆசைகளும், அச்சங்களும் உன் மனதைச் சோம்பலடையச் செய்துவிட்டன. அதற்குச் சிறிது சுத்தம் செய்தல் தேவை.

**கே:** நான் எப்படி என் மனதைத் தெளிவாக்க முடியும்?

**ம:** அதைத் தொய்வில்லாமல் கவனிப்பதால். கவனமின்மை மறைக்கிறது; கவனம் தெளிவாக்குகிறது.

**கே:** ஏன் இந்திய ஆசிரியர்கள் செயல்பாடின்மையை வலியுறுத்து கிறார்கள்?

**ம:** பெரும்பாலான மக்களின் நடவடிக்கைகள் மதிப்பற்றவை யாக இருந்தாலும், அவை இழப்பு ஏற்படுத்துபவை. ஆசைகளாலும், அச்சங்களாலும் அதிகாரம் செய்யப்பட்டுள்ள அவற்றால் எந்த நல்லதையும் செய்ய முடியாது. தீமையானதைச் செய்யாமல் நிறுத்துவது நல்லதைச் செய்ய ஆரம்பிப்பதற்கு முந்தையது. ஆகையால்தான் எல்லாச் செயல்பாடுகளையும் சிறிது நேரத்திற்கு நிறுத்துவது, ஒருவருடைய உந்துதல்களையும், அவற்றின் நோக்கங் களையும் விசாரம் செய்வது, ஒருவருடைய வாழ்க்கையில் உள்ள அனைத்தும் பொய்யானவை என்று காண்பது, மனதிலுள்ள எல்லாத் தீயவைகளையும் நீக்கிக் கழித்த பிறகே ஒருவருடைய கண் கூடான கடமைகளிலிருந்து வேலையை மறுபடியும் தொடங்குவது என்பவை அவசியம். உனக்கு யாருக்காவது உதவமுடியும் என்னும் வாய்ப்பு இருந்தால், நீ முழு நிறைவானவனாகும் வரை அவரைக் காத்திருக்க வைக்காமல், எல்லாவகையிலும், சரியான நேரத்தில் அவருக்கு உதவு. ஆனால் நல்லது செய்யும் ஒரு தொழில் முறையாளனாக மாறாதே.

**கே:** சீடர்களில் நல்லது செய்பவர்கள் பல பேர் இருப்பதாக எனக்குத் தெரியவில்லை. நான் சந்திக்கும் பலர் தங்களுடைய சிறு பிரச்சனைகளில் மிகவும் ஈடுபட்டிருப்பதைப் போல் தெரிகிறது. மற்றவர்களின் மேல் அவர்களுக்கு ஈடுபாடு எதுவும் கிடையாது.

**ம:** அதுமாதிரியான சுய அக்கறை தற்காலிகமானது. அம்மாதிரியானவர்களுடன் பொறுமையாய் இரு. பல வருடங்களாகத் தங்களைத் தவிர மற்ற அனைத்தின்மேலும் அவர்கள் கவனத்தைக் கொண்டிருந்தார்கள். ஒரு மாற்றத்திற்காக அவர்கள் கவனம் தங்கள்மேல் திரும்பட்டும்.

**கே:** சுய விழிப்புணர்வின் பலன் என்ன?

**ம:** நீ மேலும் புத்திசாலியாவாய். விழிப்புணர்வில் நீ கற்பாய். சுய விழிப்புணர்வில் உன்னைப் பற்றி கற்றுக் கொள்வாய். நீ என்னவாக இல்லையோ அதை மட்டுமே நீ கற்க முடியும். உன்னை என்னவென்று அறிய நீ மனதைக் கடந்து செல்ல வேண்டும்.

**கே:** விழிப்புணர்வு மனதிற்கு அப்பால் இல்லையா?

**ம:** விழிப்புணர்வு என்னும் புள்ளியில்தான் மனம் தனக்கு அப்பால் சென்று, மெய்மையை அடைகிறது. விழிப்புணர்விற்குள் செல்வதின் நோக்கம் உன்னை எது மகிழ்விக்கிறதோ அதைத் தேட அல்ல. ஆனால் எது மெய்யோ அதைத் தேடத்தான்..

**கே:** விழிப்புணர்வு ஒரு உள் அமைதி நிலையை, ஒரு மனோமய வெறுமை நிலையைக் கொண்டுவருவதை நான் பார்க்கிறேன்.

**ம:** அதைப் பொருத்தவரை சரி. ஆனால் அது போதாது. ஒரு மேகம் நீல வானில் நீந்துவது போல, எல்லாவற்றையும் அரவணைக்கின்ற வெறுமையில் பிரபஞ்சம் நீந்துவதை நீ உணர்ந்திருக்கிறாயா?

**கே:** ஐயா, முதலில் என் சொந்த உள் வெளியை நான் அறிய விடுங்கள்!

**ம:**பிரிக்கின்ற சுவற்றை, நான் - உடல் என்னும் கருத்தை முதலில் அழி. உள்ளும், புறமும் ஒன்றாகும்.

**கே:** நான் இறக்க வேண்டுமா?

**ம:** பௌதீக அழிவு அர்த்தமற்றது. உணர்ச்சிபூர்வமான வாழ்தலைத் தொற்றிக் கொண்டிருப்பதுதான் உன்னைக் கட்டிப் போடுகிறது. உன்னால் உள் வெறுமையை முழுவதும் அனுபவப் பட முடிந்தால் முழுமையோடு ஏகரூபமாவது அருகாமையில் இருக்கும்.

**கே:** என் சொந்த ஆன்மீக அனுபவங்கள் அதன் பருவங்களைக் கொண்டிருக்கிறது. சில சமயம் நான் உன்னதமாகவும், மறுபடியும் கீழானவனாகவும் உணர்கிறேன். நான் இயங்கேணி (லிப்டை) ஒன்றை இயக்கும் பையனைப் போன்றவன் - மேலே போவதும் கீழே வருவதுமாக, மேலே போவதும் கீழே வருவதுமாக.

**ம:** விழிப்புணர்வில் ஏற்படும் மாற்றங்கள் எல்லாம் 'நான் - உடல்' என்னும் கருத்தால் வருவது. இந்தக் கருத்து இல்லாவிட்டால் மனம் ஸ்திரமாக இருக்கும். எந்தக் குறிப்பிட்ட அனுபவமும் இல்லாமல் தூய இருத்தல் என்பது உள்ளது. ஆனால் அதை அறிய நீ குரு சொல்வதைக் செய்ய வேண்டும். வெறுமனே கேட்பது, மனப் பாடம் செய்வதுகூடப் போதாது. அவருடைய ஒவ்வொரு வார்த்தையையும் உன்னுடைய தினசரி வாழ்க்கையில் உபயோகிக்கக் கடினமாகப் பிரயத்தனப்படாவிட்டால், எந்த முன்னேற்றமும் அடையவில்லை என்று குறை கூறாதே. எல்லா நிஜமான முன்னேற்றமும் குறையக் கூடியதல்ல. உயர்வும், குறைவும், சொல்லிக் கொடுத்ததை இதயத்திற்குள் எடுத்துக் கொள்ளப்பட்டு, முழுவதுமாகச் செயலாக மாற்றப்படவில்லை என்பதையே காட்டுகிறது.

**கே:** முன் ஒரு நாள் கர்மா என்னும் ஒன்று இல்லை என்று சொன்னீர்கள். இருப்பினும் நாங்கள் ஒவ்வொன்றிற்கும் ஒரு காரணம் இருப்பதைப் பார்க்கிறோம். எல்லாக் காரணங்களின் மொத்தத்தையும் கர்மா என்று சொல்லலாம்.

**ம:** நீ உன்னை ஒரு உடல் என்று நம்பும் வரை, ஒவ்வொன்றிற்கும் நீ காரணத்தைக் கற்பிப்பாய். நடப்பவைகளுக்குக் காரணமே இல்லை என்று நான் சொல்லவில்லை. ஒவ்வொன்றும் கணக்கற்ற காரணங்களைக் கொண்டுள்ளன. அது உள்ளவாறே உள்ளது. ஏனெனில் உலகம் அது உள்ளவாறே உள்ளது. ஒவ்வொரு காரணமும் அதன் செயல்பாட்டை ஆரம்பித்து, பிரபஞ்சத்தை நிரப்புகிறது.

நீ விரும்புவதைப் போல் இருக்கத் தீர்க்கமாகச் சுதந்திரமானவன் என்றும், அறியாமையாலோ அல்லது அக்கறையின்மையாலோ நீ உன் தோற்றத்தைப் போல் இருக்கிறாய் என்றும் நீ அறியும்போது நீ கிளர்ச்சி செய்யவும், மாறவும் சுதந்திரமானவன். நீ என்னவாக இல்லையோ அதாக இருக்க உன்னை அனுமதிக்கிறாய். நீ என்னவாக இல்லையோ அதுவாக இருக்கக் காரணங்களைத் தேடுகிறாய். அது ஒரு பிரயோஜனமில்லாத தேடல். முழு நிறைவானதாகவும், காரணத்தன்மைக்கு அப்பாற்பட்டதாகவும்

உள்ள உன்னுடைய மெய்யான இருத்தலைப் பற்றிய அறியாமையைத் தவிர வேறு காரணங்கள் எதுவும் இல்லை. எது நடந்தாலும் அதற்கு முழுப் பிரபஞ்சமும் பொறுப்பு. நீதான் முழுப் பிரபஞ்சத்திற்கும் ஆதாரம்.

**கே:** பிரபஞ்சத்தின் ஆதாரமாக இருப்பதைப் பற்றி எனக்கு எதுவும் தெரியாது.

**ம:** ஏனெனில் நீ ஆராயவில்லை. சோதி. உள்ளுக்குள் தேடு. அப்போது அறிவாய்.

**கே:** என்னைப் போன்ற ஒரு துகள் எப்படி விரிந்த பிரபஞ்சத்தை உருவாக்க முடியும்?

**ம:** 'நான் - உடல்' என்னும் கிருமியால் நீ நோய்வாய்ப் பட்டிருப்பதால் முழுப்பிரபஞ்சமும் இருத்தலுக்கு வருகிறது. ஆனால் நீ இது போதும் என்று நினைக்கும் அளவிற்குக் களைத்துப் போய், விடுதலையைப் பற்றிய சில விநோதமான கருத்துக்களைச் சிலாகித்து, முற்றிலும் பிரயோஜனமில்லாத செயல் முறைகளில் நீ ஈடுபடுகிறாய். நீ கவனத்தைக் குவிக்கிறாய்; தியானிக்கிறாய்; உன் மனதையும், உடலையும் துன்புறுத்துகிறாய்; எல்லாவகையான வேண்டாதவற்றையும் நீ செய்கிறாய். ஆனால் நபரை இல்லாமல் போகச்செய்யும் அவசியமான கருத்தைத் தவற விடுகிறாய்.

**கே:** சுய விசாரத்திற்குத் தயாராவதற்கு முன்பாக ஆரம்பத்தில் நாங்கள் சிறிதுகாலத்திற்குத் துதிக்கவும், தியானிக்கவும் வேண்டும்.

**ம:** அவ்வாறு நீ நம்பினால், அப்படியே செய். என்னைப் பொருத்தவரையில் எல்லாவிதமான தாமதமும் நேர விரயமே. எல்லாத் தயாராகும் முயற்சிகளையும் விட்டுவிட்டு, நீ நேரடியாக உனக்குள்ளே உச்ச முடிவான தேடலைச் செய்யலாம். எல்லா யோகாவிலும் அதுதான் எளிமையான மற்றும் சுருக்கமான யோகா.

# 72. எது தூயதாகவும், கலங்கப் படாமலும், சார்ந்தில்லாமலும் இருக்கிறதோ அது மெய்

**மஹராஜ்:** இந்தியாவிற்குத் திரும்ப வந்துவிட்டாய்! எங்கு சென்றிருந்தாய்? என்ன கண்டாய்?

**கேட்பவர்:** நான் சுவிட்ஜர்லாந்திலிருந்து வருகிறேன். அங்கு, மெய்யறிந்ததாகக் கூறிக்கொள்ளும் ஒரு குறிப்பிடத்தக்க சிறப்பான மனிதருடன் தங்கியிருந்தேன். கடந்த காலத்தில் அவர் பல யோகாக்களைச் செய்துள்ளார். பல அனுபவங்களைப் பெற்றிருந்தார். இப்போது எந்தச் சிறப்பான சக்தியோ, அறிவோ தனக்கு இருப்பதாக அவர் சொல்லிக் கொள்வதில்லை. அவரைப் பற்றிய ஒரே ஒரு வழக்கத்திற்கு மாறானது உணர்வுகள் சம்பந்தப் பட்டது; அவரால் பார்ப்பதைப் பார்பவரிடமிருந்து பிரிக்க முடிய வில்லை. உதாரணத்திற்கு ஒரு பேருந்து அவரை நோக்கி வந்தால் அவருக்குப் பேருந்து அவரை நோக்கி வருகிறதா அல்லது அவர் பேருந்தை நோக்கிச் செல்கிறாரா என்று அவருக்குத் தெரியாது. அவர் பார்ப்பவர் மற்றும் பார்க்கப்படுவதாக ஒரேசமயத்தில் இருப்பதாகத் தோன்றுகிறது. அவை இரண்டும் ஒன்றாகி விடுகின்றன. அவர் எதைப் பார்த்தாலும் அதைத் தான் எனப் பார்க்கிறார். நான் சில வேதாந்தக் கேள்விகளைக் கேட்டால் 'என்னால் பதில் சொல்ல முடியாது. எனக்குத் தெரியாது. எனக்குத் தெரிந்ததெல்லாம் நான் எதையெல்லாம் அறிந்து உணர்கிறேனோ அதோடு என்னுடைய இந்த வினோதமான அடையாளம்தான் எனக்குத் தெரிந்தது, நான் இதைத் தவிர வேறெதையும் எதிர்பார்க்க வில்லை' என்று அவர் சொன்னார்.

மொத்தத்தில் அவர் ஒரு பணிவான மனிதர்; அவருக்குச் சீடர்கள் யாரும் கிடையாது. அவர் தன்னை எந்த விதத்திலும் ஒரு உயர்ந்த ஸ்தானத்தில் வைத்துக் கொள்வதில்லை.தன்னுடைய இந்த வினோதமான நிலையைப் பற்றி மட்டுமே பேச முற்படுகிறார். அவ்வளவே.

**ம:** இப்போது தனக்கு என்ன தெரியுமென்று அவருக்குத் தெரியும். மற்ற எல்லாமும் முடிந்துவிட்டது. இன்னும் பேசவாவது செய்கிறார். சீக்கிரமே அவர் பேசுவதையும் நிறுத்திவிடுவார்.

**கே:** பிறகு அவர் வேறு என்ன செய்வார்?

**ம:** அசைவற்றிருப்பதும், மௌனமும் செயலற்ற தன்மை அல்ல. பூ வாசனையால் இடத்தை நிரப்புகிறது; விளக்கு - ஒளியால். அவை ஒன்றும் செய்வதில்லை. இருப்பினும் வெறுமனே தாங்கள் இருப்பதால் ஒவ்வொன்றையும் மாற்றுகின்றன. நீ விளக்கைப் படம் எடுக்கலாம். ஆனால் அதன் ஒளியை அல்ல. நீ ஒரு மனிதரை, அவர் பெயரை, அவர் தோற்றத்தை அறியலாம். ஆனால் அவர் வல்லமையை அல்ல. அவருடைய செல்வாக்கை அல்ல. அவருடைய இருத்தலே செயல்பாடு; சைத்தன்ய ரூபம்.

**கே:** செயல்பட்டுக் கொண்டிருப்பது இயல்பானது அல்லவா?

**ம:** ஒவ்வொருவரும் செயல்பட்டுக் கொண்டிருக்க வேண்டு கிறார்கள். ஆனால் அவருடைய செயல்கள் எங்கிருந்து தோன்று கின்றன? அர்த்தமில்லாமலும், வேதனையுடனும், முடிவில்லாத தொடர்ச்சியாகவும் ஒரு செயல் இன்னொரு செயலைத் தோற்றுவிக்கின்ற மத்தியப் புள்ளி எதுவும் கிடையாது. வேலையும், ஒய்வும் மாறிமாறி நிகழ்வதில்லை. எல்லா அசைவும் எங்கு தோன்றுகிறதோ அந்த நிலையான மையத்தைக் கண்டுபிடி. எப்படி ஒரு சக்கரம் அச்சாணியைச் சுற்றிச் சுழலுகிறதோ அப்படி எப்போதும் நீ மத்தியில் இருக்கும் அச்சாணியில் இருக்க வேண்டும்; புற எல்லையில் சுழன்று கொண்டிருக்கக் கூடாது.

**கே:** அதை நான் எப்படி நடைமுறைப்படுத்துவது?

**ம:** ஒரு எண்ணமோ, ஆசை அல்லது அச்சத்திற்கான உணர்ச்சியோ உன் மனதில் எப்போது வந்தாலும் அதைக் கண்டுகொள்ளாமல் விட்டு விடு.

**கே:** என் எண்ணங்களையும், உணர்ச்சிகளையும் அடக்குவதால் ஒரு எதிர் வினை தூண்டப்படும்.

**ம:** நான் அடக்குவதைப் பற்றிப் பேசவில்லை. கவனத்தைக் கொடுக்க மட்டும் செய்யாதே.

**கே:** மனதின் அசைவுகளை நிறுத்த நான் பிரயத்தனப்படக் கூடாதா?

**ம:** பிரயத்தனத்திற்கும் அதற்கும் சம்பந்தம் இல்லை. வெறுமனே அப்பால் திரும்பி விடு. எண்ணங்களைப் பார்ப்பதற்குப் பதிலாக எண்ணங்களுக்கு இடையில் பார். நீ ஒரு கூட்டத்திற்குள் நடக்க வேண்டி இருந்தால் நீ சந்திக்கும் ஒவ்வொருவருடனும் சண்டையிட மாட்டாய். வெறுமனே இடையில் உன் வழியைக் கண்டுபிடிப்பாய்.

**கே:** என் மனதைக் கட்டுப்படுத்த என் மனோஉறுதியை நான் உபயோகித்தால் அது என் அகங்காரத்தை வலிவூட்ட மட்டுமே செய்யும்.

**ம:** ஆமாம். நீ சண்டை போடும்போது, ஒரு சண்டையை வரவேற்கிறாய். ஆனால் நீ எதிர்க்காமல் இருந்தால் நீ எந்தத் எதிர்ப்பையும் சந்திப்பதில்லை. நீ விளையாட மறுத்தால் போட்டிக்கு வெளியில் இருப்பாய்.

**கே:** நான் மனதிலிருந்து விடுபட எவ்வளவு காலம் ஆகும்?

**ம:** அது ஆயிரம் வருடங்களைக்கூட எடுத்துக்கொள்ளலாம். ஆனால் மெய்யாக கால அவகாசம் எதுவும் தேவையில்லை. உனக்குத் தேவையானதெல்லாம் மிகமிக ஈடுபாட்டுடன் இருப்பதுதான். இங்கு மனோஉறுதிதான் செயல். நீ உள்ளார்ந்து இருந்தால் அடைந்துவிடுவாய். அது மனப்பாங்கைப் பொருத்த சங்கதி. அச்சத்தைத்தவிர வேறு எதுவும் உன்னை இங்கேயே, இப்போதே ஒரு ஞானியாக இருக்கத் தடுப்பதில்லை. நபரற்று

(வியக்தியாக இல்லாமல்) இருப்பதற்கு, நபரற்ற இருத்தலாக (வியக்தாவாக) இருப்பதற்கு நீ அச்சப்படுகிறாய். இது மிகவும் எளிமையானது. உன் ஆசைகளிலிருந்தும், அச்சங்களிலிருந்தும், அவை உருவாக்கும் எண்ணங்களிலிருந்தும் அப்பால் திரும்பிவிடு. அப்போது உடனடியாக உன் இயல்பான நிலையில் இருப்பாய்.

**கே:** மனதைச் சீரமைப்பது, மாற்றுவது, நீக்குவது என்பது இல்லையா?

**ம:** ஒன்றுமே கிடையாது. உன் மனதைத் தனியாக விட்டுவிடு. அவ்வளவே. அதனோடு செல்லாதே. உன்னுடையதல்லாமல், அதன் சொந்த சட்டதிட்டங்களுக்குக் கீழ்ப்படியும் எண்ணங்களைத் தவிர்த்து மனம் என்று சொல்லப்படுகின்ற ஒன்று கிடையாது. நீ அவற்றில் ஆர்வத்துடன் இருப்பதால் அவை உன்னை ஆதிக்கம் செய்கின்றன. 'தீயதை எதிர்க்காதே' என்று இயேசு சொன்னதைப் போன்றதே இது. தீயதை எதிர்ப்பதன்மூலம் நீ வெறுமனே அதை வலிவூட்டச் செய்கிறாய்.

**கே:** ஆமாம். இப்போது அதை நான் புரிந்துகொள்கிறேன். நான் செய்யவேண்டியதெல்லாம் தீமை இருப்பதை மறுப்பதுதான் ஆனால் இது ஒருமாதிரியான சுயக் கருத்துரை அல்லவா?

**ம:** நல்லதற்கும், தீயதற்கும் இடையில் சிக்கிக் கொண்டுள்ள ஒரு நபராக உன்னை நினைத்தால், சுயக் கருத்துரை முழுவீச்சில் நடக்கும். நான் உன்னைக் கேட்பதெல்லாம் இதற்கு ஒரு முடிவு கட்டி, விழித்து, உள்ளவற்றை உள்ளவாறு பார் என்றுதான்.

நீ ஸ்விட்சர்லாந்தில், உன் வினோதமான நண்பருடன் தங்கி இருந்தபோது அவருடைய அருகாமையால் என்ன லாபம் அடைந்தாய்?

**கே:** ஒன்றுமே இல்லை. அவருடைய அனுபவம் என்னைப் பாதிக்கவே இல்லை. ஒன்றை நான் புரிந்துகொண்டேன்: தேடுவதற்கு ஒன்றும் இல்லை என்று. நான் எங்கு சென்றாலும், பயணத்தின் முடிவில் எதுவும் எனக்காகக் காத்திருப்பதில்லை. பயணத்தின் விளைவு கண்டுபிடித்தல் அல்ல.

**ம:** ஆமாம். அடையக் கூடிய அல்லது இழக்கக் கூடிய ஏதொன்றிலிருந்தும் உன் ஸ்வரூபம் மிகவும் தனித்தது.

**கே:** நீங்கள் அதை பற்றற்று இருப்பது என்பீர்களா? அல்லது தியாகம் என்பீர்களா?

**ம:** தியாகம் செய்ய எதுவும் இல்லை. நீ கைப்பற்றுவதை நிறுத்தினால்போதும். கொடுக்க உன்னிடம் இருக்க வேண்டும். உன்னிடம் இருக்க நீ எடுக்க வேண்டும். எடுக்காமல் இருப்பது நல்லது. இது 'ஆன்மீகப் பெருமை' என்னும் ஒரு அபாயகரமான அகங்காரத்திற்குக் கொண்டு போகும் தியாகத்தைப் பயிற்சி செய்வதைவிட எளிது.

இந்தமாதிரியான எடை போடுவது, தேர்ந்தெடுப்பது, விருப்பத் தேர்வு, பரிமாற்றம் - இவையெல்லாம் ஆன்மீகச் சந்தையில் பொருள் வாங்குவது. உனக்கு என்ன வேலை அங்கே? என்ன பேரம் பேசப் போகிறாய்? நீ வியாபாரத்தை விட்டு வெளியே வந்துவிட்டால் இந்த முடிவற்ற, பதட்டமான தேர்விற்கு என்ன பயன்? அமைதியின்மை உன்னை எங்கும் கொண்டுபோகாது. உனக்கு எதுவும் தேவையில்லை என்று பார்க்க ஏதோ தடுக்கிறது. அதைக் கண்டுபிடித்து, அதன் பொய்த்தன்மையைப் பார். இது சிறிதளவு விஷத்தை உண்டுவிட்டு, தீராத தாகத்தால் துன்பப் படுவதுபோல. தண்ணீரை அதிக அளவு குடிப்பதற்குப் பதிலாக, ஏன் விஷத்தை நீக்கி இந்த எரியும் தாகத்திலிருந்து விடுபடக் கூடாது?

**கே:** நான் அகங்காரத்தை நீக்க வேண்டும்!

**ம:** 'காலத்திலும், இடத்திலும் உள்ள ஒரு நபர் நான்' என்னும் உணர்வு விஷம். ஒரு வகையில் காலம் என்பதே விஷம். காலத்திற்குள், எல்லாமும் ஒரு முடிவிற்கு வந்து, புதியவை பிறக்கின்றன. அவற்றையும் அவற்றின் முறை வரும்போது காலம் விழுங்கி விடுகிறது. நீ காலத்துடன் நெருக்கமாக இருக்காதே. 'அடுத்து என்ன? அடுத்து என்ன?' என்று பதட்டத்துடன் கேட்காதே. நீ காலத்திலிருந்து வெளியேறி, அது உலகத்தை விழுங்குவதைப் பார். 'நன்று. ஒவ்வொன்றிற்கும் முடிவைக் கொடுப்பது காலத்தின் இயல்பில் உள்ளது. இருந்து விட்டுப் போகட்டும். எனக்கு அது

பொருட்டல்ல. நான் எரிபடக் கூடியவன் அல்ல. நான் எரிபொருளைச் சேகரிக்க வேண்டியதும் இல்லை' என்று சொல்.

**கே:** சாட்சி, சாட்சியாகப் பார்க்க வேண்டியவை இல்லாமல் இருக்க முடியுமா?

**ம:** சாட்சியாகப் பார்க்க எப்போதும் ஏதாவது இருக்கும். ஏதாவது ஒன்று இல்லை என்றால், அதன் இல்லாமை இருக்கும். சாட்சியாகப் பார்ப்பது இயல்பானது, அதனால் பிரச்சனை எதுவும் கிடையாது. சுய அடையாளத்திற்கு வழிவகுக்கும் அதிகப்படியான ஆர்வம்தான் பிரச்சனை. நீ எதிலெல்லாம் ஈடுபட்டிருக்கிறாயோ அவற்றை நீ மெய்யானவை என்று எடுத்துக் கொள்கிறாய்.

**கே:** 'நான்' என்பது மெய்யானதா அல்லது மெய்யற்றதா? 'நான்' என்பது சாட்சியா? சாட்சி மெய்யானதா அல்லது மெய்யற்றதா?

**ம:** எது தூயதாகவும், கலங்கப்படாமலும், சார்ந்தில்லாமலும் இருக்கிறதோ அது மெய்யானது. எது கலங்கப்பட்டு, கலங்கப்பட்டு, சார்புடையதாகவும், நிலையற்றதாகவும் இருக்கிறதோ அது மெய்யற்றது. வார்த்தைகளால் தவறாக வழி நடத்தப்படாதே. ஒரே வார்த்தை பல அர்த்தங்களையும், முரண்பாடான அர்த்தங்களையும் கூடத் தெரிவிக்கலாம். இன்பமானதைத் தேடுகின்ற, இன்பமற்றதை ஒதுக்குகின்ற 'நான்' பொய்யானது; இன்பத்தையும், துன்பத்தையும் பிரிக்க முடியாததாகப் பார்க்கின்ற 'நான்' சரியாகப் பார்க்கிறது. தன்னால் பார்க்கப்படுவதோடு கலக்கும் சாட்சிதான் நபர் (வியக்தி); சாந்தமாகத் தனித்து நிற்கும், அசையாத மற்றும் பார்க்கப்படுவதால் தொடப்படாத சாட்சி, மெய்யின் தீப ஸ்தம்பம். அதுதான் வெளிப்படாததில் (அவியக்தாவில்) உள்ளார்ந் திருக்கும் பிரக்ஞை, வெளிப்பட்டதைத் தொடர்பு கொள்ளும் புள்ளி. சாட்சி இல்லாமல் பிரபஞ்சம் இருக்க முடியாது; பிரபஞ்சம் இல்லாமல் சாட்சி இருக்க முடியாது.

**கே:** காலம் உலகை உட்கொள்கிறது. காலத்தின் சாட்சி யார்?

**ம:** அவர் காலத்திற்கு அப்பாற்பட்டவர் - பெயரிடப்பட முடியாதவர். ஒரு தீக் கங்கு வட்டவட்டமாக வேகமாகச் சுற்றப்பட்டால் ஒரு ஒளிரும் வட்டமாகத் தோன்றும். சுற்றுவது

நின்றுவிட்டால் தீக் கங்கு மட்டும் இருக்கும். அதேபோல, இயக்கத்திலுள்ள 'நான்' உலகை உருவாக்குகிறது. அமைதியாக இருக்கும் 'நான்' மெய்மையாகிறது. ஒரு மனிதன் ஒரு டார்ச் விளக்குடன் ஒரு அரங்கத்திற்குள் நடந்து போவதைப் போன்று நீ இருக்கிறாய். உன்னால் ஒளிவீச்சுக்குள் என்ன இருக்கிறதோ அதைத்தான் பார்க்க முடியும். மற்றவையெல்லாம் இருளில்தான் இருக்கும்.

**கே:** நான் உலகத்தை உருவாக்கினால் என்னால் அதை மாற்ற முடிய வேண்டும்.

**ம:** கண்டிப்பாக உன்னால் முடியும். ஆனால் உன்னை அதனுடன் அடையாளம் காண்பதை நீ நிறுத்தி விட்டு, அதற்கு அப்பால் செல்ல வேண்டும். பிறகு உனக்கு அழிக்கும் சக்தியும், திரும்ப உருவாக்கும் சக்தியும் இருக்கும்.

**கே:** நான் வேண்டுவதெல்லாம் சுதந்திரமாக இருப்பதே.

**ம:** நீ இரண்டு காரியங்களைப் பற்றி அறிய வேண்டும்: எதிலிருந்து நீ சுதந்திரமாக இருக்கவேண்டும்? எது உன்னைக் கட்டிப் போட்டிருக்கிறது?

**கே:** நீங்கள் ஏன் பிரபஞ்சத்தை இல்லாமல் செய்கிறீர்கள்?

**ம:** எனக்கு பிரபஞ்சத்தைப் பற்றி அக்கறை இல்லை. அது இருக்கட்டும், அல்லது இல்லாமல் போகட்டும். எனக்கு என்னைத் தெரிந்தால் போதும்.

**கே:** நீங்கள் உலகத்திற்கு அப்பாற்பட்டவராக இருந்தால் உங்களால் அதற்குப் பயன் எதுவும் கிடையாது.

**ம:** இருக்கின்ற சுயத்திற்காக வருத்தப்படு. இல்லாத உலகத்திற்காக வேண்டாம்! ஒரு கனவில் மூழ்கியதால் நீ உன் உண்மையான சுயத்தை மறந்துவிட்டாய்.

**கே:** உலகம் இல்லாமல் அன்பிற்கு இடம் இல்லை.

**ம:** பெரும்பாலும் அப்படித்தான். ஆனால் இருத்தல், விழிப்புணர்வு, அன்பு, அழகு ஆகிய இந்த குணாதிசயங்கள் எல்லாம்

உலகில் மெய்யின் பிரதிபலிப்பு. மெய் இல்லையென்றால் பிரதிபலிப்பு இல்லை.

**கே:** உலகம் விரும்பக் கூடிய பொருட்களாலும், மக்களாலும் நிறைந்திருக்கிறது. அதை நான் எப்படி இல்லாததாகக் கற்பனை செய்ய முடியும்?

**ம:** விரும்பத்தக்கதை விரும்புபவர்களிடம் விட்டுவிடு. உன் ஆசையின் ஓட்டத்தை, எடுத்துக் கொள்வதிலிருந்து கொடுப்பதற்கு மாற்று. கொடுப்பதற்கும், பகிர்ந்துகொள்வதற்கும் உள்ள ஈடுபாடு உன் மனதில் உள்ள புற உலகத்தைப் பற்றிய கருத்தையும், கொடுக்கின்ற கருத்தையும் கழுவிவிடும். கொடுப்பதற்கும், எடுத்துக் கொள்வதற்கும் அப்பால் அன்பின் தூய ஒளிவீச்சு மட்டும் இருக்கும்.

**கே:** அன்பில் நேசிப்பவரும், நேசிக்கப்படுபவரும் என இருமைத்தன்மை இருக்க வேண்டும்.

**ம:** அன்பில் ஒருவர்கூட இல்லையென்றால், எப்படி இருவர் இருக்க முடியும்? அன்பு என்பது பிரிய மறுப்பது, வித்தியாசங்களை ஏற்படுத்த மறுப்பது. ஒருமையைப் பற்றிச் சிந்திப்பதற்கு முன்னால், நீ இருமையை உருவாக்க வேண்டும். நீ உண்மையாலுமே நேசிக்கும்போது 'நான் உன்னை நேசிக்கிறேன்' என்று சொல்ல மாட்டாய்; குறிப்பிடும்போது அங்கு இருமை இருக்கிறது.

**கே:** எது என்னை இந்தியாவிற்குத் திரும்பத் திரும்ப வரச் செய்கிறது? வாழ்வதற்கு ஆகும் செலவை ஒப்பிட்டுப் பார்த்தால் இங்கு மிகக் குறைவு என்னும் காரணம் அல்ல. வண்ணமய மானவையும், விதவிதமானவையுமான தாக்கங்களும் அல்ல. இவற்றைவிட ஏதோ ஒரு முக்கியமான காரணி இருக்க வேண்டும்.

**ம:** ஆன்மீகத் தன்மையும் இங்கு உள்ளது. புறத்திற்கும், அகத்திற்கும் இடையேயான பிரிவு இந்தியாவில் மிகக் குறைவு. இங்கு அகத்தைப் புறத்தில் வெளிப்படுத்துவது சுலபம். ஒருமுகப் படுத்துவது சுலபம். சமுதாயம் அவ்வளவு இறுகியது அல்ல.

**கே:** ஆமாம். மேற்கத்திய நாடுகளில் தாமச குணமும், ராஜச குணமும்தான் மேலோங்கி உள்ளன. இந்தியாவில் சாத்வீகமும், ஒத்திசைவும், சமநிலையும் அதிகமாக உள்ளது.

**ம:** குணங்களுக்கு அப்பால் உன்னால் செல்ல முடியாதா? சாத்வீகத்தை ஏன் தேர்ந்தெடுக்கிறாய்? நீ என்னவோ அதாக இரு; எங்கு இருக்கிறாயோ அங்கேயே இரு; குணங்களைப் பற்றி கவலைப்படாதே.

**கே:** எனக்குப் பலம் இல்லை.

**ம:** இது நீ இந்தியாவில் சிறிதளவுதான் கிடைக்கப் பெற்றிருக் கிறாய் என்று காண்பிக்கிறது. உண்மையாலுமே நீ என்ன வைத்திருக் கிறாயோ அதை இழக்க முடியாது. நீ உன் ஸ்வரூப ஸ்திதியில் நன்கு நிலைபெற்றிருந்தால், இடத்தை மாற்றுவது அதைப் பாதிக்காது.

**கே:** இந்தியாவில் ஆன்மீக வாழ்க்கை சுலபமானது. மேற்கில் அவ்வாறில்லை. சூழ்நிலையோடு ஒருவர் மிகப் பெரும் அளவில் ஒத்துப் போக வேண்டும்.

**ம:** உன் சொந்தச் சூழ்நிலையை நீயே ஏன் உருவாக்கிக் கொள்ளக் கூடாது? உலகத்திற்கு நீ கொடுக்கும் சக்தியின் அளவுதான் அதற்கு உன்மேல் இருக்கும். கிளர்ச்சி செய். இருமைக்கு அப்பால் செல். கிழக்கிற்கும், மேற்கிற்கும் எந்த வித்தியாசத்தையும் ஏற்படுத்தாதே.

**கே:** ஒருவர் ஆன்மீகத்தன்மை முற்றிலும் இல்லாத இடத்தில் இருந்தால் என்ன செய்வது?

**ம:** எதையும் செய்ய வேண்டாம். நீயாக இரு. வெளியே இரு. அப்பால் பார்.

**கே:** வீட்டில் மோதல்கள் வரலாம். பெற்றோர்கள் அரிதாகத்தான் புரிந்துகொள்கிறார்கள்.

**ம:** உனக்கு உன் உண்மையான இருத்தலைத் தெரிந்தால் பிரச்சனை இல்லை. உன் பெற்றோர்களை சந்தோசப்படுத்தலாம், அல்லது சந்தோசப்படுத்தாமலும் போகலாம்; திருமணம் செய்து கொள்ளலாம், அல்லது செய்யாமலும் இருக்கலாம்; நிறைய சம்பாதிக்கலாம், அல்லது சம்பாதிக்காமலும் போகலாம்; இவை யெல்லாம் உனக்கு ஒன்றே. வெறுமனே சூழ்நிலைகளுக்குத் தகுந்தவாறு செயல்படு, இருப்பினும் ஒவ்வொரு சூழ்நிலையிலும் நிஜங்களுக்கும், மெய்மைக்கும் நெருக்கமாகச் செயல்படு.

**கே:** அது மிக உயர்ந்த நிலை அல்லவா?

**ம:** இல்லை, இல்லை. அது இயல்பான நிலை. நீ அதை உயர்ந்த நிலை என்று சொல்வது அதற்குப் பயப்படுவதால். முதலில் அச்சமற்று இரு. பயப்பட எதுவும் கிடையாது என்று பார். பயமின்மை உச்ச உயர்விற்கான வாசல்.

**கே:** எந்த அளவு முயற்சியும் என்னைப் பயமற்றவனாக ஆக்காது.

**ம:** பயப்பட எதுவும் கிடையாது என்று நீ பார்த்தால் பயமின்மை தானாக வரும். நீ ஒரு சந்தடியான தெருவில் நடக்கும்போது, மக்களைத் தாண்டிச் செல்கிறாய். சிலரை உற்றுப் பார்க்கிறாய், சிலரை வெறுமனே பார்க்கிறாய். ஆனால் நீ நிற்பதில்லை. நிற்பதுதான் இடைஞ்சலை உருவாக்குகிறது. நகர்ந்துகொண்டே இரு! பெயர்களையும், உருவங்களையும் பொருட்படுத்தாதே. அவற்றோடு பந்தப்படுத்திக் கொள்ளாதே. உன் பந்தம்தான் உன் தளை.

**கே:** என்னை ஒருவன் முகத்தின்மேல் அடித்தால் நான் என்ன செய்ய வேண்டும்?

**ம:** உன் பிறவிக் குணம் மற்றும், பெறப்பட்ட குணங்களின்படி நீ எதிர்வினை புரிவாய்.

**கே:** அது தவிர்க்க முடியாததா? நான் உலகத்தில், இருப்பதுபோல் இருக்க சபிக்கப்பட்டவனா?

**ம:** ஒரு பொற்கொல்லர் ஒரு நகையை மாற்றி வடிவமைக்க முதலில் அதை வடிவமில்லாமல் உருக்க வேண்டும். அதேபோல ஒரு புதிய பெயரும், வடிவமும் வெளிவர ஒருவர் தன் அசலான நிலைக்குத் திரும்பவேண்டும். இறத்தல் புதுப்பித்தலுக்கு அத்யாவசியம்.

**கே:** நீங்கள் எப்போதும் அப்பால் செல்வதையும், விட்டேத்தியாக இருப்பதையும், தனிமையையும் வலியுறுத்துகிறீர்கள். 'சரி' மற்றும் 'தவறு' என்னும் வார்த்தைகளை அரிதாகத்தான் உபயோகிக்கிறீர்கள். இது ஏன் அப்படி?

**ம:** உன் ஸ்வரூபத்தில் ஆழ்ந்திருப்பது சரி; அவ்வாறு இல்லாமல் இருப்பது தவறு. மற்றவை எல்லாம் நிபந்தனைக்குட்பட்டவை. தவறிலிருந்து சரியானதைப் பிரிக்க நீ ஆர்வத்துடன் இருக்கிறாய். ஏனெனில் உனக்கு செயல்பட ஒரு அடிப்படை தேவைப்படுகிறது. நீ எப்போதும் ஏதாவது ஒன்றைச் செய்வதிலேயே இருக்கிறாய். ஆனால் தனிப்பட்டவாறு ஊக்கப்படுத்தப்பட்ட, சில மதிப்பீடுகளை அடிப்படையாகக் கொண்ட, சில விளைவுகளைக் குறிக்கோளாகக் கொண்ட செயல், செயல்படாமையை விட மோசமானது. ஏனெனில் அதன் பலன்கள் எப்போதும் கசப்பானவை.

**கே:** ஆத்ம விழிப்புணர்வும், அன்பும் ஒன்றா?

**ம:** ஆமாம். விழிப்புணர்வு துடிப்பானது. அன்பு என்பது இருத்தல். விழிப்புணர்வு சிதானந்த ரூபம். மனம் அதாகவே கணக்கற்ற சாத்தியக் கூறுகளை மெய்ப்பிக்க முடியும். ஆனால் அவை அன்பால் உந்தப்படாமல் இருந்தால் மதிப்பற்றவை. உருவாக்கத்தின் ஆதாரம் அன்பு. அது இல்லாமல் குழப்பம் மட்டும்தான் இருக்கும்.

**கே:** விழிப்புணர்வில் செயல் எங்கு உள்ளது?

**ம:** நீ எப்போதும் செயல்படுகிறாய்! இந்தச் சுபாவம் தீர்க்க முடியாத வியாதியைப் போல் ஆகி விட்டது. இயக்கமும், அமைதி யின்மையும், போராட்டமும் இல்லாவிட்டால் நீ அதைச் செயல்பாடு என்று சொல்ல மாட்டாய். செயல்படுவதற்காகவே செயல்படுவதுதான் குழப்பம். உண்மையான செயல்பாடு அழிக்காது; அது மாற்றத்தை ஏற்படுத்தும். இடம் மாறுவது வெறுமனே போக்குவரத்து; ஒரு நிலையான மன மாற்றம்தான் செயல்பாடு. உணர்ந்தறியக் கூடிய எதுவுமே மெய்யானதல்ல என்று ஞாபகம் வைத்திரு. இயங்குவது செயல் அல்ல. செயல்பாடு மறைவானது, அறியப்படாதது, அறிய முடியாதது. நீ அதன் பலன்களை மட்டும்தான் பார்க்கலாம்.

**கே:** கடவுள் எல்லாமும் செய்பவர் அல்லவா?

**ம:** நீ ஏன் ஒரு புறவயப்பட்ட செயல்புரிபவரைக் கொண்டு வருகிறாய்? உலகம் தன்னிலிருந்தே தன்னை மறு உருவாக்கம்

செய்துகொள்கிறது. அது ஒரு முடிவற்ற தொடர்ச்செயல், நிலையற்றது நிலையற்றதைப் பிறப்பிக்கிறது. உன் அகந்தைதான் ஒரு செயல்புரிபவர் இருக்க வேண்டும் என்று உன்னை நினைக்க வைக்கிறது.

இந்த உன் கற்பனையான சொந்த வார்ப்படம் (MOULD) எவ்வளவுதான் பயங்கரமாக இருந்தாலும், அதைக் கட்டுப்படுத்த அதிலிருந்து நீ ஒரு கடவுளை உருவாக்குகிறாய். உன் மனம் என்னும் படச் சுருளின் வழியாக நீ கற்பனையான ஒரு உலகத்தையும், கூடவே அதற்குக் காரண காரியத்தைக் கொடுக்க ஒரு கடவுளையும் உருவகப்படுத்துகிறாய். இவையெல்லாம் கற்பனையான விரிவாக்கங்கள்- அதிலிருந்து வெளியேறு.

**கே:** உலகத்தை மனோமயமானது என்று பார்ப்பது எவ்வளவு கடினம்! அதன் தொட்டு அறியும் மெய்த்தன்மை மிகவும் திருப்திப் படுத்துவதாக இருக்கிறது.

**ம:** மிகவும் மெய்யானதாகத் தோன்றுவதுதான் கற்பனையின் புதிர்த்தன்மை. நீ திருமணம் செய்து கொள்ளாமலோ, அல்லது திருமணம் செய்து கொண்டோ, ஒரு சந்நியாசியாகவோ அல்லது ஒரு குடும்பஸ்தனாகவோ இருக்கலாம். அது பொருட்டல்ல. நீ உன் கற்பனையின் அடிமையா அல்லது அடிமையில்லையா? நீ எந்த முடிவெடுத்தாலும், எந்த வேலை செய்தாலும், அது தவறாமல் கற்பனையை, யூகங்கள் நிஜங்களாக நடைபோடுவதை அடிப்படை யாகக் கொண்டது.

**கே:** இங்கு நான் உங்கள் முன் உட்கார்ந்திருக்கிறேன். இதில் எந்தப் பகுதி கற்பனையானது?

**ம:** முழுவதுமே. இடமும், காலமுமே கற்பனை செய்யப் பட்டவை.

**கே:** அதற்கு நான் இல்லை என்று அர்த்தமா?

**ம:** நானுமே இல்லை. எல்லா இருப்பவைகளும் கற்பனை யானவை.

**கே:** விழிப்புணர்வுமே கற்பனையா?

**ம:** எல்லாவற்றையும் நிரப்பும், எல்லவற்றிற்கும் அப்பால் இருக்கும் தூய விழிப்புணர்வு, அளவான இருத்தல் அல்ல. எல்லா அளவானவையும் கற்பனையானவை. அளவற்றது மட்டுமே மெய்யானது.

**கே:** நீங்கள் என்னைப் பார்க்கும் போது எதைப் பார்க்கிறீர்கள்?

**ம:** நீ உள்ளதாக நீயே கற்பனை செய்வதாகப் பார்க்கிறேன்.

**கே:** என்னைப் போல் பலர் இருக்கிறார்கள். இருப்பினும் ஒவ்வொருவரும் வித்தியாசமானவர்கள்.

**ம:** எல்லா உருவகங்களின் மொத்தம்தான் 'மஹா மாயா' எனப்படும் மாபெரும் மாயை.

**கே:** நீங்கள் உங்களைப் பார்க்கும்போது எதைப் பார்க்கிறீர்கள்?

**ம:** அது நான் எப்படிப் பார்க்கிறேன் என்பதைப் பொருத்தது. நான் மனதின் மூலமாகப் பார்க்கும்போது, கணக்கற்ற மனிதர்களைப் பார்க்கிறேன். நான் மனதிற்கு அப்பால் பார்த்தால் சாட்சியைப் பார்க்கிறேன். சாட்சிக்கு அப்பால் வெறுமை மற்றும் குளிர்ந்த அமைதியின் அளவற்ற கனம், அடர்த்தி இருக்கிறது.

**கே:** மக்களை எப்படிக் கையாள்வது?

**ம:** ஏன் மற்றும் எதற்காகத் திட்டங்களைத் தீட்ட வேண்டும்? இம்மாதிரியான கேள்விகள் பதட்டத்தைத்தான் காண்பிக்கின்றன. உறவு என்பது உயிரோடிருக்கும் ஒன்று. உன் அகத்தில் இருக்கும் சுயத்துடன் அமைதியான சமாதானத்தோடு இருந்தால், நீ எல்லோருடனும் அமைதியான சமாதானத்துடன் இருப்பாய்.

நடப்பவைகளுக்கு நீ எஜமானன் அல்ல என்று அறி. முற்றிலும் அவசியமாகத் தேவைப்படும் செயல்களைத் தவிர உன்னால் எதிர்காலத்தைக் கட்டுப்படுத்த முடியாது. மனித உறவுகளைத் திட்டமிட முடியாது. அது மிகவும் செறிவானது மற்றும் பல விதங்களானது. புரிதலோடும், கருணையோடும், எல்லாச் சுயநலமான தேடுதலற்றும் இரு.

**கே:** கண்டிப்பாக நடப்பவைகளுக்கு நான் எஜமானன் அல்ல. சொல்லப்போனால் நான் அவற்றின் அடிமை.

**ம:** எஜமானனாகவோ, அடிமையாகவோ இருக்க வேண்டாம். விட்டேத்தியாக இரு.

**கே:** அது செயல்படுவதைத் தவிர்ப்பதைக் குறிக்கிறதா?

**ம:** உன்னால் செயல்பாட்டைத் தவிர்க்க முடியாது, மற்ற எல்லாவற்றையும் போல.

**கே:** என் செயல்களை நான் கண்டிப்பாகக் கட்டுப்படுத்த முடியும்.

**ம:** முயற்சி செய். விரைவில் நீ என்ன செய்ய வேண்டுமோ அதைத்தான் செய்வாய்.

**கே:** நான் என் மனோ திடத்தின்படி செயல்பட முடியும்.

**ம:** நீ செயல்பட்ட பிறகுதான் உன் மனோ திடத்தை அறிவாய்.

**கே:**என் ஆசைகளையும், தெரிவுகளையும், எடுத்த முடிவு களையும் ஞாபகம் வைத்திருந்து, அதன்படி செயல்படுவேன்.

**ம:** அப்படியானால் உன் ஞாபகம் முடிவு செய்கிறது, நீ அல்ல.

**கே:** இதில் நான் எங்கு வருகிறேன்?

**ம:** கவனத்தைக் கொடுப்பதால் நீ அதைச் சாத்தியமாக்குகிறாய்.

**கே:** சுதந்திரமான மனோதிடம் (FREE WILL) என்னும் ஒன்று இல்லையா? ஆசைப்பட எனக்குச் சுதந்திரம் இல்லையா?

**ம:** இல்லை, இல்லை. ஆசைப்பட நீ நிர்பந்திக்கப் படுகிறாய். இந்தியாவில் சுதந்திரமான மனோதிடம் என்னும் கருத்தே இல்லை. ஆகையால் அதற்கு வார்த்தை இங்கு இல்லை. ஆசை என்பது, தானே, தன்னையே கட்டுப்படுத்த ஒப்புக் கொள்ளும் ஒரு முடிவு, ஒரு தளை.

**கே:** என் வரையறைகளைத் தேர்ந்தெடுக்க நான் சுதந்திர மானவன்.

**ம:** நீ முதலில் சுதந்திரமாக இருக்க வேண்டும். நீ உலகத்தில் சுதந்திரமாக இருக்க, உலகத்திலிருந்து சுதந்திரமாக இருக்க

வேண்டும். இல்லையென்றால் உன் கடந்த காலம் உன்னையும், உன் எதிர்காலத்தையும் தீர்மானிக்கும். நடந்ததற்கும், நடக்க வேண்டியதற்கும் இடையில் நீ சிக்கிக் கொண்டுள்ளாய். அதை விதி என்றோ, கர்மா என்றோ சொல். ஆனால் ஒருபோதும் சுதந்திரம் என்று சொல்லாதே. முதலில் உன் சத்ய ஸ்வரூபத்திற்குத் திரும்பு. பிறகு அன்பின் இதயத்திலிருந்து செயல்படு.

**கே:** வெளிப்பட்டதிற்குள் வெளிப்படாததின் முத்திரை எங்கே உள்ளது?

**ம:** ஒன்றும் இல்லை. வெளிப்படாததின் முத்திரையை வெளிப் பட்டதில் நீ தேடும் கணத்தில் வெளிப்பட்டது கரைந்துவிடும். வெளிப்படாததை மனதால் புரிந்துகொள்ள நீ முயற்சித்தால் உடனடியாக நீ மனதிற்கு அப்பால் சென்றுவிடுவாய். இது தீயை நீ ஒரு மரத்தடியால் தூண்டும்போது, தடியை எரித்துவிடுவதைப் போன்றது. மனதை வெளிப்பட்டதை ஆராய உபயோகி. முட்டை ஓட்டைக் கொத்தும் முட்டைக்குள் இருக்கும் குஞ்சைப் போல இரு. அதற்கு ஓட்டிற்கு வெளியில் இருக்கும் வாழ்க்கையைப் பற்றிய கற்பனை அர்த்தமற்றது. ஆனால் ஓட்டை உள்ளுக்குள் இருந்து கொத்துவது ஓட்டை உடைத்து, குஞ்சை விடுவிக்கும்.அதேபோல மனதை உள்ளுக்குள் இருந்து நித்ய, அநித்யத்தைப் பற்றிய விவேகத்தாலும், அதன் முரண்பாடுகளையும், முட்டாள் தனத்தையும் புரிந்து கொள்வதாலும் உடை.

**கே:** ஓட்டை உடைக்க வேண்டும் என்னும் ஏக்கம் எங்கிருந்து வருகிறது?

**ம:** வெளிப்படாததிலிருந்து (அவியக்தாவிலிருந்து) .

# 73. மனதின் இறப்பு, ஞானத்தின் பிறப்பு

**கேட்பவர்:** ஒருவர் தன் உண்மையான இயல்பை அறிவதற்கு முன்பாக அவர் நபராக இருக்க வேண்டியதில்லையா? தான் என்னும் தன்முனைப்பிற்கு மதிப்பு எதுவும் இல்லையா?

**மஹராஜ்:** நபர்த்தன்மையால் சிறிதளவே பயன். அது தன் சுய காரியங்களில் ஆழமாக ஈடுபட்டு, அதன் மெய்யான இருத்தலைப் பற்றி முற்றிலுமாக அறியாமல் இருக்கிறது. சாட்சியாகப் பார்க்கின்ற விழிப்புணர்வு நபரின்மீது செயல்புரிந்து, நபர் என்பது கவனிக்கப் படும் பொருளாக ஆனால் ஒழிய மெய்யறிதலுக்குச் சாத்தியம் இல்லை. சாட்சிதான் மெய்யறிதலை விரும்பத்தக்கதாகவும், அடையக் கூடியதாகவும் மாற்றுகிறது.

**கே:** ஒரு நபரின் வாழ்க்கையில் அது சாட்சியாக மாறும் தருணம் வரும்.

**ம:** இல்லை. நபர் தானாகவே சாட்சியாக ஒருபோதும் ஆகாது. இது ஒரு குளிர்ந்த மெழுகுவர்த்தி நாளடைவில் தானாகவே தீப் பற்றிக் கொள்ளும் என்று எதிர்பார்ப்பதைப் போன்றது. விழிப்புணர்வு என்னும் நெருப்பு அதைத் தொட்டால் ஒழிய நபர் அறியாமையாகிய இருளில் எப்போதும் இருப்பார்.

**கே:** மெழுகுவர்த்தியைப் பற்ற வைப்பது யார்?

**ம:** குரு, அவருடைய வார்த்தைகள், அவருடன் இருத்தல். இந்தியாவில் அடிக்கடி மந்திரம் அதைச் செய்கிறது. ஒருமுறை மெழுகுவர்த்தி பற்ற வைக்கப்பட்டுவிட்டால், நெருப்பு அதைத் தீர்த்துவிடும்.

**கே:** மந்திரம் எப்படி அவ்வளவு வலிமையாகச் செயல்புரிகிறது?

**ம:** மந்திரத்தைத் திரும்பத் திரும்பச் சொல்வது நபர் தன்னுடைய நலனுக்காகச் செய்கின்ற ஒன்று அல்ல. நபர் அல்ல பயனடைபவர். அது மெழுகுவத்தி எரிவதால் எப்படி அதிகமாகாதோ, அதைப் போன்றது.

**கே:** நபர் தானாகவே தன்னைப் பற்றிய ஸ்வரூபத்தை அறிய முடியாதா?

**ம:** ஆமாம். சில சமயம் அதிகமான துன்பத்தின் விளைவாக அது நிகழ்கிறது. அந்த முடிவற்ற வலியிலிருந்து குரு உன்னைக் காப்பாற்ற விழைகிறார். அவருடைய அருள் அத்தகையது. கண்டுபிடிக்கக் கூடிய புறவயமான குரு இல்லாவிட்டாலும், உள்ளிருந்து நடத்துகின்ற, உதவுகின்ற அகக் குருவாகிய சத்குரு எப்போதும் இருக்கிறார். உள்ளுக்குள் இருந்து அவர் ஊக்கத்தைக் கொடுத்து உதவுகிறார். 'அகம்' மற்றும் 'புறம்' ஆகிய வார்த்தைகள் உடலோடு மட்டும்தான் தொடர்புடையவை; மெய்மையில் அவையெல்லாம் ஒன்றே - புறம் அகத்தின் ஒரு வெளிப்பாடு மட்டுமே. ஒரு உயர்ந்த நிலையிலிருந்து வருவதைப் போல் ஆத்ம ஞானம் வருகிறது.

**கே:** தீப்பொறி பற்ற வைக்கப்படுவதால் அதற்கு முன்பும், பின்பும் என்ன வித்தியாசம்?

**ம:** தீப்பொறி பற்றவைக்கப்படுவதற்கு முன்பு வித்தியாசங்களை உணர்ந்தறிய அங்கு சாட்சி இல்லை. நபர் உணர்வுடன் இருக்கலாம். ஆனால் அதற்கு உணர்வுடன் இருக்கும் விழிப்புணர்வு இருக்காது. அது என்ன நினைக்கிறதோ, உணர்கிறதோ, அனுபவப் படுகிறதோ அதனுடன் முற்றிலுமாகத் தன்னை அடையாளப் படுத்திக் கொள்கிறது. அதற்குள் இருக்கும் இருள் அதன் சொந்த உருவாக்கம். அந்த இருளை நபர் கேள்விகேட்டால் அது கரைந்துவிடும். கேள்விகேட்கும் ஆவல் குருவால் ஊன்றப் படுகிறது. வேறு வார்த்தைகளில் சொல்வதானால் நபருக்கும், சாட்சிக்கும் உள்ள வித்தியாசம் என்பது தன்னைப்பற்றி அறியாமலும், அறிந்தும் இருப்பதற்கு இடையிலானதைப் போன்றது. சாத்வீகம் மேலோங்கி இருக்கும்போது,

விழிப்புணர்வில் காணப்படும் புறஉலகம் விழிப்புணர்வின் தன்மையை உடையதாக இருக்கும்; ஆனால் ராஜசமும், தாமசமும் தோன்றும்போது அவை மறைக்கவும், திரிக்கவும் செய்து நீ மெய்யற்றதை மெய் என்று பார்ப்பாய்.

**கே:** குரு வருவதற்காக நபர் தன்னை என்ன ஆயத்தம் செய்ய வேண்டும்?

**ம:** தயாராக இருப்பதற்கான ஆசையின் அர்த்தமே குரு வந்துவிட்டார் என்பதும், நெருப்பு பற்ற வைக்கப்பட்டுவிட்டது என்பதுமாகும். அது ஒரு சம்பந்தமில்லாத வார்த்தையாகவோ, அல்லது ஒரு புத்தகத்தில் உள்ள ஒரு பக்கமாகவோ இருக்கலாம் - குருவின் அருள் புதிராக வேலை செய்யும்.

**கே:** சுயமாகத் தயாராவது என்று ஒன்று இல்லையா? யோக சாதனா என்பதைப் பற்றி நிறையக் கேள்விப்படுகிறோம்.

**ம:** சாதனாவைச் செய்வது நபர் அல்ல. நபர் கடைசி வரையிலும் அமைதியற்றும், எதிர்ப்பிலும்தான் இருக்கும். சாட்சிதான் நபரின் மீதும், அதன் கடந்தகால, நிகழ்கால, எதிர்கால மாயைகளின் மொத்தத்தின் மேலும் செயல் புரிவது.

**கே:** நீங்கள் சொல்வது உண்மையென்று எப்படி நாங்கள் அறிந்து கொள்வது? அது சுயப் பூர்த்தியுடன் இருந்து, அக முரண்பாடு களற்று இருந்தாலும், அது இடைவிடாமல் திரும்பத் திரும்பச் சொல்வதால் போஷிக்கப்பட்டு, செறிவூட்டப்பட்ட வளமான கற்பனையின் உருவாக்கம் அல்லவா?

**ம:** உண்மையின் அத்தாட்சி கேட்பவரின் மேல் அதற்கு உள்ள தாக்கத்தில் இருக்கும்.

**கே:**வார்த்தைகள் ஒரு மிகவும் வலிமையான தாக்கத்தைக் கொண்டிருப்பன. கேட்பதாலும், திரும்பத் திரும்ப உச்சரிப்ப தாலும் ஒருவர் பல்வேறு வகையான சமாதி நிலைகளை அனுபவப் படலாம். கேட்பவரின் அனுபவங்கள் தூண்டப்பட்டவையாக இருக்கலாம். அதை அத்தாட்சியாக எடுத்துக் கொள்ள முடியாது.

**ம:** விளைவு ஒரு அனுபவமாக இருக்க வேண்டியதில்லை. அது குணாதிசயத்தில், உந்துதலில், மக்களோடும், தன் சுயத்தோடும் கொண்ட தொடர்பில் ஒரு மாற்றமாக இருக்கலாம். வார்த்தைகளாலோ, அல்லது மருந்துகளாலோ, அல்லது பிற புலன் சார்ந்த அல்லது மனோ வயப்பட்டவைகளால் தூண்டப்பட்ட சமாதி நிலைகள் மற்றும் ஞானதிருஷ்டிகள் தற்காலிகமானவை மற்றும் முற்றுப் பெறாதவை. இங்கு சொல்லப்பட்டவைகளில் இருக்கும் உண்மை அசைக்க முடியாதவை மற்றும் நீடித்திருப்பவை. அதன் அத்தாட்சி கேட்பவரிடம், அவருடைய முழு இருத்தலில் ஏற்பட்ட ஆழமான மற்றும் நிலையான மாற்றங்களில் உள்ளது. நினைத்துக் கூடப் பார்க்க முடியாத, தன்னுடைய சொந்த இருத்தலையே சந்தேகிப்பது என்பதைச் செய்தால் ஒழிய, அது அவரால் சந்தேகிக்கக் கூடிய ஏதோ ஒன்று அல்ல. என்னுடைய அனுபவம் உன்னுடைய சொந்த அனுபவமாகவும் ஆகும்போது வேறு என்ன அத்தாட்சி உனக்கு வேண்டும்?

**கே:** அனுபவிப்பவர் அவருடைய அனுபவத்தின் அத்தாட்சி.

**ம:** ஆமாம். ஆனால் அனுபவிப்பவருக்கு வேறு எந்த அத்தாட்சியும் தேவையில்லை. நான் உள்ளேன். நான் உள்ளேன் என்று எனக்குத் தெரியும். நீ மேற்கொண்டு அத்தாட்சிகளைக் கேட்க முடியாது.

**கே:** உள்ளவற்றைப் பற்றிய உண்மையான அறிவு இருக்க முடியுமா?

**ம:** சார்புத் தன்மையில் - ஆமாம். தீர்க்கமாக - ஒன்றுமே இல்லை. அந்த ஒன்றுமில்லாததை அறிவதே உண்மையான அறிவு.

**கே:** சார்புடையதற்கும், தீர்க்கமானதற்கும் என்ன தொடர்பு?

**ம:** அவை ஒரே மாதிரியானவை.

**கே:** எந்தவிதத்தில் அவை ஒரே மாதிரியானவை?

**ம:** நிசப்தத்தில் வார்த்தைகள் பேசப்படுகின்றன. சார்புடையவை முடிந்துபோகும்போது தீர்க்கமானது மிஞ்சுகிறது. வார்த்தைகள் பேசப்படுவதற்கு முன்பு இருந்த நிசப்தம், பேசி முடித்த பிறகு

இருக்கும் நிசப்தத்திலிருந்து வித்தியாசமானதா? நிசப்தம் என்பது ஒன்றுதான். அது இல்லாவிட்டால் வார்த்தைகளைக் கேட்க முடியாது. வார்த்தைகளுக்குப் பின்னால் அது எப்போதும் இருக்கிறது. உன் கவனத்தை வார்த்தைகளிலிருந்து நிசப்தத்திற்கு மாற்று. அப்போது நீ அதைக் கேட்பாய். மனம் அனுபவத்திற்காக ஏங்குகிறது. அனுபவத்தின் ஞாபகத்தை அது அறிவு என்று எடுத்துக் கொள்கிறது. ஞானி எல்லா அனுபவங்களுக்கும் அப்பாற்பட்டவர். அவருடைய ஞாபகம் கடந்தகாலத்தைய எதையும் கொண்டிருக்காது. அவர் முற்றிலுமாக குறிப்பிட்ட எதனுடனும் தொடர்புடையவர் அல்ல. ஆனால் மனம் கோட்பாடுகளுக்கும், வரையறைகளுக்கும் ஏங்குகிறது. அது எப்போதும் மெய்மையை வார்த்தை வடிவத்திற்குள் அடக்க ஆர்வம் கொண்டிருக்கிறது. ஒவ்வொன்றிலும் அது ஒரு கருத்தை வேண்டுகிறது. ஏனெனில் கருத்துக்கள் இல்லையென்றால் மனம் என்பது இருக்காது. மெய்மை தனித்திருப்பது. ஆனால் மனம் அதைத் தனியாக இருக்க விடாது. மாறாக அது மெய்யற்றதைக் கையாள்கிறது. இருப்பினும் மெய்யற்றதை மெய்யற்றதாகக் கண்டுபிடிப்பதை மனம் மட்டுமே செய்ய முடியும்.

**கே:** மெய்யை மெய்யாகக் காண்பதையும் அதுதான் செய்கிறது.

**ம:** மெய்யைக் காண்பது என்னும் நிலை எதுவும் கிடையாது. யார் எதைப் பார்ப்பது? நீ மெய்யாகத்தான் இருக்க முடியும் - எப்படி இருந்தாலும் நீ அதுதான். பிரச்சனை கற்பனையால் மட்டுமே ஆனது. மெய்யற்ற, கற்பனையான கருத்துக்களைக் கைவிடு - அவ்வளவுதான். உண்மையைப் பற்றிய கற்பனைகளுக்கு அவசியமில்லை. ஏனெனில் எல்லாக் கற்பனைகளும் மெய்யற்றவை.

**கே:** பிறகு ஏன் நாங்கள் மெய்யைத் தேட வேண்டும் என்று அறிவுருத்தப் படுகிறோம்?

**ம:** மனதிற்கு ஏதாவது ஒரு பிரயோஜனம் இருக்க வேண்டும். மெய்யற்றதிலிருந்து மனதை விடுவிப்பதை ஊக்குவிக்க அதற்கு ஏதாவது பரிசை உத்தரவாதம் செய்ய வேண்டும். உண்மையில், பிரயோ ஜனத்திற்கு அவசியம் எதுவும் இல்லை. மெய்யற்றதிலிருந்து விடுபட்டிருப்பதுவே நல்லது. அதற்குப் பரிசு எதுவும் தேவை

யில்லை. குளித்துச் சுத்தமாக இருப்பதைப் போன்றது அது - அதுவே அதற்குப் பரிசு.

**கே:** *சுயம் அறிதல் அதன் பரிசு ஆகாதா?*

**ம:** சுயம் அறிதலின் பரிசு, தனிப்பட்ட சுயத்திலிருந்து சுதந்திரமாக இருப்பது. நீ அறிபவரை அறிய முடியாது. ஏனெனில் நீதான் அறிபவர். அறிதல் என்னும் நிஜமே அறிபவரை நிரூபிக்கிறது. உனக்கு வேறு எந்த அத்தாட்சியும் தேவையில்லை. அறிந்ததை அறிபவரை அறிய முடியாது. எப்படி ஒளியை வர்ணத்தில்தான் பார்க்கமுடியுமோ அப்படி அறிபவர் அறிவில்தான் அறியப் படுவார்.

**கே:** *அறிபவர் குறிப்பால் உணரப் படுபவர்தானா?*

**ம:** உன் உடல், மனம், உணர்ச்சிகளை நீ அறிவாய். நீ குறிப்பால் மட்டுமே உணரப் படுபவன்தானா?

**கே:** *நான் மற்றவர்களுக்குக் குறிப்பால் மட்டுமே உணரப் படுபவன். ஆனால் எனக்கு அல்ல.*

**ம:** அதேபோல்தான் நானும். உனக்கு நான் குறிப்பால் மட்டுமே உணரப்படுபவன். ஆனால் எனக்கு அல்ல. நான் இருக்கிறேன் என்று நான் இருப்பதால் எனக்குத் தெரியும். நீ மனிதனாக இருப்பதாக எல்லா நேரமும் ஞாபகப்படுத்திக் கொண்டிருக்க வேண்டியதில்லை. யாராவது உன் மனிதத்தன்மையை சந்தேகித்தால் மட்டுமே நீ அதை உறுதிப்படுத்த வேண்டும். அதே போல எல்லாமுமே நான் என்று எனக்குத் தெரியும். அவ்வாறு நான் ஜபிப்பதில்லை. நீ என்னை குறிப்பிட்ட ஒருவராகவும், நபராகவும் சொல்லும்போது நான் எதிர்க்கிறேன். நீ நபர் என்று சொல்லிக் கொண்டிருப்பது போல, நான் எப்படி இருக்கிறேனோ அவ்வாறே எப்போதும் இருக்கிறேன், மாற்றமில்லாமல். நீ எப்போதும் எவ்வாறு உள்ளாயோ அதுதான் உன் சந்தேகமில்லாத ரூபம்.

**கே:** *நீங்கள் ஒரு ஞானி என்று எப்படி அறிவீர்கள் என்று நான் உங்களைக் கேட்டால், நீங்கள் ஆசைகள் அற்றவர் என்கிறீர்கள். அதுவே நீங்கள் ஒரு ஞானி என்பதற்கு அத்தாட்சி ஆகாதா?*

**ம:** நான் மிகுந்த ஆசைகளைக் கொண்டிருந்தாலும் நான் என்னவோ அதுவேதான்.

**கே:** *நிறைய ஆசைகள் உள்ள எனக்கும், நிறைய ஆசைகள் உள்ள உங்களுக்கும் என்ன வித்தியாசம்?*

**ம:** நீ உன் ஆசைகளால் ஆட்கொள்ளப்படுவதால் அவற்றின் அடிமை. எனக்கோ அவை மற்ற பொருட்களைப் போன்றவை. அவை என் மன வெளியில் உள்ள மேகங்களைப் போன்றவை. அவை நிறைவேற என்னை நிர்ப்பந்திப்பதில்லை.

**கே:** *அறிபவரும், அவருடைய அறிவும் - அவை இரண்டும் ஒன்றா அல்லது இரண்டா?*

**ம:** அவை இரண்டுமே. வெளிப்படாதது அறிபவர். வெளிப் பட்டது அறிந்தது (knowledge). அறிந்தது எப்போதும் மன வெளியில் அசைந்துகொண்டிருப்பது. அது மாறுகிறது. அதற்குச் சொந்தமாக உருவம் இல்லை. அதற்கு வசிப்பிடம் இல்லை.

அறிபவர்தான் எல்லா அறிவிற்கும் உருவமற்ற ஆதாரம். ஒன்றிற்கு மற்றொன்று தேவை. ஆனால் மெய்மை அப்பால் இருக்கிறது. ஞானியை அறிய முடியாது. ஏனெனில் அறியப்பட யாரும் கிடையாது. நபர் என்று யாராவது இருந்தால் அதைப் பற்றி ஏதாவது சொல்ல முடியும். ஆனால் குறிப்பிட்ட ஒன்றுடன் சுய அடையாளம் என்பது இல்லாமல் போனால் என்ன சொல்ல முடியும்? நீ ஞானியிடம் அவரைப் பற்றி எதை வேண்டுமானாலும் சொல்லலாம்; எப்போதும் அவருடைய கேள்வி: 'யாரைப் பற்றி நீ பேசுகிறாய்? அப்படி ஒருவரும் இல்லவே இல்லை' என்பதாகத்தான் இருக்கும். நீ பிரபஞ்சத்தைப் பற்றி எதுவும் சொல்ல முடியாது. ஏனெனில் அது எல்லாவற்றையும் உள்ளடக்கியது. அதேபோல ஒரு ஞானியைப் பற்றி எதுவும் சொல்ல முடியாது. ஏனெனில் அவர் எல்லாமுமே. ஆனால் குறிப்பிட்ட எதுவும் இல்லை. உன் படத்தை மாட்ட உனக்கு ஒரு கொக்கி தேவை; கொக்கி இல்லாவிட்டால் படம் எதில் தொங்கும்? ஒன்றின் இருப்பிடத்தை அறிய உனக்கு வெளி (இடம்) தேவை, ஒன்று நிகழ உனக்குக் காலம் தேவை; ஆனால் காலமும், இடமுமற்றது எல்லா நடைமுறைகளையும்

மறுக்கிறது. அது எல்லாவற்றையும் உணர்ந்தறிய ஏதுவாக்குகிறது. ஆனால் அதுவோ உணர்ந்தறிதலுக்கு அப்பால் இருக்கிறது. மனம், மனதிற்கு அப்பால் என்ன இருக்கின்றது என்று அறியாது, ஆனால் அதற்கு அப்பால் உள்ளதால் மனம் அறியப்படுகிறது. ஞானி பிறப்பையோ, இறப்பையோ அறியமாட்டார்; இருத்தலும், இல்லாமையும் அவருக்கு ஒன்றே.

**கே:** உங்கள் உடல் இறக்கும்போது, நீங்கள் மிஞ்சுகிறீர்கள்.

**ம:** எதுவும் இறப்பதில்லை. உடல் வெறுமனே கற்பனை செய்யப் படுகிறது. அப்படி ஒன்றும் கிடையாது.

**கே:** இந்த நூற்றாண்டு முடிவதற்குள் நீங்கள் இறந்துவிடுவீர்கள். உங்கள் உடல் பூக்களால் மூடப்பட்டு, பிறகு எரிக்கப்பட்டு, சாம்பலாகும். அதுதான் எங்களுடைய அனுபவம். உங்களுக்கு எப்படி?

**ம:** காலம் முடிவிற்கு வரும். இது பெரும் இறப்பு (மஹாம்ரித்யு), காலத்தின் இறப்பு என்று சொல்லப்படுவது.

**கே:** இதற்கு பிரபஞ்சமும், அதன் உள்ளடக்கமும் முடிவிற்கு வரும் என்று அர்த்தமா?

**ம:** பிரபஞ்சம் உன்னுடைய தனிப்பட்ட அனுபவம். அது எப்படி பாதிக்கப்படும்? நீ இரண்டு மணி நேரமாக ஒரு பிரசங்கம் செய்துகொண்டிருக்கலாம்; அது முடிந்த பிறகு எங்கு சென்றுவிடும்? பிரசங்கத்தின் ஆரம்பமும், நடுவும், முடிவும் ஒன்றாக எதில் இருந்ததோ அந்த நிசப்தத்தில். காலம் ஒரு முடிவிற்கு வந்துவிடும். அது இருந்தது; ஆனால் மேற்கொண்டு இல்லை. வாழ்க்கை முழுவதும் பேசியதற்குப் பிறகு இருக்கும் நிசப்தமும், வாழ்க்கை முழுவதும் பேசாமல் இருந்ததற்குப் பிறகு இருக்கும் நிசப்தமும் ஒன்றே அல்லவா? 'நான்' என்னும் உணர்விலிருந்து விடுபடுவது தான் இறவாமை. இருப்பினும் அது முழுவதும் இல்லாமல் போகக் கூடியது அல்ல. மாறாக, நீ நினைத்துக் கூடப் பார்க்க முடியாத, சாசுவதமாக, மிகவும் மெய்யாக, விழிப்பாக, மகிழ்வாக இருக்கும் ஒரு நிலை அது. தனிப்பட்ட சுய-விழிப்புணர்வு மட்டுமே மேற்கொண்டு இருக்காது.

**கே:** ஏன் மனதின் 'பெரும் இறப்பு', உடலின் 'சிறு இறப்போடு' ஒரே நேரத்தில் நடைபெற வேண்டும்?

**ம:** அவை ஒரே நேரத்தில் நடப்பதில்லை! மனதின் போராட்டக் குழப்பத்திலிருந்து ஒரு இடைவெளி இல்லாமல் நீ நூற்றுக் கணக்கான முறை இறக்கலாம். அல்லது, நீ உடலை வைத்துக் கொண்டு, மனதால் மட்டுமே இறக்கலாம். மனதின் இறப்பு ஞானத்தின் பிறப்பு.

**கே:** நபர் போய்விடுவார். சாட்சி மட்டுமே மிஞ்சும்.

**ம:** 'நான் சாட்சி' என்று சொல்ல யார் இருப்பார்கள்? 'நான்' என்பதே இல்லாதபோது சாட்சி எங்கிருக்கும்? காலமற்ற நிலையில், அடைக்கலம் புக சுயம் என்பது இருக்காது.

பொருட்கள் உள்ள ஒரு பெட்டியை வைத்திருக்கும் ஒருவர் அதை இழக்காமல் இருக்க ஆர்வத்துடன் இருப்பார் - அவர் பெட்டியின் மீது உணர்வுள்ளவர். 'நான்' என்னும் உணர்வைப் போற்றுகின்ற மனிதர் சுய விழிப்புணர்வுள்ளவர். ஞானி எதையும் பிடித்து வைத்திருப்பதில்லை. எனவே அவரை உணர்வுள்ளவராகச் சொல்ல முடியாது. இருப்பினும் அவர் உணர்வற்றவரோ, அக்கறை அற்றவரோ அல்ல. அவர் விழிப்புணர்வின் மூலம். நாம் அவரை 'திகம்பரர்' - வெளியால் (இடத்தால்) உடுத்தப்பட்டவர், நிர்வாணமாக இருக்கும் ஒருவர், எல்லாத் தோற்றங்களுக்கும் அப்பாற்பட்டவர் என்கிறோம். அவர் எந்தப் பெயரிலும், உருவத்திலும் இருப்பதாகக் கூற முடியாது. ஆனாலும் அவர்தான் மெய்யாக இருக்கக் கூடிய ஒன்று.

**கே:** என்னால் புரிந்துகொள்ள முடியவில்லை.

**ம:** யாரால் முடியும்? மனதிற்கு அதன் வரையறைகள் உண்டு. உன்னை அறிவின் விளிம்பு எல்லைக்குக் கொண்டுவந்து, முடிவற்ற அறியப்படாததின் அடர்த்தியை எதிர்கொள்ள வைத்தால் போதும். அதற்குள் குதிப்பது உன்னைப் பொருத்தது.

**கே:** சாட்சியைப் பற்றி என்ன? அது மெய்யானதா அல்லது மெய்யற்றதா?

**ம:** அது இரண்டுமே. உணர்ந்தறிதலின் கடைசி மிச்சம், மெய்மையின் முதல் தொடுதல். நான் சாட்சி மட்டுமே என்று சொல்வது தவறு மற்றும் சரி. தவறு - ஏனெனில் 'நான்' என்பது இருக்கிறது. சரி - ஏனெனில் சாட்சி இருக்கிறது. 'சாட்சிபாவம் இருக்கிறது' என்று சொல்வது சிறந்தது. 'நான்' என்று சொல்லும் கணத்திலேயே முழுப் பிரபஞ்சமும் அதை உருவாக்கியவரோடு இருத்தலுக்கு வருகிறது.

**கே:** மற்றொரு கேள்வி: நாம் நபரையும், சுயத்தையும், சிறிய மற்றும் பெரிய சகோதரர்களாக உருவகிக்கலாமா? சிறிய சகோதரர் துடுக்கானவர் மற்றும் சுய நலமானவர்; முரடர் மற்றும் அமைதியற்றவர்; ஆனால் பெரிய சகோதரர் புத்திசாலித்தன மானவர் மற்றும் அன்பானவர், ஞாயமானவர் மற்றும் கருத்தானவர்; ஆசைகளும், அச்சங்களும் கொண்ட உடல் விழிப்புணர்விலிருந்து விடுபட்டவர். பெரிய சகோதரருக்கு சிறியவரைப் பற்றித் தெரியும். ஆனால் சிறியவருக்குப் பெரியவரைப் பற்றித் தெரியாது. அது தானே முழுவதும் சுயமாக இருப்பதாக நினைத்துக் கொண்டிருக்கிறது. குரு வந்து, சிறியவரிடம், 'நீ தனியாக இல்லை. நீ ஒரு நல்ல குடும்பத்திலிருந்து வந்திருக்கிறாய். உன் சகோதரர் ஒரு சிறப்பான மனிதர். அறிவானவர், மற்றும் அன்பானவர். உன்னை மிகவும் நேசிக்கிறார். அவரை ஞாபகம் வைத்திரு, அவரை எப்போதும் நினை, அவரைக் கண்டுபிடி, அவருக்குப் பணிவிடை செய், அப்போது நீ அவருடன் ஒன்றாவாய்' என்று சொல்கிறார். இப்போது என்ன கேள்வி என்றால் எங்களுக்குள் தனி நபர்ப்பட்டது மற்றும் தனிப்பட்டது ஆகிய இருவர், பொய்யான சுயம் மற்றும் மெய்யான சுயம் ஆகிய இருவர் இருக்கிறார்களா அல்லது இது ஒரு உவமையா?

**ம:** அது இரண்டுமே. அவை இரண்டாகத் தோன்றுகின்றன. ஆனால் விசாரத்திற்குப் பிறகு அவை ஒன்று என்று கண்டு பிடிக்கப்படுகின்றன. இருமைத்தன்மை அதைப் பற்றி விசாரிக்காதவரைதான் நீடிக்கும். மனம், சுயம், ஆத்மா (வியக்தி, வியக்தா, அவியக்த்தா) ஆகிய முத்தன்மை, தெளிவாகப் பார்க்கப் பட்டால் ஒன்றாகிவிடும். இவையெல்லாம் பற்றுதல், பற்றற்ற

தன்மை, அவை இரண்டையும் கடந்துபோதல் ஆகிய அனுபவப்படுவதன் வழிமுறைகள்.

**கே:** நாங்கள் ஒரு கனவு நிலையில் இருக்கிறோம் என்னும் உங்கள் விளக்கம் உங்களுடைய நிலையை அணுகமுடியாதவாறு செய்கிறது. நாங்கள் எந்த மறுதளிப்பைச் செய்தாலும் நீங்கள் அதன் செல்லு படியாகும் தன்மையை மறுக்கிறீர்கள். உங்களோடு யாரும் விவாதிக்க முடியாது!

**ம:** விவாதிக்க வேண்டும் என்னும் ஆசையும் கூட ஆசைதான். அறிந்து கொள்ளும் ஆசை, அதிகாரத்திற்கான ஆசை, இருத்தலுக் கான ஆசையும்கூட ஆசைகள்தான். ஒவ்வொருவரும் இருக்கவும், வாழவும், தொடரவும் ஆசைப்படுகிறார்கள். ஏனெனில் யாருமே தன்னைப் பற்றி உறுதியாக இல்லை. ஆனால் ஒவ்வொருவரும் சாசுவதமானவர். நீ உன்னை உடலாகக் கருதுவதால் இறக்கக் கூடியவராக ஆக்கிக் கொள்கிறாய்.

**கே:** நீங்கள் உங்கள் சுதந்திரத்தைக் கண்டுபிடித்துள்ளதால் அதில் சிறிதை எனக்குக் கொடுக்க மாட்டீர்களா?

**ம:** ஏன் சிறிதளவு? முழுவதையுமே எடுத்துக் கொள். எடுத்துக் கொள்; அது எடுத்துக் கொள்ளத்தான் இருக்கிறது. ஆனால் உனக்கு விடுதலையைப் பார்த்து பயம்.

**கே:** ஸ்வாமி ராமதாஸிற்கு இதே மாதிரியான ஒரு வேண்டு கோளைக் கையாள வேண்டியிருந்தது. ஒரு நாள் சில பக்தர்கள் அவரைச் சுற்றி இருந்துகொண்டு, முக்தி வேண்டுமென்று கேட்க ஆரம்பித்தனர். ராமதாஸ் புன்னகையோடு கேட்டுக் கொண்டிருந் தார். பிறகு திடீரென்று: 'நீங்கள் இங்கேயே, இப்போதே அதைப் பெற்றுக் கொள்ளலாம். விடுதலை தீர்க்கமானது மற்றும் நிலை யானது. யாருக்குத் தேவையோ அவர்கள் முன்னால் வாருங்கள்' என்றார். யாருமே நகரவில்லை. மூன்று முறை அந்தச் சலுகையைத் திரும்பத் திரும்பச் சொன்னார். ஒருவரும் ஏற்றுக் கொள்ளவில்லை. பிறகு அவர், 'சலுகை ரத்து செய்யப்படுகிறது' என்று அறிவித்தார்.

**ம:** பற்றுதல் தைரியத்தை அழிக்கிறது. கொடுப்பவர் எப்போதும் கொடுக்கத் தயாராக இருக்கிறார். பெற்றுக் கொள்ளத்தான்

ஒருவரும் இல்லை. விடுதலை என்றால் போக விடுவது. மக்கள் ஒவ்வொன்றையும் அதுவாகப் போக விடுவதில்லை. எப்படி இறத்தல் என்பது இறவாமையின் விலையோ, அப்படி அளவானது அளவற்றதின் விலை என்று அவர்கள் அறிய மாட்டார்கள். ஆன்மீக முதிர்ச்சி என்பது ஒவ்வொன்றையும் அதன் போக்கில் போகவிடத் தயாராக இருப்பதில் இருக்கிறது. விட்டுவிடுதல்தான் முதல் அடி எடுத்து வைத்தல். ஆனால் மெய்யான விட்டு விடுதல், விடுவதற்கு எதுவும் இல்லை என்று அறிவதில் இருக்கிறது. ஏனெனில் எதுவுமே உனக்குச் சொந்தமானதல்ல. அது ஆழ்ந்த தூக்கத்தைப் போன்றது - நீ தூங்கப் போகும்போது உன் படுக்கையை விட்டுவிடுவதில்லை - வெறுமனே அதை மறந்துவிடுவாய்.



## 74. மெய் இங்கு, இப்போதே இருப்பது

**கேட்பவர்:** மெய் இருப்பதற்கான அத்தாட்சி என்ன என்பதே என் கேள்வி. ஒவ்வொரு மதத்தைப் பின்பற்றுபவர்களும் ஆன்மீக மானதோ அல்லது அரசியலோ, தத்துவார்த்தமானதோ அல்லது நெறிமுறை சார்ந்ததோ, எதுவாக இருந்தாலும் தங்களுடையது மட்டுமே உண்மை என்றும், மற்றதெல்லாம் பொய் என்றும் நம்பி, தங்களுடைய அசைக்க முடியாத நம்பிக்கையை மெய்யின் அத்தாட்சியாக எடுத்துக் கொள்கிறார்கள். 'நான் நம்புகிறேன். ஆகையால் அது மெய்யாகத்தான் இருக்க வேண்டும்' என்று அவர்கள் சொல்கிறார்கள். எந்தத் தத்துவமோ அல்லது எந்தக் கோட்பாடோ அல்லது சித்தாந்தமோ எவ்வளவுதான் முழுமையான தாக இருந்தாலும், உள்ளுக்குள் முரண்பாடற்று இருந்தாலும், உணர்வுபூர்வமாகத் தாக்கம் ஏற்படுத்துபவையாக இருந்தாலும் அது அதன் சொந்த உண்மைக்கு அத்தாட்சியாக இருக்க முடியாது என்று எனக்குத் தோன்றுகிறது. அவை காலத்தோடும், சூழ்நிலை களோடும் மாறுகின்ற நாகரிகப் போக்கைத் தொடர்கின்ற ஆடைகளைப் போன்றவை.

உண்மையான மற்றும் எந்த ஒருவரின் நம்பிக்கையையும் சாராத ஒரு மதமோ, தத்துவமோ இருக்க முடியுமா? அது வேதங்களையும் சாராது இருக்கவேண்டும். ஏனெனில் வேதங்களும் அவற்றின் மேல் சிலர் கொண்டுள்ள நம்பிக்கையைச் சார்ந்துள்ளன. நம்பிக்கையைச் சாராத, அகவயப்படாத உண்மை என்று ஒன்று உள்ளதா?

**மஹராஜ்:** விஞ்ஞானத்தைப் பற்றி என்ன சொல்கிறாய்?

**கே:** விஞ்ஞானம் வட்ட வடிவமானது. அது தொடங்கும் இடமாகிய புலனறிவில் முடிகிறது. அது அனுபவங்களைக் கையாள்கிறது. அனுபவங்கள் அகம் சார்ந்தவை. எந்த இரு

நபர்களும், ஒரே மாதிரியான வார்த்தைகளில் விவரித்தாலும் ஒரே அனுபவத்தைக் கொண்டிருக்க முடியாது.

**ம:** நீ மெய்யை மனதிற்கு அப்பால் தேட வேண்டும்.

**கே:** ஐயா, நான் போதுமான அளவு மெய்மறந்த நிலைகளை அடைந்திருக்கிறேன். எந்த ஒரு போதைப் பொருளும் அதை மலிவாகவும், விரைவாகவும் தூண்டச் செய்யும். மூச்சு அல்லது மனப் பயிற்சிகளினால் ஏற்படுத்தப்படும் பாரம்பரியமான சமாதிகளும் கூட மிகவும் வித்தியாசமானவை அல்ல. ப்ராணவாயு சமாதிகள், அபாண வாயு சமாதிகள், ஒரு சூத்திரத்தையோ அல்லது ஒரு எண்ணத் தொடர்ச்சியையோ திரும்பத் திரும்பச் சொல்வதனால் ஏற்படுத்தப்படும் சுயமாகத் தூண்டப்பட்ட சமாதி ஆகியவை உள்ளன. ஒரே மாதிரியாகத் திரும்பத் திரும்பச் செய்வது தூக்கம் வரச் செய்வது. சமாதி எவ்வளவுதான் உன்னதமானதாக இருந்தாலும் அதை மெய்யின் ஒரு அத்தாட்சியாக எடுத்துக் கொள்ள முடியாது.

**ம:** சமாதி அனுபவத்திற்கு அப்பாற்பட்டது. அது குணமற்ற ஒரு நிலை.

**கே:** அனுபவம் இல்லாமலிருப்பது கவனம் செழுத்தாமையால் வருவது. கவனத்தைச் செழுத்தினால் அது திரும்பத் தோன்றுகிறது. கண்ணை மூடிக்கொள்வது ஒளியை இல்லாமல் போகச் செய்யாது. மெய்மையை எதிர்மறையானவைகளுடன் ஒப்பிடுவது அதிக தூரம் கொண்டு செல்லாது. இல்லை என்று மறுப்பதே இருப்பதை உணர்த்துகிறது.

**ம:** ஒரு விதத்தில் நீ சொல்வது சரி. ஆனால் மெய் என்று எதை உன் மனதில் வைத்திருக்கிறாய் என்றும், எந்த அத்தாட்சி உன்னைத் திருப்திப்படுத்தும் என்றும் நீ விளக்காமல் நீ மெய்யிற்கான நிரூபணத்தைக் கேட்கிறாய் என்று நீ பார்க்கவில்லையா? உன் நிரூபணத்தை நம்பினால் நீ எதை வேண்டுமானாலும் நிரூபிக்கலாம். ஆனால் எது உன் நிரூபணம் உண்மை என்று நிரூபிக்கும்? நீ இருக்கிறாய் என்றும், எதற்குமே நீதான் ஒரே நிரூபணம் என்றும் என்னால் சுலபமாக ஒப்புக் கொள்ள வைக்க முடியும். ஆனால் நான் வெறுமனே இருத்தலை மெய்மையுடன் அடையாளப்படுத்து

வதில்லை. இருத்தல் என்பது எப்போதும் காலத்திலும், இடத்திலும் உள்ள கண நேரத் தன்மையானது, ஆனால் மெய்மையோ மாற்றமில்லாதது மற்றும் எல்லாவற்றிலும் ஊடுருவுவது.

**கே:** ஐயா, மெய் என்பது என்ன என்றும், எது அதை நிரூபிக்க முடியும் என்றும் எனக்குத் தெரியாது. என்னை என் ஆதாரங்களின் மேலேயே திருப்பாதீர்கள். என்னிடம் எதுவும் இல்லை. இங்கு நீங்கள்தான் மெய்யறிந்தவர். நான் அல்ல.

**ம:** நீ உன் சாட்சித் தன்மையை மெய்யின் அத்தாட்சியாக ஏற்றுக் கொள்ள மறுக்கிறாய். மற்றவர்களின் அனுபவத்தால் உனக்கு எந்த உபயோகமும் இல்லை. அதிக எண்ணிக்கையில் உள்ள தனிப்பட்ட ஞானத் தேடல் உடையவர்களின் ஒத்துப் போகின்ற அறிக்கைகளிலிருந்து கிடைக்கும் எல்லா முடிவுகளையும் நீ ஒதுக்கித் தள்ளுகிறாய். ஆகையால் எந்த நிரூபணம் உன்னைத் திருப்திப் படுத்தும் என்றும், ஒரு செல்லுபடியாகக் கூடிய அத்தாட்சி என்பதற்கு உன் சோதனை என்ன என்பதையும் நீதான் சொல்ல வேண்டும்.

**கே:** உண்மையாலுமே எனக்கு எது அத்தாட்சி என்று தெரியாது.

**ம:** உன் சொந்த அனுபவம் கூடவா?

**கே:** என் அனுபவமும் அல்ல. என் இருத்தலும்கூட அல்ல. அவை நான் உணர்வோடு இருப்பதைச் சார்ந்து இருக்கின்றன.

**ம:** நீ உணர்வோடு இருப்பது எதைச் சார்ந்து இருக்கிறது?

**கே:** எனக்குத் தெரியாது. முன்பு 'என் உடலை' என்று சொல்லியிருப்பேன். ஆனால் இப்போது, உடல் முதன்மையானது அல்ல; இரண்டாம் பட்சமானது என்றும், அதை இருத்தலின் ஒரு அத்தாட்சியாகக் கருத முடியாது என்றும் நான் அறிந்து கொண்டேன்

**ம:** தவறுக்கும், துன்பத்திற்கும் முக்கியக் காரணமான 'நான் உடல்' என்னும் கருத்தை விட்டுவிட்டாய் என்பதில் எனக்கு மிக்க மகிழ்ச்சி.

**கே:** நான் அறிவுபூர்வமாக அதை விட்டுவிட்டேன். ஆனால் குறிப்பிட்ட ஒன்றாக, ஒரு நபராக இருக்கும் உணர்வு இன்னும் என்னோடு உள்ளது. 'நான் உள்ளேன்' என்று என்னால் சொல்ல முடியும். ஆனால் நான் என்ன என்று என்னால் சொல்ல முடியாது. நான் இருக்கிறேன் என்று எனக்குத் தெரியும், ஆனால் என்ன இருக்கிறது என்று எனக்குத் தெரியாது. எப்படி அதை நான் சொன்னாலும் அறியப்படாததையே எதிர்நோக்குகிறேன்.

**ம:** உன் இருத்தலே மெய்யானது.

**கே:** கண்டிப்பாக நாம் இருவரும் பேசுவது ஒன்றைப் பற்றியே அல்ல. நான் ஏதோ ஒரு உருவமற்ற பொருள் அல்ல. நான் வரையறுக்கப்பட்ட, வரையறைகளைப் பற்றிய பிரக்ஞையுள்ள ஒரு நபர். நான் ஒரு நிஜம். ஆனால் ஒரு சாதாரணமான நிஜம். ஒரு நபராக நான் இருக்கும் கண நேர இருத்தலின்மேல் என்னால் எதுவுமே கட்ட முடியாது.

**ம:** உன் வார்த்தைகள் உன்னைவிட புத்திசாலித்தனமானவை! ஒரு நபராக உன் இருத்தல் கண நேரத்தையது. ஆனால் நீ நபர் மட்டும் தானா? நீ குறைந்தபட்சம் ஒரு நபரா?

**கே:** நான் எப்படிப் பதில் சொல்வது? என் இருத்தல் உணர்வு நான் உள்ளதை மட்டுமே நிரூபிக்கிறது; என்னிடமிருந்து தனித்த எதையுமே அது நிரூபிப்பதில்லை. நான் சார்பானவன்; சார்புத் தன்மையின் உருவாக்கமும், உருவாக்குபவரும் நான். தீர்க்கமான உண்மையின் தீர்க்கமான நிரூபணம் என்பது என்ன? அது எங்கு உள்ளது? 'நான் உள்ளேன்' என்னும் உணர்வுமட்டுமே மெய்மையின் அத்தாட்சியாக முடியுமா?

**ம:** கண்டிப்பாக முடியாது. 'நான் உள்ளேன்' என்பதும், 'உலகம் இருக்கிறது' என்பதும் சார்புடையவை மற்றும் நிபந்தனைக்குட் பட்டவை. மனதின் பெயர்களையும், வடிவங்களையும் உருவாக்குகின்ற எத்தனத்தால் ஏற்படுபவை.

**கே:** ஆமாம். பெயர்கள், உருவங்கள், கருத்துக்கள், மற்றும் உறுதியான நிலைப்பாடுகள் ஆகியவை அவ்வாறுதான் ஏற்படு கின்றன. ஆனால் மெய் அல்ல. உங்கள் விளக்கத்தைக் கேட்காமல்

இருந்திருந்தால் நான் மெய் உட்பட அனைத்தின் சார்புத் தன்மையையும் உருவகப்படுத்திக் கொண்டு, அனுமானங்களில் வாழக் கற்றுக் கொண்டிருப்பேன். ஆனால் நான் உங்களைச் சந்தித்து, மெய் என்னால் கண்டிப்பாக எட்டக் கூடியதென்றும், உச்ச உயர்வாக விரும்பத் தக்கதென்றும் நீங்கள் சொல்வதைக் கேட்டேன். அமைதி, ஆனந்தம், சாசுவதம், இறவாமை போன்ற வார்த்தைகள் வலி மற்றும் அச்சத்திலிருந்து சுதந்திரம் கொடுப் பவையாக என் கவனத்தை ஈர்க்கின்றன. சுகமான இன்பங்களைத் தேடுவது மற்றும் மிகுந்த ஆர்வம் ஆகிய என் பிறவிக் குணங்கள் எழுப்பப்பட்டு, நீங்கள் திறந்துவிட்டுள்ள நிலைகளை ஆராய்ச்சி செய்ய நான் ஆரம்பிக்கிறேன். இவை எல்லாமும் மிகவும் கவர்ச்சிகர மாகத் தோன்றுகின்றன. ஆகையால் நான் 'அது அடையக் கூடியதா? அது நிஜமா?' என்று கேட்கிறேன்.

**ம:** 'சர்க்கரை இனிப்பானது என்று நிரூபியுங்கள். அப்போதுதான் நான் அதைச் சாப்பிடுவேன்' என்று ஒரு குழந்தை சொல்வதைப் போல் நீ இருக்கிறாய். இனிப்பின் நிரூபணம் நாக்கில் உள்ளது. சர்க்கரையில் இல்லை. அது இனிப்பானது என்று அறிய நீ அதைச் சுவைக்க வேண்டும். வேறு வழி இல்லை. 'இது சர்க்கரையா? இது இனிப்பானதா' என்று நீ கேட்க ஆரம்பித்து, அதைச் சுவைக்கும் வரையில் என் உத்தரவாதத்தை ஏற்றுக்கொள்வாய். அப்போதுதான் எல்லாச் சந்தேகங்களும் கரைந்து, உன் அறிவு நீயே அறிந்ததாகவும், அசைக்க முடியாததாகவும் ஆகும். என்னை நம்புமாறு உன்னைக் கேட்கவில்லை. ஆரம்பிப்பதற்கு மட்டுமே என்னை நம்பு. நீ எடுத்து வைக்கும் ஒவ்வொரு அடியும் அதையே நிரூபிக்கவும், பொய்ப் பிக்கவும் செய்கிறது. நீயே மெய்யை அறிவதற்கு முன்பாக அதைப் பற்றிய நிரூபணத்தைக் கேட்கிறாய். நிரூபணத்தின் நிரூபணம் என்னவாக இருக்க முடியும்? நீ ஒரு பின்னோக்கிச் செல்லும் வளையத்திற்குள் விழுகிறாய். அதை நிறுத்த நிரூபணங்களைக் கேட்பதை நிறுத்திவிட்டு, ஒரு கணத்திற்கு மட்டும் ஏதாவது ஒன்றை மெய் என்று ஒப்புக் கொள்ள வேண்டும். அது என்ன என்பது முக்கியமில்லை. அது கடவுளாகவோ, அல்லது நானாகவோ, அல்லது உன் சொந்தச் சுயமாகவோ இருக்கலாம். ஒவ்வொன்றிலும் நீ அறியாத ஏதோ ஒன்றையோ, அல்லது ஒருவரையோ உண்மை

என்று ஒப்புக் கொள்ள வேண்டும். இப்போது, நீ உண்மை என்று ஒப்புக் கொண்டதன் மேல் ஒரு கணத்திற்காவது செயல் புரிந்தால், கூடிய விரைவிலேயே அடுத்த நிலைக்குக் கொண்டு செல்லப் படுவாய். அது இருளில் ஒரு மரத்தின் மேல் ஏறுவது போல் ஆகும் - நீ முந்தைய கிளையில் ஊன்றி நின்றால்தான் அடுத்த கிளையைப் பற்றுவாய். அறிவியலில் இது பரிசோதனை அணுகுமுறை எனப்படும். ஒரு கோட்பாட்டை நிரூபிக்கப் பரிசோதனையை உனக்கு முன்னால் செய்தவர்கள் விட்டுச் சென்ற செயல்முறை விளக்கங்களின்படி மேற்கொள்வாய். ஆன்மீகச் சோதனையில் ஒருவர் செய்ய வேண்டிய தொடர் பரிசோதனைகள் யோகா என்று சொல்லப் படும்.

**கே:** பல யோகாக்கள் உள்ளன. எதைத் தேர்ந்தெடுப்பது?

**ம:** ஒவ்வொரு ஞானியும் தான் எந்தப் பாதை மூலம் அடைந்தாரோ அந்த நெருக்கமாக அறிந்ததை அறிவுறுத்துவார். ஆனால் அவர்களில் பலர் மிகவும் இணக்கமானவர்கள். அவர்கள் வினவுபவர்களின் தேவைக்கேற்பத் தங்களின் ஆலோசனையை அமைத்துக்கொள்வார்கள். எல்லாப் பாதைகளும் மனதைத் தூய்மைப்படுத்தக் கொண்டுசெல்பவை. தூய்மையற்ற மனம் மெய்யை மறைப்பது; தூய மனம் மறைக்கப்படாமல் ஊடுருவக் கூடியது. மெய்யை அதன்மூலம் சுலபமாகவும், தெளிவாகவும் காணலாம்.

**கே:** மன்னிக்கவும். என் பிரச்சனையை உங்களுக்குத் தெரிவிக்க என்னால் முடியவில்லைபோல் தோன்றுகிறது. நான் மெய்யிற்கான அத்தாட்சியைக் கேட்கிறேன். நீங்களோ அதை அடையும் வழிமுறைகளைச் சொல்கிறீர்கள். நான் அந்த வழிமுறைகளைப் பின்பற்றி மிக உன்னதமான மற்றும் விரும்பக் கூடிய நிலைகளை அடைந்தால் என்னுடைய அந்த நிலை மெய்யானது என்று நான் எப்படி அறிவது? ஒவ்வொரு மதமும் நம்பிக்கையில் ஆரம்பித்து, சில பரவசங்களை உறுதிமொழிகின்றன. அந்தப் பரவசம் மெய்யானதா அல்லது நம்பிக்கையின் விளைவா? ஏனெனில் அது ஒரு தூண்டப்பட்ட நிலையாய் இருந்தால் அதை நான் கருதப் போவது இல்லை. கிறிஸ்தவ மதத்தை எடுத்துக் கோள்வோம். அது

'இயேசு உன் மீட்பர். அவரை நம்பு. அவர் பாவங்களிலிருந்து உன்னைக் காப்பார்' என்று சொல்கிறது. நான் ஒரு கிறிஸ்தவரை, 'நீ ஏன் கிறிஸ்துவின் மீது நம்பிக்கை வைத்திருந்தும் பாவத்திலிருந்து காப்பாற்றப்படவில்லை?' என்று கேட்டால் அதற்கு அவர் தன்னுடைய நம்பிக்கை முழுமையானதல்ல என்று பதில் சொல்லுவார். மறுபடியும் நாங்கள் முடிவற்ற வட்டச் சுழற்சியில் சிக்கிக் கொள்கிறோம் - முழுமையான நம்பிக்கை இல்லாததால் மீட்சி இல்லை. மீட்சி இல்லாததால் நம்பிக்கை இல்லை. அதனால் மீட்சி இல்லை. நிறைவேற்ற முடியாத நிபந்தனைகள் போடப் படுகின்றன. பிறகு அவற்றை நிறைவேற்றாததற்குக் குற்றம் சுமத்தப் படுகிறோம்.

**ம:** உன் தற்போதைய விழித்த நிலை அறியாமையின் ஒரு நிலை என்று நீ அறியவில்லை. உன்னுடைய மெய்யிற்கான அத்தாட்சியைப் பற்றிய கேள்வி மெய்யைப் பற்றிய அறியாமையால் வருவது. 'நான்' என்னும் விழிப்புணர்வின் புள்ளியில் உன் தற்போதைய விழித்த நிலையை புலன்கள் மற்றும் மனதின் மூலமாகத் தொடர்பு கொள்கிறாய். ஆனால் மெய்மையோ நேரடியான அத்தாட்சி, அதற்கு இடையில் எதுவும் வேண்டியதில்லை. அது ஏதொன்றாலும் தொடர்பு கொள்ளப்படுவதல்ல. மெய்மை அனுபவப்படுவதல்ல. நீ இருமையை, அதைக் கவனிக்கக் கூடச் செய்யாமல் சாதாரணமாக எடுத்துக் கொள்கிறாய். ஆனால் எனக்கோ வகைகளும், வேறுபாடுகளும் பிரிவினைகளை ஏற்படுத்துவதில்லை. நீ மெய்மையை பெயர்கள் மற்றும் வடிவங்களிலிருந்து தனித்திருப்பதாகக் கற்பனை செய்கிறாய். எனக்குப் பெயர்களும், வடிவங்களும் மெய்மையின் எப்போதும் மாறுகின்ற வெளிப்பாடுகள்தானே ஒழிய அதிலிருந்து தனித்ததல்ல. நீ மெய்யின் நிரூபணத்தைக் கேட்கிறாய். எனக்கோ இருக்கும் அனைத்துமே நிரூபணங்கள். நீ இருப்பவைகளை இருத்தலிருந்தும், இருத்தலை மெய்யிலிருந்தும் பிரித்துப் பார்க்கிறாய். ஆனால் எனக்கோ அவை எல்லாமுமே ஒன்று. உன் விழித்த நிலையைப் பற்றி எவ்வளவுதான் நீ உறுதியாக இருந்தாலும் அதை நிலையானதாகவோ அல்லது மாற்றமில்லாததாகவோ, நான் என்னுடைய நிலையைப் பற்றி சொல்வது போலக் கூற மாட்டாய். இருப்பினும், நீ கற்பனை

செய்கிறாய்; நான் செய்வதில்லை என்பதைத் தவிர நான் நமக்குள் எந்த வித்தியாசத்தையும் காண்பதில்லை.

**கே:** முதலில் நீங்கள் என்னை மெய்யைப் பற்றி கேட்பதற்குத் தகுதியற்றவனாக்குகிறீர்கள். பிறகு நான் கற்பனை செய்வதாகக் குற்றம் சுமத்துகிறீர்கள். உங்களுக்குக் கற்பனையாகத் தெரிவது எனக்கு மெய்யானது.

**ம:** ஆமாம், நீ ஆராயும் வரைதான். நான் எதைப் பற்றியும் உன்னைக் குற்றம் சுமத்துவதில்லை. உன்னை புத்திசாலித் தனத்தோடு கேள்வி கேட்க மட்டுமே சொல்கிறேன். உனக்குத் தெரியாத மெய்யின் நிரூபணங்களைத் தேடுவதை விட்டுவிட்டு, உனக்குத் தெரிந்ததாக நீ நம்பும் உன்னிடம் உள்ள நிரூபணங் களைப் பார். அப்போது எதுவுமே உறுதியாக உனக்குத் தெரியாது என்றும், செவிவழிச் செய்தியாகக் கேட்டதை நீ நம்புகிறாய் என்றும் அறிவாய். மெய்யை அறிய நீயே சொந்தமாகச் சமாதி நிலைக்குச் செல்ல வேண்டும்.

**கே:** நான் சமாதிகள் மற்றும் பரவச நிலைகளுக்குப் பயப்படு கிறேன் - அவற்றின் காரணம் எதுவாக இருந்தாலும். ஒரு மது பானம், ஒரு புகை பிடித்தல், ஒரு உடல் நிலை சரியில்லாமல் காய்ச்சல் வருதல், ஒரு போதை வஸ்து, ஆழமாக மூச்சு விடுதல், சங்கீதம், உடலைக் குலுக்குதல், நடனம், விடாமல் சுற்றுதல், ஜபித்தல், உடலுறவு அல்லது உபவாசம் இருத்தல், மந்திரங்கள், அல்லது சில தாவர எண்ணெய்கள் என்னுடைய விழிப்பு நிலையைப் பிரளச் செய்து, எனக்குச் சில பரிட்சயமில்லாததால் அசாதாரணமாக இருக்கும் அனுபவங்களை அவை கொடுக்கும். ஆனால் அந்தக் காரணம் இல்லாமல் போகும்போது விளைவு கரைந்து, ஞாபகம் மட்டுமே மிஞ்சும் - அவை வலிமையற்றவை; ஆனால் மங்கியவை.

எல்லாக் காரணங்களையும் அவற்றின் விளைவுகளையும் விட்டு விடலாம். ஏனெனில் விளைவுகள் காரணங்களால் கட்டுப்படுத்தப் படுபவை. என் கேள்வியைத் திரும்பக் கேட்கிறேன்: மெய்யைக் கண்டுபிடிக்க முடியுமா?

**ம:** நீ சென்று தேடக் கூடிய மெய்யின் வசிப்பிடம் எது? எப்படி அதைக் கண்டுபிடித்தாய் என்று அறிவாய்? அதைச் சோதிக்க என்ன உரைகல் வைத்திருக்கிறாய்? 'மெய்யின் நிரூபணம் என்ன?' என்னும் உன் ஆரம்பக் கேள்விக்கே திரும்ப வந்துவிட்டாய். கேள்வியிலேயே எதாவது தவறு இருக்க வேண்டும். ஏனெனில் அதை நீ திரும்பத் திரும்பக் கேட்கிறாய். மெய்யிற்கான நிரூபணங்கள் என்ன என்று ஏன் கேட்கிறாய்? அது எதனால் என்றால் நீ மெய்யை அறியவில்லை; மற்றும் நீ ஏமாற்றப்படலாம் என்று பயப்படுகிறாய். 'மெய்' என்னும் பெயரைக் கொண்டுள்ள தாகவும், அது போலியற்றதாக இருந்தால் அதைக் கொண்டிருப்பது பயனுள்ளது என்றும் மெய்யை நீ கற்பனை செய்கிறாய். அதனால்தான் ஏமாற்றப்படுவதற்கு அச்சப்படுகிறாய். நீ மெய்யை வாங்க விழைகிறாய். ஆனால் விற்பவர்களை நம்புவதில்லை. பித்தலாட்டங்கள் மற்றும் போலிகளைப் பற்றிப் பயப்படுகிறாய்.

**கே:** நான் ஏமாற்றப் படுவதற்காகப் பயப்படவில்லை. என்னையே நான் ஏமாற்றிக் கொள்வதற்காகப் பயப்படுகிறேன்.

**ம:** ஆனால் உன் உண்மையான நோக்கங்களைப் பற்றிய அறியாமையினால்தான் உன்னை ஏமாற்றிக் கொள்கிறாய். நீ மெய்யை வேண்டுகிறாய். ஆனால் உண்மையிலேயே நீ வெறுமனே சுகத்தைத்தான் தேடுகிறாய். அது நிரந்தரமாக இருக்க வேண்டுகிறாய். எதுவுமே, மனதின் எந்த நிலையுமே சாசுவதமாக நிலைத்திருக்காது. காலத்திலும், இடத்திலும் எப்போதும் ஒரு எல்லை உண்டு. ஏனெனில் காலமும், இடமுமே அளவானவை. காலமற்றதில், 'சாசுவதம்' என்னும் வார்த்தைக்கு அர்த்தம் இல்லை. அதுவேதான் 'மெய்யின் நிரூபணம்' என்பதற்கும். இருமையற்ற தன்மையில் எல்லாமும் முழுமையானவை, அவற்றின் சொந்த நிரூபணம், அர்த்தம் மற்றும் நோக்கம். எங்கு எல்லாமும் ஒன்றோ, அங்கு தாங்கிப் பிடிக்க எதுவும் தேவையில்லை. நிலைத்த தன்மை மெய்யின் நிரூபணம் என்றும், எது நீடித்து நிலைத்திருக்கிறதோ அது அதிக மெய்யானது என்றும் கற்பனை செய்கிறாய். ஆகையால் காலம் மெய்யை அளக்கும் அளவாக ஆகிறது. காலம் மனதில் இருப்பதால், மனம் நியாயாதிபதியாகி, தனக்குள்ளாகவே மெய்யிற்கான நிரூபணத்தைத் தேடுகிறது. அது முற்றிலும் சாத்தியமில்லாதது மற்றும் அர்த்தமற்றது.

**கே:** ஐயா, 'எதுவும் உண்மையில்லை; எல்லாம் சார்புடையவை' என்று நீங்கள் சொன்னால் நான் ஒத்துக்கொள்வேன். ஆனால் மெய், மெய்மை, பூரணமான அறிவு ஆகியவை உள்ளனவென்றும் நீங்கள் சொல்லிக் கொண்டே இருக்கிறீர்கள். ஆகையால் நான் கேட்கிறேன்: அது என்ன? அது உங்களுக்கு எப்படித் தெரியும்? 'ஆமாம்; மஹராஜ் சொல்வது சரி' என்று எது என்னைச் சொல்ல வைக்கும்?

**ம:** ஒரு நிரூபணம், ஒரு சாட்சி, ஒரு ஒப்புதல் வாக்குமூலம் தேவை என்று நீ விடாப் பிடியாக இருக்கிறாய். மெய் சுட்டிக் காட்டக் கூடியது என்றும், 'பார்; இங்கு இருக்கிறது மெய்' என்று சொல்லக் கூடியது என்றும் இன்னும் நீ கற்பனை செய்கிறாய். அது அவ்வாறில்லை. மெய் ஒரு முயற்சியின் விளைவு அல்ல; ஒரு பாதையின் முடிவு அல்ல. அது இங்கேயே, இப்போதே, அதற்காக ஏங்குவதிலும், அதைத் தேடுவதிலும் இருக்கிறது. அது மனதை விடவும், உடலைவிடவும் அண்மையிலும், 'நான்' என்னும் உணர்வைவிட அண்மையிலும் உள்ளது. நீ அதைக் காண்பதில்லை. ஏனெனில் அதை உன் ஆழமான உட்புற இருத்தலின் வெளிப் புறமாக, உன்னிலிருந்து மிகத் தொலைவில் தேடுகிறாய். மெய்யை நீ உருவகப்படுத்திவிட்டு, பொருட்களுக்கும், எண்ணங்களுக்கும் மட்டுமே பொருந்தக் கூடிய உன் நிலையான நிரூபணங்களையும், மதிப்பீடுகளையும் வலியுறுத்துகிறாய்.

**கே:** நீங்கள் சொல்வதிலிருந்து நான் அறியக் கூடியதெல்லாம் மெய் எனக்கு அப்பாற்பட்டது; நான் அதைப் பற்றிப் பேசத் தகுதியற்றவன் என்பதே.

**ம:** நீ தகுதியற்றவன் அல்ல. நீயே மெய். மெய்யற்றதை மெய்யென்று எடுத்துக் கொள்வதுதான் தவறு.

**கே:** மெய்யிற்கான நிரூபணங்களைக் கேட்காதே என்றும், மெய்யற்றதன் மேல் மட்டுமே அக்கறை செலுத்து என்றும் நீங்கள் சொல்வதுபோல் தெரிகிறது.

**ம:** மெய்யைக் கண்டுபிடிப்பது மெய்யற்றதை விட்டுவிடுவதில் இருக்கிறது. எது இல்லையோ அதை மட்டுமே நீ அறிய முடியும்.

எது இருக்கிறதோ - நீ அதுவாகத்தான் இருக்க முடியும். அறிவு என்பது அறிபவரைச் சார்ந்தது. ஒருவிதத்தில் அது அறியாமையின் மறு வடிவம். அறியாமை எங்கு இல்லையோ அங்கு அறிவிற்கு என்ன தேவை? அறியாமையும், அறிவும் அவைகளாகவே இருப்பவை அல்ல. அவை மனதின் பல்வேறு நிலைகள் மட்டுமே. அது விழிப்புணர்வில் உள்ள அசைவின் ஒரு தோற்றமே. அது அதன் அடிப்படையில் அசைக்க முடியாதது.

**கே:** மெய் மனதின் எல்லைக்கு உட்பட்டதா அல்லது அப்பாற்பட்டதா?

**ம:** அது இரண்டுமே அல்ல. அது இரண்டுமே. அதை வார்த்தைகளில் விவரிக்க முடியாது.

**கே:** இதைத்தான் - விவரிக்க முடியாதது (அனிர்வசனிய) என்று சொல்வதை எப்போதும் கேட்கிறேன். இது என்னைப் புத்திசாலியானவனாக்காது.

**ம:** அது அறியாமையைப் பெரும்பாலும் மூடுகிறது என்பது சரி. மனம் அதனால் உருவாக்கப்பட்ட விதிமுறைகளின்படி நடக்கும். அதனால் அதற்கு அப்பால் செல்ல முடியாது. எது புலனுணர்வு பூர்வமானதோ அல்லது மனோ மயமானதோ அல்லவோ, இருப்பினும் எது இல்லாமல் புலனுணர்வுபூர்வமானதும், மனோ மயமானதும் இருக்க முடியாதோ அதை அவற்றிற்குள் அடக்க முடியாது. மனதிற்கு அதன் அளவுகள் உண்டு என்பதைப் புரிந்துகொள். அதற்கு அப்பால் செல்ல நீ மௌனமாக இருக்க ஒப்புக் கொள்ளவேண்டும்.

**கே:** செயல்பாடு மெய்யின் நிரூபணம் என்று சொல்லலாமா? அதை வார்த்தைகளால் விவரிக்க முடியாது; ஆனால் அதை வெளிப்படையாகச் செய்து காண்பிக்க முடியும்.

**ம:** அது செயல்பாடும் அல்ல. செயல்படாமையும் அல்ல. அது இரண்டிற்கும் அப்பாற்பட்டது.

**கே:** ஒருவர் 'ஆமாம். இதுதான் மெய்' என்று சொல்ல முடியுமா? அல்லது அவர் மெய்யற்றதை மறுப்பது என்னும் அளவிற்கு மட்டுமே

குறுக்கப் பட்டவரா? வேறு மாதிரி சொல்வதென்றால் மெய் என்பது முற்றிலும் மறுதலிப்பதுதானா? அல்லது அது ஆம் என்று ஒப்புக் கொள்ளக் கூடிய ஒரு தருணம் வருமா?

**ம:** மெய்யை விவரிக்க முடியாது. ஆனால் அதை அனுபவப் படலாம்.

**கே:** அனுபவம் என்பது அகவயப்பட்டது. அதைப் பகிர்ந்து கொள்ள முடியாது. உங்கள் அனுபவம் நான் எங்கு இருந்தேனோ அங்கேயே என்னை வெறுமையாக வைத்திருக்கிறது.

**ம:** மெய்யை அனுபவப்படலாம்; ஆனால் அது வெறும் அனுபவம் மட்டுமல்ல. அதை எனக்குத் தெரியும். நீ அதற்குத் தயாராக இருந்தால் நான் அதை உனக்குத் தெரிவிக்க முடியும். தயாராக இருப்பது என்பது வேறொன்றையும் வேண்டாதிருப்பது.

**கே:** என்னிடம் ஆசைகளும், அச்சங்களும் நிறைந்திருக்கின்றன. அதனால் நான் மெய்யிற்குத் தகுதியற்றவனா?

**ம:** மெய் நல்ல நடத்தையின் பரிசு அல்ல. அல்லது அது சில பரிட்சைகளில் தேறுவதற்கான பரிசும் அல்ல. அதை எங்கிருந்தும் கொண்டுவர முடியாது. இருக்கும் எல்லாவற்றின் தொடக்கமாக, இன்னும் பிறவாத, பழமையான ஆதாரம் அது. நீ தகுதி உடையவன். ஏனெனில் நீ இருக்கிறாய். மெய்யிற்காக உனக்குத் தகுதி தேவையில்லை. அது உனக்குச் சொந்தமானது. எதன் பின்னும் தொடர்ந்து ஓடுவதை நிறுத்து. அசைவற்றிரு. அமைதியாய் இரு.

**கே:** ஐயா, நீங்கள் உடல் அசைவற்றும், மனம் அமைதியாகவும் இருக்க வேண்டும் என்று சொல்கிறீர்கள். அதை எப்படிச் செய்வது? சுய விழிப்புணர்வில் உடலும், மனமும் என் கட்டுப்பாட்டிற்கு அப்பாற்பட்ட காரணங்களால் அசைக்கப்படுவதைப் பார்க்கிறேன். பரம்பரைத் தன்மையும், சூழ்நிலைகளும் என் மேல் தீர்க்கமாக ஆதிக்கம் செலுத்துகின்றன. இந்தப் பிரபஞ்சத்தை உருவாக்கிய சர்வ வல்லமையுள்ள 'நான்' என்னும் விழிப்புணர்வை ஒரு போதைப் பொருளால் தற்காலிகமாகவும், அல்லது ஒரு சொட்டு விஷத்தால் நிரந்தரமாகவும் இல்லாமல் செய்ய முடியும்.

**ம:** மறுபடியும், நீ உன்னை உடல் என்று எடுத்துக் கொள்கிறாய்.

**கே:** நான் என்னுடைய எலும்புகள், சதைகள், மற்றும் இரத்தத்தால் ஆன உடலை ஒதுக்கிவிட்டாலும், எண்ணங்கள் மற்றும் உணர்ச்சிகள், ஞாபகங்கள் மற்றும் கற்பனைகள் ஆகியவற்றால் ஆன சூட்சும உடல் மிஞ்சுகிறது. இவைகளும் கூட நான் அல்ல என்று ஒதுக்கித் தள்ளிவிட்டாலும் என்னிடம் விழிப்புணர்வு மிஞ்சுகிறது. அதுவும்கூட ஒருவிதமான உடல்தான்.

**ம:** மிகச் சரி. ஆனால் நீ அதோடு நிறுத்த வேண்டியதில்லை. அதற்கு அப்பால் செல். விழிப்புணர்வோ, அதன் மத்தியில் உள்ள 'நான்'ஓ நீ அல்ல. உன் மெய்யான இருத்தல் முற்றிலும் சுய விழிப்புணர்வில்லாதது. மொத்தமான, நுட்பமான, அல்லது கடந்துபோகின்ற எல்லாச் சுய அடையாளங்களிலிருந்தும் முற்றிலும் சுதந்திரமானது.

**கே:** நான் என்னை அப்பாற்பட்டவன் என்று கற்பனை செய்துகொள்ள முடியும். ஆனால் அதற்கு என்ன அத்தாட்சி உள்ளது? இருக்க, நான் யாராவது ஒன்றாக இருக்க வேண்டும்.

**ம:** இல்லை. அது முற்றிலும் வேறு மாதிரியானது. இருக்க, நீ ஒன்றுமில்லாததாக இருக்கவேண்டும். உன்னை ஏதோ ஒன்றாகவோ, அல்லது யாரோ ஒருவராகவோ நினைப்பது இறப்பது மற்றும் நரகம்.

**கே:** பழங்காலத்து எகிப்து தேசத்தில் மக்கள் சில அதிசயங்களுக்கு உட்படுத்தப் பட்டார்கள் என்றும், போதைப் பொருட்களாலோ, சில மந்திரங்களாலோ அவர்கள் உடலிலிருந்து அகற்றப்பட்டு, உடலுக்கு வெளியே நின்று, அவர்களுடைய சொந்த வடிவத்தைப் பார்ப்பதை அவர்கள் அனுபவப்பட முடியும் என்றும் படித்திருக்கிறேன். இதன் நோக்கம், இறப்பிற்குப் பிறகான இருத்தலைப் பற்றி அவர்களை ஒப்புக் கொள்ளச் செய்யவும், அரசிற்கும், ஆலயத்திற்கும் லாபகரமான, உச்ச முடிவான விதியின் மேல் ஒரு ஆழமான அக்கறை ஏற்படுத்தவுமாகும். உடலைச் சொந்தமாகக் கொண்ட நபருடனான சுய அடையாளம் மிஞ்சுகிறது.

**ம:** மனம் எண்ணங்களால் ஆனது போல, உடல் உணவால் ஆனது. அவற்றை அவை உள்ளவாறே பார். இயல்பாகவும், தன்னிச்சையாகவும் உள்ள சுய அடையாளமின்மைதான் விடுதலை. நீ என்ன என்பதை அறிய வேண்டியதில்லை. நீ என்னவாக இல்லை என்பதை அறிந்தால் போதும். நீ என்ன என்பதை ஒருபோதும் அறிய முடியாது. ஏனெனில் ஒவ்வொரு அறிதலும் வெற்றிகொள்ள வேண்டிய புதுப் பரிமாணங்களை வெளிக் கொணருகிறது. அறியாததற்கு எல்லைகள் கிடையாது.

**கே:** அது அறியாமையை நிரந்தரமாக உள்ளதாக உணர்த்துகிறதா?

**ம:** அறியாமை ஒருபோதும் இருக்கவில்லை என்பதை உணர்த்துகிறது. மெய் கண்டுபிடிப்பதில்தான் இருக்கிறது. கண்டுபிடிக்கப்பட்டதில் அல்ல. கண்டுபிடிப்பிற்கு ஆரம்பமோ, முடிவோ கிடையாது. அடக்குகின்ற எல்லைகளைக் கேள்வி கேட்டு, அதற்கு அப்பால் செல். சாத்தியமில்லாத வேலைகளைக் கைக்கொள் - இதுதான் வழி.



# 75. அமைதியிலும், மௌனத்திலும் நீ வளர்வாய்

**கேட்பவர்:** குரு தவிர்க்க முடியாதவர் என்று இந்திய மரபு சொல்கிறது. அவர் எதனால் தவிர்க்க முடியாதவர்? குழந்தைக்கு உடலைத் தருவதற்கு ஒரு தாய் தவிர்க்க முடியாதவர். ஆனால் ஆன்மாவை அவர் தருவதில்லை. அவருடைய பங்கு அளவானது. குருவைப் பொருத்து அது எப்படியானது? அவருடைய பங்கும் அளவானதா? அப்படியானால் எதற்கு அளவானது? அல்லது அவர் பொதுவாக முற்றிலும் தவிர்க்க முடியாதவரா?

**மஹராஜ்:** இதயத்தில் அமைதியாகவும், காலமற்றும் ஒளிர்கின்ற உள்ளார்ந்த ஒளிதான் உண்மையான குரு. மற்ற அனைத்தும் வழியைத்தான் காண்பிக்கின்றன.

**கே:** நான் உள் குருவின் மேல் அக்கறை கொள்வதில்லை. வழியைக் காண்பிக்கின்ற குருவைப்பற்றி மட்டுமே பேச விரும்புகிறேன். குரு இல்லாமல் யோகாவை அணுக முடியாது என்று சொல்பவர்கள் உண்டு. ஒருவரிலிருந்து மற்றொருவருக்கு மாறி, சரியான குருவைத் தேடிக்கொண்டே இருக்கின்றவர்கள் அவர்கள். அம்மாதிரியான குருக்களுக்கு என்ன மதிப்பு?

**ம:** அவர்கள் தற்காலிகமான, காலத்திற்குட்பட்ட குருக்கள். அவர்களை எல்லா வாழ்க்கை முறைகளிலும் பார்க்கலாம். ஏதாவது அறிவையோ, திறமையையோ பெற அவர்கள் உனக்குத் தேவை.

**கே:** ஒரு தாய் ஒரு வாழும் காலத்திற்கு மட்டுமே உரியவர். அவருடைய பங்கு பிறக்கும்போது ஆரம்பித்து, இறக்கும்போது முடிவுறுகிறது. அவர் எல்லாக் காலத்திற்குமானவர் அல்ல.

**ம:** அதேபோல காலத்திற்குட்பட்ட குருவும் எல்லாக் காலத்திற்குமானவர் அல்ல. அவர் தன்னுடைய நோக்கத்தை

நிறைவேற்றிவிட்டு, தன் இடத்தை அடுத்தவருக்குக் கொடுத்து விடுவார். அது மிகவும் இயல்பானது. அதில் குறை சொல்ல எதுவும் இல்லை.

**கே:** *ஒவ்வொரு விதமான அறிவிற்கும், திறமைக்கும் தனித் தனியான ஒரு குரு எனக்குத் தேவையா?*

**ம:** 'புறத்தில் இருப்பவர் கடந்து போகக் கூடியவர்; உள்ளுக்குள் ஆழமாக இருப்பது தோற்றத்திலும், செயலிலும் எப்போதும் புதியதாக இருந்தாலும் நிலையானது மற்றும் மாற்றமில்லாதது' என்பதைத் தவிர இந்தமாதிரி விஷயங்களில் விதிமுறை எதுவும் இருக்க முடியாது.

**கே:** *உள் மற்றும் வெளி குருக்களுக்கு இடையில் என்ன தொடர்பு உள்ளது?*

**ம:** புறத்தே உள்ளது உள்ளே உள்ளதைப் பிரதிபலிக்கிறது; குறிப்பிட்ட காலத்திற்கு உள்ளே உள்ளது வெளியே உள்ளதை ஒப்புக் கொள்கிறது.

**கே:** *முயற்சி யாருடையது?*

**ம:** கண்டிப்பாகச் சீடருடையதுதான். புறத்திலிருக்கும் குரு விதிமுறைகளைக் கொடுக்கிறார், உள்ளே இருக்கும் குரு வலிமையைக் கொடுக்கிறார். விழிப்பான செயல்பாடு சீடருடையது. சீடரிடம் மனோ உறுதி, புத்திசாலித்தனம் மற்றும் சக்தி இல்லாவிட்டால் புறத்தே உள்ள குரு பயனற்றவர். உள் குரு தனக்கு வாய்ப்பு கிடைக்கக் காத்திருக்கிறார். புத்திசாலித்தனமற்ற தன்மை மற்றும் தவறான நடைமுறைகள் ஒரு சிக்கலை உருவாக்கி, சீடர் தன்னுடைய சொந்த நெருக்கடியில் விழிக்கிறார். சீடர் புத்திசாலித்தனமாக இருந்தால் நல்லது. இல்லையென்றால் அம்மாதிரியான தடைகள் கொடுக்கும் அதிர்ச்சியை எதிர்கொள்ள வேண்டும்.

**கே:** *இது ஒரு அச்சுறுத்தலா?*

**ம:** அச்சுறுத்தல் அல்ல. ஒரு எச்சரிக்கை. உள் குரு வன்முறையற்று இருக்க வேண்டும் என்று தீர்மானமாக இருப்பவர் அல்ல. அவர்

சீடரின் வக்கிரமான உடல் உணர்வையோ அல்லது வக்கிர மனோபாவத்தையோ அழிக்கும் அளவிற்கு அவர் எப்போதாவது வன்முறையோடு இருக்கலாம். வாழ்தலும், மகிழ்ச்சியும் போல துன்பமும், இறப்பும் அவருடைய செயல்பாட்டின் கருவிகள். இருமைத்தன்மையில்தான் வன்முறையில்லாமை ஒன்றாகச் சேர்க்கும் சட்டமாகிறது.

**கே:** ஒருவர் தன் சுயத்தைப் பார்த்து பயப்பட வேண்டுமா?

**ம:** பயப்பட வேண்டியதில்லை. ஏனெனில் சுயம் என்றாலே நலம் என்றுதான் அர்த்தம். ஆனால் சீடர் உள் குருவின் வழிகாட்டுதலை முக்கியமானதாக மனப்பூர்வமாகக் கருத வேண்டும். அது கவனத்தையும், கீழ்ப்படிதலையும் வேண்டுகிறது. அதைக் கவனிக்காமல் இருந்தால் அது வற்புருத்தலிலிருந்து கட்டாயத்திற்கு மாறுகிறது. அதற்குக் காரணம், அது நீண்டகாலம் காத்திருக்கத் தயாராக இருந்தாலும், கீழ்ப்படியாமையை அதனால் ஒப்புக் கொள்ள முடியாது. பிரச்சனை உள் குருவிடமோ, வெளி குருவிடமோ அல்ல. குரு எப்போதும் தயாராக இருக்கிறார். முதிர்ந்த சீடர்தான் இல்லை. சீடர் தயாராக இல்லாதபோது குரு என்ன செய்ய முடியும்?

**கே:** தயாராகவா அல்லது ஒப்புக்கொள்வதாகவா?

**ம:** இரண்டுமே. இரண்டும் ஒன்றிற்கே வருகின்றன. இந்தியாவில் நாங்கள் அதை 'அதிகாரி' என்கிறோம். செய்யக் கூடிய சாமர்த்தியம் உடையவர் மற்றும் அருகதை உடையவர் என்று அதற்கு அர்த்தம்.

**கே:** வெளி குரு தீக்ஷை கொடுக்க முடியுமா?

**ம:** அவர் எல்லாவிதமான தீக்ஷைகளையும் கொடுக்க முடியும். ஆனால் உண்மையான தீக்ஷை உள்ளிருந்துதான் வர வேண்டும்.

**கே:** யார் உச்ச முடிவான தீக்ஷையைக் கொடுப்பது?

**ம:** அது சுயத்தால் சுயமாகக் கொடுக்கப்படுவது.

**கே:** நாம் சுற்றிச் சுற்றி வருவதுபோல் தோன்றுகிறது. எனக்கு தற்போதிருக்கும் ப்ரத்தியக்ஷமான உடலால் இருக்கும் சுயம்

மட்டும்தான் தெரியும். உள் சுயம் அல்லது பிரபஞ்ச சுயம் ஆகியவை கற்பனைகளை விளக்கக்கூடிய மற்றும் மன எழுச்சியூட்டக் கூடிய ஒரு கருத்துமட்டும்தான். அதற்குச் சுதந்திரமான இருத்தல் இருப்பதாக நாம் பேசுகிறோம். அதற்கு அவ்வாறான இருத்தல் இல்லை.

**ம:** புற மற்றும் உள் சுயம் ஆகிய இரண்டுமே கற்பனைதான். எப்படி ஒரு முள்ளை எடுக்க வேறொரு ஒரு முள் தேவையோ அல்லது ஒரு விஷத்தை முறிக்க மற்றொரு விஷம் தேவையோ அப்படி, 'நான்' என்னும் தொடர் மனப் பழக்கத்தை (obsession) நீக்க ஒரு 'உயர்வான' நானின் மேல் தொடர் மனப் பழக்கம் தேவை. எல்லா இருத்தலும், மறுத்தலும் கருதப்படுகின்றன. ஆனால் இது ஆரம்பம் மட்டுமே. அடுத்ததாக இரண்டிற்கும் அப்பால் செல்ல வேண்டும்.

**கே:** என்னுடைய கவனத்தை என் மேல் திருப்பவும், என்னைப் பற்றி ஏதாவது செய்ய வேண்டியதின் அவசரமான அவசியத்திற் காகவும் வெளியிலிருக்கும் குரு தேவை என்று நான் புரிந்து கொண்டேன். எனக்குள்ளாக ஒரு ஆழமான மாற்றம் என்று வரும்போது அவர் எவ்வளவு இயலாதவர் என்றும் புரிந்து கொண்டேன். ஆனால் நீங்கள் ஒரு 'சத்குரு'வை, நிலையான, ஆரம்பமில்லாத, மாற்றமில்லாத, விழிப்புணர்வின் ஆணிவேரான, ஒரு கண்டிப்பாக அடையக்கூடிய உள் குருவை இங்கு கொண்டுவருகிறீர்கள். அவர் ஒரு கருத்துமட்டுமா அல்லது மெய்யானவரா?

**ம:** அவர்தான் ஒரே மெய். மற்றவை எல்லாம் காலத்தில், உடல் -மனத்தால் தோற்றுவிக்கப்படும் நிழல்தான். கண்டிப்பாக ஒரு நிழலும்கூட மெய்மையோடு தொடர்புடையதுதான். ஆனால் அதுவாகவே மெய்யானதல்ல.

**கே:** 'நான்' மட்டுமே எனக்குத் தெரிந்த மெய்மை. நான் இருந்தால்தான் சத்குரு அங்கு இருப்பார். மெய்மையை அவர்பால் திருப்புவதால் நான் எதைப் பெறுகிறேன்?

**ம:** நீ இழப்பதுதான் உன்னுடைய லாபம். நிழல் நிழலாக மட்டுமே பார்க்கப்படும்போது அதைப் பின்தொடர்வதை நீ நிறுத்திவிடுவாய். நீ திரும்பி, சூரியன் உனக்குப் பின்னால் சதா காலமும் இருப்பதைக் காண்பாய்.

**கே:** உள் குரு கற்பிக்கவும் செய்வாரா?

**ம:** நீ எல்லாத் தோற்றங்களுக்குள்ளும், அப்பாலும் இருக்கின்ற, சாசுவதமான, மாற்றமில்லாத, சத் - சித் - ஆனந்தம் என்னும் தீர்க்கமான நம்பிக்கையை அவர் கொடுக்கிறார்.

**கே:** நம்பிக்கை மட்டுமே போதாது. நடக்கும் என்னும் உறுதியும் தேவை.

**ம:** மிகச் சரி. ஆனால் இங்கு உறுதித் தன்மை தைரியத்தின் வடிவத்தை எடுக்கிறது. அச்சம் முற்றிலுமாக இல்லாமல் போகிறது. இந்த அச்சமற்ற தன்மை சந்தேகமில்லாமல் அபூர்வமானது. இருப்பினும் தனக்கே சொந்தமானது என்று ஆழமாக உணரப் படுவது. மற்றும் அதை மறுக்க முடியாது. அது தன்னுடைய சொந்தக் குழந்தையை நேசிப்பது போல. யார் அதைச் சந்தேகிக்க முடியும்?

**கே:** ஆன்மீக முயற்சிகளில் நாம் முன்னேற்றம் என்பதைக் கேள்விப்படுகிறோம். எந்த மாதிரியான முன்னேற்றத்தை நீங்கள் மனதில் கொண்டுள்ளீர்கள்?

**ம:** நீ முன்னேற்றத்திற்கு அப்பால் சென்றால்தான் முன்னேற்றம் என்றால் என்ன என்று அறிவாய்.

**கே:** எது நம்மை முன்னேற வைக்கிறது?

**ம:** மனதில் சலனமில்லாமைதான் முக்கியமான காரணி. மன அமைதியிலும், சலனமில்லாமையிலும் நீ வளர்கிறாய்.

**கே:** மனம் மிகவும் அமைதியற்றது. அதை அமைதிப்படுத்த என்ன வழி?

**ம:** ஆசிரியரை நம்பு. எனக்கு நிகழ்ந்ததைப் பார். என் குரு 'நான்' என்பதின்மேல் மட்டுமே கவனத்தைச் செழுத்தவும், வேறு எதன் மேலும் கவனத்தைச் செலுத்தாமலும் இருக்கும்படி கட்டளை

யிட்டார். நான் கீழ்ப்படிந்தேன். நான் எந்தவிதமான குறிப்பிட்ட மாதிரியான மூச்சுப் பயிற்சியையோ, தியானத்தையோ, அல்லது வேதப் புத்தகங்களைப் படிப்பதையோ செய்யவில்லை. எது நடந்தாலும் நான் என் கவனத்தை அதற்கு அப்பால் திருப்பி, 'நான்' என்னும் உணர்வில் இருப்பேன். இது மிகவும் எளிதானதாகவும், கேவலமானதாகவும் தோன்றும். நான் அதைச் செய்ததற்கு ஒரே காரணம் என் குரு அவ்வாறு செய்யச் சொன்னார் என்பதுதான். இருப்பினும் அது வேலை செய்தது! கீழ்ப்படிதல் என்பது எல்லா ஆசைகளையும், அச்சங்களையும் கரைக்கக் கூடிய வலிமையான கரைப்பான்.

வெறுமனே, உன் மனதை ஆக்கிரமித்துள்ள எல்லாவற்றிற்கும் அப்பால் திருப்பு. நீ முடிக்க வேண்டிய வேலைகளைச் செய். ஆனால் புதுப் பொறுப்புக்களைத் தவிர். காலியாக வைத்திரு, அணுகக் கூடியவாறு இரு. வேண்டாமல் வருவதைத் தடுக்காதே.

முடிவில் பற்றற்ற விரக்தியின் ஆனந்தமான நிலையைத் தாண்டி அதற்கு அப்பால் நீ செல்வாய். நீ கிரகிக்க முடியாத மற்றும் விவரிக்க முடியாத, சுலபமான மற்றும் சுதந்திரமான, இருப்பினும் அற்புதமாக மெய்யான அக நிலையை அடைவாய். இந்த நிலையை நீ நேரடியாக அடைந்து, இந்த நிலை அல்லாமல் வேறு ஒரு மெய்யான நிலை இருக்க முடியாது என்னும் உறுதியைப் பெறுவாய்.

**கே:** மெய்யைத் தேடும் ஒருவர், தன் யோகாவை முனைப்புடன் பயிற்சி செய்யும் போது அவருடைய உள் குரு வழிகாட்டி, உதவுவாரா அல்லது யோக சாதனைகளைச் செய்துவிட்டு விளைவுகளுக்காகக் காத்திருப்பாரா?

**ம:** எல்லாமும் தானாகவே நடக்கின்றன. விசாரம் செய்பவரோ, அல்லது குருவோ எதுவும் செய்வதில்லை. காரியங்கள் அவை நடக்கும் விதமாகவே நடக்கின்றன. செயல்படுத்துதல் என்னும் உணர்வு வந்த பிறகு, குற்றம் சாட்டுதலோ அல்லது பாராட்டோ சுமத்தப் படுகிறது.

**கே:** என்ன வினோதம்! கண்டிப்பாக செய்பவர் செயலுக்கு முன்பே வருகிறார்.

**ம:** அது முற்றிலும் வேறு மாதிரி. செயல் என்பது நிஜம். செய்பவர் வெறுமனே ஒரு கருத்துமட்டுமே. உன் வார்த்தைகளே செயல் என்பது உறுதியானது என்றும், செய்பவர் சந்தேகமானவர் என்றும் காண்பிக்கின்றன. பொறுப்பைத் தவிர்ப்பது என்பது மனிதத் தன்மையின் வினோதமான ஒரு விளையாட்டு. ஏதாவது ஒன்று நிகழத் தேவைப்படும் கணக்கற்ற காரணிகளைக் கருத்தில் கொண்டால் ஒவ்வொன்றிற்கும் எவ்வளவுதான் தூரமான இடைவெளி இருந்தாலும் ஒவ்வொன்றும் காரணம் என்று ஒருவர் ஒப்புக் கொள்ள வேண்டும். செய்பவர் என்னும் கருத்து 'நான்' மற்றும் 'என்னுடையது' என்னும் மெய்யற்றதிலிருந்து பிறப்பது.

**கே:** அந்த மெய்யற்றது எவ்வளவு வலிமையானது?

**ம:** சந்தேகமில்லாமல் அது வலிமையானதுதான். ஏனெனில் அது மெய்மையை அடிப்படையாகக் கொண்டுள்ளது.

**கே:** அதில் என்ன மெய்த்தன்மை உள்ளது?

**ம:** மெய்யற்ற அனைத்தையும் ஒதுக்கித் தள்ளி அதைக் கண்டு பிடி.

**கே:** ஆன்மீக முயற்சியில் உள் சுயத்தின் பங்கை நான் நன்கு புரிந்து கொள்ள முடியவில்லை. யார் முயற்சி செய்வது? புற சுயமா அல்லது உள் சுயமா?

**ம:** பிரயத்தனம், உள், வெளி, சுயம் மற்றும் இன்ன பிற வார்த்தைகளை நீ கண்டுபிடித்து, அவற்றை மெய்மையின் மேல் சுமத்த விளைகிறாய். காரியங்கள் அவை நடக்கும் விதத்திலேயே நடக்கின்றன. ஆனால் நாம் அவற்றை நமது மொழியால் வடிவமைக்கப்பட்ட ஒரு படிவத்தில் அமைக்கப் பார்க்கிறோம். வார்த்தைகளால் விவரிக்க முடியாததனால் மெய்மையை மறுக்கும் அளவிற்கு இந்தப் பழக்கம் மிகவும் வலிமையானது. வழக்கங் களாலும், பழக்கங்களாலும் திரும்பத் திரும்ப கிடைக்கப் பெறும் அனுபவங்களோடு தொடர்புபடுத்தப்பட்ட வெறும் குறியீடுகள் மட்டுமே வார்த்தைகள் என்பதைப் பார்க்க நாம் மறுக்கிறோம்.

**கே:** ஆன்மீகப் புத்தகங்களின் அவசியம் என்ன?

**ம:** அறியாமையை நீக்க அவை உதவுகின்றன. ஆரம்பத்தில் அவை உபயோகமானவை. ஆனால் முடிவில் அவை ஒரு தடையாக மாறி விடுகின்றன. அவற்றை எப்போது ஒதுக்குவது என்று ஒருவர் அறிய வேண்டும்.

**கே:** ஆத்மாவிற்கும், சாத்வீகத்திற்கும் அதாவது சுயத்திற்கும், சத்வ குணத்திற்கும் என்ன தொடர்பு?

**ம:** சூரியனுக்கும் அதன் ஒளிக் கற்றைகளுக்கும் உள்ளது போல. சத்வ குணம் மற்றும் அழகு, புரிதல் மற்றும் அன்பு ஆகியவை எல்லாம் மெய்மையின் வெளிப்பாடுகள். அது செயல்படும் மெய்மை, பருப் பொருளின்மேல் ஆன்மாவின் தாக்கம். தாமசம் தடை செய்கிறது, ராஜசம் திரிக்கிறது, சாத்வீகம் மெய்மையை வெளிப்படுத்துகிறது. சாத்வீகம் முதிர்ச்சி அடையும்போது எல்லா ஆசைகளும், அச்சங்களும் முடிவிற்கு வந்துவிடும். திரிக்கப்படாத மனதில் மெய்யான இருத்தல் பிரதிபலிக்கப்படுகிறது. பருப் பொருள் இல்லாமல் போனால் ஆன்மா வெளிப்படும். இரண்டும் ஒன்றாகப் பார்க்கப்படும். அவை எப்போதும் ஒன்றுதான். ஆனால் வளர்ச்சியற்ற மனம் அதை இரண்டாகப் பார்க்கிறது. மனதைப் பூரணம் ஆக்குவது மனிதனின் வேலை. ஏனெனில் பருப் பொருளும் ஆன்மாவும் மனதில் சந்திக்கின்றன.

**கே:** நான் ஒரு கதவிற்குமுன் நிற்கும் மனிதனைப் போல உணர்கிறேன். எனக்கு கதவு திறந்திருக்கிறது என்று தெரியும். ஆனால் அது ஆசை மற்றும் அச்சம் என்னும் நாய்களால் காவல் காக்கப் படுகிறது என்றும் தெரியும். நான் என்ன செய்வது?

**ம:** ஆசிரியருக்குக் கீழ்படிந்து, நாய்களை எதிர். அவை அங்கு இல்லாததுபோல் நடந்துகொள். மறுபடியும், கீழ்ப்படிதல்தான் பொன்னான விதிமுறை. கீழ்ப்படிதலால் சுதந்திரம் கிடைக்கப் பெறுகிறது. சிறையிலிருந்து தப்பிக்கத் தன்னுடைய விடுதலைக்கு முயற்சிப்பவர்கள் அனுப்பும் குறிப்புகளைக் கேள்வி கேட்காமல் பின்பற்ற வேண்டும்.

**கே:** குருவின் வார்த்தைகளை வெறுமனே கேட்பது சிறிதளவே சக்தியைக் கொண்டிருக்கும். அவற்றிற்குக் கீழ்ப்படிய ஒருவருக்கு

நம்பிக்கை வேண்டும். அம்மாதிரியான நம்பிக்கையை யார் உருவாக்குவது?

**ம:** நேரம் வரும்போது நம்பிக்கை வரும். காலப்போக்கில் ஒவ்வொன்றும் வரும். சத்குரு எப்போதும் பகிர்ந்துகொள்ளத் தயாராக இருப்பார். ஆனால் பெற்றுக் கொள்ள யாரும் இல்லை.

**கே:** ஆமாம். ஸ்ரீ ரமண மஹரிஷி, 'பல குருமார்கள் உள்ளனர், ஆனால் சிஷ்யர்கள் எங்கே?' என்று வழக்கமாகக் கூறுவதுண்டு.

**ம:** நன்று. காலப் போக்கில் ஒவ்வொன்றும் நிகழ்கின்றன. எல்லாமும் வந்துவிடும். ஒரு ஜீவன்கூடக் கட்டுண்டு இருக்காது.

**கே:** நான் மெய்யறிதலுக்கு அறிவுபூர்வமான புரிதலைக் கைக்கொள்வதற்கு மிகவும் அஞ்சுகிறேன். நான் மெய்யைப் பற்றி அறியாமலே அதைப் பற்றிப் பேசலாம். ஒரு வார்த்தைகூட சொல்லப்படாமலே அதை அறியலாம்.

இந்த உரையாடல் புத்தகமாக வெளியிடப்படும் என்று நான் அறிகிறேன். இதைப் படிப்பவரின்மீது என்ன தாக்கத்தை ஏற்படுத்தும்?

**ம:** கவனத்தோடு யோசிக்கின்ற வாசகருக்குள் அவை முதிர்ந்து, பூக்களையும், கனிகளையும் வெளிக்கொணரும். மெய்யை அடிப்படையாகக் கொண்ட வார்த்தைகள் முழுவதுமாகச் சோதிக்கப் பட்டால் அவற்றின் சொந்த வலிமையைக் கொண்டிருக்கும்.



# 76. உனக்குத் தெரியாது என்று தெரிந்துகொள்வதுதான் உண்மையான அறிவு

**மஹராஜ்:** உடல் உள்ளது. உடலுக்குள் ஒரு கவனிப்பவர் இருப்பதாகவும், வெளிப்புறத்தில் கவனிப்பில் உள்ள ஒரு உலகம் இருப்பதாகவும் தோன்றுகிறது. கவனிப்பவர், கவனிக்கப்படும் உலகம், அவருடைய கவனிக்கும் தன்மை ஆகியவை அனைத்தும் ஒன்றாகத் தோன்றி, ஒன்றாக மறைகின்றன. இவை அனைத்திற்கும் அப்பால் சூன்யம் உள்ளது. அந்தச் சூன்யம் எல்லோருக்கும் ஒன்றுதான்.

**கேட்பவர்:** நீங்கள் சொல்வது எளிமையானதாகத் தோன்றுகிறது. ஆனால் எல்லோரும் அதைச் சொல்ல மாட்டார்கள். நீங்கள் மட்டுமே இந்த மூன்றைப் பற்றியும், அதற்கு அப்பால் உள்ள சூன்யத்தைப் பற்றியும் பேசுகிறீர்கள். நான் உலகத்தை மட்டுமே பார்க்கிறேன். அது எல்லாவற்றையும் உள்ளடக்கியது.

**ம:** 'நான்' என்பதையுமா?

**கே:** 'நான்' என்பதையும் கூடத்தான். உலகம் இருப்பதால் 'நான்' அங்கு இருக்கிறது.

**ம:** மேலும், 'நான்' இருப்பதால் உலகம் அங்கு இருக்கிறது.

**கே:** ஆமாம். அது இரண்டு விதமாகவும் பொருந்துகிறது. என்னால் இரண்டையும் பிரிக்கவோ, அவற்றிற்கு அப்பால் செல்லவோ முடியாது. நான் ஒன்றை அனுபவப்படாவிட்டால் அது இருக்கிறதென்று என்னால் சொல்ல முடியாது. அதே போல நான் அனுபவப் படாததால் ஒன்று இல்லையென்றும் சொல்ல முடியாது.

உங்களை அவ்வளவு உறுதியாக நீங்கள் அனுபவப்படும் எது பேச வைக்கிறது?

**ம:** காலமற்ற, இடமற்ற, காரணமற்றவனாக என்னை உள்ளபடியே நான் அறிவேன். நீ மற்றவற்றில் ஆழ்ந்திருப்பதால் உன்னால் அறிய முடியவில்லை.

**கே:** நான் ஏன் அப்படி ஆழ்ந்திருக்கிறேன்?

**ம:** ஏனெனில் நீ அவற்றில் ஆர்வத்துடன் இருக்கிறாய்.

**கே:** எது என்னை ஆர்வத்துடன் இருக்கச் செய்கிறது?

**ம:** துக்கத்தைப் பற்றிய பயம்; இன்பத்தின் மேல் ஆசை. துக்கம் முடியும்போது இன்பம் வருகிறது. இன்பம் முடியும்போது துக்கம் வருகிறது. அவை முடிவற்ற தொடர்ச்சியாகச் சுழல்கின்றன. நீ உன்னை அப்பால் காணும் வரை அந்தத் தொடர் சுழற்சியை ஆராய்.

**கே:** என்னை அப்பால் கொண்டுசெல்ல எனக்கு உங்களுடைய ஆசீர்வாதம் தேவையில்லையா?

**ம:** உன் உட்புற மெய்மையின் ஆசீர்வாதம் காலமற்று உன்னோடு உள்ளது. நீ ஆசீர்வாதத்தைக் கேட்பதே அது இருப்பதற்கான ஒரு அறிகுறி. என்னுடைய ஆசீர்வாதத்தைப் பற்றிக் கவலைப்படாதே. ஆனால் உனக்குச் சொல்லப்பட்டதைச் செய். செயல்பாடுதான் உள்ளார்ந்த ஈடுபாட்டின் அத்தாட்சி; ஆசீர்வாதத்தை எதிர்பார்ப்பது அல்ல.

**கே:** நான் எதைப் பற்றி உள்ளார்ந்த ஈடுபாட்டுடன் இருக்க வேண்டும்?

**ம:** உன்னுடைய கவனத்தின் பிரதேசத்திற்குள் குறுக்கிடும் ஒவ்வொன்றையும் தீர்க்கமாக ஆராய். பயிற்சியினால் அவை தன்னிச்சையாகவும், அளவற்றும் ஆகும்வரை கவனப் பிரதேசம் விரிவடையும்; ஆராய்ச்சி ஆழமாகும்.

**கே:** நீங்கள் ஆன்ம ஞானத்தை பயிற்சியின் விளைவாக மாற்றுகிறீர்கள், இல்லையா? பயிற்சி, பௌதீக இருத்தலின் வரையறைகளுக்குள் வேலைசெய்கிறது. அது எப்படி அளவற்றதைப் பிறப்பிக்க முடியும்?

**ம:** கண்டிப்பாகப் பயிற்சிக்கும், மெய்யறிதலுக்கும் இயல்பான தொடர்பு இருக்க முடியாது. ஆனால் மெய்யறிதலுக்கான தடைகள் பயிற்சியினால் ஆழமாகப் பாதிக்கப்படுகின்றன.

**கே:** தடைகள் என்னென்ன?

**ம:** கற்பனையான கருத்துக்களும், ஆசைகளும் தவறான செயல்களுக்குக் கொண்டுசெல்கின்றன. தவறான செயல்கள் மனதையும், உடலையும் வலுவிழக்கவும், மெலியவும் செய்கின்றன. மெய்யற்றதைக் கண்டுபிடித்துக் கைவிடுவது மெய் மனதிற்குள் நுழைவதை எது தடுக்கிறதோ அதை நீக்குகிறது.

**கே:** 'நான்' மற்றும் 'உலகம் இருக்கிறது' என்னும் மனதின் இரு நிலைகளை என்னால் வேறுபடுத்திப் பார்க்க முடிகிறது; அவை ஒன்றாக எழும்பி, ஒன்றாக அடங்குகின்றன. மக்கள் 'உலகம் இருப்பதால் நான் இருக்கிறேன்' என்று சொல்கிறார்கள். நீங்கள் 'நான் இருப்பதால் உலகம் இருக்கிறது' என்று சொல்வதுபோல் தோன்றுகிறது. எது உண்மை?

**ம:** இரண்டுமே அல்ல. காலத்திலும், இடத்திலும் இரண்டுமே ஒரே நிலையிலும், ஒரே மாதிரியான நிலையிலும் உள்ளன. இரண்டிற்கும் அப்பால் காலமற்றது இருக்கிறது.

**கே:** காலத்திற்கும், காலமற்றதற்கும் என்ன தொடர்பு?

**ம:** காலமற்றதற்குக் காலத்தைப் பற்றித் தெரியும். காலத்திற்குக் காலமற்றதைப் பற்றித் தெரியாது. எல்லா விழிப்புணர்வும் காலத்தில்தான் உள்ளது. அதற்குக் காலமற்றது உணர்வற்றதாகத் தோன்றுகிறது. இருப்பினும், காலமற்றதுதான் விழிப்புணர்வைச் சாத்தியமாக்குகிறது. ஒளி இருளில் மிளிர்கிறது. வெளிச்சத்தில் இருள் காணப் படுவதில்லை. அல்லது நீ வேறுமாதிரியாகச் சொல்லலாம்: முடிவற்ற ஒளிக் கடலில் இருண்ட மற்றும் அளவான, மாறுபாட்டால் உணர்ந்தறியப்படுகின்ற விழிப்புணர்வு என்னும் மேகக் கூட்டங்கள் தோன்றுகின்றன. இவையெல்லாம் மிகவும் எளிதான, இருப்பினும் முற்றிலும் வெளிப்படுத்தவே முடியாத ஒன்றை வார்த்தைகளில் விவரிக்க முயற்சிக்கும் பிரயத்தனம்.

**கே:** வார்த்தைகள் கடந்துபோக உதவும் பாலம் போன்றவை.

**ம:** வார்த்தைகள் மனதின் ஒரு நிலையைக் குறிக்கின்றன, மெய்மையை அல்ல. நதி, இரு கரைகள், குறுக்கே உள்ள பாலம் - இவையெல்லாம் மனதில்தான் உள்ளன. வார்த்தைகள் மட்டுமே உன்னை மனதிற்கு அப்பால் கொண்டு செல்ல முடியாது. மெய்யை அறியத் தீராத வேட்கையோ அல்லது குருவின் மேல் தீர்க்கமான நம்பிக்கையோ தேவை. குறிக்கோளோ, அதை அடையும் வழியோ எதுவும் கிடையாது. நீதான் வழி. நீதான் குறிக்கோள். உன்னைத் தவிர அடைவதற்கு வேறு ஒன்றும் இல்லை. உனக்குத் தேவையானதெல்லாம் புரிதல் மட்டுமே. புரிதல்தான் மனதின் மலர்ச்சி. மரம் காலா காலத்திற்கு இருப்பது. ஆனால் பூப்பதும், காய்ப்பதும் பருவத்தில்தான் நிகழ்கின்றன. பருவங்கள் மாறுகின்றன. ஆனால் மரம் மாறுவதில்லை. நீ மரம். நீ கணக்கற்ற கிளைகளையும், இலைகளையும் கடந்த காலத்தில் வளர்த்துள்ளாய். எதிர் காலத்திலும் வளர்ப்பாய். ஆனாலும் நீ இருப்பாய். நீ இருந்தவற்றையோ, இருக்கப்போவதையோ அறிய வேண்டிய தில்லை. ஆனால் இருப்பதை அறியவேண்டும். பிரபஞ்சத்தை உருவாக்குகின்ற ஆசை உன்னுடையது. உலகம் உன்னுடைய உருவாக்கம் என்று அறிந்து சுதந்திரமாக இரு.

**கே:** நீங்கள் உலகம் அன்பின் குழந்தை என்று சொல்கிறீர்கள். உலகத்தில் நிறைந்துள்ள கொடூரங்களையும், யுத்தங்களையும், சீர்திருத்த முகாம்களையும், மனிதாபிமானமற்ற சுரண்டல் களையும் பற்றி நான் அறியும்போது என்னால் எப்படி அதை என் சொந்த உருவாக்கமாகக் கொள்ள முடியும்? நான் எவ்வளவுதான் அளவானவனாக இருந்தாலும் என்னால் அவ்வளவு கொடூரமான உலகத்தை உருவாக்கியிருக்க முடியாது.

**ம:** யாருக்கு இந்தக் கொடூரமான உலகம் தோன்றுகிறது என்று கண்டுபிடி. அப்போது நீ அது ஏன் அவ்வளவு கொடூரமாக இருக்கிறது என்று அறிவாய். உன் கேள்விகள் முற்றிலும் நியாயமானவை. ஆனால் உலகம் யாருடையது என்று உனக்குத் தெரிந்தால் ஒழிய அவற்றிற்குப் பதிலளிக்க முடியாது. ஒரு பொருளின் அர்த்தத்தைக் கண்டுபிடிக்க நீ அதை உருவாக்கிய வரைக் கேட்க வேண்டும். நான் சொல்கிறேன்: நீதான் நீ வாழ்கின்ற

உலகத்தை உருவாக்கியவர் - நீ மட்டுமே அதை மாற்றவோ, இல்லாமல் போகவோ செய்ய முடியும்.

**கே:** நான் உலகத்தை உருவாக்கினேன் என்று நீங்கள் எப்படிச் சொல்ல முடியும்? எனக்கு அதைப் பற்றித் தெரியாது.

**ம:** நீ உன்னை அறிந்தால் உன்னால் அறிய முடியாதது எதுவும் உலகத்தில் இருக்காது. உன்னை உடலாக நினைத்தால் உலகத்தை ஜடப்பொருட்களின் ஒரு தொகுப்பாகத்தான் பார்ப்பாய். உன்னை விழிப்புணர்வின் மையமாக அறிந்தால், உலகம் விழிப்புணர்வுக் கடலாகத் தோன்றும்.

**கே:** இவையெல்லாம் கேட்க அழகாகத் தெரிகின்றன. ஆனால் இவை என் கேள்விக்குப் பதிலில்லை. ஏன் உலகில் இவ்வளவு துன்பங்கள் இருக்கின்றன?

**ம:** நீ விட்டேத்தியாக கவனிப்பவராக மட்டும் இருந்தால், துன்பப்பட மாட்டாய். நீ உலகத்தை ஒரு நாடகமாகப் பார்ப்பாய். உள்ளபடியே அது ஒரு மிகவும் மகிழ்விக்கும் நாடகம்.

**கே:** இல்லை, இல்லை! இந்த லீலை என்னும் கோட்பாட்டை நான் கைக்கொள்ள மாட்டேன். துன்பம் மிகவும் தீவிரமாகவும், எல்லாவற்றிலும் ஊடுருவியும் இருக்கிறது. துன்பம் என்னும் ஒரு கண்ணாடி மூலம் எவ்வளவு வக்கிரத்தைப் பார்க்க வேண்டியிருக்கிறது! என்ன ஒரு குரூரமான கடவுளை நீங்கள் எனக்குக் காண்பிக்கிறீர்கள்!

**ம:** துன்பத்தின் காரணம் பார்ப்பவரைப் பார்க்கப்பட்டதுடன் அடையாளப் படுத்துவதில் இருக்கிறது. அதனால் ஆசை பிறக்கிறது. ஆசையுடன் குருட்டுத்தனமான செயல்பாடும், புத்திகெட்ட விளைவுகளும் பிறக்கின்றன. சுற்றுமுற்றும் பார்த்தாயானால் துன்பம் மனிதனால் ஏற்படுத்தப்பட்ட ஒன்று என்பதைக் காண்பாய்.

**கே:** ஒரு மனிதன் தனக்கு மட்டும் துன்பம் விளைவித்துக் கொண்டால் நீங்கள் சொல்வதை ஒப்புக் கொள்வேன். ஆனால் தன்னுடைய முட்டாள்தனத்தால் அவர் மற்றவர்களையும் துன்பப் படுத்துகிறார். கனவு காணும் ஒருவர் தனிப்பட்ட பயங்கரமான

கனவுகளைக் கொண்டிருப்பார். அவரைத் தவிர அதனால் வேறு யாரும் துன்பப்படுவதில்லை. ஆனால் என்ன மாதிரியான கனவு மற்றவர்களின் வாழ்க்கையில் பிரச்சனைகளை உருவாக்கும்?

**ம:** பல முரண்பட்ட விவரிப்புகள் உள்ளன. மெய்மை எளிமையானது - எல்லாமும் ஒன்றே. ஒத்திசைவுதான் சாசுவதமான சட்டம். துன்பப் பட யாரும் வற்புறுத்துவதில்லை. நீ விவரிக்கவும், விளக்கவும் முயன்றால்தான் வார்த்தைகள் தோற்றுப்போகின்றன.

**கே:** ஒருமுறை காந்திஜி 'சுயம் அஹிம்சையின் விதிகளுக்குக் கட்டுப்பட்டதல்ல' என்று சொன்னதாக ஞாபகம். சுயத்திற்கு அதன் வெளிப்பாடுகளின்மேல், அவற்றைச் சரிப்படுத்த துன்பத்தைத் திணிக்கச்செய்யும் சுதந்திரம் உள்ளது. ஒரு ஓவியர் தன் ஓவியத்திலுள்ள தவறை சரிசெய்வது போல சுயம் வெளிப் பட்டதிலுள்ள வேண்டாதவற்றை நீக்கவும், வேண்டியவற்றைச் சேர்க்கவும் செய்யும்.

**ம:** இருமைத் தன்மை நிலையில் அவ்வாறு இருக்கலாம். ஆனால் மெய்மையில் ஒளிரச்செய்ய முடியாததும், ஒவ்வொன்றையும் ஒளிரவும் செய்கின்ற ஒரே ஆதாரம்தான் உள்ளது. பார்க்க முடியாததாக இருந்துகொண்டு, அது பார்ப்பதைச் சாத்திய மாக்குகிறது. உணரப்படாததாக இருந்துகொண்டு, அது உணர்ச்சிகளை உருவாக்குகிறது. சிந்திக்க இயலாததாக இருந்து கொண்டு, அது சிந்தனைகளை உருவாக்குகிறது. இருத்தலற்றதாக இருந்துகொண்டு, அது இருத்தலைப் பிறப்பிக்கிறது. அது இயக்கத்தின் இயங்காத பின்புலம். ஒருமுறை நீ அங்கு சென்று விட்டால், நீ எல்லா இடத்திலும் உன் வீட்டில் இருப்பதைப் போல நிம்மதியாக இருப்பாய்.

**கே:** நான் அதுவானால், எது என்னைப் பிறக்க வைக்கிறது?

**ம:** கடந்த கால நிறைவேறாத ஆசைகளின் ஞாபகங்கள் சக்தியைப் பெற்று பிறக்க வைக்கின்றன. அது தன்னை ஒரு நபராகப் பரிணமிக்கிறது. அதன் சக்தி ஏற்றம் தீர்ந்துபோகும்போது நபர் இறக்கிறார். நிறைவேறாத ஆசைகள் அடுத்த பிறவிக்கு எடுத்துச் செல்லப்படுகின்றன. உடலுடன் சுய அடையாளப்படுத்துதல்

எப்போதும் புதுமையான ஆசைகளை உருவாக்குகின்றது. இந்தப் பந்தத்தின் செயல்முறை தெளிவாகப் பார்க்கப்பட்டால் ஒழிய அவற்றிற்கு முடிவே இராது. மனத் தெளிவுதான் விடுதலை யளிப்பது. ஏனெனில் அதன் காரணங்களும், விளைவுகளும் தெளிவாகப் பார்க்கப்பட்டால் ஒழிய, உன்னால் ஆசையைக் கைவிட முடியாது. நான் அதே நபர் மறுபடியும் பிறக்கிறார் என்று சொல்லவில்லை. அவர் நிலையாக இறக்கிறார். ஆனால் அவருடைய ஞாபகங்களும், அவருடைய ஆசைகளும், அச்சங்களும் தங்கியிருக் கின்றன. அவை ஒரு புது மனிதனுக்குச் சக்தியை அளிக்கின்றன. மெய் அதில் பங்கெடுத்துக் கொள்வதில்லை. ஆனால் ஒளியைக் கொடுப்பதால் அதைச் சாத்தியமாக்குகிறது.

**கே:** என்னுடைய பிரச்சனை இதுதான்: எனக்குத் தெரிந்தவரை, ஒவ்வொரு அனுபவமும் அதன் சொந்த மெய்மையைக் கொண்டிருக்கிறது. அது வெளிப்படையாக அனுபவப்பட்டு அங்கு இருக்கிறது. நான் அதை வினவும் கணத்தில், யாருக்கு அது ஏற்படுகிறது, யார் கவனிப்பவர் என்றெல்லாம் கேள்வி கேட்கும் கணத்தில் அனுபவம் முடிவுறுகிறது. என்னால் ஆராய முடியக் கூடியதெல்லாம் அதன் ஞாபகங்களை மட்டுமே. வாழும் நிகழ்கால கணத்தை, தற்பொழுதை என்னால் ஆராய முடியாது. என் விழிப்புணர்வு கடந்த காலத்தைப் பற்றியது, நிகழ் காலத்தைப் பற்றியதல்ல. நான் விழிப்புணர்வுடன் இருக்கும்போது மெய்யாலுமே தற்பொழுதில் வாழ்வதில்லை. ஆனால் கடந்த காலத்தில்தான் வாழ்கிறேன். ஆராய நான் தற்பொழுதை அழிக்க வேண்டும். மெய்யாலுமே தற்கணத்தைப் பற்றிய விழிப்புணர்வு இருக்க முடியுமா?

**ம:** நீ விவரிப்பது விழிப்புணர்வே அல்ல. அது அனுபவத்தைப் பற்றிய சிந்தனை மட்டுமே. உண்மையான விழிப்புணர்வு (சம்வித்) ஒரு தூய சாட்சிபாவ நிலை. அதில் சாட்சியாகப் பார்த்த நிகழ்வைப் பொருத்துச் செய்யும் பிரயத்தனம் எதுவுமே இருக்காது. உன் சிந்தனைகள் மற்றும் எண்ணங்களும், வார்த்தைகள் மற்றும் செயல்களும் அந்த நிகழ்வின் ஒரு பகுதியாக இருக்கலாம்; நீ எல்லாவற்றையும் அக்கரையில்லாமல் முழுத் தெளிவுடனும், புரிதலுடனும் கவனிப்பாய். என்ன நிகழ்ந்துகொண்டிருக்கிறது

என்று நீ துல்லியமாகப் புரிந்துகொள்வாய். ஏனெனில் அது உன்னைப் பாதிக்காது. அது ஒரு விட்டேத்தியான மனோபாவமாகத் தெரியலாம். ஆனால் அது நிஜத்தில் அவ்வாறில்லை. ஒருமுறை நீ அந்த சாட்சிபாவ நிலைக்குள் இருந்தால் அதன் தன்மை எதுவாக இருந்தாலும் நீ பார்ப்பதை நேசிப்பாய். இந்தத் தெரிவற்ற அன்புதான் விழிப்புணர்வின் உரைகல். அது அவ்வாறில்லாவிட்டால் நீ சில சுய காரணங்களுக்காக வெறுமனே ஆர்வத்துடன் இருக்கிறாய் என்று அர்த்தம்.

**கே:** சுகமும், துக்கமும் இருக்கும்வரை ஒருவர் ஆர்வத்துடன் கண்டிப்பாக இருப்பார்.

**ம:** ஒருவர் விழிப்புணர்வுடன் இருக்கும்வரை சுகமும், துக்கமும் இருக்கும். விழிப்புணர்வின் நிலையில் சுகத்துடனும், துக்கத்துடனும் போராட முடியாது. சுக, துக்கங்களுக்கு அப்பால் செல்ல நீ விழிப்புணர்விற்கு அப்பால் செல்லவேண்டும். விழிப்புணர்வை உனக்குள் ஏற்படும் ஒன்றாக அல்லாமல், உனக்கு ஏற்படும் ஏதோ ஒன்றாகவும், வெளிப்புறமான, அன்னியமான, மேலே சுமத்தப்பட்ட ஏதோ ஒன்றாகவும் நீ அதைப் பார்த்தால்தான் அது சாத்தியமாகும். பிறகு, நீ விழிப்புணர்விலிருந்து திடீரென விடுபட்டு, எதுவுமே தொந்தரவு செய்யாமல் மெய்யாலுமே தனித்து இருப்பாய். இதுதான் உன் உண்மையான நிலை. விழிப்புணர்வு சொறிந்து கொள்ளச் செய்யும் அரிப்பு போன்றது. கண்டிப்பாக உன்னால் விழிப்புணர்விலிருந்து வெளியேற முடியாது. ஏனெனில் வெளியேறுவது என்னும் கற்பனையான கருத்தே விழிப்புணர்வில் தான் உள்ளது. ஆனால் உன் விழிப்புணர்வைத் தனிப்பட்ட, தனக்கே உரிய ஒரு மாதிரியான காய்ச்சல் என்றும், பொறிப்பதற்கு முன்னால் கோழிக்குஞ்சு ஓட்டால் மூடப்பட்டிருப்பதைப் போல நீ அதனால் சூழப்பட்டிருப்பதாகவும் பார்க்கக் கற்றுக் கொண்டாயானால் இந்த மனோபாவத்தாலேயே ஓட்டை உடைக்கின்ற நெருக்கடி உருவாகும்.

**கே:** 'வாழ்க்கை என்பது துக்கப்படுதல்' என்று புத்தர் சொல்லியிருக்கிறார்.

**ம:** அவர் எல்லா விழிப்புணர்வும் துக்கம் மிகுந்தது என்னும் அர்த்தத்தில் சொல்லியிருக்கலாம். அது வெளிப்படையாகத் தெளிவாகத் தெரிவது.

**கே:** இறத்தல் அதிலிருந்து விடுதலை அளிக்கிறதா?

**ம:** யார் தன்னைப் பிறந்துள்ளதாக நம்புகிறாரோ அவர் இறத்தலைப் பற்றி மிகவும் அஞ்சுவார். மாறாக, தன்னை உண்மையாலுமே அறிந்தவருக்கு இறப்பு என்பது ஒரு மகிழ்ச்சியான நிகழ்வு.

**கே:** ஹிந்து மரபு, துன்பப்படுதல் விதியால் கொணரப்படுகிறது என்று சொல்கிறது. விதிக்கு அதில் மதிப்பு உள்ளது. இயற்கைச் சீற்றங்களான வெள்ளப் பெருக்கு மற்றும் நில நடுக்கம் அல்லது மனிதனால் ஏற்படுத்தப் பட்ட போர்கள் மற்றும் புரட்சிகள் ஆகிய பெரும் அளவிலான சீரழிவுகளைப் பாருங்கள். தனக்கே தெரியாத தன்னுடைய பாவங்களினால் ஒவ்வொருவரும் துன்பப்படுகிறார்கள் என்று நாம் துணிந்து எண்ணலாமா? துன்பப்படும் கோடிக்கணக்கானவர்கள் அனைவரும் தண்டனை பெறும் குற்றவாளிகளா?

**ம:** ஒருவர் தன் சொந்தப் பாவங்களுக்காக மட்டுமே துன்புற வேண்டுமா? நாம் மெய்யாலுமே தனித்தனியானவர்களா? இந்த மிகப் பரந்த வாழ்க்கை என்னும் கடலில் நாம் மற்றவர்களின் பாவங்களுக்காகத் துன்பப்படுகிறோம்; நம் பாவங்களுக்காக மற்றவர்களைத் துன்பப் படுத்துகிறோம். நிச்சயமாகச் சமநிலைச் சட்டம் உயர்வாக ஆள்கிறது. முடிவில் கணக்குகள் நேர் செய்யப் படுகின்றன. ஆனால் வாழ்க்கை தொடரும்போது நாம் ஒருவரை ஒருவர் ஆழமாகப் பாதிக்கிறோம்.

**கே:** ஆமாம். கவிஞர் கூறுவது போல, 'யாருமே தனித் தீவு அல்ல'.

ம; ஒவ்வொரு அனுபவத்தின் பின்புலத்திலும் சுயமும், அனுபவத்தின் மேல் அதன் ஆர்வமும் உள்ளது. அதை ஆசை என்றோ, அன்பு என்றோ சொல் - வார்த்தைகள் பொருட்டல்ல.

**கே:** நான் துன்பத்தை ஆசைப்பட முடியுமா? நான் வேண்டுமென்றே வலியைத் தேடலாமா? நல்ல தூக்கத்தை எதிர்பார்த்து சுகமான படுக்கையைத் தயார் செய்த ஒரு மனிதனைப் போலவும்,

பிறகு அவன் ஒரு கோரக் கனாக் காட்சியைக் கண்டு, கனவில் புரளவும், அலறவும் செய்கின்றதைப் போலவும் நான் இல்லையா? கண்டிப்பாக அன்பு அச்சுறுத்தும் கனவை உருவாக்காது.

**ம:** எல்லாத் துன்பமும் சுயநலமான தனிமைப்படுத்திக் கொள்வதாலும், குறுகிய மனப்பான்மையாலும், பேராசையாலும் வருவது. துன்பத்தின் காரணத்தைப் பார்த்து, நீக்கிவிட்டால் துன்பம் ஒழிந்துவிடும்.

**கே:** நான் என் துன்பத்தின் காரணங்களை நீக்கலாம். ஆனால் மற்றவர்கள் துன்பப்பட விடப்படுவார்கள்.

**ம:** துன்பத்தைப் புரிந்துகொள்ள நீ சுக துக்கங்களுக்கு அப்பால் செல்லவேண்டும். உன் சொந்த ஆசைகளும், அச்சங்களும் உன்னைப் புரிந்துகொள்ள விடாமல் தடுக்கின்றன. அதனால் உன்னால் மற்றவர்களுக்கு உதவமுடியவில்லை. மெய்யாக மற்றவர்கள் என்று யாரும் இல்லை. உனக்கு உதவிக்கொள்வதன் மூலம் நீ மற்ற அனைவருக்கும் உதவுகிறாய். மனிதகுலத்தின் துன்பங்களைப் பற்றி நீ தீவிரமாக அக்கறையுடன் இருந்தால் உன்னிடம் உள்ள ஒரே உதவும் வழியான உன் சுயத்தைத்தான் சரி செய்ய வேண்டும்.

**கே:** நான்தான் இந்த உலகத்தை உருவாக்குபவன், காப்பவன், அழிப்பவன் என்றும், எங்கும் நிறைந்திருக்கின்றவன், எல்லாம் அறிந்தவன், சர்வ வல்லமையுள்ளவன் என்றும் நீங்கள் சொல்லிக் கொண்டே இருக்கிறீர்கள். நீங்கள் சொல்வதைச் சிந்தித்துப் பார்க்கும்போது, 'ஏன் இவ்வளவு தீமைகள் என் உலகத்தில் இருக்கின்றன?' என்று நான் என்னைக் கேட்டுக் கொள்கிறேன்.

**ம:** தீமைகள் எதுவும் கிடையாது, துன்பம் எதுவும் கிடையாது; வாழ்வதின் மகிழ்ச்சிதான் பிரதானமானது. ஒவ்வொன்றும் எப்படி வாழ்க்கையைப் பற்றிக் கொண்டிருக்கின்றன என்றும், வாழ்தல் எவ்வளவு பிரியமானது என்றும் பார்.

**கே:** என் மனத் திரையில் பிம்பங்கள் ஒன்றை ஒன்று முடிவற்றுத் தொடர்கின்றன. என்னுடையதில் எதுவுமே நிலையானதல்ல.

**ம:** உன்னை நன்றாகவும், தெளிவாகவும் பார். திரை உள்ளது - அது மாறாது. ஒளி நிலைத்தவாறு ஒளிர்கிறது. இடையில் உள்ள படச் சுருள்தான் நகர்ந்து, படங்களைத் தோன்றச் செய்கிறது. படச் சுருளை நீ - விதி (ப்ரராப்தம்) -என்று சொல்லலாம்.

**கே:** எது விதியை உருவாக்குகிறது?

**ம:** அறியாமைதான் தவிர்க்க முடியாததன் காரணம்.

**கே:** எதைப் பற்றிய அறியாமை?

**ம:** அடிப்படையில் உன்னைப் பற்றிய அறியாமை. மற்றும், ஒவ்வொரு பொருளின் மெய்யான தன்மை, அவற்றின் காரணங்கள், விளைவுகள் ஆகியவறைப் பற்றிய அறியாமை. நீ புரிந்துகொள்ளாமல் சுற்றும்முற்றும் பார்த்து, தோற்றங்களை மெய்யானவை என்று எடுத்துக் கொள்கிறாய். உனக்கு உலகத்தையும், உன்னையும் தெரியும் என்று நம்புகிறாய். ஆனால் உன் அறியாமைதான் உன்னை 'எனக்குத் தெரியும்' என்று சொல்ல வைக்கிறது. உனக்குத் தெரியாது என்று ஒத்துக்கொள்வதில் தொடங்கி, அங்கிருந்து ஆரம்பி.

அறியாமையை முடிவிற்குக் கொண்டுவருவதைவிட உலகத்திற்கு வேறு எதுவும் அதிகமாக உதவமுடியாது. பிறகு நீ உலகத்திற்கு உதவக் குறிப்பிட்டு எதுவும் செய்ய வேண்டியதில்லை. செயல்பட்டுக்கொண்டோ, செயல்படாமலோ இருக்கின்ற உன் இருத்தலே ஒரு உதவிதான்.

**கே:** எப்படி அறியாமையைத் தெரிந்துகொள்வது? அறியாமையைத் தெரிந்துகொள்ள முன்பே அறிவு இருக்க வேண்டும்.

**ம:** மிகச் சரி. 'நான் அறிவற்றவன்' என்று ஒப்புக் கொள்வதே அறிவுடைமையின் தொடக்கம். ஒரு அறிவற்ற மனிதன் தன் அறியாமையைப் பற்றி அறியாதவன். அறியாமைக்கு இருத்தல் இல்லை என்று நீ சொல்லலாம். ஏனெனில் அதைப் பார்க்கும் கணமே அது இல்லாமல் போய்விடும். எனவே நீ அதை விழிப்புணர்வற்ற நிலை அல்லது குருட்டுத் தன்மை என்று சொல்லலாம். நீ புறத்திலும், உனக்குள்ளும் பார்ப்பது உனக்குத்

தெரியாததும், புரியாததும்தான் என்று அறிவதுதான் உண்மையான அறிவு - ஒரு பணிவான இதயத்தின் அறிவு.

**கே:** ஆமாம்; இயேசு கிறிஸ்து 'ஆவியில் குறைவாக உள்ளவர்கள் ஆசீர்வதிக்கப்பட்டவர்கள்' என்று சொல்லியிருக்கிறார்.

**ம:** உனக்கு எப்படித் தோன்றுகிறதோ அப்படிச் சொல்லிக் கொள்; நிஜம் என்னவென்றால் அறிவு என்பது அறியாமையைப் பற்றியது மட்டுமே. உனக்குத் தெரியாது என்று உனக்குத் தெரியும்.

**கே:** அறியாமை எப்போதாவது முடிவிற்கு வருமா?

**ம:** அறியாமல் இருப்பதில் என்ன தவறு? உனக்கு எல்லாமும் தெரிய வேண்டியதில்லை. உனக்கு எது தேவையோ அதை மட்டும் தெரிந்தால் போதும். மீதமுள்ளது தானே பொறுப்பெடுத்து தன்னையே கவனித்துக் கொள்ளும் - அது எவ்வாறு அதைச் செய்கிறது என்று நீ அறியாமலே. எது முக்கியம் என்றால் உன் விழிப்புணர்வற்ற தன்மை விழிப்புணர்விற்கு எதிராக வேலை செய்யாது என்பதும், எல்லா நிலையிலும் ஒருங்கிணைப்பு உள்ளதென்பதும்தான். அறிவது என்பது அவ்வளவு முக்கியம் இல்லை.

**கே:** நீங்கள் சொல்வது உளவியல் ரீதியாகச் சரி. ஆனால் மற்றவர்களைப் பற்றியும், உலகத்தைப் பற்றியும் அறிந்து கொள்வது என்று வரும் போது, எனக்குத் தெரியாது என்று நான் தெரிந்து கொண்டிருப்பது பெரிதும் உதவாது.

**ம:** நீ உள்ளுக்குள் ஒருங்கிணைந்தவுடன் புற அறிவு தன்னிச்சையாக வரும். வாழ்க்கையின் ஒவ்வொரு கணத்திலும் உனக்கு என்ன தெரிய வேண்டுமோ அதைத் தெரிந்துகொள்வாய். பிரபஞ்ச மனம் என்னும் கடலில் எல்லா அறிவும் அடங்கி உள்ளது. நீ வேண்டினால் அது உனக்குக் கிடைக்கும். பெரும்பாலானவற்றை நீ அறிய வேண்டியதில்லை. ஆனால் அவை உன்னுடையவையே.

ஞானம் எப்படியோ அதேபோல்தான் சக்தியும்.

நீ எவையெல்லாம் செய்து முடிக்கப்பட வேண்டும் என்று நினைக்கிறாயோ அவை தவறாமல் செய்யப்படும். சந்தேக

மில்லாமல் கடவுள் இந்தப் பிரபஞ்சத்தை நிர்வகித்தல் என்னும் வேலையைச் செய்துகொண்டிருக்கிறார்; ஆனால் அவருக்குச் சிறிது உதவி கிடைப்பதில் சந்தோசம் இருக்கும். உதவுபவர் எப்போது சுயநலமற்றும், புத்திசாலியாகவும் இருக்கிறாரோ அப்போது பிரபஞ்சத்தின் முழுச் சக்தியும் அவருடைய ஆளுமைக்கு உட்பட்டது.

**கே:** இயற்கையின் குருட்டுத்தனமான சக்திகளும் கூடவா?

**ம:** குருட்டுத்தனமான சக்தி எதுவும் கிடையாது. விழிப்புணர்வு தான் சக்தி. எது செய்யப்பட வேண்டுமோ அதைப் பற்றிய பிரக்ஞையுடன் இருந்தால் அது செய்யப்படும். உஷாராகவும், அமைதியாகவும் மட்டும் இரு. உன் சேருமிடத்தை அடைந்து, உன் மெய்யான இயல்பை அறிந்துவிட்டால் உன் இருத்தல் எல்லோருக்கும் ஒரு ஆசீர்வாதமாக மாறும். உனக்குத் தெரியாமல் இருக்கலாம். உலகத்திற்கும் தெரியாமல் இருக்கலாம். இருப்பினும் உதவி கதிர்வீசும். எல்லா அரசியல்வாதிகள் மற்றும் கொடை வள்ளல்களின் ஒட்டு மொத்தத்திற்கும் அதிகமாக நல்லது செய்யக் கூடிய மக்கள் உலகத்தில் இருக்கிறார்கள். அவர்கள் நோக்கமோ, கருத்தோ இல்லாமல் ஒளியையும், சாந்தத்தையும் கதிர் வீசச் செய்கிறார்கள். அவர்கள் நிகழ்த்திய அதிசயங்களைப் பற்றி மற்றவர்கள் சொன்னால் அவர்களும் ஆச்சரியப்படுவார்கள். இருப்பினும், எதையும் தங்களுக்குச் சொந்தமானதென்று கருதாமல், அவர்கள் தற்பெருமை இல்லாமலும், புகழுக்கு ஏங்காமலும் இருப்பார்கள். அவர்களால் தங்களுக்கென்று எதையும் ஆசைப்பட முடியாது. அவர்களுக்கு மற்றவர்களுக்கு உதவுவதன் மகிழ்ச்சி கூட இருக்காது. கடவுள் நல்லவர் என்று அறிந்து, அவர்கள் அமைதியாக இருப்பார்கள்.

## 77. 'நான்' மற்றும் 'என்னுடையது' என்பவை பொய்யான கருத்துக்கள்

**கேட்பவர்:** நான் என்னுடைய குடும்பத்தின் மீதும், உடைமைகளின் மீதும் மிகவும் பற்றுள்ளவனாக இருக்கிறேன். நான் எப்படி இந்தப் பற்றை வெல்வது?

**மஹராஜ்:** இந்த பந்தம் 'நான்' மற்றும் 'என்னுடையது' என்பதோடு பிறப்பது. இந்த வார்த்தைகளின் உண்மையான அர்த்தத்தைக் கண்டுபிடி. அப்போது எல்லாப் பந்தங்களிலிருந்தும் விடுபடுவாய். காலத்தில் பரவி இருக்கின்ற மனதை நீ கொண்டுள்ளாய். ஒன்றைத் தொடர்ந்து மற்றொன்றாக எல்லாமும் நடக்கின்றன. பிறகு ஞாபகம் மிஞ்சுகிறது. அதில் தவறு ஒன்றும் இல்லை. எல்லா உயிருடன் வாழ்பவைக்கும் அத்யாவசியமான பழைய சுக துக்கங்களின் ஞாபகங்கள் ஒரு பிரதி பிம்பமாகவும், ஆளுமை செய்கின்ற பழக்கமாகவும் மிஞ்சும்போதுதான் பிரச்சனை உருவாகிறது. இந்த பிரதி பிம்பம் 'நான்' என்னும் வடிவமெடுத்து, எப்போதுமே இன்பங்களை நாடுவதையும் அல்லது துக்கத்திலிருந்து ஓடுவதையும் செய்கின்ற உடலையும், மனதையும் அதன் தேவைகளுக்காக உபயோகப்படுத்துகிறது. 'நான்'ஐ அது உள்ளவாறே ஆசைகள் மற்றும் அச்சங்களின் கற்றையாகவும், 'என்னுடையது' என்பதை துன்பத்தைத் தவிர்ப்பதற்காகவும், இன்பத்தை அடைவதற்காகவும் தேவைப்படுகின்ற எல்லாப் பொருள்களையும், மக்களையும் அரவணைக்கின்ற ஒன்றாகவும் நீ அடையாளம் கண்டுகொண்டால், 'நான்' மற்றும் 'என்னுடையது' என்பவை மெய்யற்ற கருத்துக்கள் என்றும், அவற்றிற்கு மெய்மையில் முகாந்திரம் இல்லை என்றும் நீ காண்பாய். மனதால் உருவாக்கப்பட்ட அவை, மனம் அவற்றை உண்மையானதென்று

நினைக்கும் வரை அதை ஆட்சி செய்யும்; வினவும் போது அவை கரைந்துவிடும்.

'நான்' மற்றும் 'என்னுடையது'க்கு அவற்றாலேயே இருத்தல் இல்லை. ஆகையால் அவற்றிற்கு ஒத்தாசை தேவை. அதை உடலில் அவை பெறுகின்றன. 'என் கணவர்', 'என் குழந்தை' என்று சொல்லும்போது, நீ உடலின் கணவரையும், உடலின் குழந்தையையும் குறிக்கிறாய். உடலாக இருப்பதான கருத்தை விட்டுவிட்டு, 'நான் யார்?'என்னும் கேள்வியை எதிர்கொள். உடனடியாக ஒரு செயல்பாடு இயங்க ஆரம்பிக்கும். அது மெய்மையைத் திரும்பக் கொண்டுவரும். அல்லது, சொல்லப் போனால், மனதை மெய்மைக்குக் கொண்டுசெல்லும். நீ பயப்படாமல் மட்டும் இருக்கவேண்டும்.

**கே:** நான் எதைப் பற்றி அச்சப்படுவேன்?

**ம:** மெய்மை இருக்க, 'நான்' மற்றும் 'என்னுடையது' என்னும் கற்பனைக் கருத்துக்கள் இல்லாமல் போய்விட வேண்டும். அவற்றைப் போகவிட அனுமதித்தால் போய்விடும். பிறகு உன் வழக்கமான, இயல்பான ஸ்வரூபம் திரும்பத் தோன்றும். அதில் நீ உடலாகவோ, மனமாகவோ இருக்க மாட்டாய். 'நான்' மற்றும் 'என்னுடையது' என்பதும் இருக்காது. ஆனால் ஒரு முற்றிலும் வித்தியாசமான இருத்தல் நிலையில் இருப்பாய். இது அல்லது அதுவாக இல்லாமல், குறிப்பிட்ட எதனுடனோ, அல்லது பொதுவாகவோ எந்தவிதமான சுய அடையாளமும் இல்லாமல் இருக்கும் தூய இருத்தல் நிலை அது. அந்தத் தூய விழிப்புணர்வின் ஒளியில் எதுவுமே இருக்காது - ஒன்றுமே இல்லை என்னும் கருத்து கூட. ஒளி மட்டுமே இருக்கும்.

**கே:** நான் நேசிக்கின்ற மக்கள் இருக்கிறார்கள். நான் அவர்களை விட்டுவிட வேண்டுமா?

**ம:** நீ அவர்களின்மேல் கொண்டுள்ள உன் பிடிமானங்களை மட்டும் விட்டுவிடுவாய். மீதி அவர்களைப் பொருத்தது. அவர்கள் உன்மேல் கொண்டுள்ள ஆர்வத்தை இழக்கலாம்; இழக்காமலும் போகலாம்.

**கே:** அவ்வாறு அவர்கள் எப்படிச் செய்வார்கள்? அவர்கள் என்னுடையவர்கள் அல்லவா?

**ம:** அவர்கள் உன் உடலைச் சேர்ந்தவர்கள். உன்னுடையவர்கள் அல்ல. இன்னும் சிறப்பாகச் சொல்ல வேண்டும் என்றால், உன்னுடையதல்லாதவர்கள் என்று யாரும் கிடையாது.

**கே:** என்னுடைய உடைமைகளைப் பற்றி?

**ம:** 'என்னுடையது' என்பதே இல்லாதபோது, உன்னுடைய உடைமைகள் என்பவை எங்கிருக்கும்?

**கே:** 'நான்' என்பதை இழப்பதால் எல்லாவற்றையும் இழக்க வேண்டுமா என்று சொல்லுங்கள்?

**ம:** நீ இழக்கலாம். இழக்காமல் போகலாம். எப்படியாயினும் அது உனக்கு ஒன்றுதான். உன்னுடைய இழப்பு வேறு சிலருக்கு ஆதாயம். நீ அதைப் பொருட்படுத்த மாட்டாய்.

**கே:** நான் அதைப் பொருட்படுத்தாவிட்டால், எல்லாவற்றையும் இழந்துவிடுவேன்!

**ம:** உனக்கு ஒன்றுமே இல்லாதபோது, உனக்குப் பிரச்சனைகள் எதுவும் இருக்காது.

**கே:** உயிர் வாழ்வதற்கான பிரச்சனை இருக்கும்.

**ம:** அது உடலின் பிரச்சனை. அதை உடல் உணவு உண்டு, நீர் அருந்தி, தூங்கித் தீர்த்துக்கொள்ளும். எல்லோருக்கும் போது மானவை இருக்கிறது. எல்லோரும் பகிர்ந்துகொள்ள வேண்டும்.

**கே:** நமது சமுதாயம் அபகரிப்பதை அடிப்படையாகக் கொண்டிருக்கிறது. பகிர்வதை அல்ல.

**ம:** நீ பகிர்ந்து கொள்வதால் அதை மாற்றலாம்.

**கே:** எனக்குப் பகிர மனமில்லை. எப்படியாயினும், என் உடைமைகளுக்காக நான் வரி விதிக்கப்படுகிறேன்.

**ம:** இது தானாகவே பகிர்வதல்ல. சமுதாயம் கட்டாயத்தினால் மாறாது. அதற்கு இதயத்தின் மாற்றம் தேவை. எதுவும் உனக்குச்

சொந்தமானதல்ல என்றும், எல்லாமும் எல்லோருக்கும் சொந்தம் என்றும் புரிந்துகொள். பிறகுதான் சமுதாயம் மாறும்.

**கே:** ஒரு மனிதனின் மாற்றம் உலகத்தை மாற்றாது.

**ம:** நீ வாழும் உலகம் ஆழமாகப் பாதிக்கப்படும். உயர்வு தாழ்வு என்னும் பேதங்கள் இல்லாமல் அது ஒரு ஆரோக்யமான, மகிழ்ச்சியான உலகமாக இருக்கும். அதனால் ஆனந்தம் அதிகரிக்கவும், பரவவும் செய்யும். தூய்மையான ஒரு இதயத்தின் வலிமை அளவற்றது.

**கே:** தயவு செய்து மேலும் எங்களுக்கு விளக்குங்கள்.

**ம:** பேசுவது என்னுடைய பொழுதுபோக்கு அல்ல. சில சமயம் நான் பேசுகிறேன். சில சமயம் பேசுவதில்லை. நான் பேசுவதும், பேசாதிருப்பதும் ஒரு குறிப்பிட்ட சூழ்நிலையின் ஒரு பகுதி. அவை என்னைச் சார்ந்திருப்பதில்லை. நான் பேச வேண்டிய சூழ்நிலை இருந்தால் என்னால் பேசப்படுவதை நான் கேட்கிறேன். வேறு சில சூழ்நிலைகளில் என்னால் பேசப்படுவதை நான் கேட்காமல் இருக்கலாம். இவையெல்லாம் எனக்கு ஒன்றே. நான் பேசுகிறேனோ இல்லையோ, நானாக இருப்பதின் அன்பும், ஒளியும் பாதிக்கப்படுவதில்லை. அவை என்னுடைய கட்டுப்பாட்டிலும் இல்லை. அவை இருக்கின்றன. அவை இருக்கின்றன என்று எனக்குத் தெரியும். ஒரு மகிழ்ச்சியான பிரக்ஞை இருக்கும். ஆனால் மகிழ்ச்சியாக இருப்பவர் என்று ஒருவரும் இல்லை. கண்டிப்பாக ஒரு அடையாள உணர்வு இருக்கும். ஆனால் அது எப்போதும் இருக்கின்ற திரையின் மீது தோன்றும் படங்களின் தொடர்ச்சியின் அடையாளத்தைப் போன்ற ஒரு ஞாபக வடிவத்தின் பாதை. ஒளியும், திரையும் இல்லாமல் படம் இருக்க முடியாது. படத்தைத் திரையின் மேல் தோன்றும் ஒளியின் விளைவு என்று அறிவது படம் நிஜமானது என்னும் கருத்திலிருந்து விடுதலையைக் கொடுக்கும். நீ செய்ய வேண்டியதெல்லாம் நீ சுயத்தை நேசிக்கின்றாய் என்றும், சுயம் உன்னை நேசிக்கிறது என்றும், 'நான் உள்ளேன்' என்னும் உணர்வு இரண்டிற்குமிடையிலான இணைப்பு மற்றும் வெளிப் படையான வேறுபாடுகள் இருந்தாலும் அது ஒரு அடையாளச் சின்னம் என்றும் புரிந்துகொள்வதுதான். 'நான்' என்பதை

அகத்திற்கும், புறத்திற்கும் இடையேயான, நிஜத்திற்கும், தோற்றத் திற்கும் இடையேயான அன்பின் ஒரு அடையாளம் என்று பார். எப்படி ஒரு கனவில் 'நான் கனவு கண்டேன்' என்று சொல்ல வைக்கின்ற 'நான்' என்னும் உணர்வைத் தவிர எல்லாமும் வித்தியாசமானவைகளோ அப்படி, 'நான்' என்னும் உணர்வு மறுபடியும் 'நான் என் மெய்யான சுயம்' என்று சொல்ல வைக்கிறது. நான் எதுவும் செய்வதில்லை; எனக்கு எதுவுமே செய்யப் படுவதில்லை. நான் என்னவோ அதுதான். எதுவும் என்னைப் பாதிக்காது. நான் ஒவ்வொன்றையும் சார்ந்திருப்பதுபோல் தோன்றுகிறேன். ஆனால் உண்மையில் எல்லாமும் என்னைச் சார்திருக்கின்றன.

**கே:** நீங்கள் எதுவும் செய்வதில்லை என்று எப்படிச் சொல்கிறீர்கள்? நீங்கள் என்னுடன் பேசிக் கொண்டிருக்கிறீர்கள் அல்லவா?

**ம:** நான் பேசிக்கொண்டிருப்பதான உணர்வு எனக்கு இல்லை. பேச்சு நடைபெற்றுக் கொண்டிருக்கிறது. அவ்வளவே.

**கே:** நான் பேசுகிறேன்.

**ம:** அப்படியா? நீ பேசுவதைக் நீயே கேட்கிறாய். அதை 'நான் பேசுகிறேன்' என்று சொல்கிறாய்.

**கே:** ஒவ்வொருவரும் 'நான் வேலை செய்கிறேன்', 'நான் வருகிறேன்', 'நான் போகிறேன்' என்று சொல்கிறார்கள்.

**ம:** உன் மொழியின் வழக்கங்களின்மேல் எனக்கு எந்தவிதமான ஆட்சேபனையும் கிடையாது. ஆனால் அவற்றைத் தவறாக உபயோகிப்பது மெய்மையைத் திரிக்கவும், அழிக்கவும் செய்கின்றது. சரியாகச் சொல்வது எப்படி என்றால்: 'பேசுவது, செயல்படுவது, வருவது, போவது என்பவை இருக்கின்றன' என்றுதான். ஏதாவது ஒன்று நிகழ முழுப் பிரபஞ்சமும் ஒத்துழைக்க வேண்டும். குறிப்பிட்ட ஒன்று ஒரு நிகழ்வை ஏற்படுத்தலாம் என்று நம்புவது தவறு. ஒவ்வொரு காரணியும் பிரபஞ்சமயமானது. முழுப் பிரபஞ்சமும் உருவாக்கத்திற்கும், உயிர் வாழ்தலுக்கும் பங்களிக்கா விட்டால் உன் உடல் இருக்க முடியாது. நிகழ்வுகள் அவை நிகழும்

விதமாகவே நிகழ்கின்றன என்று எனக்கு நன்றாகத் தெரியும். ஏனெனில் உலகம் அது உள்ளவாறே உள்ளது. நிகழ்வுகளின் போக்கை மாற்ற நான் ஒரு புதுக் காரணியை உலகிற்குள் கொண்டுவர வேண்டும். அந்தக் காரணி எனக்குள் குவிக்கப்பட்ட அன்பு மற்றும் புரிதலின் வலிமையைக் கொண்ட 'நான்'ஆக மட்டுமே இருக்க முடியும்.

உடல் பிறக்கும்போது எல்லாவிதமானவையும் அதற்கு நடக்கின்றன; நீ அதில் பங்கெடுத்துக் கொள்கிறாய். ஏனெனில் நீ உன்னை உடலாகக் கருதுகிறாய். நீ திரை அரங்கத்தில் இருக்கும் மனிதன் தன் இருக்கையிலேயே அமர்ந்திருப்பதையும், படம் ஒளியின் செயல்பாடு என்பதையும் நன்கு அறிந்திருந்தாலும் படத்தோடு சேர்ந்து சிரித்துக்கொண்டும், அழுதுகொண்டும் இருப்பதைப் போன்றுள்ளாய். அந்த பிரம்மையை நீக்க கவனத்தைத் திரையிலிருந்து தன்மேல் திருப்பினால் போதும். உடல் இறக்கும்போது, பௌதீக மற்றும் மனோ நிகழ்வுகளின் தொடர்ச்சியாக நீ இப்போது வாழ்ந்துகொண்டிருக்கின்ற வாழ்க்கை முடிவிற்கு வரும். உடல் இறப்பதற்காகக் காத்திருக் காமல் அது இப்போதுகூட முடியலாம் - கவனத்தைச் சுயத்தின்மேல் திருப்பி அங்கேயே வைத்திருந்தால் போதுமானது. ஒரு புதிரான சக்தி ஒவ்வொன்றையும் உருவாக்கி இயக்குகிறது என்பதுபோல் எல்லாமும் நடக்கின்றன. நீ இயக்குபவர் அல்ல என்றும், கவனிப்பவர் மட்டுமே என்றும் அறிந்துகொள். அப்போது நீ அமைதியைப் பெறுவாய்.

**கே:** *அந்தச் சக்தி என்னிலிருந்து தனித்ததா?*

**ம:** கண்டிப்பாக இல்லை. ஆனால் நீ அக்கறையற்ற சாட்சியாக இருப்பதிலிருந்து ஆரம்பிக்க வேண்டும். பிறகுதான் உன் முழு இருத்தலையும் பிரபஞ்ச அன்புடையதாகவும், செயல்படுவதாகவும் நீ அறிவாய். ஒரு குறிப்பிட்ட நபர்த்தன்மையின் விளைவுகளில் சிக்கிக்கொண்டிருக்கும் வரையில் உன்னால் அதற்கு அப்பால் எதையும் காண முடியாது. ஆனால் முடிவாக நீ குறிப்பிட்ட ஒன்றோ, பிரபஞ்ச மயமானவனோ அல்ல என்றும், அவற்றிற்கு அப்பாற்பட்டவன் என்றும் காண்பாய். எப்படி ஒரு மிகச்சிறிய

பென்சிலின் கூர் கணக்கற்ற படங்களை வரைய முடியுமோ அப்படி வடிவமற்ற பிரக்ஞையின் புள்ளி, விரிந்த பிரபஞ்சத்தின் உள்ளடக்கங்களை வரையும். அந்தப் புள்ளியைக் கண்டுபிடித்துச் சுதந்திரமாக இரு.

**கே:** எதிலிருந்து நான் இந்த உலகத்தை உருவாக்குகிறேன்?

**ம:** உன் சொந்த ஞாபகங்களிலிருந்து. நீதான் உருவாக்குபவர் என்பதை அறியாதவரைக்கும் உன் உலகம் அளவானதாகவும், திரும்பத் திரும்ப ஏற்படுவதாகவும் இருக்கும். உன் கடந்த காலத்துடன் உன்னை அடையாளப்படுத்திக் கொள்வதற்கு அப்பால் சென்றுவிட்டாயானால் ஒத்திசைவும், அழகும் நிறைந்த ஒரு உலகத்தை உருவாக்க நீ சுதந்திரமானவன். அல்லது நீ இருத்தல் மற்றும் இல்லாதிருத்தல் ஆகிய இரண்டிற்கும் அப்பால் வெறுமனே இரு.

**கே:** நான் என் ஞாபகங்களைப் போக விட்டுவிட்டால் என்ன மிஞ்சும்?

**ம:** எதுவும் மிஞ்சாது.

**கே:** எனக்குப் பயமாக இருக்கிறது.

**ம:** நீ சுதந்திரத்தையும், அதன் ஆசீர்வாதங்களையும் அனுபவப் படும்வரை பயப்படுவாய். கண்டிப்பாகச் சில ஞாபகங்கள் உடலை அடையாளம் காணவும், வழி நடத்தவும் தேவை. அம்மாதிரியான ஞாபகங்கள் மிஞ்சும். ஆனால் உடலோடு எந்தப் பந்தமும் இருக்காது; மேற்கொண்டு உடல் ஆசைக்கும், அச்சத்திற்குமான அடிப்படையாக இருக்காது. இவையெல்லாம் புரிந்துகொள்ளவும், நடைமுறைப்படுத்தவும் கடினம் அல்ல. ஆனால் நீ ஆர்வத்துடன் இருக்கவேண்டும். ஆர்வமில்லாமல் எதுவுமே செய்யமுடியாது.

நீ பற்றாசையால் கட்டப்பட்ட ஞாபகங்களின் ஒரு கற்றை என்று கண்டுகொண்ட பிறகு, வெளியேறி, வெளியிலிருந்து பார். முதன்முறையாக ஞாபகம் அல்லாத ஒன்றை நீ உணர்ந்தறியலாம். தன் சொந்த வேலைகளில் மும்முரமாக ஈடுபட்டுக் கொண்டிருக்கும் இன்னார் என்னும் ஒருவர் இருக்கமாட்டார். கடைசியாக நீ

அமைதி அடைவாய். உலகத்தில் எதுவுமே தவறு அல்ல என்றும், நீ மட்டுமே தவறு என்றும், இவையெல்லாம் முடிந்துவிட்டன என்றும் நீ அறிவாய். நீ அறியாமையினால் பிறக்கும் ஆசையின் வலைக்குள் மறுபடியும் எப்போதும் சிக்கமாட்டாய்.



# 78. எல்லா அறிவும் அறியாமையே

**கேட்பவர்:** நீங்கள் மெய்ஞானம் பெற்ற விதத்தைப் பற்றி எங்களுக்குச் சொல்ல முடியுமா?

**மஹராஜ்:** என்னைப் பொருத்து எப்படியோ அது மிகவும் எளியதாகவும், சுலபமானதாகவும் இருந்தது. என் குரு, தான் இறப்பதற்கு முன்பு, 'நீ உச்ச உயர்வான மெய்மை என்று நான் சொல்வதை நம்பு. என் வார்த்தைகளைச் சந்தேகிக்காதே. என்னை நம்பாமல் இருக்காதே. நான் உன்னிடம் உண்மையைத்தான் சொல்கிறேன். அதன் மீது செயல்படு' என்று சொன்னார். என்னால் அவருடைய வார்த்தைகளை மறக்க முடியவில்லை. மறக்காமல் இருந்ததால் நான் மெய்ஞானம் அடைந்தேன்.

**கே:** ஆனால் உண்மையில் நீங்கள் என்ன செய்து கொண்டிருந்தீர்கள்?

**ம:** விசேஷமாக எதுவும் இல்லை. என் வாழ்க்கையை வாழ்ந்து கொண்டிருந்தேன். தொழிலைச் செய்துகொண்டிருந்தேன். குடும்பத்தைக் கவனித்துக் கொண்டிருந்தேன். வேலையில்லாமல் ஓய்வாக இருந்த ஒவ்வொரு கணத்தையும் என் குருவையும், அவருடைய வார்த்தைகளையும் ஞாபகம் வைத்திருப்பதில் கழித்தேன். பிறகு அவர் சீக்கிரமே இறந்துவிட்டார். எனக்குப் பற்றிக் கொள்ள அவருடைய ஞாபகம் மட்டுமே இருந்தது. அதுவே போதுமானதாக இருந்தது.

**கே:** அது உங்களுடைய குருவின் அருளும், சக்தியுமாக இருக்கலாம்.

**ம:** அவருடைய வார்த்தைகள் உண்மையானவை. ஆகையால் அவை நிஜமாகின. உண்மையான வார்த்தைகள் எப்போதும் நிஜமாக ஆகும். என் குரு எதுவுமே செய்யவில்லை; அவருடைய

வார்த்தைகள் செயல்பட்டன. ஏனெனில் அவை உண்மையானவை. நான் எது செய்தாலும் அது கேட்காமலும், எதிர்பாராமலும் உள்ளுக்குள்ளிருந்து வந்தது.

**கே:** குரு ஒரு செயல்பாட்டை அதில் எந்தவிதத்திலும் பங்கெடுக்காமலே ஆரம்பித்தாரா?

**ம:** எப்படி வேண்டுமானாலும் சொல்லிக்கொள். காரியங்கள் ஒவ்வொன்றும் அவை நடக்கும்விதமாகவே நடக்கின்றன - ஏன் மற்றும் எப்படி என்று யாரால் சொல்ல முடியும்? வேண்டுமென்றே நான் எதையும் செய்யவில்லை. நடப்பதை நடக்குமாறு விட்டுவிடுவது, தனித்திருப்பது, உள்முகமாகச் செல்வது ஆகிய உந்துதல்கள் எல்லாமுமே அவையாகவே வந்தன.

**கே:** நீங்கள் எந்தவிதமான முயற்சியையும் செய்யவில்லையா?

**ம:** இல்லை. நம்புவாயோ, மாட்டாயோ, நான் மெய்யறிதலுக்குக்கூட ஆர்வத்துடன் இருக்கவில்லை. குரு நான் உச்ச உயர்வு என்று மட்டும் என்னிடம் சொன்னார். பிறகு இறந்துவிட்டார். நான் அவருடைய வார்த்தைகளை ஒருபோதும் சந்தேகிக்கவில்லை. மேற்கொண்டு மற்றவை அவையாகவே நடந்தன. நான் மாறுவதைக் கண்டேன். அவ்வளவே. நிஜமாக, நான் அசந்துவிட்டேன். ஆனால் அவருடைய வார்த்தைகளைப் பரிசோதிக்க வேண்டும் என்னும் ஒரு ஆசை எழுந்தது. அவர் பொய் சொல்லியிருக்கமாட்டார் என்பதில் உறுதியாக இருந்தேன். ஒன்று, அவருடைய வார்த்தைகளின் முழு அர்த்தத்தையும் அறிய வேண்டும்; அல்லது இறக்க வேண்டும் என்று நினைத்தேன். அதில் மிகவும் தீர்மானமாக இருப்பதை உணர்ந்தேன். ஆனால் என்ன செய்வது என்று தெரியவில்லை. அவரையும், அவருடைய உறுதிமொழியையும் சிந்தித்துக்கொண்டு, விவாதிக்காமல், வெறுமனே அவர் என்னிடம் சொன்னதை ஞாபகம் வைத்துக்கொண்டு பல மணி நேரம் இருப்பேன்.

**கே:** பிறகு என்ன நடந்தது உங்களுக்கு? நீங்கள் பரமார்த்த ஸ்வரூபம் என்று எப்படி அறிந்தீர்கள்?

**ம:** யாரும் என்னிடம் வந்து சொல்லவில்லை. நானும் அகமுகமாக அவ்வாறு சொல்லிக்கொள்ளவில்லை. உண்மையில் ஆரம்பத்தில் நான் சில முயற்சிகளை மேற்கொண்ட பொழுதுதான் ஒளியைக் காண்பது, சப்தங்களைக் கேட்பது, தேவ, தேவியரைச் சந்திப்பது, அவர்களுடன் பேசுவது என்பன போன்ற வினோதமான சில அனுபவங்களுக்குள்ளாகக் கடந்து சென்றேன். ஒருமுறை குரு என்னிடம் 'நீதான் உச்ச உயர்வான மெய்மை' என்று சொன்ன பிறகு, எனக்கு வினோதக் காட்சிகளும், மெய்மறந்த நிலைகளும் வருவது நின்றுபோய், நான் மிகவும் அமைதியாகவும், எளிமையாகவும் ஆனேன். நான் என்னைக் குறைவாகக் குறைவாக ஆசைப்படுபவனாகவும், அறிந்துகொள்பவனாகவும் கண்டேன். முடிவாக முழு வியப்பில் 'எனக்கு எதுவும் தெரியாது, எனக்கு எதுவும் தேவையில்லை' என்று சொல்லத் தொடங்கினேன்.

**கே:** நீங்கள் நிஜமாகவே ஆசையிலிருந்தும், அச்சத்திலிருந்தும் சுதந்திரமாக இருந்தீர்களா அல்லது உங்களுக்கு உங்கள் குரு கொடுத்த பிம்பத்தின்படி ஒரு ஞானியாக நடித்தீர்களா?

**ம:** எனக்கு எந்த பிம்பமும் கொடுக்கப்படவில்லை. என்னிடமும் அப்படிப்பட்டது எதுவும் இல்லை. நான் என்ன எதிர்பார்க்க வேண்டும் என்று என் குரு எப்போதும் சொல்லவில்லை.

**கே:** நிறையக் காரியங்கள் உங்களுக்கு நடக்கின்றன. நீங்கள் உங்கள் பயணம் முடிந்துவிட்டதா?

**ம:** எந்தப் பயணமும் ஒருபோதும் இருக்கவில்லை. எப்போதும் இருப்பது போலவே நான் உள்ளேன்.

**கே:** நீங்கள் அடைய வேண்டியிருந்த பரமார்த்த ஸ்வரூபம் என்ன?

**ம:** என் ப்ரம்மை முடிவிற்கு வந்தது. அவ்வளவே. முன்பு நான் ஒரு உலகத்தை உருவாக்கி, அதைப் பெருகச் செய்து கொண்டிருந்தேன். இப்போது மேற்கொண்டு நான் அதைச் செய்வதில்லை.

**கே:** அப்படியானால் நீங்கள் எங்கு வாழ்கிறீர்கள்?

**ம:** இருத்தலுக்கும், இல்லாதிருத்தலுக்கும் அப்பால், விழிப்புணர்விற்கு அப்பால் உள்ள சூன்யத்தில். இந்தச் சூன்யம் முழுதுமாக நிறைந்தது; என்மேல் பரிதாபப்படாதே. அது ஒரு மனிதன், 'நான் என் வேலையைச் செய்துவிட்டேன். செய்ய வேண்டிய பாக்கி வேலை எதுவுமே இல்லை' என்று சொல்வதைப் போன்றது.

**கே:** நீங்கள் ஞானம்பெற்ற ஒரு குறிப்பிட்ட தேதியைச் சொல்கிறீர்கள். அந்த நாளில் ஏதோ ஒன்று உங்களுக்கு நடந்திருக்க வேண்டும். என்ன நடந்தது?

**ம:** மனம் நிகழ்வுகளை உருவாக்குவதை நிறுத்திவிட்டது. பழமையான, முடிவற்ற தேடல் நின்று போயிற்று - எனக்கு எதுவும் தேவைப் படவில்லை; எதையும் எதிர்பார்க்கவில்லை. எதையும் எனக்குச் சொந்தமானதென்று ஏற்றுக் கொள்ளவில்லை. பிரயத் தனப்பட 'நான்' என்பது மிஞ்சி இருக்கவில்லை. வெறும் 'நான்' என்பதுகூட மங்கிப் போயிற்று. நான் கவனித்த மற்றொன்று என்ன வென்றால், என்னிடமிருந்த வழக்கமான உறுதியானவைகளும் இல்லாமல் போயின. முன்பு நான் பலவற்றைப் பற்றி உறுதியாக இருந்தேன். இப்போது எதுவுமே எனக்கு உறுதியாக இல்லை. ஆனால் நான் தெரிந்து கொள்ளாததனால் எதையும் இழக்கவில்லை என்று நான் உணர்கிறேன். ஏனெனில், என் எல்லா அறிவும் மெய்யற்றது. எல்லா அறிவும் அறியாமையே என்றும், 'எனக்குத் தெரியாது' என்பதுதான் மனதால் சொல்லக் கூடிய ஒரே உண்மையான வாக்கியம் என்றும் புரிந்துகொண்டேன். 'நான் பிறந்தேன்' என்னும் கருத்தை எடுத்துக் கொள். அதை நீ உண்மையென்று கருதலாம். அது உண்மை அல்ல. நீ எப்போதும் பிறக்கவே இல்லை. எப்போதும் இறக்கப் போவதும் இல்லை. கருத்துதான் பிறந்தது; அதுதான் இறக்கும். நீ அல்ல. உன்னை உடல் என்னும் கருத்துடன் அடையாளப்படுத்திக் கொள்வதனால் நீ இறப்பவனாகிறாய். எப்படி ஒரு திரைப் படத்தில் எல்லாமும் ஒளியோ, அப்படி விழிப்புணர்வு விரிந்த உலகமாகிறது. நுட்பமாகப் பார். அப்போது எல்லாப் பெயர்களும், வடிவங்களும் விழிப் புணர்வு என்னும் கடலில் வந்து போகின்ற அலைகள் என்றும்,

விழிப்புணர்வுமட்டுமே இருப்பதாகவும், அதன் மாறுபட்ட வடிவங்கள் இருப்பவை அல்ல என்றும் காண்பாய்.

விழிப்புணர்வின் அடர்த்தியில் ஒரு ஒளி தோன்றுகிறது. எப்படி ஒரு எழுதுகோல் காகிதத்தின்மேல் எழுதுகிறதோ அப்படி, அந்தச் சிறு ஒளிப்புள்ளி வேகமாக நகர்ந்து, வடிவங்களையும், எண்ணங்கள் மற்றும் உணர்வுகளையும், கோட்பாடுகள் மற்றும் கருத்துக்களையும் சுவடுகளாக விட்டுச் செல்கிறது. ஞாபகம்தான் சுவடுகளை விட்டுச்செல்கின்ற மை. நீ அந்தச் சிறு புள்ளி. உன் அசைவினால் உலகம் திரும்ப உருவாக்கப்படுகிறது. அசைவதை நிறுத்தினால் உலகம் இருக்காது. உனக்கு உள்ளே பார். அப்போது, 'நான்' என்னும் உணர்வாக, உடலில் பிரதிபலிக்கும் அடர்த்தியான ஒளிதான் அந்தச் சிறு புள்ளி என்பதைக் காண்பாய். ஒளி மட்டுமே உள்ளது. மற்றவைகளெல்லாம் தோற்றங்களே.

**கே:** உங்களுக்கு அந்த ஒளியைத் தெரியுமா? நீங்கள் அதைப் பார்த்திருக்கிறீர்களா?

**ம:** மனதிற்கு அது இருளாகத் தோன்றுகிறது. அதை அதன் பிரதிபலிப்புகள் மூலம் மட்டுமே அறிய முடியும். எல்லாமும் பகல் வெளிச்சத்தில் காணப்படும் - பகல் வெளிச்சத்தைத் தவிர.

**கே:** நம் எல்லோருடைய மனமும் அதே மாதிரியானவை என்று நான் புரிந்துகொள்ளலாமா?

**ம:** அவ்வாறு எப்படி இருக்க முடியும்? நீ ஞாபகங்களால் பின்னப்பட்டு, ஆசைகளாலும், அச்சங்களாலும் ஒன்றிணைக்கப்பட்ட உன் தனிப்பட்ட சொந்த மனதைக் கொண்டிருக்கிறாய். எனக்குச் சொந்தமான மனம் எதுவும் கிடையாது; எனக்குத் தெரிய வேண்டியதைப் பிரபஞ்சம் எனக்கு முன்னால் கொண்டுவருகிறது, நான் சாப்பிட வேண்டிய உணவை அது கொடுப்பதுபோல.

**கே:** நீங்கள் தெரிந்துகொள்ள விரும்பும் அனைத்தையும் தெரிந்து கொண்டீர்களா?

**ம:** நான் தெரிந்துகொள்ள விரும்புவது எதுவும் இல்லை. ஆனால் நான் தெரிந்துகொள்ள வேண்டியது என்று எது எனக்குத் தோன்றுகிறதோ அதைத் தெரிந்துகொள்கிறேன்.

**கே:** இந்த அறிவு உங்களுக்கு அகத்திலிருந்து வந்ததா அல்லது புறத்திலிருந்தா?

**ம:** அது இங்கு பொருந்தாது. என் அகம் வெளியில் உள்ளது; புறம் உள்ளே உள்ளது. குறிப்பிட்ட ஒரு கணத்தில் எனக்குத் தேவைப் படும் அறிவை உன்னிடமிருந்தும் நான் பெறலாம். ஆனால் நீ என்னிலிருந்து தனித்தவன் அல்ல.

**கே:** நாங்கள் கேள்விப்படும் நான்காம் நிலையான 'துரியம்' என்பது என்ன?

**ம:** உலகத்தை இனம் காணுகின்ற ஒளிப் புள்ளியாக இருப்பது தான் துரியம். அந்த ஒளியாகவே இருப்பது துரியாதீதம். ஆனால் மெய்மை மிக அருகில் இருக்கும்போது பெயர்களுக்கு என்ன தேவை?

**கே:** உங்கள் நிலையில் ஏதேனும் முன்னேற்றம் உள்ளதா? உங்களை நேற்றிருந்த உங்களோடும், இன்றிருக்கும் உங்களோடும் ஒப்பிட்டுப் பார்க்கும்போது நீங்கள் மாறுவதாகவும், முன்னேற்ற மடைவதாகவும் உங்களைக் காண்கிறீர்களா? மெய்மையைப் பற்றிய உங்களுடைய பார்வை ஆழத்திலும், அகலத்திலும் வளர்கிறதா?

**ம:** மெய்மை அசைக்க முடியாதது. இருப்பினும் நிரந்தரமாகத் தொடர்ந்த அசைவில் இருப்பது. அது ஒரு மகாநதியைப் போன்றது - அது ஓடுகிறது; இருப்பினும் அது சாசுவதமாக அங்கு உள்ளது. ஓடுவது நதியும், நதிப் படுகையும், அதன் கரைகளும் அல்ல; ஆனால் அதன் தண்ணீர். அது போல சாத்வீக குணம், தாமசம் மற்றும் ராஜச குணங்களுக்கு எதிராக அதன் விளையாட்டை விளையாடுகிறது. சாத்வீக குணத்தில் எப்போதும் மாற்றமும், முன்னேற்றமும் இருக்கும். ராஜசத்தில் மாற்றமும், பின்னடைவும் இருக்கும். தாமசமோ குழப்பத்தைக் குறிப்பது. மூன்று குணங்களும் ஒன்றோடு ஒன்று சாசுவதமாக விளையாடுகின்றன. இது நிஜம். நிஜத்தோடு எந்தவிதமான வாக்குவாதமும் இருக்க முடியாது.

**கே:** நான் எப்போதும் தாமசத்துடன் ஆர்வமில்லாமலும், ராஜசத்துடன் தீவிரமாகவும் இருக்க வேண்டுமா? சாத்வீகத்தைப் பொருத்து எப்படி?

**ம:** சாத்வீகம் உன் உண்மையான தன்மையின் கதிர்வீச்சு. அதை நீ எப்போதும் உன் மனம் மற்றும் மனம் உருவாக்கிய பல உலகங்களுக்கு அப்பால் பார்க்கலாம். ஆனால் உனக்கு ஒரு உலகம் தேவையென்றால் மூன்று குணங்களையும் நீ பிரிக்க முடியாதவை என்றும், பொருள் - சக்தி - உயிர் ஆகிய மூன்றும் சாரத்தில் ஒன்று எனவும், தோற்றத்தில் வித்தியாசமானவை என்றும் ஏற்றுக் கொள்ள வேண்டும். அவை கலந்து, ஓடுகின்றன - விழிப்புணர்வில். காலத்திலும், இடத்திலும், பிறப்பு, இறப்பு, முன்னேற்றம், பின்னடைவு, மற்றுமொரு முன்னேற்றம், மறுபடியும் பின்னடைவு என ஒரு ஆரம்பமும், முடிவும் இல்லாததுபோல் தோன்றுகின்ற சாசுவதமான ஓட்டம் இருக்கிறது. மெய்மை மட்டுமே காலமற்று, மாற்றமற்று, உடலற்று, மனமற்று இருப்பதால் சிதானந்த ரூபமாக உள்ளது.

**கே:** உங்களைப் பொருத்தவரை எல்லாமும் விழிப்புணர்வின் ஒரு நிலை என்று நான் புரிந்துகொள்கிறேன். உலகம் பொருட்களால் நிறைந்துள்ளது - ஒவ்வொரு மணல் துகளும் ஒரு பொருள். ஒவ்வொரு நட்சத்திரமும் ஒரு பொருள். அவை எப்படி விழிப்புணர்வோடு தொடர்பு கொண்டிருக்கின்றன?

**ம:** எங்கு விழிப்புணர்வு சென்று அடையவில்லையோ அங்கு பொருள் ஆரம்பமாகிறது. ஒரு பொருள் இருத்தலின் ஒரு வடிவம் என்பதை நாம் புரிந்துகொள்ளவில்லை. அது மாறுவதில்லை - அது எப்போதும் ஒரேமாதிரிதான் - ஒரு வினோதமான மற்றும் அன்னியமான ஒன்றாக அது தானாகவே அங்கு இருப்பதாகத் தோன்றுகிறது. கண்டிப்பாக அது சித்தத்தில், விழிப்புணர்வில் உள்ளது. ஆனால் அதன் வெளிப்படையான மாற்றமில்லாத தன்மையினால் அது வெளியே இருப்பதாகத் தோன்றுகிறது. பொருட்களின் அடித்தளம் ஞாபகத்தில் உள்ளது - ஞாபகம் இல்லாமல் அடையாளம் காண்பது என்பது இருக்காது. உருவாக்கம் -இருத்தல் - வெளியேற்றம் : ப்ரம்மா - விஷ்ணு - சிவன் : இதுதான்

சாசுவதமான செயல்பாடு. எல்லாப் பொருட்களும் அதனால் ஆளப் படுகின்றன.

**கே:** தப்பிக்க வழியே இல்லையா?

**ம:** வழியைக் காண்பிப்பதைத் தவிர நான் வேறு ஒன்றையும் செய்வதில்லை. ஒன்று மட்டுமே உள்ளது என்றும், அந்த ஒன்று மூன்றையும் உள்ளடக்கியது என்பதையும், அந்த ஒன்று நீதான் என்பதையும் புரிந்துகொள். அப்போது நீ உலகச் செயல் பாட்டிலிருந்து சுதந்திரமாவாய்.

**கே:** பிறகு என் விழிப்புணர்விற்கு என்ன ஏற்படுகிறது?

**ம:** உருவாக்க நிலைக்குப் பிறகு, பகுத்துப் பார்க்கின்ற, சிந்திக்கின்ற நிலை வருகிறது. இறுதியாகக் கைவிடுதலும் மறத்தலும். விழிப்புணர்வு மிஞ்சுகிறது; ஆனால் ஒரு இயக்கமற்ற, அமைதியான நிலையில்.

**கே:** ஒருமைத்தன்மையான நிலை இருக்குமா?

**ம:** ஒருமைத்தன்மையான நிலை மெய்மையில் உள்ளார்ந்து இருக்கிறது. அது ஒருபோதும் மங்குவதில்லை. ஆனால் அந்த அடையாளம் கணப்பொழுதில் கடந்துபோகின்ற நபர்த் தன்மையோ (வியக்தியோ), செயல்பாட்டைச் சார்ந்திருக்கிற மொத்த வெளிப்பாடோ (வியக்தாவோ) அல்ல. அதுதான் எல்லாச் சுய அடையாளமும் மெய்யற்றவை என்று கைவிடப்பட்ட பிறகு என்ன மிஞ்சுகிறதோ அது - தூய விழிப்புணர்வு, எல்லாவற்றிலும் ஊடுருவியுள்ள விழிப்புணர்வு. விழிப்புணர்வு, ஆரம்பத்திலும், முடிவிலும் தூய்மையானது. நடுவில் படைப்பின் ஆதாரமாகிய கற்பனையால் மாசுபடுத்தப்படுகிறது. எல்லா நேரமும் விழிப்புணர்வு ஒரே மாதிரியாகத்தான் இருக்கும். அது எவ்வாறு உள்ளது என்றால் சுத்தமாகவும், மாசுபட்டும் உள்ளது. அதன் மாசுபட்ட நிலையிலும் அது அதே விழிப்புணர்வுதான். அதை அது உள்ளவாறே அறிவது மெய்ஞானம் மற்றும் காலமற்ற அமைதி.

**கே:** 'நான்' என்னும் உணர்வு மெய்யானதா அல்லது மெய்யற்றதா?

**ம:** இரண்டுமே. 'நான் இது; நான் அது' என்று நாம் சொல்லும்போது அது மெய்யற்றது. 'நான் இதுவல்ல; நான் அதுவல்ல' என்று நாம் சொல்லும்போது மெய்யானது.

அறிவதுடன் அறிபவர் வந்து, மறைந்து போகிறார். அறிபவர் கண நேரத்தையவர். ஆனால் எது தனக்குத் தெரியாது என்றும், எது ஞாபகமும், எதிர்பார்ப்பும் இல்லாமலும் இருக்கிறதோ அது காலமற்றது.

**கே:** 'நான் இருக்கிறேன்' என்பதே சாட்சியா அல்லது அவை தனித்தனியானவையா?

**ம:** ஒன்றில்லாமல் மற்றொன்று இருக்க முடியாது. இருப்பினும் அவை இரண்டும் ஒன்றே அல்ல. அது பூவும், அதன் வர்ணமும் போன்றது. பூவில்லாமல் வர்ணங்கள் இருக்க முடியாது; வர்ணமில்லாமல் பூ காணப்படாது. இவற்றிற்கு அப்பால், பூவோடு தொடர்பு கொள்ளும்போது வர்ணத்தை உருவாக்குகின்ற ஒளி உள்ளது. உன் உண்மையான இயல்பு அந்த ஒளி மட்டுமே என்றும், உணர்ந்தறியப்பட்டதும், உணர்ந்தறிபவரும் ஒன்றாக வந்து, மறைந்துபோகிறார்கள் என்றும் அறி. இரண்டையுமே சாத்தியமாக்குகின்ற, ஆனால் இரண்டுமே அல்லாததுதான் உன் மெய்யான ஸ்வரூபம். அதற்கு, ஒரு 'இது' அல்லது 'அது' வாக அல்லாமல், இருத்தல் மற்றும் இல்லாதிருத்தலான தூய பிரக்ஞையாக இருப்பது என்று அர்த்தம். பிரக்ஞையை அதன்மீதே திருப்பினால் வருகின்ற உணர்வு 'எதுவுமே அறியப்படவில்லை' என்பது. அதை வெளிப்புறமாகத் திருப்பினால் அறியக் கூடியவை இருத்தலுக்கு வருகின்றன. 'எனக்கு என்னைத் தெரியும்' என்று சொல்வது முரண்பாடானது. ஏனெனில் 'அறிந்தது' 'நானாக' இருக்க முடியாது.

**கே:** சுயம் எப்போதும் அறியப்படாததாக இருந்தால் சுயம் அறிதலில் என்ன அறியப் படும்?

**ம:** அறியப் பட்டது நானாகவோ, என்னுடையதாகவோ இருக்க முடியாது என்று அறிவதே விடுதலை. ஞாபகங்கள் மற்றும் பழக்க வழக்கங்களின் ஒரு தொகுப்புடன் சுய அடையாளம் கொள்வதி

லிருந்து சுதந்திரம், இருத்தலின் அளவற்ற சாத்தியங்களால் அதிசயிக்கும் நிலை, அதன் தீராத உருவாக்கும் திறன் மற்றும் முழுமையான கடந்துபோகும் தன்மை, விழிப்புணர்வின் ஒவ்வொரு விதமான மாயத்தன்மை மற்றும் நிலையற்ற தன்மை ஆகியவற்றை அறிவதால் பிறக்கும் தீர்க்கமான பயமற்ற தன்மை ஆகியவை ஒரு ஆழமான மற்றும் தீராத ஆதாரத்திலிருந்து ஊற்றெடுக்கின்றன. அந்த ஆதாரத்தை ஆதாரமாகவும், தோற்றத்தைத் தோற்றமாகவும், தன்னை அந்த ஆதாரம் மட்டுமே என்றும் அறிவதே சுயம் அறிதல்.

**கே:** *சாட்சி எந்தப் பக்கத்தில் உள்ளது? அது மெய்யானதா அல்லது மெய்யற்றதா?*

**ம:** யாரும் 'நான்தான் சாட்சி' என்று சொல்ல முடியாது. 'நான் உள்ளேன்' என்பதுடன் எப்போதும் சாட்சிபாவம் உள்ளது. பற்றற்ற பிரக்ஞை நிலைதான் சாட்சிபாவ விழிப்புணர்வு, 'கண்ணாடி மனம்'. அது அதன் வடிவத்துடன் எழும்பி அடங்குகிறது. அதனால் அது மிகவும் மெய்யானதல்ல. அதன் வடிவத்திற்கு என்ன ஆனாலும் அது மாறாமல் இருக்கிறது. ஆகையால் அது மெய்யானதும் கூட. அது மெய்யானதிலும், மெய்யற்றதிலும் பங்கெடுத்துக் கொள்கிறது. அதனால் அது இரண்டிற்கும் இடையிலான ஒரு பாலம்.

**கே:** *இவை எல்லாமும் 'நான்' என்பதற்குமட்டுமே நிகழ்வதாலும், 'நான்' என்பதுதான் அறிந்தது, அறிபவர், அறிவே என்பதாலும் சாட்சி என்ன செய்கிறது? அதன் பயன் என்ன?*

**ம:** அது எதுவும் செய்வதில்லை. அதனால் பயன் ஒன்றும் இல்லை.

**கே:** *பிறகு நாம் எதற்காக அதைப் பற்றிப் பேச வேண்டும்?*

**ம:** ஏனெனில் அது அங்கு இருக்கிறது. பாலம் ஒரே ஒரு காரியத்திற்குத்தான் உபயோகம் - கடந்து போக. ஒரு பாலத்தின் மேல் நீ வீடுகளைக் கட்ட மாட்டாய். 'நான்' என்பது ஒவ்வொன்றையும் பார்க்கிறது. சாட்சி அவற்றின் ஊடாகப் பார்க்கிறது. அது அவற்றை அவை உள்ளவாறே, மெய்யற்றதாகவும், கண நேரத்தியதாகவும் பார்க்கிறது. 'நான் அல்ல, என்னுடையதல்ல' என்று சொல்வது சாட்சியின் வேலை.

**கே:** பரிணமிக்காததை (நிர்குணா) பரிணமிப்பதுதான் (சகுணா) பிரதிபலிக்கிறதா?

**ம:** பரிணமிக்காததைப் பிரதிபலிக்கப்பட முடியாது. பரிணமிக்கும் எதுவும் பரிணமிக்காததைப் பிரதிபலிக்கச் செய்ய முடியாது.

**கே:** பிறகு நாம் ஏன் அதைப் பற்றிப் பேச வேண்டும்?

**ம:** ஏனெனில் அதுதான் என் பிறப்பிடம்.



# 79. நபர், சாட்சி, உச்ச உயர்வு

**கேட்பவர்:** நாங்கள் போதைப் பொருட்களை நீண்ட காலமாக எடுத்துக் கொள்ளும் பழக்கம் உடையவர்கள் - பெரும்பாலும் அவை விழிப்புணர்வை விரிவுபடுத்தும் தன்மையுடையவை. அவை எங்களுக்கு உச்சமானதும், கீழானதுமான விழிப்புணர்வின் மற்ற நிலைகளின் அனுபவங்களைக் கொடுத்தன. கூடவே, போதைப் பொருட்கள் நம்பக் கூடியவை அல்ல என்றும், அவற்றின் நல்ல தன்மை தற்காலிக அனுபவத்தைக் கொடுப்பதாகவும், மோசமான தன்மை உட்கொள்பவரின் உடலையும், நபர்த் தன்மையையும் அழிப்பதாகவும் நாங்கள் உறுதிபடக் கண்டோம். விழிப்புணர்வை மேம்படுத்துவதற்கும், கடந்துபோவதற்கும் நாங்கள் அதைவிடச் சிறப்பான வழிவகையைத் தேடிக்கொண்டிருக்கிறோம். எங்கள் தேடலின் பலன்கள் மங்கிய ஞாபகங்களாகவும், தாங்க முடியாத வருத்தங்களாகவும் இல்லாமல், எங்களோடு தங்கி, எங்கள் வாழ்க்கையைச் செறிவூட்ட வேண்டும் என்று விரும்புகிறோம். ஆன்மீகம் என்றால் சுய விசாரம் மற்றும் முன்னேற்றம் என்று பொருள் கொண்டால், நாங்கள் இந்தியாவிற்கு வந்துள்ளது கண்டிப்பாக ஆன்மீக நோக்குடையது. இதுவரை மகிழ்ச்சியான ஹிப்பிகளாக இருந்தோம். இப்போது நாங்கள் தீவிரமாகவும், ஆன்மீகத் தேடல் உடையவர்களாகவும் இருக்கிறோம். கண்டு பிடிக்க வேண்டிய மெய்மை உள்ளது என்று எங்களுக்குத் தெரியும். ஆனால் எவ்வாறு அதைக் கண்டுபிடிப்பது என்றும், அதை எப்படித் தக்க வைத்துக் கொள்வது என்றும் எங்களுக்குத் தெரியாது. எங்களை ஒப்புக் கொள்ள வைக்கத் தேவையில்லை. வழிகாட்டுதல் தான் தேவை. உங்களால் எங்களுக்கு உதவ முடியுமா?

**மஹராஜ்:** உனக்கு உதவி தேவையில்லை. உபதேசம்தான் தேவை. நீ தேடுவது முன்பே உன்னிடம் உள்ளது. என்னை எடுத்துக்கொள். என் மெய்யறிதலுக்காக நான் எதுவும் செய்யவில்லை. என் குரு

என்னிடம் மெய்மை உனக்குள் உள்ளது என்று சொன்னார். நான் எனக்குள் பார்த்து, அது என் குரு சொன்னதைப் போலவே அங்கிருப்பதைக் கண்டேன். மெய்மையைக் காண்பது என்பது ஒருவருடைய முகத்தைக் கண்ணாடியில் பார்ப்பதைப் போன்று எளிமையானது. கண்ணாடி தெளிவாகவும், நன்றாகவும் மட்டுமே இருக்க வேண்டும். மெய்மையைப் பிரதிபலிக்க ஒரு அமைதியான, ஆசைகளாலும், அச்சங்களாலும் திரிபுபடாத, கற்பனைகளி லிருந்தும், கருத்துக்களிலிருந்தும் சுதந்திரமான, எல்லா நிலையிலும் தெளிவான மனம் தேவை. தூய்மையாகவும், அமைதியாகவும், உஷாராகவும், மற்றும் பற்றற்றும் இரு. மற்றவையெல்லாம் தானாகவே நடக்கும்.

**கே:** மெய்யை அறிவதற்கு முன்பாக மனதைத் தூய்மையாகவும், அமைதியாகவும் வைத்திருக்க வேண்டும். அதை நீங்கள் எப்படிச் செய்தீர்கள்?

**ம:** நான் எதுவும் செய்யவில்லை. அது தானாகவே நிகழ்ந்தது. நான் என் குடும்பத்தின் தேவைகளைக் கவனித்துக் கொண்டு, என் வாழ்க்கையை வாழ்ந்து கொண்டிருந்தேன். என் குருவும் அதற்காக எதுவும் செய்யவில்லை. அவர் நடக்கும் என்று சொன்னதைப் போல அது சகஜமாக நிகழ்ந்தது.

**கே:** நிகழ்வுகள் அவைகளாகவே நிகழ்வதில்லை. ஒவ்வொன்றுக்கும் ஒரு காரணம் இருக்க வேண்டும்.

**ம:** நிகழும் அனைத்திற்கும் நிகழும் அனைத்துமே காரணம். காரணங்கள் எண்ணிக்கையற்றவை. அனைத்திற்கும் ஒரே காரணம் என்னும் கருத்து ஒரு ப்ரம்மை.

**கே:** குறிப்பிட்டவாறு நீங்கள் சிலவற்றைச் செய்திருக்க வேண்டும் - சில தியானங்கள் அல்லது யோகாவை. மெய்யறிதல் அதுவாகவே நிகழும் என்று நீங்கள் எப்படிச் சொல்ல முடியும்?

**ம:** குறிப்பிட்டவாறு எதையும் நான் செய்யவில்லை. நான் என் வாழ்க்கையை வாழ்ந்து கொண்டு மட்டும் இருந்தேன்.

**கே:** எனக்குப் பெரும் வியப்பாக இருக்கிறது!

**ம:** எனக்கும் அப்படித்தான். ஆனால் வியக்க அங்கு என்ன இருக்கிறது? என் குருவின் வார்த்தைகள் உண்மையாயின. அதனால் என்ன? என்னை எனக்குத் தெரிவதை விட அவருக்கு நன்றாகத் தெரியும். அவ்வளவே. எதற்காகக் காரணங்களைத் தேட வேண்டும்? ஆரம்பத்தில் சிறிதளவு கவனத்தையும், நேரத்தையும் 'நான் உள்ளேன்' என்னும் உணர்விற்குக் கொடுத்தேன். சீக்கிரமே என் குரு இறந்து விட்டார். பிறகு நான் என் வாழ்க்கையை வாழ்ந்துகொண்டிருந்தேன். அவருடைய வார்த்தைகள் உண்மை என்று நிரூபணமாயின. அவ்வளவே. அவை எல்லாம் ஒரே செயல்பாடு. நீ காரியங்களைக் கால அளவில் பிரித்துப் பார்க்க முயல்கிறாய். பிறகு காரணங்களைத் தேடுகிறாய்.

**கே:** இப்போது உங்களுடைய வேலை என்ன? நீங்கள் என்ன செய்து கொண்டிருக்கிறீர்கள்?

**ம:** நீ இருத்தலையும், செயல்பாட்டையும் ஒரே மாதிரியானவை என்று கற்பனை செய்கிறாய். அது அவ்வாறில்லை. மனமும், உடலும் அசைந்து, மாறி, மற்ற மனங்களையும், உடல்களையும் அசையவும், மாறவும் செய்கின்றன. அது செய்தல், செயல்பாடு என்று சொல்லப் படுகிறது. தீ எரிக்கப்படுவதால் தொடர்வது போல, செயலின் இயல்பில் மேற்கொண்டு செயலை உருவாக்குகின்ற தன்மையைப் பார்க்கிறேன். நான் செயல்படுவதில்லை. மற்றவர் களையும் செயல்படச் செய்வதில்லை. காலமற்று என்ன நடந்து கொண்டிருக்கிறதென்று நான் அறிவேன்.

**கே:** அது உங்கள் மனதிலா அல்லது மற்றவர்களின் மனதிலா?

**ம:** 'நான் இது, நான் அது. இது என்னுடையது, அது என்னுடையது' என்னும் கற்பனையான கருத்துக்களால் உழல்கின்ற ஒரே ஒரு மனம்தான் உள்ளது. நான் மனம் அல்ல; மனமாக இருக்கவும் இல்லை; இருக்கப் போவதும் இல்லை.

**கே:** மனம் எப்படி உருவாகிறது?

**ம:** உலகம் பொருள், சக்தி, புத்திசாலித்தனம் ஆகியவற்றால் ஆனது. அவை தங்களைப் பலவிதங்களில் வெளிப்படுத்திக் கொள்கின்றன. ஆசையும், கற்பனையும் உலகத்தை உருவாக்கு

கின்றன. புத்திசாலித்தனம் இரண்டையும் சரிபார்த்து, அமைதியான மற்றும் ஒத்திசைவான ஒரு உணர்வை உருவாக்குகிறது. எனக்கு இவையெல்லாம் நிகழ்கின்றன; நான் அறிவேன், இருப்பினும் பாதிக்கப்படாமல்.

**கே:** நீங்கள் அறிந்தும், ஆனால் பாதிக்கப்படாமலும் இருக்க முடியாது. இந்த வார்த்தைகளில் முரண்பாடு உள்ளது. உணர்ந்தறிதல் என்பது மாற்றம். நீங்கள் ஒருமுறை ஒரு உணர்வை அனுபவப்பட்டால் உங்கள் ஞாபகம் உங்களை முந்தைய நிலைக்குத் திரும்ப அனுமதிக்காது.

**ம:** ஆமாம். ஞாபகத்தில் சேர்க்கப்பட்டதை எளிதாக அழிக்க முடியாது. ஆனால் கண்டிப்பாக முடியும். உண்மையில், நான் அதைத்தான் எல்லா நேரமும் செய்துகொண்டிருக்கிறேன். ஒரு பறவை பறப்பதுபோல, நான் எந்தத் தடயங்களையும் விடுவதில்லை.

**கே:** சாட்சிக்குப் பெயரும், உருவமும் உள்ளதா? அல்லது அது இவைகளுக்கு அப்பாற்பட்டதா?

**ம:** சாட்சி வெறுமனே விழிப்புணர்வில் ஒரு புள்ளி. அதற்குப் பெயரும், உருவமும் கிடையாது. அது சூரிய ஒளி ஒரு பனித்துளியில் பிரதிபலிப்பது போன்றது. பனித்துளி பெயரும், உருவமும் கொண்டது. ஆனால் அந்தச் சிறு ஒளிப்புள்ளி சூரியனால் உண்டாக்கப்படுவது. பனித்துளி தெளிவாகவும், மென்மையாகவும் இருப்பது அவசியம். ஆனால் அதுவே போதுமானதல்ல. அது போல மனதின் தெளிவும், அமைதியும் மெய்மையின் பிரதிபலிப்பு மனதில் தோன்ற அவசியம். ஆனால் அவை மட்டுமே போதுமானதல்ல. கண்டிப்பாக மெய்மை அதற்கு அப்பால் இருக்கவேண்டும். மெய்மை காலமற்று இருந்துகொண்டிருப்பதால் நிபந்தனைகளுக்கு முக்கியத்துவம் கொடுக்கப் படுகிறது.

**கே:** மனம் தெளிவாகவும், அமைதியாகவும் இருந்தாலும், பிரதிபலிப்பு தோன்றாமல் இருக்க வாய்ப்புள்ளதா?

**ம:** விதியைக் கருதவேண்டி உள்ளது. விழிப்புணர்வற்றது விதியின் பிடியில் உள்ளது. உண்மையில் அது விதியேதான். ஒருவர்

காத்திருக்க வேண்டியிருக்கலாம். ஆனால் விதியின் கரம் எவ்வளவு தான் கனமானதாக இருந்தாலும் அதை விடா முயற்சியினாலும், சுயக் கட்டுப்பாட்டினாலும் தூக்கிவிடலாம். ஒழுக்கமும், தூய்மையும் தடைகளை நீக்குகின்றன. அப்போது மெய்மையின் காட்சி மனதில் தோன்றுகிறது.

**கே:** எப்படி ஒருவர் சுயக் கட்டுப்பாட்டை அடைவது? நான் மிகவும் பலவீனமான மனதுடையவன்.

**ம:** உன்னை நீ நினைக்கும்படியான நபர் அல்ல என்பதை முதலில் புரிந்துகொள். உன்னை நீ என்னவாக நினைக்கிறாயோ அது வெறும் கருத்து அல்லது கற்பனை. உனக்குப் பெற்றோர்கள் கிடையாது, நீ பிறக்கவில்லை, நீ இறக்கமாட்டாய். நான் அவ்வாறு சொல்லும் போது என்னை நம்பு. அல்லது கற்பதாலும், ஆராய்வதாலும் அதை அடை. முழு நம்பிக்கை என்னும் வழி விரைவானது. மற்ற வழி மெதுவானது; ஆனால் ஸ்திரமானது. இரண்டையுமே செயல் பாட்டால் சோதிக்க வேண்டும். நீ உண்மையென்று நினைப்பதின் படி செயல்படு - இதுதான் மெய்மைக்கான வழி.

**கே:** மெய்மைக்குத் தகுதியாக இருப்பதும், விதியும் ஒன்றேவா?

**ம:** ஆமாம். இரண்டுமே விழிப்புணர்வில்லாமையில் உள்ளன. தகுதி உள்ளது என்னும் உணர்வு வெறும் அகங்காரம். விழிப்புணர்வு எப்போதும் தடைகளைக் கொண்டுள்ளது; தடைகள் இல்லா விட்டால் ஒருவர் அதற்கு அப்பால் சென்றுவிடுவார்.

**கே:** நான் உடல் அல்ல என்னும் புரிதல் சுயக் கட்டுப்பாடிற்குத் தேவையான குணாதிசயத்தின் வலிமையைக் கொடுக்குமா?

**ம:** நீ உடலோ மனமோ அல்ல என்று அறியும்போது, நீ அவற்றால் அலைக்களிக்கப்படமாட்டாய். நீ மெய்மையைத் தொடர்வாய் - அது எங்கு எடுத்துச் சென்றாலும். செய்ய வேண்டிய அவசியமானதைச் செய்வாய் - அதற்கு என்ன விலை கொடுக்க வேண்டியிருந்தாலும்.

**கே:** மெய்யறிதலுக்குச் செயல்பாடு அவசியமா?

**ம:** மெய்யறிதலுக்குப் புரிதல் அவசியம். செயல்பாடு அதனோடு நிகழ்வது. ஸ்திரமான புரிதல் உள்ள மனிதன் செயல்படுவதிலிருந்து விலகி இருக்க மாட்டார். செயல்பாடு மெய்மைக்கான பரிசோதனை.

**கே:** பரிசோதனைகள் அவசியமா?

**ம:** உன்னை எல்லா நேரமும் பரிசோதிக்காவிட்டால், உன்னால் மெய்மைக்கும், கற்பனைக்கும் வித்தியாசப்படுத்த முடியாது. கவனித்தலும், சூட்சுமமான காரணப்படுத்துதலும் ஓரளவு உதவும். ஆனால் மெய்மை புதிரானது. நீ உன் எண்ணங்கள் மற்றும் உணர்ச்சிகள், சொல் மற்றும் செயல்கள் ஆகியவற்றைக் கவனித்து, ஏன் மற்றும் எப்படி என்று உனக்குத் தெரியாமலே உனக்குள் நிகழும் மாற்றங்களைப் பார்த்து அதிசயிக்காமல் நீ மெய்யை அறிந்துவிட்டாய் என்று உனக்கு எப்படித் தெரியும்? அவை மிகவும் வியப்பானவை என்று உணர்வாய். அதனால் நீ அதை மெய்மை என்று அறிவாய். முன்பே கணிக்கப்படுவதும், எதிர்பார்க்கக் கூடியதும் அரிதாகவே உண்மையானது.

**கே:** நபர் (வியக்தி) எப்படி இருத்தலுக்கு வருகிறார்?

**ம:** எப்படி ஒளி உடலால் குறுக்கிடும்போது நிழல் உண்டாகிறதோ, அதேபோல் தூய சுய விழிப்புணர்வு 'நான் உடல்' என்னும் கருத்தால் குறுக்கிடும் போது நபர் தோன்றுகிறது. எப்படி நிழலின் வடிவமும், நிலையும் அது விழும் தரையைப் பொருத்து மாறுகிறதோ அப்படி, விதியின் படிவத்தைப் பொருத்து நபர் குதூகலிப்பதாகவும், துன்பப்படுவதாகவும், ஓய்வெடுப்பதாகவும், உழல்வதாகவும், பெறுவதாகவும், இழப்பதாகவும் தோன்றுகிறது. உடல் மேற்கொண்டு இல்லாமல் போகும்போது நபர் திரும்ப வராமல் முற்றிலுமாக மறைந்து போய்விடும். சாட்சியும், மாபெரும் அறியப்படாததும் மட்டுமே மிஞ்சும்.

சாட்சிதான் 'எனக்குத் தெரியும்' என்று சொல்வது. நபர் 'நான் செய்கிறேன்' என்று சொல்கிறது. இப்போது, 'எனக்குத் தெரியும்' என்று சொல்வது உண்மை அல்லாதது அல்ல - வெறுமனே அளவானது மட்டுமே. ஆனால் 'நான் செய்கிறேன்' என்று

சொல்வது முற்றிலும் பொய்யானது. ஏனெனில் செய்பவர் என்று யாரும் இல்லை; ஒரு செயல் புரிபவர் என்னும் கற்பனையான கருத்து உட்பட எல்லாமும் தானாகவே நடக்கின்றன.

**கே:** அப்படியானால் செயல் என்பது என்ன?

**ம:** பிரபஞ்சம் செயலால் நிரம்பி உள்ளது. ஆனால் செயல் புரிபவர் என்று யாரும் கிடையாது. கணக்கற்ற சிறிய, பெரிய, மிகப் பெரிய நபர்கள் உள்ளனர். அவர்கள் அடையாளம் காணப்படு வதால் தாங்கள் செயல்புரிவதாகக் கற்பனை செய்து கொள் கிறார்கள். ஆனால் அது, செயல்பாடுள்ள உலகம் (மஹாதகாஷ்) ஒரு ஒற்றை முழுமை, அதில் எல்லாமும் எல்லாவற்றையும் சார்ந்துள்ளன மற்றும் எல்லாவற்றையும் பாதிக்கின்றன என்னும் நிஜத்தை மாற்றாது. நட்சத்திரங்கள்கூட நம்மை ஆழமாகப் பாதிக்கின்றன; நாமும் நட்சத்திரங்களைப் பாதிக்கின்றோம். செயல்பாட்டிலிருந்து விழிப்புணர்விற்குப் பின்னோக்கிச் செல். செயலை உடலுக்கும், மனதிற்கும் விட்டுவிடு. அவை செயலின் களம். சாட்சிபாவமும் உச்சஉயர்வில் கரையும்வரை தூய சாட்சியாக இரு.

மரங்கள் அடர்ந்த ஒரு காட்டைக் கற்பனை செய். ஒரு குச்சி மரத்திலிருந்து செதுக்கப் பட்டு, ஒரு பென்சில் எழுதத் தயாரிக்கப் படுகிறது. சாட்சி எழுதியதைப் படிக்கிறது. அதற்கு பென்சிலும், மரக்கட்டையும் காட்டோடு தூரமாக சார்புடையன என்றும், எழுதப்பட்டது அதனோடு சம்பந்தப்பட்டதில்லையென்றும் தெரியும். எழுதப்பட்ட செய்தி முற்றிலும் மேலே திணிக்கப் பட்டது. அதை அழிப்பதால் எதுவும் பாதிக்கப்படுவதில்லை. நபர்த்தன்மை இல்லாமல் போவதால் ஒரு கனமான பாரம் நீங்கியதைப் போல் ஒரு பெரும் நிம்மதி ஏற்படும்.

**கே:** 'நான் சாட்சிபாவத்திற்கும் அப்பால் உள்ள நிலையில் இருக்கிறேன்' என்று நீங்கள் சொல்லும்போது எந்தமாதிரியான அனுபவம் உங்களை அவ்வாறு சொல்ல வைக்கிறது? சாட்சியாக மட்டும் இருப்பதிலிருந்து அது எந்தவகையில் வேறுபட்டது?

**ம:** அது அச்சு பதியப்பட்ட துணியைத் துவைப்பது போன்றது. முதலில் பதியப்பட்ட வடிவங்களும், எழுத்துக்களும் மங்குகின்றன.

பிறகு பின்புலம். முடிவில் துணி வெண்ணிறமாகிறது. நபர்த்தன்மை முதலில் இல்லாமல்போய் சாட்சி இருக்கிறது. பிறகு சாட்சி இல்லாமல் போய் தூய பிரக்ஞை மிஞ்சுகிறது. துணி ஆரம்பத்திலும் முடிவிலும் வெண்மையாக இருக்கிறது. பதியப்பட்ட வடிவங் களும், வர்ணங்களும் தற்காலிகமாக வெறுமனே தோன்றுகின்றன.

**கே:** விழிப்புணர்வு அதன் நோக்கத்தைக் கொண்டில்லாமல் இருக்க முடியுமா?

**ம:** நோக்கத்தோடு கூடிய விழிப்புணர்வை நாம் சாட்சிபாவம் என்கிறோம். அந்த நோக்கத்துடன் ஆசையாலோ, அச்சத்தாலோ சுய அடையாளம் ஏற்படுத்தப்படுத்தினால் அந்த நிலை ஒரு நபர் என்று சொல்லப்படுகிறது. மெய்மையில் ஒரே ஒரு நிலைதான் உள்ளது; அது சுய அடையாளத்தால் திரிபுறும்போது ஒரு நபர் என்று அழைக்கப்படுகிறது. இருத்தல் என்னும் உணர்வால் வர்ணமிடப் படும்போது அது சாட்சி; அது நிறமற்றும், அளவற்றும் இருந்தால் உச்ச உயர்வு எனப்படும்.

**கே:** நான் எப்போதும் அமைதியற்றும், ஏக்கத்துடனும், நம்பிக்கையுடனும், தேடிக்கொண்டும், கண்டுபிடித்துக்கொண்டும், மகிழ்ச்சியோடும், கைவிட்டும், மறுபடியும் தேடிக்கொண்டும் இருக்கிறேன். எது என்னை எப்போதும் கொதி நிலையிலேயே வைத்திருக்கிறது?

**ம:** நீ உண்மையில் உன்னைத்தான் தேடிக்கொண்டிருக்கிறாய் - அதை அறியாமலே. நேசிக்கத் தகுதி உடையதற்கும், சரியாக நேசிக்கக் கூடியதற்கும் ஏக்கத்தைக் கொண்டுள்ள நீயேதான் அந்த நேசம், அன்பு. அதை அறியாமையின் காரணமாக எதிர் எதிரானவைகளும், முரண்பாடுகளும் உள்ள உலகத்தில் தேடுகிறாய். அதை அகத்தில் காணும்போது உன் தேடல் முடிவுரும்.

**கே:** இந்தத் துக்ககரமான உலகத்துடன் எப்போதும் சம்பந்தம் இருந்து கொண்டே இருக்கும்.

**ம:** எதிர்பார்க்காதே. உனக்குத் தெரியாது. எல்லா வெளிப் பாடுகளும் எதிர் எதிரானவைகளில் உள்ளன என்பது உண்மை. சுக துக்கம், நல்லது மற்றும் கெட்டது, உயர்வு மற்றும் தாழ்வு,

முன்னேற்றம் மற்றும் பின்னடைவு, ஓய்வு மற்றும் பிரயத்தனம் ஆகிய எல்லாமும் ஒன்றாகவே வந்துபோகின்றன. உலகம் உள்ளவரை அதன் முரண்பாடுகள் அதில் இருக்கும். நிறைவான ஒத்திசைவு, ஆனந்தம், அழகு ஆகியவை உள்ள காலங்களும் இருக்கும் - ஆனால் ஒரு குறிப்பிட்ட காலத்திற்கு மட்டுமே. எது பூரணமானதோ அது எல்லாத் துல்லியமான முழுமையின் ஆதாரத்திற்கே திரும்பும். எதிர் எதிரானவைகள் செயல்புரியும்.

**கே:** *நான் எப்படிப் பூரணத்துவத்தை அடைவது?*

**ம:** அமைதியாய் இரு. உலகத்தில் உன் வேலையைச் செய். ஆனால் அகத்தில் அமைதியாய் இரு. பிறகு எல்லாமும் உன்னிடம் வரும். மெய்யறிதலுக்காக உன் செயல்பாட்டைச் சார்ந்து இருக்காதே. அது மற்றவர்களுக்குப் பிரயோஜனமாக இருக்கும். ஆனால் உனக்கல்ல. மனதை மௌனமாகவும், இதயத்தை அமைதியாகவும் வைத்திருப்பதால் பூரணத்துவத்தை அடைவாய். மெய்யறிந்தவர்கள் மிகவும் அமைதியானவர்கள்.



# 80. பிரக்ஞை

**கேட்பவர்:** சுயம் அறிய கால அவகாசம் தேவையா? அல்லது கால அவகாசம் மெய்யை அறிய உதவாதா? சுயம் அறிதல் காலத்தைப் பொருத்ததா அல்லது அது காலத்தைத் தவிர்த்த மற்ற காரணிகளைச் சார்ந்ததா?

**மஹராஜ்:** எல்லாக் காத்திருத்தலும் வீணானவையே. நம் பிரச்சனைகளைத் தீர்க்கக் காலத்தைச் சார்ந்திருப்பது சுய ஏமாற்றுதல். எதிர்காலத்தை உள்ளபடியே விட்டுவிட்டால் அது வெறுமனே கடந்தவைகளைத் திரும்பவும் நிகழ்த்துகிறது. மாற்றம் தற்பொழுதில் மட்டுமே நிகழ முடியும். ஒருபோதும் எதிர்காலத்தில் அல்ல.

**கே:** எது மாற்றத்தைக் கொண்டுவருகிறது?

**ம:** தெள்ளத் தெளிவாக மாற்றத்திற்கான அவசியத்தைப் பார். அவ்வளவே. ஆனால் மெய்யான ஆர்வத்தை நீ கொண்டிருக்க வேண்டும்.

**கே:** சுயம் அறிதல் ஜடப் பொருளில் நிகழ்கிறதா அல்லது அப்பாலா? ஒரு அனுபவம் அது நிகழ உடலையும், மனதையும் சார்ந்திருக்க வேண்டியதில்லையா?

**ம:** எல்லா அனுபவங்களும் ப்ரம்மை, அளவானவை, மற்றும் தற்காலிகமானவை. அனுபவத்திலிருந்து எதையும் எதிர்பார்க்காதே. மெய்யறிதல் ஒரு புதிய அனுபவங்களின் பரிமாணத்திற்கு இட்டுச் சென்றாலும், அதாகவே அது ஒரு அனுபவம் அல்ல. இருப்பினும் புதிய அனுபவங்கள் எவ்வளவுதான் சுவாரசியமாக இருந்தாலும் அவை பழையதைவிட அதிக நிஜமானவையல்ல. கண்டிப்பாக மெய்யறிதல் ஒரு புதிய அனுபவம் அல்ல. அது ஒவ்வொரு அனுபவத்திலும் இருக்கும் காலமற்ற காரணியைக் கண்டுபிடிப்பது.

அது அனுபவத்தைச் சாத்தியமாக்குகின்ற பிரக்ஞை. எப்படி எல்லா நிறங்களிலும் ஒளி நிறமற்ற காரணியோ அப்படி ஒவ்வொரு அனுபவத்திலும் பிரக்ஞை உள்ளது. இருப்பினும் அது ஒரு அனுபவம் அல்ல.

**கே:** பிரக்ஞை ஒரு அனுபவம் அல்ல என்றால் அதை எப்படி அறிந்து கொள்வது?

**ம:** பிரக்ஞை எப்போதும் இருப்பது. அதைப் புரிந்துகொள்ள வேண்டியதில்லை. மனதின் கதவைத் திற. அது ஒளியால் நிரப்பப்படும்.

**கே:** பொருள் என்பது என்ன?

**ம:** நீ புரிந்துகொள்ளாதது பொருள்.

**கே:** விஞ்ஞானம் பொருளைப் புரிந்து கொள்கிறது.

**ம:** விஞ்ஞானம் வெறுமனே நம் அறியாமையின் எல்லைகளைப் பின்னுக்குத் தள்ளுகிறது.

**கே:** இயற்கை என்பது என்ன?

**ம:** விழிப்புணர்வுள்ள அனுபவங்களின் ஒட்டு மொத்தம் இயற்கை. ஒரு விழிப்புணர்வுள்ள சுயமாக நீ இயற்கையின் ஒரு பகுதி. பிரக்ஞையாக நீ அதற்கு அப்பால் உள்ளாய். இயற்கையை வெறும் விழிப்புணர்வாகப் பார்ப்பது பிரக்ஞை.

**கே:** பிரக்ஞையின் பல நிலைகள் உள்ளனவா?

**ம:** விழிப்புணர்வில் பல நிலைகள் உள்ளன. ஆனால் பிரக்ஞையில் அல்ல. அது பிரிவற்ற ஒற்றைத் தொகுதி. மனதில் அதன் பிரதிபலிப்பு அன்பும், புரிதலும். புரிதலில் உள்ள தெளிவிலும், அன்பின் செறிவிலும் பல நிலைகள் உள்ளன. ஆனால் அவற்றின் ஆதாரத்தில் அல்ல. ஆதாரம் எளியது மற்றும் ஒன்றுதான். ஆனால் அதன் பரிசுகள் அளவற்றவை. பரிசுகளை ஆதாரமாக எடுத்துக் கொள்ளாதே. உன்னை மூல ஆதாரம் என்று அறி. அதிலிருந்து பிரவகித்து ஓடும் நதியாக அல்ல; அவ்வளவே.

**கே:** நான் நதியும் கூட.

**ம:** கண்டிப்பாக ஆமாம். 'நான் உள்ளேன்' என்பதாக, உடல் என்னும் கரைகளுக்கு நடுவில் ஓடும் ஒரு நதி நீ. ஆனால் நீதான் நதி ஊற்றெடுக்கும் ஆதாரம், வானத்தில் உள்ள மேகங்கள், மற்றும் கடலுமே. எங்கெல்லாம் உயிரும், விழிப்புணர்வும் இருக்கிறதோ அங்கு நீ இருக்கிறாய். நீ மிகச் சிறியதைவிடச் சிறியவன்; மிகப் பெரியதைவிடப் பெரியவன். மற்றவை எல்லாம் தோற்றங்களே.

**கே:** இருத்தல் என்னும் உணர்வும், உயிர் வாழ்தல் என்னும் உணர்வும் ஒரே மாதிரியானவையா அல்லது வித்தியாச மானவையா?

**ம:** ஒன்றை (இருத்தல் உணர்வை) இடத்துடன் கொண்டுள்ள அடையாளம் உருவாக்குகிறது. மற்றொன்றை (உயிர் வாழ்தல் உணர்வை) காலத்தின் தொடர்ச்சி உருவாக்குகிறது.

**கே:** நீங்கள் ஒருமுறை பார்ப்பவர், பார்த்தல், பார்க்கப் படுவது ஆகியவை ஒன்றே, மூன்றல்ல என்று சொன்னீர்கள். எனக்கு அவை மூன்றும் தனித்தனியானவை. நான் உங்கள் வார்த்தைகளைச் சந்தேகிக்கவில்லை. என்னால் புரிந்துகொள்ளத்தான் முடிய வில்லை.

**ம:** உன்னிப்பாகக் கவனித்தால், பார்க்கும்போதுதான் பார்ப் பவரும், பார்க்கப்படுவதும் தோன்றுகிறார்கள் என்பதைக் காண்பாய். அவை பார்த்தலின் குணாதிசயங்கள். 'நான் இதைப் பார்க்கிறேன்' என்று சொல்லும்போது பார்த்தலுடன் 'நான்' என்பதும், 'இது' என்பதும் கூடவே வருகின்றன; அதற்கு முன்பாக அல்ல. நீ ஒரு பார்க்கப்படாத 'இதை'யும், ஒரு பார்க்காத 'நான்'ஐயும் கொண்டிருப்பதாகச் சொல்ல முடியாது.

**கே:** 'நான் பார்ப்பதில்லை' என்று என்னால் அறிய முடியும்.

**ம:** அப்போது 'நான் இதைப் பார்க்கிறேன்' என்பது 'நான் பார்ப்பதில்லை என்பதைப் பார்க்கிறேன்' அல்லது 'நான் இல்லாததையும், இருளையும் பார்க்கிறேன்' என்றாகிறது. பார்த்தல் மிஞ்சுகிறது. அறியப்பட்டது, அறிதல், அறிபவர் என்னும் முத்தன்மையில் அறிதல் என்பது மட்டும்தான் ஒரு நிஜம். 'நான்' என்பதும் 'இது' என்பதும் சந்தேகத்துக்குரியவை. யார் அறிவது? எது

அறியப்படுவது? அறிதல் இருக்கிறது என்பதைத் தவிர வேறு எந்த உறுதித்தன்மையும் இல்லை.

**கே:** நான் ஏன் அறிபவரைப் பற்றி அல்லாமல் அறிதலில் உறுதியாக இருக்கிறேன்?

**ம:** அறிதல் என்பது இருத்தல் மற்றும் நேசித்தல் ஆகியவற்றோடு உன் மெய்த்தன்மையின் உண்மையான பிரதிபலிப்பும் கூட. அறிபவரும், அறியப்படுவதும் மனதால் சேர்க்கப்பட்டவை. ஆதாரமே இல்லாத அறிபவர் மற்றும் அறியப் படுவது என்னும் இருமையை உருவாக்குவது மனதின் இயல்பில் உள்ளது.

**கே:** ஆசைக்கும், அச்சத்திற்கும் என்ன காரணம்?

**ம:** கடந்தகால சுக துக்கங்களின் ஞாபகம்தான் காரணம். அதைப் பற்றிப் புதிரானது எதுவும் இல்லை. ஆசையும், அச்சமும் ஒன்றையே குறித்து இருந்தால்தான் முரண்பாடு ஏற்படுகிறது.

**கே:** ஞாபகத்திற்கு எப்படி முடிவுகட்டுவது?

**ம:** அது தேவையும் அல்ல; சாத்தியமும் அல்ல. எல்லாமும் விழிப்புணர்வில் நிகழ்கின்றன என்றும், நீதான் விழிப்புணர்வின் மூலம், ஆதாரம் மற்றும் அடித்தளம் என்றும் அறி. அடுத்தடுத்துத் தொடரும் அனுபவங்கள்தான் உலகம்; நீதான் அதை உணர்வுள்ளதாக்குகிறாய். இருப்பினும் எல்லா அனுபவங்களுக்கும் அப்பால் நீ இருக்கிறாய். அது வெப்பம், தீ மற்றும் எரியும் விறகு போன்றது. வெப்பம் தீயை நீடிக்கச் செய்கிறது. தீ விறகை எரிக்கிறது. வெப்பம் இல்லாமல் தீயோ, எரிவதோ இருக்க முடியாது. அதே போல பிரக்ஞை இல்லாமல் விழிப்புணர்வோ, விழிப்புணர்வைக் கொண்டிருக்கும் ஒரு வாகனமாக பருப்பொருளை மாற்றும் உயிரோ இருக்க முடியாது.

**கே:** நான் இல்லாமல் உலகம் இருக்க முடியாது என்றும், உலகமும், உலகத்தைப் பற்றிய என் அறிவும் ஒரே மாதிரியானவை என்றும் நீங்கள் சொல்கிறீர்கள். விஞ்ஞானம் முற்றிலும் வேறு மாதிரியான முடிவிற்கு வந்துள்ளது: உலகம் ஸ்திரமான, மற்றும் தொடர்ச்சியான ஒன்றாக இருக்கிறது; ஆனால் நானோ நரம்பு மண்டலத்தின் உயிர்ப் பரிணாமத்தின் ஒரு துணை உருவாக்கம்.

அடிப்படையில் அது விழிப்புணர்வின் இருப்பிடமோ அல்லது தனி நபராக மற்றும் இனமாக உயிர்வாழ்தலுக்கான செயல்பாடோ அல்ல. உங்களுடையது எல்லாவற்றையும் ஆன்மா என்று பார்க்கும் கோணம். ஆனால் விஞ்ஞானம் ஒவ்வொன்றையும் பொருட்கள் என்னும் கோணத்தில் விளக்க முற்படுகிறது. இந்த முரண்பாடு தவிர்க்க முடியாதததா?

**ம:** குழப்பம் வெளிப்படையாகவும், முற்றிலும் வார்த்தை களாகவும் இருக்கிறது. என்ன இருக்கிறதோ அது இருக்கிறது. அது ஆன்மாவோ அல்லது பொருளோ அல்ல. பருப்பொருளும், மனமும் தனித்தனியானவை அல்ல. அவை ஒரே சக்தியின் இரு தன்மைகள். மனதைப் பருப்பொருளின் இயக்கமாகப் பார்த்தால் அது விஞ்ஞானம்; பருப்பொருளை மனதின் உருவாக்கமாகப் பார்த்தால் அது ஆன்மீகம்.

**கே:** ஆனால் எது உண்மை? எது முதலில் வருகிறது? மனமா அல்லது பருப்பொருளா?

**ம:** இரண்டுமே முதலில் வருவதில்லை. ஏனெனில் இரண்டில் எதுவுமே தனியாகத் தோன்றுவதில்லை. பருப் பொருள் என்பது வடிவம். மனம் என்பது பெயர். இரண்டும் சேர்ந்து உலகத்தை உருவாக்குகின்றன. எங்கும் பரவியிருப்பதும், எல்லாவற்றிற்கும் அப்பால் இருப்பதும் மெய்மை; அதுதான் தூய இருத்தல் - பிரக்ஞை - ஆனந்தம், உன்னுடைய சாரம்.

**கே:** எனக்குத் தெரிந்ததெல்லாம் விழிப்புணர்வின் பிரவாகமும், நிகழ்வுகளின் முடிவற்ற தொடர்ச்சியும்தான். கொண்டு வருதலையும், எடுத்துச் செல்வதையும் தொய்வில்லாமல் செய்து கொண்டு காலம் என்னும் நதி ஓடுகிறது. எதிர்காலத்தைக் கடந்த காலமாக மாற்றுவது எல்லா நேரமும் நடந்துகொண்டிருக்கிறது.

**ம:** நீ உன் மொழியின் பலி அல்லவா? உன்னை நிலையானவன் என்று நினைத்துக் கொண்டு, காலத்தின் ஓட்டத்தைப் பற்றிப் பேசுகிறாய். ஆனால் நீ நேற்று பார்த்த நிகழ்வுகளை வேறு ஒருவர் நாளை பார்க்கக்கூடும். நீதான் அசைந்துகொண்டிருக்கிறாய்; காலம் அல்ல. உன் இயக்கத்தை நிறுத்து. அப்போது காலம் நின்றுவிடும்.

**கே:** காலம் நின்றுவிடும் என்பதன் அர்த்தம் என்ன?

**ம:** பிரிவுபடாத தற்பொழுதில், கடந்த காலமும், எதிர்காலமும் ஏக ரூபமாகிவிடும்.

**கே:** நிஜமான அனுபவத்தில் அதற்கு என்ன அர்த்தம்? உங்களுக்கு நேரம் இல்லாமல் போய்விட்டது என்று எப்படித் தெரியும்?

**ம:** அதற்கு இனிமேற்கொண்டு கடந்த காலமும், எதிர்காலமும் முக்கியத்துவம் அல்ல என்று அர்த்தப்படலாம். அல்லது நடந்தவை அனைத்தும், நடக்கப் போகும் அனைத்தும் விருப்பப்பட்டால் படிக்கக் கூடிய ஒரு திறந்த புத்தகமாக ஆகும் என்றும் அர்த்தப் படலாம்.

**கே:** நான் சில பயிற்சிகளின் மூலமாக அணுகக் கூடிய ஒருமாதிரியான பிரபஞ்ச ஞாபகத்தைக் கற்பனை செய்து கொள்ளலாம். ஆனால் எதிர்காலம் எப்படி அறியப்படும்? எதிர்பாராதது தவிர்க்க முடியாதது.

**ம:** ஒரு நிலையில் எதிர்பாராதது, வேறு ஒரு உயர் நிலையிலிருந்து பார்க்கப்படும்போது உறுதியாக நிகழ்வதாகத் தோன்றலாம். நாம் மனதின் எல்லைகளுக்குள்தான் இருக்கிறோம். மெய்மையில் எதுவும் நிகழ்வதில்லை, கடந்த காலமும், எதிர்காலமும் இல்லை; எல்லாமும் தோற்றம் மட்டுமே. ஆனால் எதுவும் இல்லை.

**கே:** எதுவும் இல்லை என்றால் என்ன அர்த்தம்? நீங்கள் வெறுமையாகி விடுவீர்களா அல்லது தூங்கிவிடுவீர்களா? அல்லது நீங்கள் உலகத்தைக் கரைத்துவிட்டு, உங்களுடைய அடுத்த எண்ணத்தின் சொடுக்கில் நாங்கள் உயிருள்ளவர்களாகத் திரும்பக் கொண்டுவரப்படும்வரை எங்களை ஒதுக்கி வைத்திருக்கிறீர்களா?

**ம:** இல்லை இல்லை. அது அவ்வளவு மோசமில்லை. மனதாலும், பருப் பொருளாலும் ஆன, பெயர்களாலும், உருவங்களாலும் ஆன உலகம் தொடரும். ஆனால் அது எனக்கு ஒரு பொருட்டே அல்ல. அது ஒரு நிழலைக் கொண்டிருப்பது போல. அது இருக்கிறது - நான் எங்கு சென்றாலும் என்னைத் தொடர்ந்துகொண்டு. ஆனால் அது எந்தவிதத்திலும் என்னைத் தொந்தரவு செய்வதில்லை. அது

அனுபவங்களால் ஆன உலகமாக இருக்கிறது. ஆனால் ஆசைகளாலும், அச்சங்களாலும் என்னோடு தொடர்புபடுத்தப் பட்ட பெயர்களும், உருவங்களுமாக அல்ல. அனுபவங்கள் குணாதிசயங்கள் அற்றவை, தூய அனுபவங்கள் என்று வேண்டுமானால் நான் சொல்லலாம். நான் அவற்றை அனுபவங்கள் என்று அதைவிடச் சிறந்த வார்த்தை இல்லாததால் சொல்கிறேன். அவை கடலில் அதன் அமைதியான வலிமையைப் பாதிக்காதவாறு எப்போதும் இருக்கின்ற அலைகளைப் போன்றவை.

**கே:** நீங்கள் ஒரு அனுபவம் பெயரற்று, உருவமற்று, வரையறுக்க முடியாமல் இருக்க முடியும் என்று சொல்கிறீர்களா?

**ம:** ஆரம்பத்தில் எல்லா அனுபவங்களும் அப்படியானவை. ஞாபகத்தால் பிறக்கும் ஆசையும், அச்சமும்தான் அதற்குப் பெயரையும், உருவத்தையும் கொடுத்து மற்ற அனுபவங்களிலிருந்து பிரிக்கின்றன.

அது உணர்வுள்ள அனுபவம் அல்ல. ஏனெனில் அது மற்ற அனுபவங்களுக்கு எதிரானது அல்ல. இருப்பினும் அதுவும் ஒரு அனுபவமே.

**கே:** அது உணர்வற்றது என்றால் அதைப் பற்றி ஏன் பேச வேண்டும்?

**ம:** பெரும்பாலான உன் அனுபவங்கள் உணர்வற்றவை. உணர்வுள்ளவை மிகச் சிலவே. இந்த நிஜத்தைப் பற்றி அறியமாட்டாய். ஏனெனில் உனக்கு உணர்வுள்ளவை மட்டும் தான் பொருட்டானவை. உணர்வற்றவையைப் பற்றியும் அறி.

**கே:** உணர்வற்றதைப் பற்றி ஒருவர் பிரக்ஞையுடன் இருக்க முடியுமா? அதை எப்படிச் செய்வது?

**ம:** ஆசையும், அச்சமும்தான் தடுக்கின்ற மற்றும் திரிக்கின்ற காரணிகள். மனம் அவற்றிலிருந்து விடுபட்டுவிட்டால் உணர் வற்றது அணுகக் கூடியதாகிவிடும்.

**கே:** அதற்கு உணர்வற்றது உணர்வுடையதாகிவிடும் என்று அர்த்தமா?

**ம:** அது முற்றிலும் மாறுபட்டது. உணர்வுள்ளது உணர்வற்றதுடன் ஒன்றாகிவிடும். நீ அதை எந்தவிதத்தில் பார்த்தாலும் வித்தியாசம் மறைந்துவிடும்.

**கே:** நான் குழம்பிவிடுகிறேன். எப்படி ஒருவர் விழிப்புணர்வுடன் இருந்தும் உணர்வற்று இருப்பார்?

**ம:** பிரக்ஞை, விழிப்புணர்வு என்னும் அளவில் மட்டும் குறுக்கப் பட்டதல்ல. அது இருக்கும் அனைத்துமானது. விழிப்புணர்வு இருமைத் தன்மையுடையது. பிரக்ஞையில் இருமைத் தன்மை இல்லை. அது தூய ஞானத்தின் ஒற்றைத் தொகுப்பு. அதே மாதிரி ஒருவர் தூய இருத்தலையும், தூய உருவாக்கத்தையும் பற்றிப் பேசலாம் - பெயரற்றவை, உருவமற்றவை, நிசப்தமானவை என்று. இருப்பினும் அவை தீர்க்கமாக மெய்யானவை, சக்திமிக்கவை, செயல் ஊக்கம் கொண்டவை. அவற்றின் இருத்தலை விவரிக்க முடியாது என்பது அவற்றைச் சிறிதுகூட பாதிக்காது. அவை விழிப்புணர்வற்று இருந்தாலும்கூட அவசியமானவை. விழிப்புணர் வுடையது ஆதாரத்திலிருந்து மாறாது. அது சிறிது மாறுபடலாம். எந்த ஒன்றும் மாற இறத்தலுக்கு ஊடாகவும், தெளிவில்லாமலும், கரைதலுக்குள்ளும் கடந்து செல்ல வேண்டும். தங்க நகையை வேறு வடிவத்திற்கு மாற்றுவதற்கு முன்னால் உருக்க வேண்டும். இறக்க மறுக்கும் ஒன்றால் மறுபடியும் பிறக்க முடியாது.

**கே:** உடல் இறப்பதைத் தவிர, வேறு எந்த விதத்தில் ஒருவர் இறக்க முடியும்?

**ம:** இறத்தல் என்பது விலகிக்கொள்ளுதல், விட்டேத்தியான தன்மை, நடப்பவற்றை நடக்குமாறு விட்டுவிடுதல். முழுமையாக வாழ இறத்தல் அவசியம். ஒவ்வொரு முடிவும் ஒரு புதிய துவக்கத்தை உருவாக்கும். அதேசமயம், இறந்த ஒன்றுதான் இறக்க முடியும், வாழும் ஒன்றல்ல என்பதையும் புரிந்துகொள். உனக்குள் உயிரோடிருப்பதுதான் இறப்பில்லாதது.

**கே:** ஆசை எங்கிருந்து அதற்குச் சக்தியைப் பெறுகிறது?

**ம:** ஞாபகத்திலிருந்து அதன் பெயரையும், வடிவத்தையும் பெறுகிறது. சக்தி அதன் ஆதாரத்திலிருந்து வருகிறது.

**கே:** சில ஆசைகள் மொத்தமாகவே தவறு. எப்படித் தவறான ஆசைகள் ஒரு உயர்ந்த ஆதாரத்திலிருந்து வர முடியும்?

**ம:** ஆதாரம் சரியோ தவறோ அல்ல. ஆசையும் அதாகவே சரியோ தவறோ அல்ல. அது மகிழ்ச்சியைத் தேடும் எத்தனம்தான். உன்னை ஒரு உடலின் வடிவத்தோடு அடையாளப் படுத்திக்கொண்டதால் நீ இழந்துவிட்டதாக நினைத்து, சந்தோசம் என்று நீ சொல்கின்ற நிறைவு மற்றும் முழுமை உணர்விற்காக அத்தியாவசியமாகத் தேடுகிறாய்.

**கே:** நான் எப்போது மகிழ்ச்சியை இழந்தேன்? அதை ஒருபோதும் நான் கொண்டிருக்கவில்லை.

**ம:** காலையில் நீ தூக்கத்திலிருந்து கண்விழிப்பதற்கு முன்பு கொண்டிருந்தாய். உன் விழிப்புணர்விற்கு அப்பால் செல். அப்போது அதைக் கண்டுபிடிப்பாய்.

**கே:** நான் எப்படி விழிப்புணர்விற்கு அப்பால் செல்வது?

**ம:** உனக்கு முன்பே தெரியும். அதன்படி செய்.

**கே:** நீங்கள்தான் அவ்வாறு சொல்கிறீர்கள். எனக்கு அதைப் பற்றி ஒன்றும் தெரியாது.

**ம:** இருப்பினும் நான் திரும்பச் சொல்கிறேன் - உனக்குத் தெரியும். செய். கடந்து செல். உன் இயல்பான, இயற்கையான, உச்ச உயர்வான நிலைக்குத் திரும்பச் செல்.

**கே:** எனக்குப் புதிராக இருக்கிறது.

**ம:** கண்ணில் உள்ள தூசி உன்னைக் குருடன் என்று நினைக்க வைக்கிறது. அதைக் கழுவிவிட்டு, பார்.

**கே:** நான் பார்க்கிறேன்! எனக்கு இருள்தான் தெரிகிறது.

**ம:** தூசியை நீக்கு. அப்போது உன் கண் ஒளியால் நிரப்பப்படும். ஒளி காத்துக் கொண்டு அங்கு இருக்கிறது. கண்கள் தயாராக அங்கு உள்ளன. நீ இருள் என்று சொல்வது ஒரு சிறு தூசியின் நிழல் மட்டுமே. அதை எடுத்துவிட்டு உன் இயல்பான நிலைக்குத் திரும்பு.

# 81. அச்சத்தின் மூல காரணம்

**மஹராஜ்:** நீ எங்கிருந்து வந்திருக்கிறாய்?

**கேட்பவர்:** நான் அமெரிக்காவிலிருந்து வந்திருக்கிறேன். ஆனால் பெரும்பாலும் ஐரோப்பாவில் வசிக்கிறேன். இந்தியாவிற்கு அண்மையில்தான் வந்தேன். நான் ரிஷிகேஷில், இரண்டு ஆசிரமங் களில் இருந்தேன். தியானத்தையும், பிராணாயாமத்தையும் கற்றுக் கொண்டேன்.

**ம:** எவ்வளவு காலம் நீ அங்கு இருந்தாய்?

**கே:** எட்டு நாட்கள் ஒன்றிலும், ஆறு நாட்கள் மற்றொன்றிலும் இருந்தேன். அங்கு நான் மகிழ்ச்சியாக இல்லை. அதனால் வெளியே வந்துவிட்டேன். பிறகு மூன்று வாரத்திற்கு நான் திபேத்திய லாமாக்களிடம் இருந்தேன். ஆனால் அவர்கள் சூத்திரங்களாலும், வழிபாட்டு முறைகளாலும் கட்டப்பட்டு இருக்கிறார்கள்.

**ம:** எல்லாவற்றிலுமிருந்து பெற்ற முடிவு என்ன?

**கே:** கண்டிப்பாகச் சக்தி கூடியது. ஆனால் ரிஷிகேஷிற்குச் செல்வதற்கு முன் உண்ணாவிரதம் மற்றும் உணவுக் கட்டுப் பாட்டை நான் தென்னிந்தியாவில், புதுக்கோட்டையில் உள்ள ஒரு இயற்கை நல மையத்தில் பயிற்சி பெற்றேன். அது எனக்கு நிறைய நன்மைகளைச் செய்தது.

**ம:** அதிகப் படியான சக்தி நல்ல உடல் நலத்தால் இருக்கலாம்.

**கே:** என்னால் சொல்ல முடியவில்லை. ஆனால் இந்த எல்லா விதமான முயற்சிகளின் விளைவாக என் உடலின் பல்வேறு பகுதிகளில் தீ போன்று எரிய ஆரம்பித்துவிட்டது. ஒருபோதும் இல்லாத மந்திர உச்சாடனங்களையும், ஓசைகளையும் கேட்டேன்.

**ம:** இப்போது எதைத் தேடிக் கொண்டிருக்கிறாய்?

**கே:** நாம் எல்லோரும் எதைத் தேடுகிறோம்? மெய்யை, அகவயப்பட்ட உறுதித் தன்மையை, மெய்யான சந்தோசத்தை. மெய்யறிதலுக்கான பல்வேறு பள்ளிகளில் பிரக்ஞையைப் பற்றி நிறையவே பேசுகிறார்கள். அதனால் ஒருவர் பிரக்ஞையே உச்ச உயர்வான மெய்மை என்னும் முடிவிற்கு வந்துவிடுகிறார். அது அவ்வாறா? உடலை மூளை பாதுகாத்துக் கொள்கிறது; மூளையை விழிப்புணர்வு ஒளிரச் செய்கிறது; பிரக்ஞை விழிப்புணர்வைக் கவனிக்கிறது. பிரக்ஞைக்கு அப்பால் ஏதாவது இருக்கிறதா?

**ம:** நீ பிரக்ஞையுடன் இருக்கிறாய் என்று உனக்கு எப்படித் தெரியும்?

**கே:** நான் அவ்வாறு உணர்கிறேன். அதை வேறு மாதிரி என்னால் வெளிப்படுத்த இயலாது.

**ம:** அதை நீ கவனமாக மூளையிலிருந்து விழிப்புணர்வு வழியாகப் பிரக்ஞை வரை தொடர்ந்தால் இருமை உணர்வு நிலைத்திருப் பதைக் காண்பாய். நீ பிரக்ஞைக்கு அப்பால் சென்றால் இருமைத் தன்மையற்ற ஒரு நிலை இருக்கிறது. அதில் குறுக்கீடு என்பது இல்லை. தூய இருத்தல் மட்டுமே உள்ளது. நீ இருத்தல் என்பதை குறிப்பிட்ட ஏதோ ஒன்றாக இருப்பதாக அர்த்தப்படுத்தினால் அதை இருத்தலற்ற தன்மை என்றுகூடச் சொல்லலாம்.

**கே:** நீங்கள் தூய இருத்தல் என்று சொல்வது எல்லாவற்றிலும் ஊடுருவி இருக்கும் பிரபஞ்ச இருத்தலா அல்லது எல்லாமுமாக இருப்பதா?

**ம:** எல்லாமுமாக இருப்பது என்பது விஷேசமானவைகளின் தொகுப்பைக் குறிக்கிறது. தூய இருத்தலில் விஷேசமான ஒன்று என்னும் கருத்து இல்லை.

**கே:** தூய இருத்தலுக்கும், விஷேசமான ஒன்றாக இருப்பதற்கும் ஏதாவது தொடர்பு உண்டா?

**ம:** இருப்பதற்கும், இருப்பதைப்போல் தோன்றுவதற்கும் என்ன தொடர்பு இருக்க முடியும்? கடலுக்கும், அதன் அலைகளுக்கும் என்ன தொடர்பு இருக்க முடியும்? மெய்யானது மெய்யற்றதைச் சாத்தியமாக்குகிறது; அதை மறையவும் செய்கிறது. நிலையற்ற

கணங்களின் தொடர்ச்சி காலம் என்னும் மாயையை உருவாக்கு கிறது. ஆனால் தூய இருத்தலின் காலமற்ற மெய்யான நிலையில் அசைவு இல்லை. ஏனெனில் எல்லா அசைவிற்கும் ஒரு அசைவற்ற பின்புலம் தேவை. மெய்மைதான் அந்தப் பின்புலம். ஒருமுறை உன்னுடைய இருத்தலில் அதைக் கண்டுபிடித்து விட்டாயானால் எல்லாப் பாகுபாடுகள் மற்றும் பிரிவினைகளிலிருந்தும் சுதந்திரமாக இருக்கின்ற அந்த இருத்தலை நீ எப்போதும் இழக்கவில்லை என்று அறிவாய். ஆனால் அதை விழிப்புணர்வில் தேடாதே. அங்கு நீ அதைக் காண முடியாது. அதை வேறெங்கும் தேடாதே. ஏனெனில் எதுவும் அதை உள்ளடக்கிக் கொண்டிருப்பதில்லை. மாறாக அது ஒவ்வொன்றையும் உள்ளடக்கிக்கொண்டிருக்கிறது. ஒவ்வொன்றையும் வெளிப்படுத்துகிறது. அது பகல் வெளிச்சத்தைப் போல காண முடியாதவகையில் இருந்துகொண்டு, ஒவ்வொன்றையும் காணக் கூடியதாகச் செய்கிறது.

**கே:** *ஐயா, மெய்மையை விழிப்புணர்வில் காண முடியாது என்று என்னிடம் நீங்கள் சொல்வதால் எனக்கு என்ன பயன்? வேறு எங்கு நான் அதைத் தேடுவது? அதை எப்படி நீங்கள் கிரகித்தீர்கள்?*

**ம:** அது மிகவும் எளியது. நான் உன் வாயின் சுவை என்ன என்று கேட்டால், நீ அது இனிப்பும் அல்ல, கசப்பும் அல்ல; புளிப்பும் அல்ல, துவர்ப்பும் அல்ல; இந்தச் சுவைகள் எல்லாம் இல்லாதிருக்கும் போது என்ன இருக்குமோ அது என்று சொல்வாய். அதே போல எல்லா வித்தியாசங்களும், எதிர்வினைகளும் இல்லாதிருக்கும் போது என்ன மிஞ்சுகிறதோ அந்த எளிமையானதும், பூர்ண மானதும்தான் மெய்மை.

**கே:** நான் புரிந்துகொள்வதெல்லாம் நான் ஒரு ஆரம்பமற்ற மாயையின் பிடியில் உள்ளேன் என்பதுதான். அது எப்படி ஒரு முடிவிற்கு வரும் என்று எனக்குத் தெரியவில்லை. அது முடிவிற்கு வரமுடியுமானால் வெகுகாலத்திற்கு முன்பே வந்திருக்க வேண்டும். எதிர் காலத்தில் வாய்ப்புகள் இருப்பதைப் போல கடந்த காலத்திலும் பல வாய்ப்புகளை நான் கொண்டிருந்திருக்க வேண்டும். எது நடக்கவில்லையோ அது இனிமேலும் நடக்காது. அல்லது அது நடந்திருந்தால் நீடித்திருக்காது. இத்தனை

கோடிக்கணக்கான வருடங்களுக்குப் பிறகு நம்முடைய வருந்தத்தக்க நிலை உச்ச முடிவான அழிவைக் கொண்டிருக்கிறது. அல்லது இன்னும் மோசமான, முடிவற்ற மற்றும் அர்த்தமற்ற, திரும்பத் திரும்ப நடக்கும் அச்சத்தைக் கொண்டிருக்கிறது.

**ம:** உன் தற்போதைய நிலை ஆரம்பமும், முடிவுமற்றதென்பதற்கு என்ன அத்தாட்சி வைத்திருக்கிறாய்? பிறப்பதற்கு முன்னால் நீ எப்படி இருந்தாய்? இறந்த பிறகு எப்படி இருப்பாய்? உன்னுடைய தற்போதைய நிலையைப் பற்றி உனக்கு எவ்வளவு தெரியும்? நீ தூக்கத்திலிருந்து விழிப்பதற்கு முன்னால் உன் நிலைமை என்னவாக இருந்தது என்பதுகூட உனக்குத் தெரியாது. உன் தற்போதைய நிலையைப் பற்றிச் சிறிதளவே உனக்குத் தெரியும். அதிலிருந்து எல்லாக் காலத்தைப் பற்றியும், எல்லா இடங்களைப் பற்றியும் முடிவு களை எடுக்கிறாய். நீ கனவு கண்டுகொண்டிருக்கலாம். அந்தக் கனவை சாசுவதமானதென்று நீ நினைத்துக் கொண்டிருக்கலாம்.

**கே:** அதை ஒரு கனவு என்று சொல்வது நிலைமையை மாற்றாது. விவேகமில்லாமல் இருப்பது துக்கத்தை உருவாக்குகிறது. துக்கத்துடன் இருப்பது விவேகமற்று இருக்கிறது. அதில் எந்தச் சந்தேகமும் கிடையாது. நான் என் கேள்வியைத் திரும்பக் கேட்கிறேன்: எனக்குப் பின்னால் இருக்கும் முடிவற்ற, காலத்தால் நிறைவேற்ற முடியாத ஆசை என்ன பாக்கி இருக்கும்? என் எதிர்காலம் எப்படி என் கடந்த காலத்தைவிட வித்தியாசமானதாக இருக்கும்?

**ம:** உன்னுடைய மனக்கொந்தளிப்புள்ள நிலையில் நீ ஒரு கடந்த காலத்தையும், எதிர்காலத்தையும் உருவகப் படுத்தி, அவற்றை நிஜம் என்று எடுத்துக் கொள்கிறாய். உண்மையில் உனக்கு உன் நிகழ்கால கணம் மட்டும்தான் தெரியும். கற்பனையான கடந்த காலத்தையும், எதிர்காலத்தையும் கேள்வி கேட்காமல் தற்பொழுதை என்ன என்று ஆராய்ந்தால் என்ன? உன்னுடைய தற்பொழுது ஆரம்பமற்றதோ, முடிவற்றதோ அல்ல. ஒரு கண நேரத்தில் அது முடிந்துபோய் விடுகிறது. அது எங்கிருந்து வருகிறது மற்றும் எங்கே செல்கிறது என்று கவனமாகப் பார். அப்போது அதற்குப் பின்னால் இருக்கும் காலமற்ற மெய்மையை விரைவில் கண்டுபிடிப்பாய்.

**கே:** நான் ஏன் அதை முன்பே செய்யவில்லை?

**ம:** எப்படி ஒவ்வொரு அலையும் கடலில் அடங்குகிறதோ அப்படி ஒவ்வொரு கணமும் அதன் ஆதாரத்திற்குத் திரும்பும். மெய்யறிதல் என்பது அந்த ஆதாரத்தைக் கண்டுபிடித்து அதில் அடங்குவதாகும்.

**கே:** கண்டுபிடிப்பது யார்?

**ம:** மனம் கண்டுபிடிக்கிறது.

**கே:** அது விடைகளைக் காண்கிறதா?

**ம:** கேள்விகள் இல்லாமல் விடப்படுவதையும், அதனால் விடைகள் எதுவும் தேவையில்லை என்றும் கண்டுபிடிக்கிறது.

**கே:** பிறந்துள்ளது ஒரு நிஜம். இறக்கப் போவது மற்றோரு நிஜம். அவை சாட்சிக்கு எவ்வாறு தோன்றுகின்றன?

**ம:** ஒரு குழந்தை பிறக்கிறது. ஒரு மனிதன் இறக்கிறான். இவையெல்லாம் காலத்தின் போக்கில் உள்ள நிகழ்வுகள்.

**கே:** சாட்சியில் ஏதாவது முன்னேற்றம் உள்ளதா? பிரக்ஞை பரிணாம வளர்ச்சி அடைகிறதா?

**ம:** பிரக்ஞையின் ஒளி குவிக்கப்படும்போது பார்க்கப்படுவது பல மாற்றங்களை அடையலாம். ஆனால் பார்க்கப்படுவதுதான் மாறும்; ஒளி அல்ல. சூரிய ஒளியில் செடிகள் வளர்கின்றன. ஆனால் சூரியன் வளர்வதில்லை. அவைகளாகவே உடலும், சாட்சியும் அசைவற்றவை. ஆனால் அவற்றை ஒன்றாகச் சேர்த்து மனதிற்குள் கொண்டுவரும்போது அவை அசைவதாகத் தோன்றுகின்றன.

**கே:** ஆமாம். 'நான்' என்பதுதான் அசைகிறது மற்றும் மாறுகிறது என்பதைப் பார்க்கிறேன். 'நான்' என்னும் விழிப்புணர்வு அவசியமாக வேண்டுமா?

**ம:** யார் வேண்டுகிறார்கள்? அது இருக்கிறது - இப்போது. அது ஆரம்பத்தைக் கொண்டிருந்தது. முடிவையும் கொண்டிருக்கும்.

**கே:** 'நான்' என்னும் விழிப்புணர்வு போய்விட்டால் என்ன மிஞ்சும்?

**ம:** எது வந்து போவதில்லையோ அது மிஞ்சும். எப்போதும் பேராசையைக் கொண்டிருக்கும் மனம், முன்னேற்றம் மற்றும் பூரணத்தன்மையை நோக்கிய பரிணாம வளர்ச்சி ஆகிய கருத்துக்களை உருவாக்குகிறது. அது குழப்பத்தை உருவாக்குகிறது. பிறகு அது ஒழுங்கைப் பற்றிப் பேசுகிறது ஆனால் அதை நாசம் செய்கிறது. பிறகு பாதுகாப்பைத் தேடுகிறது.

**கே:** *பிரராப்தம், கர்மாவில் ஏதேனும் முன்னேற்றம் உள்ளதா?*

**ம:** கர்மா என்பது செலவழிக்கப்படாத சக்திகள், நிறைவேற்றப் படாத ஆசைகள், புரிந்துகொள்ளப்படாத அச்சங்கள் ஆகியவற்றின் சேமிப்பு. அந்தச் சேமிப்பு புது ஆசைகளாலும், அச்சங்களாலும் இடைவிடாமல் நிரப்பப்படுகிறது. அது எப்போதும் அவ்வாறு இருக்க வேண்டியதில்லை. உன் அச்சங்களின் மூல காரணம் உன்னிடமிருந்து விலகல். அதேபோல ஆசைகளின் மூல காரணம் சுயத்திற்காக ஏங்குவது என்பதையும் புரிந்துகொள். அப்போது உன் கர்மா ஒரு கனவுபோலக் கரைந்துவிடும். பூமிக்கும், சொர்க்கத்திற்கு மிடையில் உயிர்வாழ்தல் நடந்துகொண்டிருக்கிறது. எதுவுமே பாதிக்கப்படுவதில்லை. உடல்கள் மட்டுமே வளர்ந்து அழுகிப் போகின்றன.

**கே:** *நபருக்கும், சாட்சிக்குமிடையில் என்ன தொடர்பு இருக்கிறது?*

**ம:** அவற்றிற்கிடையில் எந்தத் தொடர்பும் இருக்க முடியாது. ஏனெனில் அவை இரண்டும் ஒன்றே. அவற்றைப் பிரித்து, தொடர்பைத் தேடாதே.

**கே:** *பார்ப்பவரும், பார்க்கப்படுவதும் ஒன்றே என்றால் பிரிவினை எப்படி ஏற்படுகிறது?*

**ம:** அவற்றின் இயல்பிலேயே வெளிப்படையாக வேறாகவும், பலவிதமாகவும் இருக்கும் பெயர்கள் மற்றும் உருவங்களால் வசீகரிக்கப்பட்டு நீ இயற்கையானதை வித்தியாசப்படுத்தியும், ஒன்றாக இருப்பதைப் பிரித்தும் பார்க்கிறாய். உலகம் பல்வேறு தன்மைகளால் செறிவோடு இருக்கிறது. ஆனால் உன்னுடைய

அன்னியமான உணர்வும், பயமும் தவறான கருத்தால் வருவது. உடல்தான் அபாயத்தில் உள்ளது; நீ அல்ல.

**கே:** நான் அடிப்படையான உயிரியல் தவிப்பும், தப்பிச் செல்லும் உள்ளுணர்வும் பல வடிவங்களை எடுத்து என் எண்ணங்களையும், உணர்ச்சிகளையும் திரிப்பதைப் பார்க்கிறேன். இந்தத் தவிப்பு எதனால் வருகிறது?

**ம:** அது 'நான் உடல்' என்னும் கற்பனையால் வரும் மனோ பாவம். அதை 'நான் உடல் அல்ல' என்னும் மாற்றுக் கற்பனையால் நீக்கலாம். இரண்டு கற்பனைகளுமே மெய்யற்றவை. ஆனால் ஒன்று மற்றொன்றை நீக்குகிறது. எந்தக் கற்பனையும் உன்னுடைய சொந்தக் கற்பனை அல்ல என்பதை அறி. அவையெல்லாம் வெளியிலிருந்து உனக்கு வருகின்றன. அதை நீ முழுவதுமாகச் சிந்திக்க வேண்டும். உன்னையே உன்னுடைய எண்ணம் மற்றும் தியானத்தின் நோக்கமாக ஆக்க வேண்டும். உன்னைப் புரிந்து கொள்ளச் செய்யும் முயற்சியே யோகா. ஒரு யோகியாக இரு. உன் வாழ்க்கையை யோகாவிற்கு அர்ப்பணி. தவறின் மூலத்தையும், தவறுக்குப் பின்னால் இருக்கும் உண்மையையும் கண்டுபிடிக்கும் வரை உன் வாழ்க்கையை அதற்குக் கொடு. ஆழ்ந்து இடைவிடாமல் சிந்தி, தேடு.

**கே:** தியானத்தில் யார் தியானம் செய்வது - நபரா அல்லது சாட்சியா?

**ம:** தியானம் என்பது விழிப்புணர்வின் உயர்வான நிலைகளைத் துளைத்து, இறுதியாக அதற்கு அப்பால் செல்வதற்கான ஒரு கருத்தூன்றிச் செய்யப்படும் முயற்சி. தியானம் செய்யும் கலை என்பது முன்னே கடந்த நிலைகளின்மேல் பிடிமானத்தை விடாமல், கவனத்தை இன்னும் நுட்பமான நிலைகளின் மேல் திருப்பும் கலையாகும். ஒருவகையில் அது இறத்தலைக் கட்டுப் பாட்டிற்குள் வைத்திருப்பது போன்றது. சமுதாயச் சூழ்நிலைகள், பழக்க வழக்கங்கள், பொருட்களினால் ஆன சுற்றுப் புறங்கள், ஆசனங்கள், மூச்சு விடுதல், புலன்கள், அவற்றின் உணர்ச்சிகள் மற்றும் உணர்ந்தறிதல், மனம், அதன் எண்ணங்கள் மற்றும்

உணர்ச்சிகள் ஆகிய மிகக் கீழான நிலைகளில் ஒருவர் ஆரம்பிக்கிறார். நபர்த்தன்மையின் முழு உருவாக்கத்தையும் உள்வாங்கி, உறுதியாகக் கைக்கொள்ளப்படும்வரை அது தொடரும். தியானத்தின் இறுதி நிலை, தத்ரூபமாக உள்ளவற்றோடு கொண்டுள்ள அடையாள உணர்விற்கும் அப்பால், 'நான் இதுவோ, அதுவோ', 'நான் இவ்வாறு, அவ்வாறு' என்பதற்கும் அப்பால், 'நான் சாட்சி மட்டுமே' என்பதற்கும் அப்பால், 'இருத்தல்' என்பதற்கும் அப்பால், எல்லாக் கருத்துக்களுக்கும் அப்பால், நபர்தன்மையில்லாத தனிப்பட்ட தூய இருத்தலுக்குள் செல்வதில் அடையப்படுகிறது. ஆனால் தியானம் செய்யும்போது நீ செயலூக்கம் உள்ளவனாக இருக்க வேண்டும். அது கண்டிப்பாகப் பகுதி நேர வேலை இல்லை. உன் ஈடுபாட்டையும், செயல் பாட்டையும் உனக்கும், உன்னைச் சார்ந்து இருப்பவர்களுக்கும் அடிப்படையாக என்ன தேவையோ அதோடு நிறுத்திக் கொள். உன் முழுச் சக்தியையும், நேரத்தையும் உன் மனம் உன்னைச் சுற்றி எழுப்பியுள்ள சுவற்றை உடைக்க உபயோகி. என்னை நம்பு - நீ வருத்தப்பட மாட்டாய்.

**கே:** என் அனுபவம் பிரபஞ்சமயமானது என்று நான் எப்படி அறிவேன்?

**ம:** தியானத்தின் முடிவில் எல்லாமும் நேரடியாக அறியப் படும். எந்தவிதமான அத்தாட்சியும் தேவையில்லை. எப்படி கடலின் ஒவ்வொரு துளி நீரும் கடலின் சுவையைக் கொண்டிருக்கிறதோ அப்படி ஒவ்வொரு கணமும் சாசுவதத்தின் சுவையைக் கொண்டிருக்கிறது. வரையறைகளும், விவரிப்புகளும் மேற் கொண்டு தேடுவதற்கு உபயோகமான உந்துதல்கள். ஆனால் அவற்றைக் கடந்து, அப்பால் உள்ள, எதிர்மறையாக மட்டுமே விவரிக்கக் கூடிய, வரையறைப்படுத்த முடியாத மற்றும் விவரிக்க முடியாததற்குள் செல்ல வேண்டும்.

முடிவில் பிரபஞ்ச மயமும், சாசுவதமும்கூட இடம் மற்றும் கால வயப்பட்டவைகளுக்கு எதிரான நல்ல கருத்துக்களே. மெய்மை ஒரு நல்ல கருத்து உருவாக்கம் அல்ல; நல்ல கருத்து உருவாக்கத்தின் வெளிப்பாடும் அல்ல. நல்ல கருத்து உருவாக்கங்களோடு அதற்கு

எந்தத் தொடர்பும் இல்லை. உன் மனதைப் பற்றி அக்கறை கொள். அதன் சிதைவுகளையும், அழுக்குகளையும் களை. ஒருமுறை உன் சொந்த சுயத்தை ருசித்துவிட்டாயானால் அதை எல்லா இடத்திலும், எல்லா நேரத்திலும் காண்பாய். எனவே அதை அடைய வேண்டும் என்பது மிக முக்கியம். ஒருமுறை அதை நீ அறிந்துவிட்டால் எப்போதும் அதை இழக்க மாட்டாய். ஆனால் அதற்குத் தீவிரமான மற்றும் கடினமான தியானத்தால் உனக்கு நீ வாய்ப்பு அளிக்க வேண்டும்.

**கே:** குறிப்பிட்டவாறு மிகச் சரியாக என்னை என்ன செய்யச் சொல்கிறீர்கள்?

**ம:** உன் இதயத்தையும், முழு மனதையும் 'நான்' என்பதின் மேலும், அது என்ன என்றும், அது எப்படி என்றும், அதன் ஆதாரம், உயிரோட்டம், அர்த்தம் என்ன என்றும் ஆழ்ந்து சிந்திப்பதற்குக் கொடு. அது ஒரு கிணற்றைத் தோண்டுவதைப் போன்றது. நீ உயிர் கொடுக்கும் தண்ணீர் ஊற்றை அடையும் வரை தண்ணீர் அல்லாத அனைத்தையும் ஒதுக்கிவிடுவாய்.

**கே:** நான் சரியான திசையில்தான் செல்கிறேனா என்று எனக்கு எப்படித் தெரியும்?

**ம:** பயிற்சிக்கான தெளிவு மற்றும் முழு ஈடுபாடு ஆகியவற்றில் ஏற்படும் உன் முன்னேற்றத்தைக் கொண்டு அதை அறிவாய்.

**கே:** ஐரோப்பியர்களான எங்களுக்கு அமைதியாக இருப்பது மிகவும் கடினமாக இருக்கிறது. நாங்கள் உலகத்தோடு அதிக அளவில் ஈடுபட்டு இருக்கிறோம்.

**ம:** இல்லை, இல்லை. நீங்கள் கனவு காண்கிறவர்களும் கூட. நாம் கனவின் உள்ளடக்கத்தில் மட்டுமே வித்தியாசப் படுகிறோம். நீங்கள் எதிர்காலத்தில் வரும் முழு நிறைவான பூரணத்தைத் தேடுகிறீர்கள். நாங்கள் தற்பொழுதில் அதைக் காணத் தீவிரமாக இருக்கிறோம். அளவானதற்கு மட்டுமே பூரணத்துவம் கொடுக்கப் பட வேண்டும். அளவற்றது முன்பே பூரணமானது. நீ பூரணமானவன். அதை நீ அறியவில்லை. உன்னை அறியக் கற்றுக் கொள். அப்போது நீ அதிசயங்களைக் கண்டுபிடிப்பாய்.

உனக்குத் தேவையானதெல்லாம் முன்பே உனக்குள் இருக்கிறது. உன் சுயத்தை நீ பெருமதிப்போடும், அன்புடனும் அணுக மட்டுமே செய்ய வேண்டும். சுயப் பழித்துரைத்தலும், சுய அவநம்பிக்கையும் மாபெரும் தவறுகள். துக்கத்திலிருந்து உன் தொடர்ச்சியான ஓடுதலும், சுகத்திற்கான தேடுதலும் உன்மேல் நீ கொண்டுள்ள அன்பின் அடையாளம். நான் உன்னிடம் வேண்டுவதெல்லாம் இதுதான்: உன்மேல் நீ கொண்டுள்ள அன்பைப் பூரணமாக்கு. உனக்கு எதையும் மறுக்காதே - உனக்கு அளவற்றதையும், சாசுவத மானதையும் கொடு. அப்போது உனக்கு அவை தேவையில்லை என்று கண்டுபிடிப்பாய். நீ அப்பால் இருப்பாய்.



# 82. முழுமையான பூரணம் என்பது இங்கேயே, இப்போதே உள்ளது

**கேட்பவர்:** யுத்தம்* நடந்து கொண்டிருக்கிறது. அதைப் பற்றிய உங்கள் மனப் பாங்கு என்ன?

**மஹராஜ்:** ஏதோ ஒரு இடத்தில், ஏதோ ஒரு வடிவத்தில் யுத்தம் எப்போதும் நடந்து கொண்டிருக்கிறது. யுத்தம் இல்லாத காலம் எப்போதாவது இருந்திருக்கிறதா? சிலர் அதைக் கடவுளின் சித்தம் என்று சொல்கிறார்கள். சிலர் அதைக் கடவுளின் விளையாட்டு என்று சொல்கிறார்கள். இது யுத்தங்கள் தவிர்க்க முடியாதவை என்றும், யாருமே அதற்குப் பொருப்பல்ல என்றும் சொல்வதற்கான மற்றொரு வழி.

**கே:** ஆனால் உங்களுடைய மனோபாவம் என்ன?

**ம:** ஏன் மனோபாவங்களை என்மேல் திணிக்கிறாய்? என்னுடையது என்று சொல்ல என்னிடம் எந்த மனப்பாங்கும் இல்லை.

**கே:** கண்டிப்பாக இந்த அறிவீனமான கொடூரத்திற்குச் சிலர் காரணமாக இருக்க வேண்டும். மக்கள் ஏன் ஒருவரை ஒருவர் தயக்கமில்லாமல் கொன்றுகொண்டிருக்கிறார்கள்?

**ம:** உள்ளுக்குள் இருக்கும் குற்றவாளியைத் தேடு. 'நான்' மற்றும் 'என்னுடையது' என்னும் கற்பனைகள்தான் எல்லா மோதல் களுக்கும் காரணம். அவற்றிலிருந்து விடுபடு. அப்போது மோதல்கள் இருக்காது.

**கே:** நான் மோதலில்லாமல் இருப்பதால் என்ன பயன்? அது யுத்தத்தைப் பாதிக்காது. நான்தான் போருக்குக் காரணம் என்றால்

* 1971 பங்களாதேஷ் விடுதலைப் போர்

அழிக்கப்பட நான் தயாராக இருக்கிறேன். இருப்பினும் என்போன்ற ஆயிரக்கணக்கானவர்களின் மறைவு, யுத்தத்தை நிறுத்தாது. அவை என் பிறப்பால் ஆரம்பிக்கவில்லை; என் இறத்தலால் முடிய மாட்டா. நான் பொறுப்பல்ல. யார் பொறுப்பு?

**ம:** சண்டையும், போராட்டமும் வாழ்க்கையின் ஒரு பகுதி. வாழ்தலுக்கு யார் காரணம் என்று நீ ஏன் விசாரம் செய்யக்கூடாது?

**கே:** நீங்கள் ஏன் வாழ்க்கையும், போராட்டங்களும் பிரிக்க முடியாதவை என்று சொல்கிறீர்கள்? சண்டை இல்லாமல் வாழ்க்கை இருக்க முடியாதா? நான் இருக்க மற்றவர்களுடன் சண்டைபோடத் தேவையில்லை.

**ம:** ஒரு தனித்த மனம் - உடலாக, ஒரு குறிப்பிட்ட பெயரும், உருவமுமாக உன் உயிர்வாழ்தலுக்கு நீ மற்றவர்களோடு எல்லா நேரமும் சண்டையிட்டுக் கொண்டிருக்கிறாய். வாழ்வதற்காக நீ அழிக்க வேண்டும். நீ கருத்தரிக்கப்பட்ட கணத்திலிருந்து உன் சூழ்நிலையோடு ஒரு யுத்தத்தை நீ ஆரம்பித்துவிட்டாய். அது இறப்பு உன்னை விடுவிக்கும் வரை தொடரும் ஒரு கருணையற்ற போர்.

**கே:** என் கேள்வி இன்னும் பதிலளிக்கப்படாமலே இருக்கிறது. நீங்கள் நான் முன்பே அறிந்த உயிர் வாழ்தல் மற்றும் அதன் துன்பங்களைப் பற்றி வெறுமனே விளக்குகிறீர்கள். ஆனால் யார் இதற்குப் பொறுப்பு என்பதை நீங்கள் சொல்வதில்லை. நான் வற்புறுத்திக் கேட்டால் கடவுள் மீதோ, கர்மாவின் மீதோ அல்லது என் ஆசை மற்றும் அச்சத்தின் மீதோ பழியைப் போடுகிறீர்கள். அது மேலும் கேள்விகளைக் கேட்க வைக்கிறது. எனக்கு முடிவான பதிலைத் தாருங்கள்.

**ம:** முடிவான பதில் இது: எதுவுமே இருத்தலில் இல்லை. பிரபஞ்ச விழிப்புணர்வுப் புலத்தில் எல்லாமுமே ஒரு கண நேரத் தோற்றமே. பெயரளவிலும், உருவத்திலும் உள்ள தொடர்ச்சி ஒரு மனோ உருவகம் மட்டுமே. அதை எளிதாகப் போக்கி விடலாம்.

**கே:** நான் பிரத்தியட்சமாக உள்ள, கண நேரத்தைய தோற்றத்தைப் பற்றிக் கேட்கிறேன். இங்கு சிப்பாய்களால் கொல்லப்பட்ட ஒரு

குழந்தையின் புகைப்படம் உள்ளது. இது நீங்கள் பார்க்கும் ஒரு நிஜம். அதை நீங்கள் மறுக்கமுடியாது. இப்போது அந்தக் குழந்தையின் மரணத்திற்கு யார் பொறுப்பு?

**ம:** யாரும் இல்லை. மற்றும் ஒவ்வொருவருமே. உலகம் எவற்றைக் கொண்டிருக்கிறதோ அவற்றால் ஆனது. ஒவ்வொன்றும் மற்ற எல்லாவற்றையும் பாதிக்கிறது. நாம் எல்லோரும் குழந்தையைக் கொல்கிறோம்; நாம் எல்லோரும் அதோடு இறக்கிறோம். ஒவ்வொரு நிகழ்வும் கணக்கற்ற காரணங்களைக் கொண்டிருக் கின்றது. அது எண்ணற்ற விளைவுகளை உருவாக்குகிறது. அதற்குக் கணக்கு வைத்திருப்பதில் பிரயோஜனமில்லை. எல்லாவற்றிற்கும் பின்புலத்தில் உள்ளதைத் தேடிக் கண்டுபிடிக்க முடியாது.

**கே:** உங்களைப் போன்ற இந்துக்கள் கர்மாவைப் பற்றியும், அதன் விளைவுகளைப் பற்றியும் பேசுகிறார்கள்.

**ம:** அது வெறுமனே ஒரு மொத்தமான மதிப்பீடு. மெய்யாக நாம் அனைவரும் ஒவ்வொருவரையும் உருவாக்குபவர்கள் மற்றும் அவர்களின் உருவாக்கம். நாம் மற்றவர்களுக்குத் தொந்தரவு கொடுத்துக் கொண்டும், மற்றவர்களுடைய தொந்தரவுகளைத் தாங்கிக் கொண்டும் இருக்கிறோம்.

**கே:** எனவே அப்பாவிகள் குற்றம் செய்பவர்களால் துன்பப் படுகிறார்களா?

**ம:** நம் அறியாமையில் நாம் அப்பாவிகள். நம் செயல்களில் நாம் குற்றமிழைப்பவர்கள். அறியாமல் பாவம் செய்கிறோம். புரிதல் இல்லாமல் துன்பப்படுகிறோம். நம்முடைய ஒரே நம்பிக்கை நிறுத்தி, பார்த்து, புரிந்து கொண்டு, ஞாபகங்களின் பிடியிலிருந்து விடுபடுவதுதான். ஏனெனில் ஞாபகம் கற்பனைக்குத் தீனி போடு கிறது. கற்பனை ஆசையையும், அச்சத்தையும் உருவாக்குகிறது.

**கே:** நான் ஏன் கற்பனை செய்ய வேண்டும்?

**ம:** விழிப்புணர்வாகிய ஒளி ஞாபகம் என்னும் படச் சுருளினுள் புகுந்து சென்று மூளையில் படங்களை விழச் செய்கிறது. பற்றாக் குறையானதும், ஒழுங்கற்றதுமான உன் மூளையின் நிலையினால்

நீ உணர்ந்தறியப்பட்டது திரிக்கப்பட்டு, விருப்பு மற்றும் வெறுப்பு போன்ற உணர்வுகளால் சாயமிடப்படுகிறது. உன் சிந்தனையை ஒழுங்குபடுத்தி உணர்ச்சிகளின் இருளிலிருந்து விடுவி. அப்போது மக்களையும், பொருட்களையும் அவை உள்ளவாறே தெளிவோடும், கருணையோடும் பார்ப்பாய்.

பிறப்பு, வாழ்தல், இறப்பு ஆகியவற்றைப் பார்க்கும் சாட்சி ஒன்றேதான். அதுவேதான் துக்கத்தையும். அன்பையும் பார்க்கும் சாட்சி. அளவானதாகவும், பிரிந்தும் இருக்கும் வாழ்க்கை துக்கமானதாக இருக்கும். இருப்பினும் நாம் அதை நேசிக்கிறோம். நாம் அதை ஒரே சமயத்தில் விரும்பவும், வெறுக்கவும் செய்கிறோம். நாம் சண்டை போடுகிறோம், கொல்கிறோம், உயிர்த் தன்மையையும், பொருட்களையும் அழிக்கிறோம். இருப்பினும் நாம் பிரியத்துடனும், சுய தியாகத்துடனும் இருக்கிறோம். நாம் குழந்தையைப் பராமரிக்கிறோம். அதேசமயம் அதை அனாதையாக்குகிறோம். நம் வாழ்க்கையில் முரண்பாடுகள் நிறைய உள்ளன. இருப்பினும் நாம் அதைப் பற்றிக் கொண்டிருக்கிறோம். அதைப் பற்றிக் கொண்டிருப்பதுதான் ஒவ்வொன்றின் ஆதாரத் திலும் இருக்கிறது. இருப்பினும் அது முற்றிலும் மேலோட்டமானது. நாம் நம் முழுச் சக்தியையும் உபயோகித்து ஏதோ ஒன்றையோ அல்லது யாரோ ஒருவரையோ பிடித்துக் கொள்கிறோம். அடுத்த கணத்தில் அதை மறந்து விடுகிறோம். ஒரு குழந்தை மண் பொம்மை களைச் செய்து, அவற்றை இலகுவாகக் கை விட்டுவிடுவது போல. அவற்றைத் தொட்டால் அது கோபத்தில் கத்தும். அதன் கவனத்தைத் திசை திருப்பிவிட்டால் அவற்றை மறந்துவிடும். நம் வாழ்க்கை இக்கணத்தில் உள்ளது. அதன் அன்பு இக்கணத்தில் உள்ளது. நாம் பல்வேறு விதங்களை, துன்பம் மற்றும் இன்பங்களின் விளையாட்டை விரும்புகிறோம். நாம் முரண்பாடுகளால் கவரப் படுகிறோம். இதற்கு நமக்கு எதிரெதிரானவையும், அவற்றின் பிரிந்த தன்மையும் தேவை. சிறிது நேரத்திற்கு நாம் அவற்றை மகிழ்ச்சியாக அனுபவிக்கிறோம். பிறகு சோர்வடைந்து அமைதியையும், தூய இருத்தலின் நிசப்தத்தையும் வேண்டுகிறோம். பிரபஞ்ச இதயம் இடைவிடாமல் துடிக்கிறது. நான் சாட்சியும், இதயமும் கூட.

**கே:** *நான் ஓவியத்தைப் பார்க்கிறேன். ஆனால் யார் ஓவியர்? யார் இந்தக் கொடூரமான ஆனால் போற்றுதலுக்குரிய அனுபவத்திற்குக் காரணம்?*

**ம:** ஓவியர் ஓவியத்தில் உள்ளார். நீ ஓவியரை ஓவியத்திலிருந்து பிரித்துவிட்டு அவரைத் தேடுகிறாய். பிரிக்காதே. மெய்யற்ற கேள்விகளைக் கேட்காதே. ஒவ்வொன்றும் அவை உள்ளவாறே உள்ளன. யாரும் குறிப்பிட்டாற்போல் பொறுப்பல்ல. தனிப்பட்ட பொறுப்பு என்னும் கருத்து யாரோ ஒருவர் அதைச் செய்திருக்க வேண்டும், யாரோ ஒருவர் அதற்குப் பொறுப்பு என்பதான ஒருவர் மூலமாக என்னும் மாயையினால் வருவது. இப்போது சமுதாயம், அதன் சட்ட திட்டங்கள் மற்றும் பழக்க வழக்கங்களுடன் ஒரு தனித்த மற்றும் பொறுப்புள்ள நபர்த்தன்மையை அடிப்படையாகக் கொண்டுள்ளது. ஆனால் இது மட்டுமே ஒரு சமுதாயம் கொண்டிருக்கக் கூடிய வடிவம் அல்ல. தனிப்பட்ட உணர்வு வழுவிழந்தும், பொறுப்புணர்வு நீர்த்துப் போயும் உள்ள வேறு வடிவங்களும் அதற்கு இருக்கலாம்.

**கே:** *வலுவிழந்த நபர்த்தன்மையுடைய ஒருவர் மெய்யறிதலுக்குச் சமீபமாக இருப்பாரா?*

**ம:** ஒரு பச்சிளம் குழந்தையைப் பற்றிப் பார்ப்போம். 'நான்' என்னும் உணர்வு அதற்கு இன்னும் உருவாகியிருக்காது. அதன் நபர்த்தன்மை இன்னும் வளர்ச்சியடையாமல் இருக்கும். சுய அறிவிற்கான தடைகள் குறைந்த அளவிலேயே இருக்கும். ஆனால் விழிப்புணர்வின் வலிமை, தெளிவு, ஆழம் மற்றும் அகலம் இல்லாமல் இருக்கும். வயதாக வயதாக அதன் விழிப்புணர்வு வலிவடையும். ஆனால் உள்ளிருக்கும் நபர்த்தன்மை வெளிப்பட்டு, மறைக்கவும், சிக்கலாக்கவும் செய்யும். எப்படி மரம் கடினமாக ஆக அதை எரிக்க அதிகச் சூடான தீ தேவையோ அப்படி, நபர்த்தன்மை எவ்வளவுக்கெவ்வளவு உறுதியாக இருக்கிறதோ அவ்வளவுக் கவ்வளவு அதை அழிப்பதால் உருவாகும் ஒளி பிரகாசமாக இருக்கும்.

**கே:** *உங்களுக்குப் பிரச்சனைகள் இல்லையா?*

**ம:** எனக்கும் ஒரு பிரச்சனை உள்ளது. நான் முன்பே உன்னிடம் சொல்லியிருக்கிறேன். ஒரு பெயரோடும், உருவத்தோடும் இருப்பது, உயிர் வாழ்வது வலி மிகுந்தது. இருப்பினும் நான் அதை விரும்புகிறேன்.

**கே:** ஆனால் நீங்கள் எல்லாவற்றையும் நேசிக்கிறீர்கள்!

**ம:** இருப்பில் எல்லாமும் உள்ளடங்கி உள்ளன. என் இயல்பே நேசிப்பதுதான். வலிமிகுந்ததுகூட நேசிக்கத் தக்கது.

**கே:** அது அதைக் குறைந்த வலியுடையதாக்காது. நீங்கள் ஏன் அளவற்ற ஸ்வரூபத்திலேயே இருக்கக் கூடாது?

**ம:** ஆராயும் உள்ளுணர்வு, அறியப்படாததன்மேல் கொண்டுள்ள அன்பு என்னை இருப்பிற்குக் கொண்டு வருகிறது. உருவாவதின் அடிப்படை இயல்பில் இருத்தலில் அமைதியைத் தேடுவது உள்ளது. இருத்தலின் சுபாவம் உருவாவதில் உள்ள உறுதியைத் தேடுவதில் உள்ளது. மாறி மாறி வரும் இந்த இருத்தல் மற்றும் உருவாதல் தவிர்க்க முடியாதது. ஆனால் என் வீடு அப்பால் உள்ளது.

**கே:** உங்கள் வீடு கடவுளிடம் உள்ளதா?

**ம:** கடவுளை நேசிப்பதும், துதிப்பதும் கூட அறியாமையே. கோட்பாடு எவ்வளவுதான் உயர்வானதாக இருந்தாலும், என் வீடு எல்லாக் கோட்பாடுகளுக்கும் அப்பாற்பட்டது.

**கே:** ஆனால் கடவுள் ஒரு கோட்பாடு அல்ல! அது இருப்பிற்கு அப்பால் உள்ள மெய்மை.

**ம:** உனக்குப் பிடித்த எந்த வார்த்தையை வேண்டுமானாலும் நீ உபயோகிக்கலாம். நீ என்னவாக நினைத்தாலும், நான் அதற்கு அப்பால் உள்ளேன்.

**கே:** உங்கள் வீட்டை ஒருமுறை தெரிந்து கொண்ட பிறகு நீங்கள் ஏன் அதில் தங்கக்கூடாது? எது உங்களை அதிலிருந்து வெளியேற்றுகிறது?

**ம:** நாம் உடலாக இருப்பதின்மீது கொண்டுள்ள அன்பினால் ஒருவர் பிறக்கிறார். ஒருமுறை பிறந்துவிட்டால் விதிவசப்பட்டு விடுகிறார். உருவாதலிலிருந்து விதியைப் பிரிக்கமுடியாது.

குறிப்பிட்ட ஒன்றாக ஆகவேண்டும் என்னும் ஆசை உன்னை அதன் எல்லாத் தனிப்பட்ட கடந்த காலத்தவை மற்றும் எதிர்காலத் தவையோடு சேர்த்து ஒரு நபராக்குகிறது. ஒரு உயர்ந்த மனிதரைப் பார். எவ்வளவு உன்னதமானவர் அவர்! இருப்பினும் அவருடைய வாழ்க்கை பிரச்சனைக்குரியதாகவும், அதன் பலன்கள் அளவான தாகவும் இருக்கிறது. மனிதனின் நபர்த்தன்மை எவ்வளவு சார்ந்திருக்கிறதென்றும், அதன் உலகம் எவ்வளவு அக்கறை இல்லாமல் இருக்கிறதென்றும் பார். அதன் முக்கியமற்ற தன்மைக் காகவே நாம் அதை நேசிக்கின்றோம் மற்றும் பாதுகாக்கின்றோம்.

**கே:** யுத்தம் நடந்துகொண்டிருக்கிறது. எல்லா இடத்திலும் குழப்பம் உள்ளது. உங்களை ஒரு உணவுக்கூடத்தைக் கவனித்துக் கொள்ளச் சொல்கிறார்கள். உங்களுக்குத் தேவையானதைக் கொடுத்துவிடுகிறார்கள். வேலையில் சேரவேண்டியது தான் பாக்கி. நீங்கள் மறுப்பீர்களா?

**ம:** வேலை செய்வதும், வேலை செய்யாமல் இருப்பதும் எனக்கு ஒன்றே. நான் பொறுப்பெடுத்துக் கொள்ளலாம். பொறுப் பெடுக்காமலும் இருக்கலாம். உணவு தயாரித்து வினியோகிக்கும் தொழில்செய்பவர்களைப் போல என்னைவிட அம்மாதிரியான வேலைகளில் சிறப்பானவர்கள் இருக்கலாம். ஆனால் என் மனப்பாங்கு வேறுவிதமானது. எப்படி ஒரு குழந்தை பிறந்தால் நான் குதூகலமடைவதில்லையோ, அதுபோல நான் இறப்பை ஒரு பேரிடராகப் பார்ப்பதில்லை. குழந்தை தொல்லைப்பட வெளிவருகிறது. இறப்பு தொல்லையிலிருந்து வெளியே கொண்டு வருகிறது. வாழ்க்கையோடு கொண்டுள்ள பற்றுதல் துக்கத்தோடு கொண்டுள்ள பற்றுதல் ஆகும். நமக்கு வலி தருவதை நாம் நேசிக்கிறோம். நம் இயல்பு அப்படிப்பட்டது.

என்னைப் பொருத்தவரை இறக்கும் கணம் ஒரு குதூகலிக்கும் தருணம்; அச்சப் படும் தருணமல்ல. நான் பிறந்த போது அழுதேன்; சிரித்துக் கொண்டே இறப்பேன்.

**கே:** இறக்கும் கணத்தில் விழிப்புணர்வில் ஏற்படும் மாற்றம் என்ன?

**ம:** என்ன மாற்றத்தை எதிர்பார்க்கிறாய்? படத் திரையிடல் முடியும்போது எல்லாமும் ஆரம்பத்தில் உள்ளதுபோலவே இருக்கின்றன. நீ பிறப்பதற்குமுன்பு இருந்த நிலைதான் இறப்பிற்குப் பிறகும் உள்ளது. ஞாபகப் படுத்திப் பார்.

**கே:** எனக்கு ஞாபகம் எதுவுமே இல்லை.

**ம:** ஏனெனில் நீ முயற்சி செய்யவே இல்லை. மனதை உள்முகமாகத் திருப்புவதுதான் முக்கியம். அதற்குப் பயிற்சி கண்டிப்பாகத் தேவை.

**கே:** நீங்கள் ஏன் சமுதாயப் பணியில் ஈடுபடக் கூடாது?

**ம:** ஆனால் நான் எல்லா நேரமும் வேறு எதையும் செய்வதில்லை! என்னவிதமான சமுதாயச் சேவையை என்னைச் செய்யச் சொல்கிறாய்? ஓட்டையை அடைத்து, ஒட்டுப் போடுவது என் வேலையில்லை. என் நிலைப்பாடு தெளிவானது: உற்பத்தி செய்து வினியோகி, உண்பதற்கு முன் உணவளி, எடுப்பதற்கு முன் கொடு, உன்னைப் பற்றி நினைப்பதற்கு முன்னால் மற்றவர்களைப் பற்றி நினை. பகிர்தலை அடிப்படையாகக் கொண்ட சுயநலமில்லாத ஒரு சமுதாயம்தான் உறுதியானதாகவும், மகிழ்ச்சியாகவும் இருக்கும். இதுதான் உலக விவகாரத்திற்கான பதில். உனக்கு அது வேண்டியதில்லை என்றால் சண்டையிடு.

**கே:** இவையெல்லாம் குணங்களைப் பொருத்தவையே. எங்கு தாமச குணமும், ராஜச குணமும் மேலோங்கி இருக்கின்றனவோ அங்கு போர் கண்டிப்பாக இருக்கும். எங்கு சாத்வீகம் கோலோச்சுகிறதோ அங்கு அமைதி இருக்கும்.

**ம:** நீ உனக்குப் பிடித்த மாதிரி எப்படிச் சொன்னாலும் அது ஒன்றேதான். சமுதாயம் நோக்கங்களினால் கட்டமைக்கப் பட்டுள்ளது. நல்லெண்ணத்தை அதன் அஸ்திவாரத்தில் போட்டா யானால் விஷேசமான சமுதாயச் சேவகர்கள் தேவையில்லை.

**கே:** உலகம் மேலும் சிறப்பானதாகும்.

**ம:** உலகம் சிறப்பானதாக மேன்மை அடைய அதற்குப் போதுமான கால அவகாசம் உள்ளது. ஆனால் அது மேன்மை

அடைவதில்லை. எதிர்காலத்திற்கு அங்கு என்ன நம்பிக்கை இருக்கிறது? கண்டிப்பாக சாத்வீகம் அதிகரித்து வரும் காலங்களில் ஒத்திசைவும், அமைதியும் இருந்திருக்கின்றன; இனிமேலும் இருக்கும். ஆனால் தங்களுடைய பூரணமான முழுமையினாலேயே ஒவ்வொன்றும் அழிகின்றன. ஒரு பூரணமாக முழுமையான சமுதாயம் அவசியமாக அசைவற்றதாகத்தான் இருக்கும். ஆகையால் அது தேங்கி, சிதைவுறும். மலை உச்சியிலிருந்து எல்லாப் பாதைகளும் கீழ்நோக்கித்தான் செல்லும். சமுதாயங்கள் மக்களைப் போன்றவை - அவை பிறந்து, ஒரு குறிப்பிட்ட அளவு பூரணத்துவம் பெறும்வரை வளர்ந்து, பிறகு வாடி, சிதைந்து, அழிகின்றன.

**கே:** சிதையாத, ஒரு தீர்க்கமான பூரண நிலை இருக்காதா?

**ம:** எதற்கெல்லாம் ஆரம்பம் இருக்கிறதோ அதற்கெல்லாம் முடிவு கண்டிப்பாக இருக்கும். காலமற்றதில் எல்லாமும் பூரணமாக இருக்கும் - இங்கேயே, இப்போதே.

**கே:** நாளடைவில் நாம் காலமற்றதை அடைவோமா?

**ம:** நாளடைவில் நாம் ஆரம்பப் புள்ளிக்கே வந்துவிடுவோம். எப்படி இடம் (வெளி) நம்மை இடத்திற்கு வெளியே கொண்டு செல்ல முடியாதோ அப்படி, காலம் நம்மைக் காலத்திற்கு வெளியே கொண்டு செல்ல முடியாது. காத்திருப்பதால் நீ அடைவது மேலும் காத்திருப்பதே. தீர்க்கமான பூரணம் இங்கேயே இப்போதே உள்ளது; சமீபத்திலோ, தூரத்திலோ உள்ள எதிர்காலத்தில் அல்ல. இரகசியம் இங்கு, இப்போது செய்யப்படும் செயலில் உள்ளது. உன் நடத்தையால் உன்னை நீ பார்க்க முடியாது. நீ உன்னை என்னவாக நினைத்துக் கொண்டிருக்கிறாயோ அதை ஒதுக்கித்தள்ளிவிட்டு, நீ தீர்க்கமாகப் பூரணமானவனைப்போல் நடந்துகொள் - பூரணத்தைப் பற்றிய உன் கருத்து என்னவாக இருந்தாலும் பரவாயில்லை. உனக்குத் தேவையானதெல்லாம் தைரியம்தான்.

**கே:** நான் அம்மாதிரியான தைரியத்தை எங்கு காண்பேன்?

**ம:** கண்டிப்பாக உனக்குள்தான். உள்ளுக்குள் பார்.

**கே:** உங்களுடைய அருள் எனக்கு உதவுமா?

**ம:** என் அருள் இப்போது உன்னிடம் சொல்கிறது: உள்ளுக்குள் பார் என்று. உனக்குத் தேவையானதெல்லாம் உன்னிடம் உள்ளது. அதை உபயோகி. உனக்கு நன்கு தெரிந்தவாறு நடந்துகொள். நீ எது சரியானது என்று நினைக்கிறாயோ அதைச் செய். தவறுகளைப் பற்றி பயப்படாதே; அதை எப்போதும் சரி செய்து கொள்ளலாம். நோக்கம்தான் முக்கியம். விளைவுகள் எடுக்கும் வடிவம் உன் கையில் இல்லை; செயல்பாட்டின் நோக்கங்கள் மட்டுமே உன் கட்டுப்பாட்டில் உள்ளன.

**கே:** எப்படி பூரணமில்லாததிலிருந்து பிறக்கும் செயல் பூரணத்திற்கு வழி வகுக்கும்?

**ம:** செயல்பாடு பூரணத்திற்கு வழி வகுக்காது; பூரணம் செயல் பாட்டில் வெளிப்படுத்தப்படுகிறது. உன் வெளிப்பாடுகளினால் உன்னை நீ மதிப்பிட்டுக் கொள்ளும் வரை அவற்றிற்கு அதிகபட்ச கவனத்தைக் கொடு. உன் சொந்த ஸ்வரூபத்தை அறிந்துவிட்டால் உன் நடத்தை பூரணமாக இருக்கும் - தன்னிச்சையாக.

**கே:** நான் காலமற்று பூரணமாக இருந்தால் நான் ஏன் பிறந்திருக்க வேண்டும்? இந்தப் பிறவியின் நோக்கம் என்ன?

**ம:** இது, 'தங்கம் ஆபரணமாக்கப் படுவதால் அடையும் பலன் என்ன?' என்று கேட்பதைப் போல் இருக்கிறது. நகை தங்கத்தின் வர்ணத்தையும், அழகையும் பெறுகிறது; தங்கம் சிறப்பாக ஆவதில்லை. அதேபோல, செயல்பாட்டில் வெளிப்படுத்தப்படும் மெய்மை, செயல்பாட்டை அர்த்தமுள்ளதாகவும், அழகான தாகவும் மாற்றுகிறது.

**கே:** மெய் அதன் வெளிப்பாடுகளால் அடையும் லாபம் என்ன?

**ம:** அது என்ன லாபம் அடைய முடியும்? எதுவுமே இல்லை. ஆனால் அன்பின் இயல்பிலேயே தன்னை வெளிப்படுத்திக் கொள்வது, தன்னை உறுதிப்படுத்திக் கொள்வது, கஷ்டங்களைச் சமாளிப்பது இருக்கிறது. நீ ஒருமுறை உலகம் என்பது அன்பின் செயல்பாடு என்று அறிந்து கொண்டாயானால் அதை நீ முற்றிலும் வேறு மாதிரி பார்ப்பாய். ஆனால் முதலில் துக்கத்தைப் பற்றிய உன் மனோபாவம் மாற வேண்டும். அடிப்படையில் துக்கம் என்பது

கவனத்தை ஈர்க்கும் ஒரு அழைப்பு. அதுவே அன்பின் ஒரு அசைவு. சுகத்தைவிட, அன்பு விழிப்புணர்வு மற்றும் இருத்தலின் வளர்ச்சியையும், அவற்றை அகலமும், ஆழமும் படுத்துவதையும் வேண்டுகிறது. அதுதான் அன்பின் ஆசை. எது முடிவில்லாமல் தடுக்கிறதோ அது துக்கத்திற்குக் காரணமாகிறது. அன்பு துக்கத்திலிருந்து தப்பித்துப் போவதில்லை. சரியான தன்மைக்கும், ஒழுங்கான முன்னேற்றத்திற்கும் வேலை செய்கின்ற சாத்வீக சக்தியை குறுக்கிடக் கூடாது. அதைத் தடுத்தால் அது தனக்கே எதிராகத் திரும்பி, அழிக்கக் கூடியதாகிவிடும். எப்போதெல்லாம் அன்பைத் தடுத்து நிறுத்தி, துக்கத்தைப் பரவ அனுமதிக்கிறோமோ அப்பொழுதெல்லாம் யுத்தம் தவிர்க்க முடியாததாகிறது. நம் அண்டை வீட்டாரின் துக்கத்திற்கு நாம் அக்கறையற்று இருப்பது துக்கத்தை நம் வீட்டிற்குக் கொண்டுவரும்.



# 83.உண்மையான குரு

**கேட்பவர்:** முன்பு ஒரு நாள் உங்களுடைய மெய்யறிதலின் ஆணிவேராக உங்கள் குருவின்மேல் கொண்டிருந்த நம்பிக்கை இருந்தது என்று நீங்கள் சொன்னீர்கள். நீங்கள் முன்பே தீர்க்கமான மெய்மை என்றும், மேற்கொண்டு எதுவும் செய்யத் தேவையில்லை என்றும் அவர் உறுதியளித்தார். நீங்கள் அவரை நம்பி, சிரமப் படாமல், அதை அத்தோடு விட்டுவிட்டீர்கள். இப்போது என் கேள்வி: உங்கள் குருவின்மேல் கொண்டிருந்த நம்பிக்கை யில்லாமல் நீங்கள் மெய்யறிந்திருக்க முடியுமா? உங்கள் மனம் நம்பினாலும் நம்பாவிட்டாலும் நீங்கள் என்னவோ அதுதான். உங்களுடைய சந்தேகம் குருவின் வார்த்தைகள் செயல்புரிவதைத் தடுத்து, அவற்றைச் செயலற்றுப் போகச் செய்திருக்குமா?

**மஹராஜ்:** நீயே சொல்லிவிட்டாய் - அவை செயலற்றுப் போயிருக்கும் என்று. ஆனால் அவை ஒரு குறிப்பிட்ட காலத்திற்கு மட்டுமே செயலற்றுப் போயிருக்கும்.

**கே:** குருவின் வார்த்தைகளில் இருக்கும் சக்தி அல்லது ஆற்றல் என்ன ஆகி இருக்கும்?

**ம:** அது உள்ளார்ந்து, வெளிப்படாததாக இருக்கும். ஆனால் முழுக் கேள்வியும் ஒரு தவறான புரிதலை அடிப்படையாகக் கொண்டுள்ளது. குரு, சிஷ்யர், அவர்களுக்கிடையேயான அன்பு மற்றும் நம்பிக்கை ஆகிய அனைத்தும் ஒரே நிஜம். பல தனித்தனியான நிஜங்கள் அல்ல. ஒவ்வொன்றும் மற்றொன்றின் ஒரு பகுதி. அன்பும், நம்பிக்கையும் இல்லாமல் குருவோ, சிஷ்யரோ, அவர்களுக்கிடையே உறவோ இருக்க முடியாது. அது மின்சார விளக்கை எரியச் செய்ய ஒரு மின்மாற்றியை அழுத்துவதுபோல. விளக்கு, மின்னோட்டச் சுற்று, மின்மாற்றி, மின் ஊக்கி, மின் கடத்தும் பாதைகள், மின் தேக்கி ஆகிய அனைத்தும் சேர்ந்த ஒற்றை

ஒரு அசைவு. அவை மனதைப் பொருத்தவை மட்டுமே. சாத்வீகமும் ஒரு குணமே.

**கே:** அப்படியானால் எது மெய்?

**ம:** யார் மனதை மெய்யறிந்ததாகவும், அறியாததாகவும் அறிகிறார்களோ, யார் அறியாமையையும், அறிவையும் மனதின் நிலைகளாக அறிகிறார்களோ அவர் மெய்யறிந்தவர். உன்னிடம் வைரங்களைக் கற்களோடு கலந்து கொடுத்தால், நீ வைரங்களைக் காணமாட்டாய் அல்லது அவற்றைக் கண்டுபிடிப்பாய். பார்ப்பதுதான் முக்கியம். பார்க்கும் சக்தி இல்லாவிட்டால் கற்களின் கருமையும், வைரங்களின் அழகும் எங்கே இருக்கும்? அறியப்பட்டது என்பது ஒரு வடிவத்தைத் தவிர வேறொன்றுமில்லை. அறிவு என்பது ஒரு பெயரைத் தவிர வேறொன்றுமில்லை. அறிபவர் மனதின் ஒரு நிலையைத் தவிர வேறொன்றுமில்லை. மெய்மை அப்பால் உள்ளது.

**கே:** கண்டிப்பாக, பொருட்களைப் பற்றிய புறவயப்பட்ட அறிவு மற்றும் கருத்துக்களும், சுயம் அறிதலும் ஒன்றே அல்ல. ஒன்றிற்கு மூளை தேவை. மற்றொன்றிற்குத் தேவையில்லை.

**ம:** கலந்துரையாடலுக்காக நீ வார்த்தைகளை ஒழுங்குபடுத்தி, அவற்றிற்கு அர்த்தத்தைத் தரலாம். ஆனால் நிஜம் என்னவென்றால், எல்லா அறிவும் அறியாமையின் ஒரு வடிவமே. மிகத் துல்லியமான வரைபடமும் காகிதம்மட்டும்தான். எல்லா அறிவும் ஞாபகத்தில்தான் உள்ளது; அது ஞாபகப்படுத்திக் கொள்ளுதல் மட்டுமே. மெய்மையோ அறிபவர் மற்றும் அறிந்தது ஆகிய இருமைத் தன்மைக்கு அப்பாற்பட்டது.

**கே:** அப்படியானால் மெய்மை எதனால் அறியப் படுகிறது?

**ம:** உன் மொழி எவ்வளவு தவறாக வழிநடத்துகிறது பார்! மெய்மையும்கூட அறிவால் அணுகக் கூடியது என்று நீ உணர்வின்றி கருதிக்கொள்கிறாய். பிறகு நீ மெய்மைக்கு அப்பால் ஒரு மெய்யறிந்தவரைக் கொண்டுவருகிறாய்! மெய்மையின் இருத்தலுக்கு அதை அறிய வேண்டியதில்லை என்று புரிந்துகொள்.

அறியாமையும், அறிவும் மனதில்தான் உள்ளன; மெய்மையில் அல்ல.

**கே:** மெய்மையைப் பற்றிய அறிவு என்பது இல்லை என்றால், நான் எப்படி மெய்மையை அடைவது?

**ம:** உன்னிடம் முன்பே உள்ளதை நீ அடைய வேண்டியதில்லை. நீ அடைதல் என்பதே அதைத் தவற விடச் செய்துவிடும். நீ அதைக் காணவில்லை என்னும் கருத்தை விட்டுவிடு. பிரத்தியட்சமான ஞானத்தின் குவி மையத்திற்குள், மனதாலான அனைத்தையும் நீக்குவதன் மூலமாக, இங்கேயே, இப்போதே அதை வர விடு.

**கே:** போகக் கூடிய எல்லாமும் போனால் என்ன மிஞ்சும்?

**ம:** ஒன்றுமில்லாத தன்மை மிஞ்சுகிறது. தூய விழிப்புணர்வு மிஞ்சுகிறது. விழிப்புணர்வுள்ள இருத்தலின் தூய ஒளி மிஞ்சுகிறது. ஒரு அறையிலுள்ள எல்லாத் தட்டுமுட்டுச் சாமான்களையும் நீக்கிவிட்டால் அந்த அறைக்குள் என்ன இருக்கும் என்று கேட்பதைப்போன்று இது இருக்கிறது. நன்கு உபயோகப்படுத்தக் கூடிய அறை மிஞ்சும். சுவர்களும்கூட இடிக்கப்பட்டுவிட்டால் இடம் (வெளி) மிஞ்சும். இடத்திற்கும், காலத்திற்கும் அப்பால் இங்கேயே, இப்போதே உள்ள மெய்மை இருக்கும்.

**கே:** சாட்சி மிஞ்சாதா?

**ம:** விழிப்புணர்வு இருக்கும்வரை, அதன் சாட்சியும் அங்கு இருக்கும். இரண்டும் ஒன்றாகவே தோன்றி மறைகின்றன.

**கே:** சாட்சியும் கண நேரத்தியதாக இருந்தால், அதற்கு ஏன் அவ்வளவு முக்கியத்துவம்?

**ம:** உணர்ந்தறியப்படுவதன் தாக்கத்தைத் தாண்டவும், உணர்ந்தறியப் படுவதுதான் மட்டும்தான் உண்மையானது என்னும் ப்ரம்மையை உடைக்கவும்.

**கே:** உணர்ந்தறிதல் முதன்மையானது. சாட்சி இரண்டாம் பட்சம்.

**ம:** இதுதான் முக்கியமானது: புற உலகம் மட்டுமே உண்மை யானது என்று நீ நினைக்கும்வரை நீ அதன் அடிமை. நீ அதிலிருந்து

விடுபட, உன் கவனம் சாட்சியாகிய 'நான்' என்னும் உணர்வின் மேல் திருப்பப்பட வேண்டும். உண்மையில் அறிபவரும், அறியப் பட்டதும் இரண்டல்ல; ஒன்றுதான். ஆனால் அறியப்பட்டதன் தாக்கத்தைக் குறைக்க அறிபவரை முன்னிறுத்த வேண்டும். இரண்டுமே முதன்மையானவை அல்ல. இரண்டுமே ஞாபகத்தில் ஏற்படும் விவரிக்க முடியாத, எப்போதும் புதியதாக, எப்போதும் இப்போதே இருக்கிற, வார்த்தைகளால் வர்ணிக்க முடியாத, மனதைவிட வேகமானதான அனுபவங்களின் பிரதிபலிப்பு.

**கே:** ஐயா, நான் ஒரு பணிவான, விடுதலையைத் தேடி ஒரு குருவிலிருந்து மற்றொரு குருவிடம் அலையும் ஆன்ம சாதகன். என் மனம் நோயுற்றது. அது ஆசைகளால் எரிந்து கொண்டும், அச்சங்களால் உறைந்தும் உள்ளது. என் வாழ் நாட்கள் வலியினால் சிவந்தும், சலிப்பினால் நரைத்தும் வேகமாகக் கடந்து போகின்றன. என் வயது அதிகமாகிக் கொண்டே போகிறது. என் ஆரோக்யம் குறைந்து கொண்டே வருகிறது. என் எதிர்காலம் இருண்டும், அச்சுறுத்துவதாகவும் இருக்கிறது. இதே நிலையில் சென்றால் நான் துக்கத்தில் வாழ்ந்து, மனக் கசப்போடுதான் இறப்பேன். எனக்கு ஏதாவது நம்பிக்கை இருக்கிறதா? அல்லது மிகவும் தாமதமாக உங்களிடம் வந்துள்ளேனா?

**ம:** உன்னிடம் எதுவுமே தவறல்ல. ஆனால் உன்னைப் பற்றி நீ கொண்டுள்ள கருத்துக்கள் முற்றிலும் தவறானவை. ஆசைப் படுவது, அச்சப்படுவது, துன்பப்படுவது நீ அல்ல. சூழ்நிலை களாலும், தாக்கங்களாலும் அடித்தளமிடப்பட்ட உடலின்மேல் கட்டப்பட்டுள்ள நபர்தான் துன்பப்படுவது. நீ அல்ல அந்த நபர். இது உன் மனதில் தெளிவாக நிறுவப்பட்டு, அதை நீ ஒருபோதும் மறக்கக் கூடாது. சாதாரணமாக இதற்கு நீண்ட சாதனாவும், வருடக் கணக்கான தீவிரமான ஒழுங்கும், தியானமும் தேவை.

**கே:** என் மனம் பலமில்லாமலும், சஞ்சலத்துடனும் இருக்கிறது. சாதனாவிற்கான பலமோ, தாக்குப்பிடிக்கும் தன்மையோயோ எனக்குக் கிடையாது. என் நிலைமை மிகவும் நம்பிக்கையற்றது.

**ம:** உன் நிலைமைதான் ஒருவகையில் நம்பிக்கையுடையது. சாதனாவிற்கு மாற்றாக ஒன்று உள்ளது. அதுதான் நம்பிக்கை. பயனுள்ள தேடலினால் பிறக்கும் தீர்மானம் உனக்கு இல்லையென்றால் என் கண்டுபிடிப்பின் அனுகூலத்தை எடுத்துக் கொள். அதை நான் மிக ஆர்வத்தோடு உன்னோடு பகிர்ந்து கொள்ள விரும்புகிறேன். நீ இதுவரையிலும், இப்போதும், இனிமேலும் மெய்மையிலிருந்து அன்னியமாகமாட்டாய் என்றும், நீ இங்கேயே, இப்போதே இருக்கின்ற பரிபூரணம் என்றும், நீ என்னவோ அந்தப் பாரம்பரியத்திலிருந்து உன்னை எதுவுமே இல்லாமல் செய்ய முடியாதென்றும் நான் அதிகபட்சத் தெளிவுடன் பார்க்கிறேன். நீ எந்த வகையிலும் என்னை விடத் தனியானவன் அல்ல. அது உனக்குத் தெரியாது. நீ என்னவென்று உனக்குத் தெரியாது. ஆகையால் நீ என்னவாக இல்லையோ அதுவாக உன்னை நினைத்துக் கொண்டிருக்கிறாய். எனவே ஆசையும், அச்சமும், மோசமான நிலையும் இருக்கின்றன. அதிலிருந்து தப்பிப்பதற்காக அர்த்தமில்லாத செயலைச் செய்கிறாய்.

வெறுமனே என்னை நம்பு. என்னை நம்பி வாழ். நான் உன்னைத் தவறாக வழிநடத்த மாட்டேன். நீ, உலகம் மற்றும் அதை உருவாக்கியவருக்கு அப்பால், விழிப்புணர்வு மற்றும் அதன் சாட்சிக்கு அப்பால், எல்லா ஒப்புக்கொள்ளுதல் மற்றும் மறுத்தலுக்கு அப்பால் இருக்கும் உச்ச உயர்வான மெய்மை. அதை ஞாபகம் வைத்திரு. அதைப் பற்றிச் சிந்தி. அதன்மீது செயல்படு. எல்லாப் பிரிவினை உணர்வுகளையும் கைவிட்டு விட்டு, உன்னை எல்லாவற்றிலும் பார். அதன்படி செயல்படு. செயல்பாட்டுடன் ஆனந்தம் வரும். ஆனந்தத்தோடு உறுதி வரும். நீ துக்கத்தில் இருப்பதால் நீ உன்னைச் சந்தேகப்படுகிறாய். இயற்கையான, தன்னிச்சையான, நீடித்திருக்கின்ற மகிழ்ச்சியைக் கற்பனையால் உருவகிக்க முடியாது. ஒன்று அது இருக்கும். அல்லது இருக்காது. புறக் காரணிகள் தேவையில்லாத அமைதியையும், அன்பையும், ஆனந்தத்தையும் அனுபவப்பட ஆரம்பித்துவிட்டாயானால் உன் எல்லாச் சந்தேகங்களும் கரைந்துவிடும். நான் உனக்குச் சொன்னதைப் பற்றிக் கொண்டு அதன்படி வாழ்.

**கே:** என்னை ஞாபகத்தால் வாழச் சொல்கிறீர்களா?

**ம:** எப்படி ஆனாலும் நீ ஞாபகத்தால் வாழ்கிறாய். வெறுமனே உன்னை நான் சொன்னவற்றின் ஞாபகத்தால் பழைய ஞாபகங்களை மாற்ற மட்டுமே சொல்கிறேன். உன் பழைய ஞாபகங்களின்படி செயல்படுவதைப் போல புதியவற்றால் செயல்படச் சொல்கிறேன். பயப்படாதே. சில காலத்திற்குப் பழையதற்கும், புதியதற்கும் இடையே முரண்பாடு இருக்கத்தான் செய்யும். ஆனால் விடாப்பிடியாக உன்னைப் புதியதன் பக்கம் வைத்திருந்தாயானால் போராட்டம் விரைவாக ஒரு முடிவிற்கு வரும். அப்போது நீ மாயக் கருத்துக்களினால் பிறக்கும் ஆசைகள் மற்றும் அச்சங்களால் பிணைக்கப்படாத, பிரயத்தனமற்ற இருத்தல் நிலையையும் தெளிவாக அறிவாய்.

**கே:** பல குருமார்கள் தங்கள் தலையைச் சுற்றி இருக்கும் துணி அல்லது தங்களின் தடி அல்லது பிச்சைப் பாத்திரம் அல்லது உடுத்தியிருக்கும் துணிபோன்ற ஏதோ ஒன்றைத் தங்களின் அருளின் வெளிப்பாடாகக் கொடுக்கும் வழக்கத்தைக் கொண்டுள்ளார்கள். அதன்படி தங்களின் சீடர்களுக்கு சுயம் அறிதலைக் கடத்தவோ அல்லது உறுதிப்படுத்தவோ செய்கிறார்கள். அம்மாதிரியான பழக்கங்களில் நான் எந்த மதிப்பையும் காண்பதில்லை. சுயம் அறிதல் கடத்தப்படுவதில்லை. சுய முக்கியத்துவம்தான் கடத்தப்படுகிறது. உண்மையில்லாத ஆனால் வெறும் புகழ்ச்சியாகச் சொல்லப்படுபவைகளால் என்ன பயன்? ஒரு பக்கம் நீங்கள் சுய வடிவமைத்துக் கொள்ளும் பல குருமார் களைப் பற்றி எச்சரிக்கிறீர்கள். அதே சமயம் உங்களை நம்பச் சொல்கிறீர்கள். உங்களை விதிவிலக்கான வித்தியாசமானவர் என்று எப்படிச் சொல்கிறீர்கள்?

**ம:** நான் உன்னை என்னை நம்பச் சொல்லவில்லை. என் வார்த்தைகளை நம்பி, அவற்றை ஞாபகம் வைத்திரு. நான் உன் சந்தோஷத்தைத்தான் வேண்டுகிறேன். என்னுடையதை அல்ல. உனக்கும், உன் மெய்யான இருத்தலுக்கும் ஒரு இடைவெளி ஏற்படுத்தி, தங்களை நடுவில் செயல்படுபவராகச் செய்பவர்களை நம்பாதே. நான் அம்மாதிரியான எதையும் செய்வதில்லை. நான் எந்த உத்தரவாதத்தையும் கொடுப்பதில்லை. நான் வெறுமனே சொல்வதெல்லாம்: நீ என் வார்த்தைகளை நம்பி, அவற்றைப்

பரிசோதித்தால் அவை எவ்வளவு தீர்க்கமான உண்மை என்று நீயே காண்பாய். நீ செயலில் இறங்குவதற்கு முன்னால் ஒரு அத்தாட்சியைக் கேட்டாயானால், 'நான்தான் அத்தாட்சி' என்று மட்டுமே நான் சொல்லமுடியும். நான் என் குருவின் வார்த்தைகளை நம்பி, அவற்றை என் மனதில் வைத்திருந்து, நான் அனைத்தையும் அணைக்கின்ற, அனைத்தையும் கடந்து உள்ள, முடிவற்ற மெய்மையாக இருந்தேன், இருப்பேன், இருக்கப் போகிறேன் என்று அவர் கூறியது சரி என்று அறிந்தேன்.

நீ கூறியதைப் போல, நீண்ட பயிற்சிக்கான நேரமோ, சக்தியோ உனக்கு இல்லை. நான் உனக்கு ஒரு மாற்று வழியைச் சொல்கிறேன். என் வார்த்தைகளை நம்பி ஏற்றுக் கொண்டு, புதிதாக வாழ். அல்லது பழையபடியே வாழ்ந்து துக்கத்தில் மடி.

**கே:** இது மிகவும் நல்லதாகத் தெரிகிறது. ஆனால் அவ்வளவு உண்மையானதாகத் தெரியவில்லை.

**ம:** அறிவுரையின் எளிமையினால் தவறாகப் புரிந்து கொள்ளாதே. உபதேசத்தின் எளிமையால் வழிதவறிப் போகாதே. சுலபமானதையும், எளிமையானதையும், அசாத்தியமானதையும் நம்புவதற்கு மிகச் சிலரிடம் மட்டுமே தைரியம் உள்ளது. நீ உன் மனதின் கைதி என்றும், உன் சொந்த உருவாக்கமாகிய கற்பனை உலகத்தில் வாழ்கிறாய் என்றும் அறிவதே ஞானத்தின் உதயம். அதிலிருந்து எதுவும் தேவைப்படாமல், அதை முழுவதுமாகக் கைவிடத் தயாராக இருப்பதுதான் மனமார்ந்த ஈடுபாடு. உன்னை, உண்மையான ஏமாற்றத்தினால் பிறக்கும் அம்மாதிரியான மனமார்ந்த ஈடுபாடுதான் என்னை நம்ப வைக்கும்.

**கே:** நான் போதுமான அளவு துக்கப் படவில்லையா?

**ம:** துக்கம் உன்னை அதன் அதிகப்படியான கொடூரத்தின் அளவைப் பார்க்க முடியாமல் சோர்வடைய வைத்துவிட்டது. உன் முதல் வேலை உனக்குள்ளும், உன்னைச் சுற்றியும் இருக்கும் துக்கத்தைப் பார்ப்பதாகும். அடுத்தது விடுதலைக்காகத் தீவிரமாக ஏங்குவதாகும். ஏக்கத்தின் தீவிரமே உன்னை வழிநடத்தும். உனக்கு அதற்கு மேலாக வேறு வழிகாட்டி தேவையில்லை.

**கே:** துக்கம் என்னைச் சோர்வடைய வைத்து, அதைப் பற்றி உதாசீனமாக இருக்கச் செய்கிறது.

**ம:** துக்கம் அல்ல. சுகம்தான் உன்னைச் சோர்வடைய வைத்திருக்கலாம். ஆராய்ந்து பார்.

**கே:** காரணம் எதுவாக இருந்தாலும், நான் சோர்வாக இருக்கிறேன். எனக்கு மனோ திடமும், சக்தியும் கிடையாது.

**ம:** இல்லை, இல்லை. முதல் அடி எடுத்து வைக்க உன்னிடம் போதுமான அளவு சக்தி இருக்கிறது. ஒவ்வொரு அடியும் அடுத்த அடியை எடுத்து வைக்கத் தேவையான சக்தியை உருவாக்கும். சக்தி விசுவாசத்தால் வரும். விசுவாசம் அனுபவத்தால் வரும்.

**கே:** குருக்களை மாற்றுவது சரியா?

**ம:** ஏன் மாற்றக் கூடாது? குருக்கள் மைல் கற்களைப் போன்றவர்கள். ஒருவரிடமிருந்து மற்றொருவரிடம் செல்வது இயற்கையானது. ஒவ்வொருவரும் செல்ல வேண்டிய திசையையும், தூரத்தையும் சொல்வார்கள். ஆனால் சாசுவதமான குருவாகிய சத்குருவோ நீ செல்லும் பாதையேதான். ஒருமுறை நீ, பாதைதான் உன் குறிக்கோள் என்றும், நீ எப்போதும் பாதையின் மேல், ஒரு குறிக்கோளை அடைவதற்காக அல்லாமல் அதன் அழகையும், அறிவையும் அனுபவித்து மகிழ்வதற்காக இருக்கிறாய் என்றும் அறிந்தால் வாழ்க்கை ஒரு வேலையாக இல்லாமல்போய் இயற்கையானதாகவும், எளிமையானதாகவும், அதுவே ஒரு பரமானந்தமாகவும் ஆகிவிடும்.

**கே:** அப்படியானால் துதிக்கவோ, வழிபடவோ, யோகாவைப் பயிற்சி செய்யவோ தேவையில்லையா?

**ம:** தினமும் சிறிதளவு துடைப்பது, கழுவுவது, குளிப்பது கெடுதல் ஒன்றும் செய்யாது. சுயப் பிரக்ஞை ஒவ்வொரு அடியிலும் அடுத்து என்ன செய்வதென்று சொல்லும். எல்லாமும் செய்து முடித்த பிறகு மனம் அமைதியுறும்.

நீ இப்போது விழித்தநிலையில் பெயரும், உருவமும், சுக துக்கங்களும் கொண்ட ஒரு நபராக உள்ளாய். நீ பிறப்பதற்கு

முன்னால் அந்த நபர் இருக்கவில்லை; நீ இறந்தபிறகு இருக்கப் போவதும் இல்லை. ஆதாரத்திலேயே இல்லாத நபரை உருவாக்க அதனோடு சண்டை போடாமல் விழித்த நிலைக்கு அப்பால் சென்று தனிப்பட்ட வாழ்க்கையை ஏன் முற்றிலும் விட்டு விடக் கூடாது? அதற்கு நபரை இல்லாமல் செய்வது என்று அர்த்தம் அல்ல; சரியான கோணத்தில் பார்ப்பது என்று அர்த்தம்.

**கே:** மேலும் ஒரு கேள்வி. நான் பிறப்பதற்கு முன்னால் மெய்மையின் சுத்த ஸ்வரூபத்துடன் ஒன்றாக இருந்தேன் என்று நீங்கள் சொன்னீர்கள். அப்படியானால் நான் பிறக்கவேண்டும் என்று யார் முடிவு செய்தது?

**ம:** மெய்யாக நீ எப்போதும் பிறக்கவில்லை. ஒருபோதும் இறக்கப் போவதில்லை. ஆனால் இப்போது நீ இருப்பதாகவும், ஒரு உடலைக் கொண்டிருப்பதாகவும் கற்பனை செய்துகொண்டு, எது இந்த நிலைக்குக் கொண்டுவந்தது என்று கேட்கிறாய். ப்ரம்மையின் எல்லைக்குள் இதற்கான பதில்: ஞாபகத்தினால் பிறந்த ஆசை ஒரு உடலுக்குள் உன்னை ஈர்த்து, அதனோடு ஒன்றாக இருப்பதாக உன்னை நினைக்க வைக்கிறது. ஆனால் இது ஒன்றோடு ஒன்றை ஒப்பிட்டுப் பார்க்கும் கோணத்தில் சரி. உண்மையில் உடல் என்று ஒன்றோ, அதைக் கொண்டுள்ள ஒரு உலகமோ இல்லை. ஒரு கனவு போன்ற, அதன் மெய்த்தன்மையைக் கேள்விகேட்பதனால் எளிதில் இல்லாமல் போகும் ஒரு மனோ நிலை மட்டுமே உள்ளது.

**கே:** நீங்கள் இறந்த பிறகு மறுபடியும் வருவீர்களா? நான் நீண்ட காலம் வாழ்ந்தால் உங்களை மறுபடியும் சந்திப்பேனா?

**ம:** உனக்கு உடல் மெய்யானது. எனக்கு எதுவுமே மெய்யான தில்லை. நான், நீ பார்ப்பதன்படி, உன் கற்பனையில்தான் இருக்கிறேன். உனக்கு நான் தேவைப் படும்போது கண்டிப்பாக நீ என்னை மறுபடியும் பார்ப்பாய். எப்படி சூரியன் அது உதிப்பதாலும், மறைவதாலும் பாதிக்கப் படுவதில்லையோ அப்படி அது என்னைப் பாதிக்காது. அது பாதிக்கப்படாததால் தேவைப் படும் போது கண்டிப்பாக என்னைக் காண்பது அங்கு இருக்கும்.

உனக்கு ஞானம் அடைவதற்கான ஆசை உள்ளது. எனக்கு இப்போது இல்லை. அறிந்துகொள்ள உன்னைப் பேராசை கொள்ளச் செய்யும் பாதுகாப்பற்ற தன்மை எனக்கு இல்லை. நான் குழந்தை எப்படி ஆர்வத்துடன் இருக்குமோ அப்படி ஆர்வத்துடன் இருக்கிறேன். ஆனால் அறிந்துகொள்வதில் அடைக்கலம் புகச் செய்யும் பதட்டம் எனக்கு இல்லை. எனவே நான் மறுபடியும் பிறப்பேனா அல்லது உலகம் எவ்வளவு காலம் நீடிக்கும் என்பதைப் பற்றி எனக்கு அக்கறை இல்லை. இம்மாதிரியான கேள்விகள் அச்சத்தினால் பிறப்பவை.



# 84. உன் குறிக்கோள்தான் உன் குரு

**கேட்பவர்:** சுய வடிவமைத்துக் கொள்ளும் குருமார்கள் பலர் உள்ளனர் என்றும், ஒரு மெய்யான குரு மிகவும் அறிதானவர் என்றும் நீங்கள் எங்களிடம் சொல்கிறீர்கள். தங்களை மெய்யறிந்ததாகக் கற்பனை செய்து கொள்ளும் பல ஞானிகள் உள்ளனர். ஆனால் அவர்களிடம் இருப்பதெல்லாம் புத்தக அறிவும், தங்களைப் பற்றிய ஒரு உயர்வான கருத்து மட்டுமே. சில சமயம் அவர்கள் தாக்கத்தை ஏற்படுத்தவும், கவரவும்கூடச் செய்கிறார்கள். சீடர்களைக் கவர்ந்து, பயனற்ற பயிற்சிகளில் அவர்களுடைய நேரத்தை வீணடிக்கிறார்கள். சில வருடங்களுக்குப் பிறகு, சீடர் தன் நிலையைப் பார்க்கும்போது எந்த மாற்றத்தையும் காண்பதில்லை. தன் குருவிடம் புகார் சொன்னால், அவர் போதுமான அளவு முயற்சிக்கவில்லை என்னும் வழக்கமான பதிலைப் பெறுகிறார். சீடரின் இதயத்தில் நம்பிக்கையின்மையும், அன்பும் இல்லை என்று பழி விழுகிறது. உண்மையில் பழி குரு மீதுதான். அவருக்குச் சீடர்களை ஏற்றுக் கொண்டு, அவர்களின் நம்பிக்கையை வளர்க்க எந்தவிதமான தகுதியும் இல்லை. அம்மாதிரியான குருக்களிடமிருந்து எப்படி ஒருவர் தன்னைப் பாதுகாத்துக் கொள்வது?

**மஹராஜ்:** மற்றவர்களைப் பற்றி ஏன் அவ்வளவு அக்கறை கொள்கிறாய்? குரு யாராக இருந்தாலும் இதயத்தில் தூய்மை உடையவராயும், நல்லெண்ணத்துடன் செயல்படுபவராகவும் இருந்தால் அவருடைய சீடர்களுக்கு எந்தத் தீமையையும் செய்ய மாட்டார். முன்னேற்றம் இல்லையென்றால் சோம்பேறித்தனமுள்ள, சுயக் கட்டுப்பாடு இல்லாத சீடர்களிடம்தான் குறை இருக்கும். அதே சமயம், சீடர் மெய்யார்வத்துடன் இருந்து, தன் சாதனாவில் புத்திசாலித்தனத்துடனும், உற்சாகத்துடனும் தன்னை ஈடுபடுத்திக்கொண்டால் மேற்கொண்டு தன்னை நடத்திச் செல்லும்

அதிகத் தகுதியுடைய ஒரு ஆசிரியரை அவர் கண்டிப்பாகச் சந்திப்பார். உன் கேள்வி மூன்று தவறான அனுமானங்களை அடிப்படையாகக் கொண்டுள்ளது: முதலாவது- ஒருவருக்கு மற்றவர்களோடு அக்கறை இருக்கவேண்டும்; இரண்டாவது - ஒருவர் மற்றவரை மதிப்பிட முடியும்; மூன்றாவது- சீடரின் முன்னேற்றம் அவருடைய குருவின் வேலையும், பொறுப்பும் ஆகும் என்பவை. உண்மையில் குருவின் வேலை உபதேசம் கொடுப்பதும், ஊக்குவிப்பதும் ஆகும். சீடர்தான் முற்றிலும் தனக்குப் பொறுப்பானவர்.

**கே:** குருவிடம் முற்றிலுமாகச் சரணடைவது போதும் என்றும், மீதியை குரு பார்த்துக் கொள்வார் என்றும் எங்களுக்குச் சொல்லப் பட்டிருக்கிறது.

**ம:** கண்டிப்பாக சம்பூர்ண சரணாகதி இருந்தால் அவ்வாறு நடக்கும். சம்பூர்ண சரணாகதி என்பது ஒருவருடைய கடந்த காலம், நிகழ் காலம், எதிர்காலம் பற்றிய அக்கறையையும், ஒருவருடைய உடல் மற்றும் ஆன்மீகப் பாதுகாப்பையும், நிலைப்பாட்டையும் முற்றிலும் கைவிடுவது. அப்படியானால் அன்பும், அமைதியும் நிறைந்த ஒரு புது வாழ்க்கை உதயமாகும். பிறகு குரு முக்கியமல்ல. ஏனெனில், அப்போது சீடர் சுயப் பாதுகாப்பாகிய கூட்டை உடைத்திருப்பார். சம்பூர்ண சரணாகதியே விடுதலை.

**கே:** குருவும், அவருடைய சீடரும் போதுமான அளவு திறம்பட இல்லையென்றால் என்னவாகும்?

**ம:** காலப்போக்கில் எல்லாமும் சரியாகும். அவர்கள் விளையாடும் சிறு கால அளவிலான கோமாளித்தனத்தால் அவர்கள் இருவருடைய மெய்யான சுயம் பாதிக்கப்படாது. அவர்கள் தூய்மையடைந்து, முதிர்ந்து ஒரு பரி பக்குவமான உயர் நிலையிலான உறவிற்கு மாறுவார்கள்.

**கே:** அல்லது அவர்கள் பிரிவார்கள்.

**ம:** ஆமாம். அவர்கள் பிரியலாம். எந்தத் தொடர்புமே நிலையான தல்ல. இருமைத்தன்மை ஒரு தற்காலிகமான நிலை.

**கே:** *நான் உங்களைச் சந்தித்தது தற்செயலானதா? மற்றுமொரு எதிர்பாராத விதமாக மறுபடியும் சந்திக்காதவாறு நாம் பிரிந்து விடுவோமா? அல்லது நான் உங்களைச் சந்தித்தது பிரபஞ்ச வடிவமைப்பின், நம் வாழ்க்கை என்னும் மாபெரும் நாடகத்தின் ஒரு சிறு பகுதியா?*

**ம:** மெய் அர்த்தமுள்ளது. அர்த்தமுள்ளது மெய்மையோடு தொடர்புடையது. நமக்குள் இருக்கும் தொடர்பு உனக்கும் எனக்கும் அர்த்தமுள்ளதாக இருந்தால் அது எதிர்பாராத விதமான தல்ல. கடந்த காலத்தைப் போல எதிர்காலமும் நிகழ்காலத்தைப் பாதிக்கிறது.

**கே:** *நான் எப்படி யார் உண்மையான ஞானி என்றும், யார் அல்ல என்றும் அறிவது?*

**ம:** மனிதனின் இதயத்திற்குள்ளேயான ஒரு தெளிவான பார்வை இருந்தால் ஒழிய உன்னால் முடியாது. தோற்றங்கள் ஏமாற்றுபவை. தெளிவாகப் பார்க்க உன் மனம் தூய்மையாகவும், பந்தமற்றும் இருக்க வேண்டும். உன்னைப் பற்றி நீ நன்கு அறியாமல் மற்றவரை நீ எப்படி அறிவாய்? உன்னை நீ அறிந்தால் - நீதான் மற்றவர்.

மற்றவர்களைச் சிறிதுகாலத்திற்கு விட்டுவிட்டு, உன்னை ஆராய். நீ என்ன? நீ யார்? நீ எப்படிப் பிறப்பெடுத்தாய்? இப்போது என்ன, எதற்காகச் செய்து கொண்டிருக்கிறாய்? எங்கு செல்கிறாய்? உன் வாழ்க்கை, உன் இறப்பு, உன் எதிர்காலத்திற்கு என்ன அர்த்தம் மற்றும் நோக்கம்? உனக்கு ஒரு கடந்த காலமும், எதிர்காலமும் உள்ளதா? உன் முழு இருத்தலும் மகிழ்ச்சிக்காகவும், அமைதிக் காகவும் கடும் முயற்சி செய்யும்போது, நீ எப்படிக் கொந்தளிப் பிலும், துக்கத்திலும் வாழ்கிறாய்? - உன்னைப் பற்றி இது போன்ற பலவற்றை நீ அறியமாட்டாய். இவையெல்லாம் முக்கியமான சமாச்சாரங்கள். இவற்றை முதலில் கவனிக்க வேண்டும். யார் ஞானி, யார் ஞானி அல்ல என்று கண்டுபிடிக்க உனக்குத் தேவையும் இல்லை; நேரமும் இல்லை.

**கே:** *நான் என் குருவைச் சரியாகத் தேர்ந்தெடுக்க வேண்டும்.*

**ம:** சரியான மனிதனாக இரு. சரியான குரு உன்னைக் கண்டுபிடிப்பார்.

**கே:** நீங்கள் என் கேள்விக்குப் பதிலளிக்கவில்லை: எப்படிச் சரியான குருவைக் கண்டுபிடிப்பது?

**ம:** ஆனால் நான் உன் கேள்விக்குப் பதிலளித்துவிட்டேன். ஒரு குருவைத் தேடாதே. அவரைப் பற்றி நினைக்கக்கூட செய்யாதே. உன் குறிக்கோளை உன் குருவாக ஆக்கு. குரு முடிவிற்கான ஒரு வழியே தவிர அவரே முடிவல்ல. அவர் முக்கியமல்ல. அவரிடமிருந்து என்ன எதிர்பார்க்கிறாயோ அதுதான் முக்கியம். இப்போது சொல் - என்ன எதிர்பார்க்கிறாய்?

**கே:** அவருடைய அருளால் நான் ஆனந்தம் உடையவனாகவும், வலிமையானவனாகவும், அமைதியானவனாகவும் ஆக வேண்டும்.

**ம:** என்ன ஒரு பேராசை! காலத்தாலும், இடத்தாலும் அடக்கப் பட்டுள்ள உடல் - மனம், பிறப்பிற்கும், இறப்பிற்கும் இடையில் துக்கத்தினால் மூச்சுத் திணருகின்ற ஒரு நபர் எப்படி ஆனந்தமாக இருக்க முடியும்? நபர்த்தன்மையை உருவாக்கும் சூழ்நிலைகளே ஆனந்தத்தைச் சாத்தியமில்லாமல் செய்துவிடுகிறன. அமைதி, ஆற்றல், ஆனந்தம் - இவையெல்லாம் ஒருபோதும் தனி நபர்த்தன்மையான நிலைகள் அல்ல. யாருமே 'என்னுடைய அமைதி', 'என்னுடைய ஆற்றல்' என்று சொல்ல முடியாது. ஏனெனில் 'என்னுடையது' என்பது வலுவற்ற மற்றும் பாதுகாப்பற்ற பிரத்யேகத் தன்மையைத் தேர்ந்தெடுப்பதைக் குறிக்கிறது. அமைதி, ஆற்றல், ஆனந்தம் ஆகியவை நிரந்தரமாக இருக்க ஒருவர் பகிர்தலுடன் இருக்க வேண்டும்.

**கே:** எனக்கு என்னுடைய கட்டுப்படுத்தப்பட்டுள்ள இருத்தல் மட்டுமே தெரியும்; வேறொன்றும் இல்லை.

**ம:** கண்டிப்பாக நீ அவ்வாறு சொல்லமுடியாது. ஆழ்ந்த தூக்கத்தில் நீ கட்டுப்படுத்தப்பட்டவன் அல்ல. நீ தூங்கப் போவதற்கு எவ்வளவு தயாராகவும், உற்சாகத்துடனும், தூங்கும் போது நீ எவ்வளவு அமைதியாகவும், சுதந்திரமாகவும், ஆனந்த மாகவும் இருக்கிறாய் என்று பார்!

**கே:** எனக்கு அதைப் பற்றி எதுவும் தெரியாது.

**ம:** எதிர்மறையாக அதைச் சொல். தூங்கும்போது நீ துக்கத்துடனோ, கட்டுப்பட்டோ, அமைதியற்றோ இல்லை.

**கே:** உங்களுடைய கருத்து புரிகிறது. விழித்திருக்கும்போது நான் இருப்பதையும், ஆனால் மகிழ்ச்சியாக இல்லை என்பதையும் அறிவேன்; தூக்கத்தில் நான் இருக்கிறேன், மகிழ்ச்சியாக இருக்கிறேன். ஆனால் அதை நான் அறியமாட்டேன். எனக்குத் தெரியவேண்டியதெல்லாம் நான் சுதந்திரமானவன் மற்றும் ஆனந்தமானவன் என்பதுதான்.

**ம:** ஆமாம். அப்படித்தான். இப்போது உனக்குள், ஒரு விழிப்போடுள்ள, தூக்க நிலையோடு ஒப்பிட்டுப் பார்க்கக்கூடிய ஒரு நிலைக்குள் செல். அப்போது நீ உன்னைப் பற்றிய, ஆனால் உலகத்தைப் பற்றி அல்லாத பிரக்ஞையைக் கொண்டிருக்கும் ஒரு நிலைக்குள் செல்வாய். அந்த நிலையில், சிறிதளவுகூட சந்தேகமில்லாமல், உன் இருத்தலின் மூலத்தில் நீ சுதந்திரமாகவும், ஆனந்தமாகவும் இருக்கிறாய் என்று அறிவாய். ஒரே பிரச்சனை என்னவென்றால் நீ அனுபவங்களுக்குப் பழக்க அடிமை. மற்றும் நீ உன் ஞாபகங்களைப் போற்றிப் பேணுகின்றாய். உண்மையில் அது முற்றிலும் வேறு மாதிரியானது. எது ஞாபகம் வைத்துக் கொள்ளப் பட்டிருக்கிறதோ அது ஒருபோதும் மெய்யானதல்ல; எது மெய்யானதோ அது தற்போதுதான் உள்ளது.

**கே:** இவையெல்லாவற்றையும் நான் வார்த்தை வடிவத்தில் புரிந்து கொள்கிறேன். ஆனால் இது என்னில் ஒரு பகுதியாக ஆவதில்லை. இது என் மனதில் பார்க்கக் கூடிய ஒரு படமாக இருக்கிறது. படத்திற்கு உயிர் கொடுப்பது குருவின் வேலை அல்லவா?

**ம:** மறுபடியும், இது முற்றிலும் வேறு மாதிரியானது. படம் உயிருடன் உள்ளது. மனம்தான் இறந்துபோனது. எப்படி மனம் வார்த்தைகளாலும், படங்களாலும் உருவாக்கப்பட்டுள்ளதோ அப்படியேதான் மனதில் உள்ள ஒவ்வொரு பிரதிபலிப்பும். அது மெய்மையை வார்த்தை வடிவத்தில் மூடிக்கொண்டு, பிறகு குறை சொல்கிறது. உனக்கு அதிசயங்களை நிகழ்த்த ஒரு குரு தேவை என்று

நீ சொல்கிறாய். நீ வார்த்தைகளோடுதான் விளையாடுகிறாய். விளக்கும் அதன் தீபமும் போல, குருவும் சீடரும் ஏக ரூபம்தான். சீடர் மனமார்ந்த முயற்சி கொண்டிருந்தால் ஒழிய அவரை ஒரு சீடர் என்று அழைக்க முடியாது. ஒரு குரு முற்றிலும் அன்பானவராகவும், தன்னைக் கொடுப்பவராகவும் இல்லாதிருந்தால் அவரை ஒரு குரு என்று அழைக்கமுடியாது. மெய்மைதான் மெய்மையைத் தோற்றுவிக்கும்; மெய்யற்றது அல்ல.

**கே:** *நான் மெய்யானவன் அல்ல என்பது எனக்குப் புரிகிறது. யார் என்னை மெய்யானவனாக்குது?*

**ம:** நீ சொன்ன வார்த்தைகளே அதைச் செய்யும். 'நான் மெய்யானவன் அல்ல என்று எனக்குப் புரிகிறது' என்னும் வாக்கியம் முக்திக்குத் தேவையான எல்லாவற்றையும் கொண்டுள்ளது. அதை நன்கு யோசி. அதற்குள் ஆழமாகச் செல். அதன் மூலத்திற்குச் செல். அப்போது அது செயல் புரியும். சக்தி அந்த வார்த்தைகளின் அர்த்தத்தில் உள்ளது; நபரில் அல்ல.

**கே:** *என்னால் முழுவதுமாகப் புரிந்துகொள்ள முடியவில்லை. ஒருமுறை குரு தேவை என்று சொல்கிறீர்கள். மற்றொருமுறை குரு அறிவுரைதான் கொடுக்க முடியும்; முயற்சி என்னுடையது என்று சொல்கிறீர்கள். தயவு செய்து தெளிவாகச் சொல்லுங்கள் - ஒரு குரு இல்லாமலே ஒருவர் சுயத்தை அறிய முடியுமா? அல்லது குருவைக் கண்டுபிடிப்பது அவசியமா?*

**ம:** அதைவிட அவசியமானது ஒரு உண்மையான சீடரைக் காண்பது. என்னை நம்பு. ஒரு உண்மையான சீடர் மிகவும் அரிதானவர். ஏனெனில் அவர் ஆம், ஆம் என்று சொல்லிக்கொண்டு, தன் சுயத்தைக் கண்டுபிடிப்பதன்மூலம் ஒரு குரு தேவைப் படுவதற்கு அப்பால் உடனே சென்றுவிடுவார். உனக்குக் கிடைக்கும் அறிவுரை அறிவிலிருந்து வருகிறதா அல்லது நேர்மையான அனுபவத்திலிருந்தா என்று கண்டுபிடிப்பதில் நேரத்தைச் செலவிடாதே! வெறுமனே அந்த அறிவுரையை நம்பிக்கையோடு கடைப்பிடி. தேவைப்பட்டால் வாழ்க்கை வேறொரு குருவை உனக்குக் கொண்டுவரும். அல்லது அது வெளிப்புறமான எல்லா வழிகாட்டுதலையும் இல்லாமல்

செய்துவிட்டு உன்னை உன் சுய ஒளிக்குள் விட்டுவிடும். உபதேசம்தான் பொருட்டே ஒழிய, நபரோ அல்லது குருவோ அல்ல என்று புரிந்துகொள்வது மிகவும் முக்கியம். உன்னைச் சிரிக்கவோ அல்லது அழவோ செய்கின்ற ஒரு கடிதம் உனக்கு வந்தால், தபால்காரர் அல்ல அதைச் செய்வது. குரு உன் மெய்யான சுயத்தைப் பற்றிய நல்ல செய்தியை உனக்குச் சொல்லி, அதற்கான வழியைச் சொல்கிறார். ஒருவிதத்தில் குரு அதன் ஒரு தூதுவர். பல தூதுவர்கள் இருப்பார்கள்; ஆனால் செய்தி ஒன்றுதான் - நீ என்னவோ அதுவாக இரு. அல்லது வேறுமாதிரி சொல்லலாம்: நீ உன்னை அறியும்வரை யார் உன் உண்மையான குரு என்று உன்னால் அறிய முடியாது. நீ அறியும்போது எல்லாக் குருக்களும் உன் விழித்தலுக்கு உதவியிருக்கிறார்கள் என்பதைக் காண்பாய். உன் மெய்யறிதல்தான் உன் குரு மெய்யானவர் என்பதற்கு அத்தாட்சி. எனவே அவர் எப்படி உள்ளாரோ அப்படியே அவரை ஏற்றுக்கொள். அவர் சொல்வதை மெய்யார்வத்துடனும், உற்சாகத்துடனும் செய். ஏதாவது தவறாகச் சென்றால் எச்சரிக்க உன் இதயத்தை நம்பு. சந்தேகம் ஏற்பட்டால் அதனோடு முரண்படாதே. சந்தேகமற்றதைப் பிடித்துக் கொள்; சந்தேகமானதை விட்டுவிடு.

**கே:** எனக்கு ஒரு குரு இருக்கின்றார். அவரை நான் மிகவும் நேசிக்கின்றேன். ஆனால் அவர் என் உண்மையான குருவா அல்லவா என்று எனக்குத் தெரியாது.

**ம:** உன்னைக் கவனி. நீ மாறுவதாகவும், வளர்வதாகவும் உணர்ந்தால் சரியான மனிதரைக் கண்டுவிட்டாய் என்று அர்த்தம். அவர் அழகாகவோ அல்லது அவலட்சணமாகவோ இருக்கலாம்; மனதிற்கு உகந்தவாறோ அல்லது உகந்தவாறில்லாமலோ இருக்கலாம்; உன்னைப் பாராட்டலாம் அல்லது திட்டலாம். உள்முக வளர்ச்சி என்னும் ஒரு அவசியமான நிஜத்தைத் தவிர எதுவுமே பொருட்டல்ல. அப்படி உன்னால் உணர முடியா விட்டால் அவர் உன் நண்பனாக இருப்பார். ஆனால் உன் குருவாக அல்ல.

**கே:** நான் படிப்பறிவுள்ள ஒரு ஐரோப்பியரைச் சந்திக்கும்போது ஒரு குருவைப் பற்றியும், அவருடைய போதனைகளைப் பற்றியும்

பேசினால் அவருடைய எதிர்வினை எப்படி இருக்கும் என்றால், 'அந்த மனிதர் இம்மாதிரியான அர்த்தமற்றவைகளைப் போதிக்க பைத்தியக்காரராக இருக்க வேண்டும்' என்பதாகும். அவருக்கு நான் என்ன சொல்வது?

**ம:** அவரை அவருக்குள்ளேயே கொண்டு செல். தன்னைப் பற்றி தனக்கே எவ்வளவு குறைவாகத்தான் தெரியும் என்றும், புனிதமான உண்மைக்குப் பதிலாகத் தன்னைப் பற்றி எவ்வளவு அபத்தமாக எண்ணிக் கொண்டிருக்கிறார் என்றும் காண்பி. உடல்தான் அவர் என்றும், அவர் பிறந்திருப்பதாகவும், இறந்துவிடுவாரென்றும், அவருக்குப் பெற்றோர்களும், கடமைகளும் உள்ளனவென்றும் சொல்லப்பட்டு, மற்றவர்களுக்குப் பிடித்ததை தனக்குப் பிடிக்கவும், மற்றவர்கள் பயப்படுவதற்குத் தானும் பயப்படவும் கற்றுக் கொள்கிறார். முற்றிலுமாகப் பரம்பரை மற்றும் சமுதாயத்தின் ஒரு உருவாக்கமாக அவர் ஞாபகத்தால் வாழ்கிறார்; பழக்க வழக்கத்தால் செயல்படுகிறார். தன்னைப் பற்றியும், தனக்கு எது நல்லதோ அதைப் பற்றியும் அறியாமல் அவர் பொய்யான, தவறான குறிக்கோள்களைப் பின்தொடர்கிறார். எப்போதும் வெறுத்துப் போய் இருக்கிறார். அவருடைய வாழ்வும், இறப்பும் அர்த்தமற்றதாகவும், துக்கமானதாகவும் இருக்கும். அதிலிருந்து வெளியேற வழி எதுவும் அவருக்குத் தெரியவில்லை. பிறகு அவர் சுலபமாக அடையும் விதத்தில் வெளியேறும் வழி ஒன்று உள்ளதென்று சொல். அது மற்றொரு கருத்துக்கு மாறுவதல்ல. ஆனால் அது வாழ்க்கையைப் பற்றிய எல்லாக் கருத்துக்கள் மற்றும் படிவங்களிலிருந்தும் விடுதலை அடைவது. அவரிடம் குருக்களைப் பற்றியும், சீடர்களைப் பற்றியும் சொல்லாதே. அம்மாதிரி சிந்திப்பது அவருக்கானதல்ல. அவருடையது உள்முகப் பாதை. அவர் ஒரு உள்முக உந்துதலினால் நகர்த்தப்பட்டு, ஒரு உள் ஒளியினால் வழி நடத்தப்படுவார். அவரை எதிர்க்கச் சொன்னால் அவர் செய்வார். அவரிடம் இன்னார் ஒரு மெய்யறிந்தவர், அவரைக் குருவாக ஏற்றுக் கொள்ளலாம் என்று சொல்லித் திணிக்காதே. அவர் தன்னை நம்பாத வரை மற்றொருவரை நம்பமுடியாது. நம்பிக்கை அனுபவத்தால் வரும்.

**கே:** எவ்வளவு விநோதம்! என்னால் ஒரு குரு இல்லாத வாழ்க்கையைக் கற்பனை செய்ய முடியாது.

**ம:** அது மனோபாவத்தைப் பொருத்தது. நீ சொல்வதும் சரி. உனக்குக் கடவுளைப் புகழ்ந்து பாடுவது போதுமானது. நீ மெய்யறிதலுக்கு ஆசைப்பட வேண்டியதில்லை; அல்லது ஒரு சாதனாவைச் செய்ய வேண்டியதில்லை. கடவுளின் பெயர்தான் உனக்கு வேண்டிய உணவு. அதில் உயிர் வாழ்.

**கே:** இந்த ஒரு சில வார்த்தைகளைத் திரும்பத் திரும்பச் சொல்வது ஒருமாதிரியான பைத்தியக்காரத்தனமில்லையா?

**ம:** அது பைத்தியக்காரத்தனம்தான். ஆனால் அது வேண்டு மென்றே செய்கின்ற ஒரு பைத்தியக்காரத்தனம். எதைத் திரும்பத் திரும்பச் செய்தாலும் அது தாமச குணம். ஆனால் கடவுளின் பெயரைத் திரும்பத் திரும்பச் சொல்வது அதன் உயரிய நோக்கத்தால் சாத்வீக - தாமச குணம். சாத்வீக குணம் இருப்பதால் தாமச குணம் நைந்து போய், முழுமையான சாந்தம், பற்றற்ற தன்மை, தியாகம், விலகி இருத்தல், நிலையான தன்மை ஆகிய வடிவங்களை எடுக்கும். தாமச குணம் உறுதியான அஸ்திவாரமாகி, அதன்மேல் ஒரு ஒருங்கிணைக்கப்பட்ட வாழ்க்கை வாழப் படலாம்.

**கே:** மாற்றமில்லாதது இறக்குமா?

**ம:** மாறக்கூடியதுதான் இறக்கும். மாற்றமில்லாதது வாழ்வதும் இல்லை; இறப்பதும் இல்லை. அது வாழ்க்கைக்கும், இறத்தலுக்கும் கால அளவற்ற சாட்சி. அதை நீ உயிரற்றது என்று சொல்ல முடியாது. ஏனெனில் அது தூய விழிப்புணர்வாக இருக்கிறது. அதை நீ உயிருள்ளது என்றும் சொல்லமுடியாது. ஏனெனில் அது மாறுவதில்லை. அது உன்னுடைய ஒலிப்பதிவுக் கருவியைப் போன்றது. அதாகவே ஒலியைப் பதிவுசெய்கிறது. திரும்ப வெளியிடுகிறது. நீ கேட்கமட்டும் செய்கிறாய். அதே போல உன்னிடம் பேசுவது உட்பட, நடக்கும் எல்லாவற்றையும் விழிப்போடு கவனிக்கின்றேன். பேசுவது நான் அல்ல. வார்த்தைகள் என் மனதில் தோன்றுகின்றன. பிறகு அவை பேசப்படுவதைக் கேட்கிறேன்.

**கே:** ஒவ்வொருவரும் அதுபோல்தானே செய்கிறார்கள்?

**ம:** யார் இல்லை என்று சொன்னது? ஆனால் உன்னைப் பொருத்தவரை நீயே சிந்திப்பதாகவும், நீயே பேசுவதாகவும் வலியுறுத்துகிறாய். எனக்கோ சிந்திப்பது என்பது இருக்கிறது. பேசுவது என்பது இருக்கிறது.

**கே:** இரண்டு நிலைமைகளைக் கருத வேண்டும். ஒன்று - நான் ஒரு குருவைக் கண்டுபிடித்துவிட்டேன். அல்லது காணவில்லை. இரண்டு நிலையிலும் நான் செய்யவேண்டிய சரியான காரியம் என்ன?

**ம:** நீ ஒருபோதும் ஒரு குருவில்லாமல் இருக்கவில்லை. ஏனெனில் அவர் காலமற்று உன் இதயத்தில் இருக்கிறார். சில சமயம் அவர் தன்னை வெளிப்படுத்தி, உன் வாழ்க்கையை மேம்படுத்தி, சீரமைக்கும் காரணியாக ஒரு தாயாகவோ, ஒரு மனைவியாகவோ, ஒரு ஆசிரியராகவோ உன்னிடம் வருவார். அல்லது அவர் சரியான தன்மையையும், பூரணத்துவத்தையும் நோக்கிய ஒரு உட்புற உந்துதலாக இருப்பார். நீ செய்ய வேண்டியதெல்லாம் அவருக்குக் கீழ்ப்படிந்து, அவர் சொல்வதைச் செய்வதுதான். அவர் உன்னைச் செய்யச் சொல்வதெல்லாம் சுய பிரக்ஞையை, சுயக் கட்டுப் பாட்டை, சுய சரணாகதியைக் கற்றுக்கொள் என்னும் எளிமையான செயல்பாடுகள். அது மிகவும் கடினமானதாகத் தோன்றலாம். ஆனால் நீ மனமார்ந்த முயற்சியுடன் இருந்தால் அது சுலபம். இல்லையென்றால் சாத்தியமே கிடையாது. மனமார்ந்த முயற்சி மட்டுமே அவசியம் மற்றும் போதுமானது. மனமார்ந்த முயற்சிக்கு ஒவ்வொன்றும் இசைந்து கொடுக்கின்றன.

**கே:** எது ஒருவரை மனமார்ந்த முயற்சி உடையவராக்குகிறது?

**ம:** இரக்கம்தான் மனமார்ந்த முயற்சியின் அடித்தளம். அது உன்னுடைய சொந்தத் துக்கங்கள் மற்றும் பிறருடைய துக்கங்களால் பிறக்கும் உன்மீதும் மற்றவர்கள் மீதும் கொள்ளும் இரக்கம்.

**கே:** மனமார்ந்த முயற்சியுடன் இருக்க நான் துக்கப்பட வேண்டுமா?

**ம:** புத்தர் செய்ததைப் போல மற்றவர்களுடைய துன்பத்திற்கு நீ கூர்ந்த உணர்வுடையவனாகவும், பதில்வினை புரிபவனாகவும் இருந்தால் துக்கப்பட வேண்டியதில்லை. ஆனால் நீ இரக்கமற்றும், அக்கறையற்றும் இருந்தால் உன் சொந்தத் துன்பம் உன்னைத் தவிர்க்க முடியாத கேள்விகளைக் கேட்க வைக்கும்.

**கே:** நான் துக்கப் படுகிறேன். ஆனால் போதுமான அளவு அல்ல. வாழ்க்கை சந்தோஷமற்று, ஆனால் பொறுத்துக் கொள்ளக்கூடிய அளவு இருக்கிறது. என் சிறு சந்தோஷங்கள் என் சிறு துக்கங்களை ஈடு செய்கின்றன. மொத்தத்தில் எனக்குத் தெரிந்தவர்களைவிட நான் சிறப்பாகத்தான் இருக்கிறேன். என் நிலைமை நிலையில்லாத இடர்ப்பாடானது என்றும், ஒரு பேரிடர் எந்தக் கணமும் என்னை ஆட்கொண்டுவிடும் என்றும் எனக்குத் தெரியும். என்னை மெய் அறியும் பாதையில் செலுத்த நான் ஒரு நெருக்கடிக்காகக் காத்திருக்க வேண்டுமா?

**ம:** உன் நிலைமை எவ்வளவு வலுவில்லாதது என்று நீ காணும் கணத்திலேயே நீ உஷாராகிவிடுவாய். இப்போது உன்னை உஷாராக வைத்துக் கொண்டு. கவனத்தைச் செலுத்தி, விசாரித்து, ஆராய்ந்து, உன் மனம் மற்றும் உடலின் தவறுகளைக் கண்டுபிடித்து அவற்றைக் கைவிடு.

**கே:** எங்கிருந்து சக்தி கிடைக்கும்? நான் எரியும் வீட்டில் சிக்கிக் கொண்ட ஒரு முடமான மனிதனைப் போல உள்ளேன்.

**ம:** ஒரு அபாயகரமான கணத்தில், முடமான மனிதர்கள் கூட சில சமயம் கால்களைப் பயன்படுத்துவார்கள்! ஆனால் நீ முடமானவன் அல்ல. அவ்வாறு நீ கற்பனை செய்துகொள்கிறாய். முதல் அடியை எடுத்து வை. அப்போது நீ உன் பாதையில் செல்வாய்.

**கே:** நான் உடல் என்னும் கருத்தை விட்டுவிட முடியாதபடி என் உடலின் மீது நான் கொண்டிருக்கும் பிடிமானம் மிகவும் உறுதியாக உள்ளது. உடல் இருக்கும்வரை அந்தக் கருத்து என்னோடு தொற்றிக் கொண்டிருக்கும். உயிரோடிருக்கும்போது மெய்யறிதல் சாத்திய மில்லை என்று சாதிக்கின்ற சில மக்கள் இருக்கிறார்கள். நானும் அக்கருத்தை ஒத்துக் கொள்வேன் போலத் தெரிகிறது.

**ம:** நீ ஒத்துக் கொள்வதற்கோ அல்லது மறுப்பதற்கோ முன்னால் ஒரு உடல் என்னும் கருத்தை ஏன் ஆராயக் கூடாது? மனம் உடலில் தோன்றுகிறதா அல்லது உடல் மனதில் தோன்றுகிறதா? 'நான் உடல்' என்னும் கருத்தை உருவாக்க கண்டிப்பாக ஒரு மனம் இருக்க வேண்டும். ஒரு மனம் இல்லாத ஒரு உடல் 'என் உடலாக' இருக்க முடியாது. மனதைத் தற்காலிகமாக நிறுத்தி வைத்திருக்கும் போது 'என் உடல்' என்னும் கருத்து கண்டிப்பாக இருக்காது. மனம் எண்ணங்களிலும், உணர்ச்சிகளிலும் ஆழ்ந்திருக்கும் போதும் அது இருக்காது. உடல் மனதைச் சார்ந்திருக்கிறது என்றும், மனம் விழிப்புணர்வையும், விழிப்புணர்வு பிரக்ஞையையும் சார்ந்திருக் கிறது என்றும், எதிர் விதமாக அல்ல என்றும் நீ அறிந்துவிட்டால், நீ இறக்கும் வரை மெய்யறிதலுக்காகக் காத்திருக்க வேண்டுமா? என்னும் உன் கேள்விக்குப் பதில் கிடைத்துவிடும். முதலில் 'நான் உடல்' என்னும் கருத்திலிருந்து நீ விடுபட்டு, பிறகு சுயத்தை அறிய வேண்டும் என்று கிடையாது. கண்டிப்பாக அது எதிர் விதமாக - நீ உண்மையை அறியாததால் பொய்யைப் பிடித்துக் கொண்டிருக் கிறாய். மனமார்ந்த முயற்சிதான் மெய்யறிதலுக்கு ஒரு முன் நிபந்தனை; பூரணத்தன்மை அல்ல. மெய்யறிதலோடு நற்பண்பு களும், வலிமையும் வரும். அதற்கு முன்பு அல்ல.



# 85 'நான்' என்பது எல்லா அனுபவங்களின் அடித்தளம்

**கேட்பவர்:** 'நான் காலமற்றவன், குணங்களுக்கு அப்பாற் பட்டவன், மாறாதவன்' என்பது போன்ற வாக்கியங்களை உங்களைப் பற்றி நீங்கள் சொல்வதைக் கேட்கிறேன். இவற்றை உங்களுக்கு எப்படித் தெரியும்? எது அவற்றைச் சொல்ல வைக்கிறது?

**மஹராஜ்:** 'நான்' என்பது தோன்றுவதற்கு முந்தைய நிலைமையை விளக்கவே முயற்சிக்கிறேன். ஆனால் அந்த நிலை மனதிற்கும், மனதின் மொழிக்கும் அப்பால் இருப்பதால் விவரிக்க முடியாதது.

**கே:** 'நான்' என்பது எல்லா அனுபவங்களின் அடித்தளம். நீங்கள் விளக்க முயற்சிப்பது கூட அளவான மற்றும் தற்காலிகமான ஒரு அனுபவமே. நீங்கள் உங்களை மாறாதவர் என்று சொல்லிக் கொள்கிறீர்கள். நான் அந்த வார்த்தையின் சத்தத்தைக் கேட்கிறேன், அகராதிப்படியான அதன் அர்த்தம் ஞாபகத்தில் இருக்கிறது. ஆனால் மாறாமல் இருப்பதான அனுபவம் எனக்கு இல்லை. நான் எப்படித் தடைகளை உடைத்து, தனிப்பட்டவாறு, நெருக்கமாக, மாறாமல் இருப்பதன் அர்த்தத்தைப் புரிந்து கொள்வது?

**ம:** அந்த வார்த்தையே ஒரு பாலம். அதை ஞாபகம் வைத்திரு, சிந்தி, தோண்டிப் பார், அதைச் சுற்றி வா, எல்லாக் கோணங் களிலிருந்தும் அதைப் பார், மனமார்ந்த விடா முயற்சியோடு அதற்குள் மூழ்கு. மனம் திடீரென்று திரும்பி, அந்த வார்த்தை யிலிருந்து விலகி, அந்த வார்த்தைக்கு அப்பால் உள்ள மெய்மையை நோக்கிச் செல்லும் வரை எல்லாத் தாமதங்களையும், ஏமாற்றங் களையும் பொறுத்துக் கொள். இது, பெயரை மட்டுமே வைத்துக் கொண்டு ஒருவரைத் தேடுவதைப் போன்றது. ஒரு நாள் உன் தேடுதல் உன்னை அவரிடம் கொண்டுபோய்ச் சேர்க்கும்.

அப்போது பெயர் நிஜமாகிவிடும். வார்த்தைகள் மதிப்புமிக்கவை. ஏனெனில் வார்த்தைக்கும், அதன் அர்த்தத்திற்கும் இடையே ஒரு இணைப்பு உள்ளது. ஒருவர் வார்த்தையை ஈடுபாட்டோடு ஆராய்ந்தால் அதன் பொருளைக் கடந்து, அதன் மூலத்தில் உள்ள அனுபவத்திற்குள் செல்வார். உண்மையில், அம்மாதிரியான, வார்த்தைகளுக்கு அப்பால் செல்லச் செய்யப்படும் தொடர்ந்த முயற்சிகள்தான் தியானம் எனப்படுவது. சாதனா என்பது, சொற்கள் சம்பந்தமானவற்றிலிருந்து, சொல்லற்ற நிலைக்குச் செல்லத் தொய்வின்றிச் செய்யப்படும் முயற்சி. திடீரென்று எல்லாமும் தெளிவாகவும், எளிமையாகவும், அற்புதமாகச் சுலபமாகவும் ஆகும்வரை இந்தச் செயல்பாடு சாத்தியமற்றதாகத் தோன்றும். ஆனால் நீ உன் தற்போதைய வாழும் வகையிலேயே ஆர்வத்தோடு இருக்கும்வரை அறியப்படாததற்குள் இறுதியாகக் குதிப்பதைத் தட்டிக் கழித்துவிடுவாய்.

**கே:** அறியப்படாததில் எனக்கு ஏன் ஆர்வம் ஏற்பட வேண்டும்? அறியப்படாததால் எனக்கு என்ன பயன்?

**ம:** எதுவாகிலும் எந்தப் பயனும் இல்லை. ஆனால் உன்னை எது அறியப்பட்டதின் குறுகிய எல்லைகளுக்குள் வைத்திருக்கிறது என்று அறிவது பயனுடையது. அறியப்பட்டதின் முழுமையான மற்றும் சரியான அறிவுதான் உன்னை அறியப்படாததற்குள் எடுத்துச் செல்லும். அதை நீ பயன்கள் மற்றும் சாதகங்கள் என்னும் கண்ணோட்டத்தில் பார்க்கக் கூடாது; பற்றற்று, எல்லாச் சுய அக்கறை மற்றும் எல்லாச் சுய நலமான நோக்கங்களுக்கும் அப்பால் இருப்பது முக்திக்கான ஒரு தவிர்க்க முடியாத நிபந்தனை. அதை நீ இறத்தல் என்று சொல்லலாம்; என்னைப் பொருத்தவரை அது முழு அர்த்தத்துடனும், தீவிரத்துடனும் வாழ்வது. ஏனெனில் நான் வாழ்க்கையோடு அதன் முழுமை மற்றும் நிறைவுடன் தீவிரமாகவும், அர்த்தத்துடனும், ஒத்திசைந்தும் வாழ்கிறேன். மேற்கொண்டு வேறு என்ன வேண்டுமென்கிறாய்?

**கே:** கண்டிப்பாக மேற்கொண்டு வேறு எதுவும் தேவையில்லை. ஆனால் நீங்கள் அறியக் கூடியதைப் பற்றிப் பேசுகிறீர்கள்.

**ம:** அறிய முடியாததைப் பற்றி மௌனம் மட்டுமே பேசும். மனம் அது அறிந்ததைப் பற்றி மட்டுமே பேச முடியும். அறியக் கூடியதைப் பற்றி நீ விடா முயற்சியுடன் ஆராய்ந்தால், அது கரைந்துபோய், அறிய முடியாதது மட்டுமே மிஞ்சும். ஆனால் கற்பனை மற்றும் ஆர்வத்தின் முதல் சிமிட்டலால் அறிய முடியாதது மறைக்கப்பட்டு, அறிந்தது முன்னால் வருகிறது. மாறக்கூடிய அறிந்ததுடன் நீ வாழ்கிறாய். ஆகையால் மாறாததால் உனக்கு எந்தப் பிரயோஜனமும் இல்லை. மாறக்கூடியதால் திருப்தி அடைந்து, மாறாததற்கு ஏங்கினால்மட்டுமே நீ திரும்பி, மனதின் நிலையிலிருந்து பார்க்கும்போது வெறுமை என்றும், இருள் என்றும் விவரிக்கக் கூடியதற்குள் அடியெடுத்து வைப்பாய். ஏனெனில் மனம் அதன் உள்ளடக்கத்திற்கும், பல்வேறு விதங்களுக்கும் மிகு விருப்பம் கொண்டுள்ளது. அதேசமயம், மனதின் பார்வையில் மெய்மை உள்ளடக்கமற்றது மற்றும் விதங்களற்றது.

**கே:** இது இறப்பதைப் போன்று எனக்குத் தோன்றுகிறது.

**ம:** ஆமாம். மெய்மை எல்லாவற்றிலும் ஊடுருவுவதும், எல்லாவற்றையும் வெல்வதும், வார்த்தைகளுக்கு அப்பாற்பட்ட தீவிரத்துடனும் இருப்பது. சாதாரணமான எந்த மூளையும் அதைத் தாங்கிக்கொள்ள முடியாது; ஆகையால்தான் சாதனாவிற்கு அவ்வளவு அவசியம். ஒரு நல்ல புத்திசாலியான ஆன்மீகவாதியாக உயிர்வாழ்வதற்கு உடல் தூய்மை மற்றும் மனத் தெளிவு, அஹிம்சை மற்றும் வாழ்க்கையில் சுயநலமற்று இருப்பது ஆகியவை அவசியமாகத் தேவை.

**கே:** மெய்மையில் நபர்கள் உள்ளனவா?

**ம:** தனித்துவம்தான் மெய்மை. மெய்மைதான் தனித்துவம். மெய்மை வடிவமற்ற திரட்சியும், வார்த்தைகளற்ற குழப்பமும் அல்ல. அது வலிமையானது, பிரக்ஞையுடையது, ஆனந்தமானது. அதனோடு ஒப்பிட்டால் உன் வாழ்க்கை சூரியனுக்கு முன்னால் உள்ள ஒரு விளக்கைப் போல.

**கே:** கடவுள் மற்றும் உங்கள் குருவின் அருளால் நீங்கள் எல்லா ஆசைகளையும், அச்சங்களையும் இழந்து, அசைக்கமுடியாத

*நிலையை அடைந்துவிட்டீர்கள். என்னுடைய கேள்வி எளிதானது - உங்கள் நிலை அசைக்க முடியாதது என்று உங்களுக்கு எப்படித் தெரியும்?*

**ம:** மாறக் கூடியதைப் பற்றி மட்டுமே சிந்திக்கவும், பேசவும் முடியும். சலனமற்றதை மௌனத்தில் மட்டுமே அறிய முடியும். ஒருமுறை அந்த அமிர்த அனுபவத்தை அடைந்துவிட்டால், அது தான் பாதிக்கப்படாமலே மாற்றக் கூடியதை ஆழமாகப் பாதிக்கும்.

**கே:** *நீங்கள் சாட்சி என்று எப்படி உங்களுக்குத் தெரியும்?*

**ம:** எனக்கு 'நான்' என்பதைத் தெரியாது. ஆனாலும் நான் இருக்கிறேன். ஏனெனில் நான் என்பது இருக்க ஒவ்வொன்றும் சாட்சியாகப் பார்க்கப்பட வேண்டும்.

**கே:** *மெய்யிருத்தலை ஒப்புக்கொள்ள அதைப் பற்றிக் கேள்விப்பட்டாலே போதும்.*

**ம:** இருப்பினும், முடிவில் ஒரு எளிமையான சாட்சி உனக்குத் தேவைப் படும். சாட்சிபாவம் தனிப்பட்டதாகவும், நிஜமான தாகவும் இல்லாமல் போனாலும், குறைந்த பட்சம் சாத்தியமான தாகவும், அடையக் கூடியதாகவும் இருக்க வேண்டும். எளிமையான அனுபவம்தான் இறுதியான அத்தாட்சி.

**கே:** *அனுபவம் தவறானதாகவும், தவறாக வழி நடத்துவதாகவும் இருக்கலாம்.*

**ம:** ஆமாம். ஆனால் ஒரு அனுபவத்தைப் பற்றிய நிஜம் அப்படி இருக்காது. அனுபவம் பொய்யானதாகவோ, உண்மையாகவோ இருக்கலாம். ஆனால் ஒரு அனுபவம் ஏற்பட்டது என்னும் நிஜம் மறுக்க முடியாதது. அதுவே அதற்கு அத்தாட்சி. உன்னை நீ உன்னிப்பாகக் கவனித்தால், விழிப்புணர்வின் உள்ளடக்கம் எதுவாக இருந்தாலும் அதைச் சாட்சியாகப் பார்ப்பது உள்ளடக் கத்தைச் சார்ந்திருக்காது என்று காண்பாய். பிரக்ஞை அதுவாகவே இருப்பது. அது நிகழ்வுகளால் மாறாது. நிகழ்வு இனிமை யானதாகவோ, கசப்பானதாகவோ, சாதாரணமானதாகவோ, முக்கியமற்றதாகவோ இருந்தாலும் பிரக்ஞை மாறாமல் இருக்கும். சுய விழிப்புணர்வின் மிகச் சிறு அளவு தாக்கம்கூட இல்லாமல், தூய

பிரக்ஞையின் விசித்திரமான தன்மையையும், அதன் இயற்கையான சுய அடையாளத்தையும் புரிந்துகொண்டு, அதன் மூலத்திற்குச் செல். அப்போது பிரக்ஞைதான் உன் உண்மையான இயல்பு என்றும், அதைப் பற்றிய விழிப்புணர்வு உனக்கு இல்லை என்றும், அதை உன்னுடையது என்று சொல்லமுடியாது என்றும் நீ விரைவாக அறிவாய்.

**கே:** விழிப்புணர்வும், அதன் உள்ளடக்கமும் ஒன்றே அல்லவா?

**ம:** விழிப்புணர்வு வானத்தில் உள்ள மேகத்தைப் போன்றது. அதன் உள்ளடக்கம் மேகத்தில் உள்ள நீர்த்துளிகள் போன்றது. கண்ணிற்குத் தெரிய மேகத்திற்குச் சூரியன் தேவை. அதேபோல பிரக்ஞையில் விழிப்புணர்வு ஒருமுகப் படுத்தப்படவேண்டும்.

**கே:** பிரக்ஞை விழிப்புணர்வின் ஒரு வடிவம் அல்லவா?

**ம:** விருப்பும், வெறுப்பும் இன்றி உள்ளடக்கம் பார்க்கப் படும்போது அதைப் பற்றிய விழிப்புணர்வுதான் பிரக்ஞை. ஆனால் விழிப்புணர்வில் பிரதிபலிக்கப்படும் பிரக்ஞைக்கும், விழிப்புணர் விற்கு அப்பால் உள்ள தூய பிரக்ஞைக்கும் ஒரு வித்தியாசம் இருக்கிறது. பிரதிபலிக்கப்படும் பிரக்ஞை என்பது 'நான் விழிப்புணர்வுடன் இருக்கிறேன்' என்பது. அந்த உணர்வுதான் சாட்சி. ஆனால் தூய பிரக்ஞையோ மெய்மையின் சாரம். ஒரு தண்ணீர்த்துளியில் தெரியும் சூரியனின் பிரதிபலிப்பு சந்தேக மில்லாமல் சூரியனுடையதுதான். ஆனால் அதுவே சூரியன் அல்ல. சாட்சியாக விழிப்புணர்வில் பிரதிபலிக்கப்படும் பிரக்ஞைக்கும், தூய பிரக்ஞைக்கும் ஒரு இடைவெளி உள்ளது. அதை மனதால் கடக்க முடியாது.

**கே:** அது நாம் பார்க்கும் விதத்தைப் பொருத்து இல்லையா? மனம் ஒரு வித்தியாசம் இருப்பதாகச் சொல்கிறது. இதயம் வித்தியாசம் இல்லை என்கிறது.

**ம:** கண்டிப்பாக மூலத்தில் வித்தியாசம் இல்லை. மெய் மெய்யற்றதில் மெய்யைக் காண்கிறது. மனம்தான் மெய்யற்றதை உருவாக்குகிறது. மனமேதான் பொய்யைப் பொய்யாகப் பார்க்கிறது.

**கே:** பொய்யைப் பொய்யாகப் பார்ப்பதைத் தொடர்ந்து மெய்யைப் பற்றிய அனுபவம் வருகிறது என்று நான் புரிந்து கொள்கிறேன்.

**ம:** மெய்யைப் பற்றிய அனுபவம் என்று ஒன்று இல்லை. மெய் அனுபவங்களுக்கு அப்பாற்பட்டது. எல்லா அனுபவங்களும் மனதில் உள்ளவை. நீ மெய்யை மெய்யாக இருப்பதன் மூலம் அறிவாய்.

**கே:** மெய் வார்த்தைகளுக்கும், மனதிற்கும் அப்பாற்பட்டதென்றால், அதைப் பற்றி நாம் ஏன் இவ்வளவு பேச வேண்டும்?

**ம:** அதனால் கிடைக்கும் மகிழ்ச்சிக்காக. மெய் பரமானந்தம். அதைப் பற்றிப் பேசுவதே சந்தோஷமானது.

**கே:** நீங்கள் அசைக்க முடியாததைப் பற்றியும், பரமானந்தமானதைப் பற்றியும் பேசுவதைக் கேட்கிறேன். இந்த வார்த்தைகளைப் பேசும்போது உங்கள் மனதில் என்ன இருக்கும்?

**ம:** என் மனதில் எதுவும் இல்லை. நீ வார்த்தைகளைக் கேட்பதைப் போல நானும் அவற்றைக் கேட்கிறேன். ஒவ்வொன்றையும் நிகழச் செய்கின்ற சக்தி அவற்றையும் நிகழச் செய்கிறது.

**கே:** ஆனால் நீங்கள்தான் பேசுகிறீர்கள். நான் அல்ல.

**ம:** அவ்வாறுதான் உனக்குத் தோன்றுகிறது. நான், இரண்டு மனோ-உடல்கள் குறியீட்டளவிலான சப்தங்களைப் பரிமாறிக் கொள்வதாகப் பார்க்கிறேன். மெய்மையில் எதுவும் நிகழ்வதில்லை.

**கே:** தயவு செய்து நான் சொல்வதைக் கேளுங்கள் ஐயா. நான் தொந்தரவோடு இருப்பதால் உங்களிடம் வந்திருக்கிறேன். எனக்குப் புரியாத ஒரு உலகத்தில் தொலைந்துபோன ஒரு ஏழ்மையான ஆத்மா நான். நான் வளர்ந்து, இனப் பெருக்கம் செய்து, இறக்க வேண்டுகின்ற இயற்கை அன்னையைப் பார்த்துப் பயப்படுகிறேன். இவை எல்லாவற்றிற்கும் என்ன அர்த்தம் மற்றும் நோக்கம் என்று கேட்டால் இயற்கையிடமிருந்து விடை கிடைப்பதில்லை. நான் உங்களிடம் வந்திருப்பது ஏனென்றால் நீங்கள் இரக்கமும், ஞானமும் உடையவர் என்று கேள்விப்

பட்டதால். மாறக் கூடியதை மெய்யற்றதென்றும், கடந்து போகக் கூடியதென்றும் நீங்கள் சொல்வதைப் புரிந்துகொள்கிறேன். ஆனால் மாறாத நிலையைப் பற்றிப் பேசும்போது என்னால் புரிந்துகொள்ள முடியவில்லை. 'இது அல்ல, அது அல்ல, அறிவிற்கு அப்பால் அதற்குப் பயன் இல்லை' என்று அதைப் பற்றி ஏன் பேச வேண்டும்? அது இருக்கிறதா அல்லது அது ஒரு நல்ல கருத்து மட்டுமா? மாறக் கூடியதற்கு எதிரான ஒரு வார்த்தையா?

**ம:** மாறாதது மட்டுமே மெய்மையின் ஸ்வரூபமாக இருக்கிறது. அது மட்டுமே இருக்கிறது. ஆனால் உன்னுடைய தற்போதைய நிலையில் அதனால் எந்தப் பயனும் இல்லை. இது ஒரு பாலைவனத்தில் தாகத்தால் நீ இறந்துகொண்டிருப்பதாகக் கனவு காணும் போது உன் படுக்கைக்கு அருகில் உள்ள தண்ணீரால் எந்தப் பயனும் இல்லையோ அதைப் போன்றது. நான் உன் கனவு எதுவானாலும் உன்னைத் தூக்கத்திலிருந்து எழுப்ப முயற்சிக்கிறேன்.

**கே:** தயவு செய்து நான் கனவு காண்பதாகவும், சீக்கிரமே விழித்து விடுவேன் என்றும் என்னிடம் சொல்லாதீர்கள். அப்படி ஆக விரும்புகிறேன். ஆனால் முன்பே நான் விழித்தவாறும், துக்கத் துடனும் இருக்கிறேன். ஒரு துக்கமில்லாத நிலையைப் பற்றி நீங்கள் பேசுகிறீர்கள். ஆனால் கூடவே என்னுடைய தற்போதைய நிலையில் அதை நான் பெற முடியாது என்றும் சொல்கிறீர்கள். எனக்குப் புரியவில்லை.

**ம:** புரியாததாக நினைக்காதே. மாறாததையும், ஆனந்த மானதையும் கண்டுபிடிக்க மாறக் கூடியதையும், துக்கம் மிகுந்ததையும் கைவிட வேண்டும் என்றுதான் சொல்கிறேன். நீ உன்னுடைய சந்தோசத்தில் மட்டுமே அக்கறையுடன் இருக்கிறாய். நான் அப்படி எதுவும் கிடையாது என்று உன்னிடம் சொல்கிறேன். மகிழ்ச்சி ஒருபோதுமே உனக்குச் சொந்தமானதல்ல. எங்கு 'நான்' இல்லையோ அங்கு அது இருக்கிறது. அது உன்னால் அடைய முடியாதது என்று நான் சொல்லவில்லை; உனக்கு அப்பால் சென்றுதான் நீ அதைக் காண்பாய்.

**கே:** நான் எனக்கு அப்பால் செல்ல வேண்டும் என்றால் 'நான்' என்னும் கருத்தை ஏன் முதலிலேயே நான் பெறுகிறேன்?

**ம:** ஒரு வட்டத்தை வரைய மனதிற்கு ஒரு மையம் தேவை. அந்த வட்டம் பெரிதாக வளரலாம். ஒவ்வொரு வளர்ச்சியின்போதும் 'நான்' என்னும் உணர்வில் ஒரு மாற்றம் இருக்கும். தன்னை அறிந்த ஒரு மனிதர், ஒரு யோகி, ஒரு சுருள் வளையத்தைத்தான் வரைவார். அந்த வளையம் எவ்வளவு பெரிதாக இருந்தாலும் மையம் அப்படியே இருக்கும். முழு முயற்சியும் மெய்யற்றது என்று அறியப் பட்டு, கைவிடப்படும் ஒரு நாள் வரும். மேற்கொண்டு மையப் புள்ளி இருக்காது. பிரபஞ்சமே மையமாகிவிடும்.

**கே:** ஆமாம். இருக்கலாம். ஆனால் நான் இப்போது என்ன செய்வது?

**ம:** எப்போதும் மாறிக்கொண்டிருக்கின்ற உன் வாழ்க்கையைச் சோம்பலில்லாமல் கவனி. உன் செயல்களுக்குப் பின்னால் இருக்கும் நோக்கங்களை ஆழமாக விசாரி. அப்போது உன்னைச் சுற்றி இருக்கும் குமிழியை விரைவாக உடைத்து விடுவாய். ஒரு கோழிக் குஞ்சு வளர முட்டை ஓடு அவசியம். ஆனால் ஓட்டை உடைக்க வேண்டிய ஒரு நாள் வரும். இல்லையென்றால் துன்பமும், இறப்பும்தான் இருக்கும்.

**கே:** நான் யோகாவைச் செய்யவில்லை என்றால் இல்லாமல் போய்விடுவேன் என்று சொல்கிறீர்களா?

**ம:** அங்குதான் குரு உன்னைக் காப்பாற்ற வருவார். அதுவரையில் உன் வாழ்க்கையின் ஓட்டத்தைக் கவனித்துக் கொண்டிருப்பதில் திருப்தியடை. உன் கவனிப்பு ஆழமாகவும், ஸ்திரமாகவும் இருந்தால், எப்போதும் ஆதார மூலத்தை நோக்கித் திரும்பியிருந் தால், அது படிப்படியாக எதிரோட்டமாக, திடீரென்று அது ஆதாரமாகவே மாறும் வரை நகரும். உன் விழிப்புணர்வை வேலை செய்ய விடு. மனதை அல்ல. இந்த வேலைக்கு மனம் சரியான கருவி அல்ல. காலமற்றதைக் காலமற்றதால்தான் அடைய முடியும். உன் மனமும், உடலும் காலத்திற்கு உட்பட்டவை; விழிப்புணர்வு மட்டுமே காலமற்றது, தற்பொழுதிலும்கூட. விழிப்புணர்வில் நீ

நிஜங்களை எதிர்கொள்கிறாய். மெய்மை நிஜங்களின்மேல் பிரியமுள்ளது.

**கே:** என்னை மெய்மைக்குள் எடுத்துச் செல்ல நீங்கள் முழுவது மாக என் விழிப்புணர்வைச் சார்ந்திருக்கிறீர்கள், குருவையோ, கடவுளையோ அல்ல.

**ம:** கடவுள் உடலையும், மனதையும் கொடுக்கிறார். குரு அவற்றை உபயோகிக்கும் வழிகளைக் காண்பிக்கிறார். ஆனால் ஆதாரத்திற்குத் திரும்புவது உன் சொந்த வேலை.

**கே:** கடவுள் என்னை உருவாக்கினார். அவர் என்னைப் பார்த்துக் கொள்வார்.

**ம:** கணக்கற்ற கடவுள்கள் உள்ளனர், ஒவ்வொருவரும் அவருடைய சொந்தப் பிரபஞ்சத்தில். அவர்கள் சாசுவதமாக உருவாக்குகிறார்கள். திரும்பவும் உருவாக்குகிறார்கள். உன்னைக் காப்பாற்ற அவர்களுக்காகக் காத்திருக்கப் போகிறாயா? மீட்சியடைய உனக்கு என்ன தேவையோ அது முன்பே உனக்கு எட்டும் தூரத்தில் உன்னிடம் உள்ளது. அதை உபயோகி. உனக்குத் தெரிந்ததை அதன் முடிவுவரை ஆய்வு செய்! அப்போது உன் இருத்தலின் அறியப்படாத ஆழங்களை அடைவாய். மேற்கொண்டு செல். எதிர்பாராதது உனக்குள் வெடித்து, எல்லாவற்றையும் சிதறடிக்கும்.

**கே:** அதற்கு இறத்தல் என்று அர்த்தமா?

**ம:** அதற்கு உன்னதமான உயிர் வாழ்தல் என்று பொருள், இறுதியாக.

# 86. அறியப் படாதது மெய்யின் வசிப்பிடம்

**கேட்பவர்:** குரு என்பவர் யார்? உச்ச உயர்வான குரு யார்?

**மஹராஜ்:** உன் விழிப்புணர்வில் நிகழும் அனைத்துமே உன் குரு. விழிப்புணர்விற்கு அப்பால் உள்ள தூய பிரக்ஞை உச்ச உயர்வான குரு.

**கே:** என் குரு ஸ்ரீ பாபாஜீ. அவரைப் பற்றிய உங்கள் கருத்து என்ன?

**ம:** என்ன ஒரு கேள்வி கேட்கிறாய்? மும்பையிலிருக்கும் ஆகாசத்திடம் பூனேவில் இருக்கும் ஆகாசத்தைப் பற்றிய கருத்து என்ன என்று கேட்கிறாய். பெயர்கள் வேறுபடுகின்றன. ஆகாசம் அல்ல. 'பாபாஜி' என்னும் வார்த்தை ஒரு முகவரி மட்டுமே. யார் அந்த முகவரியில் வாழ்கிறார்கள்? நீ பிரச்சனையோடு இருக்கும்போது கேள்விகளைக் கேட்கிறாய். யார், யாருக்குத் தொந்தரவு கொடுக்கிறார்கள் என்று விசாரி.

**கே:** ஒவ்வொருவரும் மெய்யறிதலுக்கு உட்பட்டவர்கள் என்று நினைக்கிறேன். அது அவர்களுடைய கடமையா அல்லது விதியா?

**ம:** மெய்யறிதல் என்பது நீ ஒரு நபர் அல்ல என்னும் நிஜத்தைப் புரிந்துகொள்வது. அதனால் யாருக்கு விதி இல்லாமல் போகிறதோ அந்த நபருக்கு அது கடமையாக இருக்க முடியாது. யார் தன்னை நபராகக் கற்பனை செய்துகொள்கிறாரோ அவருக்குத்தான் கடமையும், விதியும் உள்ளது. யார் அவர் என்று கண்டுபிடி; அப்போது கற்பனை செய்யப்பட்ட நபர் கரைந்துவிடுவார். சுதந்திரம் என்பது ஏதோ ஒன்றிலிருந்து கிடைப்பது. நீ எதிலிருந்து சுதந்திரமாக இருக்க வேண்டுகிறாய்? தெள்ளத் தெளிவாக, உன்னை என்னவென்று நினைத்துக் கொண்டிருக்கிறாயோ அந்த நபரிலிருந்து

நீ சுதந்திரமாக இருக்க வேண்டும். ஏனெனில் உன்னைப் பற்றி நீ கொண்டுள்ள கருத்துதான் உன்னைக் கட்டுக்குள் வைத்திருக்கிறது.

**கே:** நபரை எப்படி நீக்குவது?

**ம:** மன உறுதி உடைய யோகத்தினால் அது போக வேண்டும் என்று புரிந்து கொள்; அது கண்டிப்பாகப் போக வேண்டும் என்று விரும்பு. அது போகவேண்டும் என்று மனமார்ந்த ஈடுபாட்டுடன் நீ இருந்தால் அது போய்விடும். யாரோ ஒருவர், எவரோ ஒருவர் உன்னிடம் நீ தூய விழிப்புணர்வு, ஒரு உடல்-மனம் அல்ல என்று சொல்வார். அதை ஒரு சாத்தியக் கூறாக ஏற்றுக்கொண்டு, மனமார்ந்த ஈடுபாட்டுடன் ஆய்வு செய்! அது அவ்வாறு என்றும், நீ இடத்தாலும், காலத்தாலும் கட்டுப்பட்ட ஒரு நபர் அல்ல என்றும் கண்டு பிடிப்பாய். அது ஏற்படுத்தும் வித்தியாசத்தைச் சிந்தி.

**கே:** நான் ஒரு நபர் அல்ல என்றால் நான் என்ன?

**ம:** ஈரமான துணி அது ஈரமாக இருக்கும் வரை வித்தியாசமாகத் தெரியும், உணரப் படும், வாசமடிக்கும். உலர்ந்துவிட்டால் அது மறுபடியும் எப்போதும் இருப்பதைப் போல் ஆகிவிடும். தண்ணீர் அதிலிருந்து போய்விட்டால், யார் அது நனைந்திருந்தது என்று கண்டுபிடிக்க முடியும்? உன் உண்மையான தன்மை நீ தோற்றமளிப்பது போல் அல்ல. நீ நபர் என்று கருதும் கருத்தை விட்டுவிடு. அவ்வளவே. எப்படியாயினும் நீ முன்பே எதுவாக இருக்கிறாயோ அதுவாக ஆக வேண்டியதில்லை. நீ என்னவோ அந்த அடையாளம் இருக்கிறது. நபர்த் தன்மை அதன்மேல் சுமத்தப் பட்டுள்ளது. உனக்குத் தெரிந்ததெல்லாம் நபரைத்தான். நபர் அல்லாத அடையாளத்தை உனக்குத் தெரியாது. ஏனெனில் நீ ஒருபோதும் சந்தேகப்பட்டதில்லை; 'நான் யார்?' என்னும் முக்கியமான கேள்வியை நீ ஒருபோதும் கேட்டதில்லை. அடையாளம் என்பது நபரின் சாட்சி. சாதனா என்பது மேலோட்டமான, மாறக் கூடிய நபர்த்தன்மையிலிருந்து, மாறாத, எப்போதும் இருக்கின்ற சாட்சிக்கு முக்கியத்துவத்தைக் கொடுப்பது.

**கே:** 'நான் யார்?' என்னும் கேள்வி ஏன் என்னைச் சிறிதளவே கவர்கிறது? நான் என் நேரத்தை சாதுக்களின் இனிமையான சகவாசத்தில் கழிக்க விரும்புகிறேன்.

**ம:** உன் சொந்த ஸ்வரூபத்தில் ஆழ்ந்திருப்பதே புனிதமான சகவாசம்தான். உனக்குத் துக்கமும், அதிலிருந்து விடுதலை அடைவது என்னும் பிரச்சினையும் இல்லாவிட்டால் சுயம் அறிதலுக்கான சக்தியையோ, விடாப்பிடியான அவசியத்தையோ காணமாட்டாய். உன்னால் ஒரு நெருக்கடியை உருவாக்க முடியாது. அது உண்மையானதாக இருக்க வேண்டும்.

**கே:** ஒரு உண்மையான நெருக்கடி எப்படி நிகழும்?

**ம:** அது ஒவ்வொரு கணமும் நிகழ்கிறது. ஆனால் நீதான் போதுமான அளவு உஷாராக இல்லை. உன் அண்டை வீட்டாரின் முகத்தில் ஏற்படும் ஒரு கவலை, இருத்தலின் அளவற்ற, எல்லாவற்றிலும் ஊடுருவுகின்ற துக்கம் உன் வாழ்க்கையில் ஒரு நிலையான காரணி. ஆனால் நீ அதைக் கவனிக்க மறுக்கிறாய். நீ துக்கப்படுகிறாய். மற்றவர்கள் துக்கப்படுவதையும் பார்க்கிறாய். ஆனால் நீ எதிர்வினை புரிவதில்லை.

**கே:** நீங்கள் சொல்வது உண்மை. ஆனால் நான் அதற்கு என்ன செய்ய முடியும்? அதுதான் சூழ்நிலை. நான் உதவ முடியாததும், என்னுடைய சோம்பலும் அதன் ஒரு பகுதி.

**ம:** நல்லது. உன்னைத் தடுமாற்றமின்றி, உறுதியாகப் பார். அதுவே போதும். உன்னைப் பூட்டுகின்ற கதவுதான் உன்னை வெளியே விடும் கதவும் கூட. 'நான்' என்பதுதான் கதவு. அது திறக்கும்வரை அசைவின்றி இரு. உண்மையில் அது திறந்துதான் இருக்கிறது. நீதான் அதனுள் செல்வதில்லை. நீ வரையப்பட்ட, இல்லாத கதவுகள் திறக்கக் காத்திருக்கிறாய். அது ஒருபோதும் திறக்காது.

**கே:** எங்களில் பலர் போதைப் பொருட்களை எப்போதாவது, சிறிதளவாவது எடுத்துக் கொள்கிறார்கள். விழிப்புணர்வின் உயர் நிலைகளுக்குச் செல்ல அவற்றை எடுத்துக் கொள்ளுமாறு சிலர் சொல்கிறார்கள். அதே நோக்கத்திற்கு மற்றவர்கள் அளவற்ற புலன் இன்பத்தில் ஈடுபடுமாறு அறிவுறுத்துகிறார்கள். இதில் உங்களுடைய கருத்து என்ன?

**ம:** சந்தேகமில்லாமல் உன் மூளையைப் பாதிக்கின்ற போதைப் பொருட்கள் உன் மனதையும் பாதித்து, நீ சொன்னாற்போன்ற வினோதமான அனுபவங்களைக் கொடுக்கும். ஆனால் வழக்கத்திற்கு மாறான அனுபவமான பிறந்ததாகவும், துக்கத்திலும், அச்சத்திலும் வாழ்வதாகவும், புதிதாக ஏற்படாத அல்லது நீடித்திருக்காத மகிழ்ச்சியைத் தேடுவதுமான அனுபவத்தைக் கொடுக்கும் போதைப் பொருளுடன் ஒப்பிட்டுப் பார்த்தால் அவையெல்லாம் என்ன மாதிரியான போதைப் பொருட்கள்! இந்த போதைப் பொருளின் தன்மையைப் பற்றி நீ விசாரம் செய்து, அதற்கு ஒரு முறிவு மருந்தைக் கண்டுபிடிக்க வேண்டும்.

பிறப்பு, வாழ்க்கை, இறப்பு - இவையெல்லாம் ஒன்றே. யார் இவற்றை உருவாக்கியது என்று கண்டுபிடி. நீ பிறப்பதற்கு முன்பே போதை ஏற்றப்பட்டிருக்கிறாய். எந்த மாதிரியான போதைப் பொருள் அது? நீ எல்லா வியாதியிலிருந்தும் குணமாகலாம். ஆனால் நீ இன்னும் ஆதியிலிருந்தே உள்ள போதைப் பொருளின் தாக்கத்தில் இருந்தால், மேம்போக்காகக் குணமடைவதில் என்ன பயன்?

**கே:** கர்மா மறுபிறவிக்கான காரணம் அல்லவா?

**ம:** நீ பெயரை மாற்றலாம். ஆனால் நிஜம் அப்படியே இருக்கிறது. நீ கர்மா அல்லது விதி என்று சொல்லும் போதைப் பொருள் என்ன? அது நீ என்னவாக இல்லையோ அதுவாக உன்னை நம்பச் செய்கிறது. அது என்ன? அதிலிருந்து நீ விடுபட முடியுமா? நீ மேற்கொண்டு செல்வதற்குமுன்னால், ஒரு செயல்படும் தத்துவமாக, நீ உன் தோற்றத்தைப்போல் அல்ல என்றும், ஒரு போதைப்பொருளின் தாக்கத்தில் இருக்கிறாய் என்றும் ஒப்புக் கொள்ள வேண்டும். அப்போதுதான் அறிகுறிகளைச் சோதிக்கவும், அவற்றின் பொதுவான காரணங்களைத் தேடவும் உனக்கு உந்துதலும், பொறுமையும் இருக்கும். ஒரு குரு உன்னிடம் சொல்லக்கூடியதெல்லாம்: 'அன்பானவரே, உன்னைப் பற்றி நீ மிகவும் தவறாகப் புரிந்துகொண்டிருக்கிறாய். நீ உன்னைப் பற்றி நினைத்திருப்பது போன்ற நபர் அல்ல' என்றுதான். யாரையும் நம்பாதே, உன்னை உட்பட. ஜீவனுள்ள தண்ணீரையும், மெய்யின்

பாறையையும் நீ அடைகின்ற வரை ஒவ்வொரு யூகத்தையும் தேடு, கண்டுபிடி, நீக்கு, ஒதுக்கு. நீ அந்தப் போதைப் பொருளின் தாக்கத்திலிருந்து விடுபடும் வரை உன் மதங்கள் மற்றும் அறிவியல், பிரார்த்தனைகள் மற்றும் யோகா ஆகியவற்றால் எந்தப் பயனும் உனக்கு இல்லை. அவை ஒரு தவறை அடிப்படையாகக் கொண்டிருப்பதால் அதை வலிவூட்டுகின்றன. ஆனால் நீ உடலோ, மனமோ அல்ல, அவற்றின் சாட்சிகூட இல்லை, ஆனால் முற்றிலும் அப்பாற்பட்டவன் என்னும் கருத்தில் நிலைத்திருந்தால் உன் மனம் தெளிவு பெறும், உன் ஆசைகள் தூய்மை அடையும். உன் செயல்கள் அறம் சார்ந்தவையாக இருக்கும். அந்த அகத் தூய்மை உன்னை உண்மையினாலும், அச்சமற்ற அன்பாலும் ஆன வேறொரு உலகத்திற்கு எடுத்துச் செல்லும். உன் பழைய உணரும் மற்றும் சிந்திக்கும் வழக்கங்களைத் தடு; 'இல்லை, அவ்வாறில்லை, அவ்வாறு இருக்க முடியாது; நான் அது போன்று இல்லை, எனக்கு அது அவசியம் இல்லை, அதை நான் வேண்டுவதில்லை' என்று உன்னிடம் சொல்லிக்கொண்டே இரு. அப்போது பிழையாலும், மனக்கசப்பாலும் ஆன முழுக் கட்டமைப்பும் நொறுங்கிப் போகின்ற ஒரு நாள் வரும்; அப்போது ஒரு புது வாழ்க்கைக்கான அடித்தளம் சுதந்திரமாக இருக்கும். உன்னோடு நீ கொண்டுள்ள எல்லா முனைப்புகளும் உன் விழித்த நிலையிலும், ஒரு பகுதி உன் கனவு நிலையிலும்தான் உள்ளன என்று ஞாபகம் வைத்திரு; தூக்கத்தில் எல்லாமும் ஒதுக்கித் தள்ளப்பட்டு, மறக்கப்பட்டுவிடும். உன் விழித்த வாழ்க்கை எவ்வளவு சிறிதளவே முக்கியம் என்று அது காண்பிக்கிறது. உனக்கேகூட வெறுமனே படுத்துக்கொண்டு, கண்களை மூடினால் அது முடிந்து போய்விடும். ஒவ்வொரு முறை நீ தூங்கப் போகும் முன்பும் விழிப்பதைப் பற்றிய குறைந்தபட்ச உறுதிகூட இல்லாமல்தான் தூங்கப் போகிறாய். இருப்பினும் நீ ஆபத்தை ஏற்றுக் கொள்கிறாய்.

**கே:** தூங்கும்போது நீங்கள் உணர்வுடன் இருக்கிறீர்களா அல்லது உணர்வில்லாமலா?

**ம:** நான் உணர்வுடன் இருக்கிறேன். ஆனால் ஒரு குறிப்பிட்ட நபராக இருக்கும் உணர்வுடன் அல்ல.

**கே:** சுயம் அறியும் அனுபவத்தின் ருசியை நீங்கள் எங்களுக்குக் கொடுக்க முடியுமா?

**ம:** முழுவதையும் எடுத்துக் கொள்! கேட்டால் பெறுவதற்கு அது இங்கு இருக்கிறது. ஆனால் நீ கேட்பதில்லை. கேட்டாலும்கூட பெற்றுக் கொள்வதில்லை. எது பெற்றுக் கொள்ளத் தடுக்கிறது என்று கண்டுபிடி.

**கே:** எது தடுக்கிறது என்று எனக்குத் தெரியும் - என் அகங்காரம்தான்.

**ம:** அப்படியானால் உன் அகங்காரத்தோடேயே இரு. என்னைத் தனியாக விட்டுவிடு. உன் மனதிற்குள் நீ பூட்டப்பட்டிருக்கும் வரை, என் நிலையை உன்னால் புரிந்துகொள்ள முடியாது.

**கே:** மேற்கொண்டு கேட்க என்னிடம் கேள்விகள் இல்லை.

**ம:** உன் அகங்காரத்தோடு நீ உண்மையிலேயே சண்டையிட்டுக் கொண்டிருந்தாயானால் மேலும் பல கேள்விகளைக் கேட்டிருப் பாய். உனக்கு ஆர்வமில்லாததால்தான் உன்னிடம் கேள்விகள் இல்லை. தற்பொழுது நீ சுக - துக்கக் கோட்பாட்டில் ஈடுபட்டுக் கொண்டிருக்கிறாய். அதுதான் அகங்காரம். நீ அகங்காரத்தோடு ஒத்துப் போகிறாய். அதை எதிர்த்துச் சண்டையிடுவதில்லை. தனிப்பட்ட காரணங்களால் முற்றிலுமாக எந்த அளவு ஊசலாடிக் கொண்டிருக்கிறாய் என்றுகூட உனக்குத் தெரியாது. ஒரு மனிதன் தனக்கு எதிராகவே எப்போதும் கிளர்ச்சி செய்ய வேண்டும். ஏனெனில் ஒரு மாயக் கண்ணாடியைப் போல அகங்காரம் குறுக்கவும், திரிக்கவும் செய்யும். எல்லாக் கொடுங்கோலர்களிலும் அது மிகவும் மோசமானது. அது உன்னை முற்றிலுமாக மேலதிகாரம் செய்யும்.

**கே:** 'நான்' என்பது இல்லாமல் போனால் யார் சுதந்திரமாக இருப்பது?

**ம:** உலகம் ஒரு வலிய தொந்தரவிலிருந்து விடுபடும். அது நல்லது.

**கே:** யாருக்கு நல்லது?

**ம:** எல்லோருக்கும் நல்லது. அது வீதியின் குறுக்கே கட்டப் பட்டுள்ள ஒரு கயிற்றைப் போன்றது. அது போக்குவரத்தைப் பாதிக்கும். அதைச் சுருட்டிவைத்துவிட்டால் வெறும் அடையாளமாக அங்கு இருக்கும். தேவைப்படும்போது உபயோகமாக இருக்கும். அகங்கார சுயத்திலிருந்து விடுதலைதான் சுய விசாரத்தின் பலன்.

**கே:** நான் என்மேல் மிகவும் வெறுத்துப் போயிருந்த ஒரு காலம் இருந்தது. இப்போது நான் என் குருவைச் சந்தித்தேன். அவரிடம் நான் முழுவதுமாகச் சரண் அடைந்தபிறகு, அமைதியாக இருக்கிறேன்.

**ம:** உன் தினசரி வாழ்க்கையைக் கவனித்தால் நீ எதையுமே சரணடையச் செய்யவில்லை என்று காண்பாய். நீ வெறுமனே 'சரணாகதி' என்னும் வார்த்தையை உன் அகராதியில் சேர்த்துக் கொண்டு, உன் குருவை உன் பிரச்சனைகளைத் தொங்கவிட ஒரு குச்சியாக மாற்றிவிட்டாய். உண்மையான சரணாகதி என்ன வென்றால் உன் குரு சொன்னால் ஒழிய எதுவுமே செய்யா திருப்பது. சொல்லப் போனால் அது நீ ஒதுங்கிக்கொண்டு, உன் குரு உன் வாழ்க்கையை வாழ விடுவது. உன்னால் தீர்க்க முடியாததாகத் தோன்றும் பிரச்சனைகளையும்கூட அவர் எவ்வளவு சுலபமாகத் தீர்க்கிறார் என்று நீ வெறுமனே கவனித்து ஆச்சரியப்படுவாய்.

**கே:** நான் இங்கு அமர்ந்து கொண்டு, அறையையும், மக்களையும் பார்க்கிறேன். உங்களையும்கூடப் பார்க்கிறேன். உங்கள் பக்கத்திலிருந்து இது எப்படித் தெரிகிறது? நீங்கள் என்ன பார்க்கிறீர்கள்?

**ம:** எதுவுமில்லை. நான் பார்க்கிறேன். ஆனால் மனதால் ஆன கருத்துக்களால் போர்த்தப்பட்ட பிம்பங்களை உருவாக்கும் விதமாக நான் பார்ப்பதில்லை. நான் விவரிப்பதோ அல்லது மதிப்பிடுவதோ இல்லை. நான் பார்க்கிறேன், உன்னைக் காண்கிறேன். ஆனால் மனப் பாங்கோ அல்லது கருத்தோ என் பார்வையை மறைப்பதில்லை. என் கண்களை அப்பால் திருப்பும் போது என் மனம் ஞாபகங்களை அசைபோட அனுமதிப்பதில்லை;

அதிலிருந்து உடனே விடுபட்டு, அடுத்த பதிவிற்குத் தயாராகப் புத்தம் புதிதாக மனம் இருக்கிறது.

**கே:** நான் இங்கே இருந்து, உங்களைப் பார்த்துக் கொண்டிருக்கிறேன். இந்த நிகழ்வை என்னால் இடத்திலும் (வெளியிலும்), காலத்திலும் குறிக்க முடியவில்லை. இங்கு நிகழ்கின்ற ஞானத்தின் பரிமாற்றத்தில் ஏதோ ஒரு சாசுவதமான, பிரபஞ்ச அளவிலானது இருக்கிறது. பத்தாயிரம் வருடங்களுக்கு முன்போ, பிறகோ அது எந்த வேறுபாட்டையும் ஏற்படுத்துவதில்லை. இந்த நிகழ்வே காலமற்றது.

**ம:** மனிதன் காலம் செல்லச் செல்ல மிகவும் மாறுவதில்லை. மானுடப் பிரச்சனைகள் அப்படியேதான் இருக்கின்றன. ஒரே மாதிரியான விடைகளைத்தான் வேண்டுகின்றன. ஞானத்தின் பரிமாற்றம் நிகழ்கிறது என்னும் உணர்வுடன் நீ இருப்பதே ஞானம் இன்னும் கடத்தப்படவில்லை என்று காண்பிக்கிறது. நீ அதைப் பெற்றுவிட்டால் அதைப்பற்றிய உணர்வு மேற்கொண்டு இருக்காது. உண்மையில் எது உனக்குச் சொந்தமாக இருக்கிறதோ அதைப்பற்றிய உணர்வுடன் இருக்க மாட்டாய். நீ உணர்வுடன் இருக்கும் எதுவும் நீயோ அல்லது உன்னுடையதோ அல்ல. உன்னுடையது அறிந்து உணரும் சக்தி, அறிந்து உணரப்படுவது அல்ல. உணர்வை, மொத்த மனிதனாகக் கருதுவது தவறு. மனிதன் உணர்வற்றவன், உணர்வுள்ளவன், அதீத உணர்வுள்ளவன். ஆனால் நீதான் மனிதன் அல்ல. உன்னுடையது திரைப்படத் திரை, ஒளி மற்றும் பார்க்கும் சக்தி. ஆனால் படம் நீ அல்ல.

**கே:** நான் ஒரு குருவைத் தேட வேண்டுமா? அல்லது யாரைக் கண்டுள்ளேனோ அவருடனேயே தங்கிவிடட்டுமா?

**ம:** உன் கேள்வியே நீ இன்னும் ஒருவரைக் கண்டுபிடிக்கவில்லை என்று காண்பிக்கிறது. நீ மெய்யறியாதவரை ஒரு குருவிலிருந்து மற்றொரு குருவிற்கு நகர்ந்து கொண்டிருப்பாய். ஆனால் நீயே உன் ஸ்வரூபத்தைக் கண்டுபிடித்துவிட்டால் உன் தேடல் முடிந்துவிடும். ஒரு குரு ஒரு மைல் கல். நீ நகர்ந்து போய்க் கொண்டிருக்கும்போது பல மைல் கற்களைக் கடந்துபோயிருப்பாய். நீ உன் அடைய

வேண்டிய இடத்தை அடைந்துவிட்டால் கடைசியான ஒன்றுதான் முக்கியம். மெய்யாக எல்லாமும் அதனதன் நேரத்தில் முக்கியம். முடிவில் எதுவும் முக்கியமில்லை.

**கே:** நீங்கள் குருவிற்கு முக்கியத்துவம் கொடுப்பதில்லைபோல் தெரிகிறது. அவர் மற்றவர்களோடு ஒரு நிகழ்வுதான்.

**ம:** எல்லா நிகழ்வுகளும் பங்களிக்கின்றன. ஆனால் எதுவுமே இன்றியமையாதது அல்ல. நீ போகும் பாதையில் எடுத்து வைக்கும் ஒவ்வொரு அடியும் உன் இலக்கை நீ அடைய உதவும். ஒவ்வொரு அடியும் மற்றதைப்போல அவசியம். ஏனெனில், ஒவ்வொரு அடியையும் எடுத்து வைக்க வேண்டும். அதை நீ தவிர்க்க முடியாது. நீ எடுத்து வைக்க மறுத்தால் சிக்கி, விழுந்துவிடுவாய்!

**கே:** ஒவ்வொருவரும் குருவின் மகிமைகளைப் புகழ்ந்து பாடுகிறார்கள். நீங்களோ அவரை ஒரு மைல்கல்லுக்கு ஒப்பிடுகிறீர்கள். எங்களுக்கு ஒரு குரு தேவையில்லையா?

**ம:** நமக்கு ஒரு மைல் கல் தேவையில்லையா? தேவை மற்றும் இல்லை. நாம் நிச்சயமில்லாமல் இருந்தால் தேவை. நமக்கு வழி தெரிந்திருந்தால் தேவையில்லை. நம் மீது நாம் நிச்சயமாக இருந்தால் வழிமுறைகளைக் கொடுப்பதற்காக அல்லாமல் மேற்கொண்டு குரு தேவையில்லை. உன் மனம் ஒரு கருவி. அதை உபயோகப்படுத்தத் தெரிந்திருக்க வேண்டும். எப்படி உன் உடலை உபயோகப்படுத்த நீ கற்றுக் கொண்டிருக்கிறாயோ அப்படி உன் மனதை உபயோகப் படுத்த அறிந்திருக்க வேண்டும்.

**கே:** என் மனதை உபயோகப்படுத்தத் தெரிந்திருந்தால் எனக்கு என்ன லாபம்?

**ம:** ஆசை மற்றும் அச்சத்திலிருந்து விடுபடுவாய். ஆசையும் அச்சமும் மனதின் முற்றிலும் தவறான உபயோகத்தால் வருபவை. ஞானம் உன்னைப் பிடித்து வைக்காது. அறிந்தது எதிர்பாராமல் நிகழ்வது. அறியப்படாதது மெய்யின் வசிப்பிடம். அறியப் பட்டதில் வாழ்வது அடிமைத்தனம். அறியப்படாததில் வாழ்வது முக்தி.

**கே:** எல்லா ஆன்மீகப் பயிற்சியும் தனிப்பட்ட சுயத்தை இல்லாமல் போகச் செய்வதுதான் என்று நான் புரிந்துகொண்டிருக்கிறேன். அம்மாதிரியான பயிற்சிக்குக் கடினமான உறுதியும், தொய்வில்லாத ஈடுபாடும் தேவை. அம்மாதிரியான வேலைக்கு எங்கிருந்து ஒருமைப்பாடும், சக்தியும் கிடைக்கும்?

**ம:** ஞானிகளின் சகவாசத்தில் அதை நீ பெறலாம்.

**கே:** நான் எப்படி யார் ஞானி, யார் வெறுமனே புத்திசாலி என்று அறிவது?

**ம:** உன் நோக்கங்கள் தூய்மையாகவும், நீ வேறொன்றையும் தேடாமல் மெய்யை மட்டுமே தேடுபவராகவும் இருந்தால் சரியான மனிதரைக் கண்டுபிடிப்பாய். அவர்களைக் கண்டுபிடிப்பது சுலபம். ஆனால் எது கடினமென்றால் அவர்களை நம்பி, அவர்களுடைய உபதேசங்கள் மற்றும் வழிகாட்டுதல்களின் முழு அனுகூலத்தையும் எடுத்துக் கொள்வதுதான்.

**கே:** ஆன்மீகப் பயிற்சிக்கு விழித்த நிலை தூங்கும் நிலையை விட முக்கியமா?

**ம:** மொத்தத்தில் நீ விழித்த நிலைக்கு மிகவும் முக்கியத்துவம் கொடுக்கிறாய். தூக்கம் இல்லாமல் விழித்த நிலை சாத்தியமில்லை; தூங்காவிட்டால் ஒருவர் பைத்தியம் பிடித்தோ அல்லது இறந்தோ போய்விடுவார். ஏன் உணர்வற்றதைச் சார்ந்திருக்கும் விழித்த நிலையிலுள்ள விழிப்புணர்விற்கு அவ்வளவு முக்கியத்துவம் கொடுக்க வேண்டும்? நம் ஆன்மீகப் பயிற்சியில் உணர்வுள்ளது மட்டுமல்ல, உணர்வற்றதும்கூடப் பொருட்படுத்தப்பட வேண்டும்.

**கே:** ஒருவர் உணர்வற்றதை எப்படிக் கையாளுவது?

**ம:** 'நான்' என்பதை விழிப்புணர்வின் குவிமையத்திற்குள் வைத்திரு; நீ இருப்பதை ஞாபகம் வைத்திரு; உன்னை இடைவிடாமல் கவனி. அப்போது உணர்வற்றது உன்னால் எந்தவிதமான சிறப்பான முயற்சியும் செய்யப்படாமல் உணர்விற்குள் பாய்ந்து செல்லும். தவறான ஆசைகளும், அச்சங்களும், தவறான கருத்துக்களும், சமுதாய அடக்கு முறைகளும் உணர்வுள்ளதோடு அதன் குறுக்கீட்டைத் தடுக்கவும், தவிர்க்கவும் செய்கின்றன. கலந்துவிடத்

தடைகள் இல்லாமல் போனால் உணர்வற்றதும், உணர்வுள்ளதும் ஒன்றாகி, ஒன்று எல்லாமாகவும் ஆகும். நபர் சாட்சிக்குள் கலக்கும்; சாட்சி பிரக்ஞைக்குள்; பிரக்ஞை தூய இருத்தலுக்குள். இருப்பினும் அடையாளம் தொலைந்து போகாது. அதன் வரையறைகள் மட்டுமே இல்லாமல் போகும். அது உருமாற்றமடைந்து, உண்மையான சுயமாக, சத்குருவாக, சாசுவதமான நண்பராக, வழிகாட்டியாக ஆகும். துதிப்பதால் அதை உன்னால் அணுக முடியாது. எந்த வெளிப்புறச் செயலினாலும் உட்புற சுயத்தை அடைய முடியாது. துதிப்பதும், பிரார்த்தனைகளும் மேற்பரப்பில் மட்டுமே இருக்கும்; ஆழமாகச் செல்ல தூக்கம், கனவு, விழிப்பு ஆகிய நிலைகளுக்கு அப்பால் செல்லும் பிரயத்தனமாகிய தியானம் அவசியம். ஆரம்பத்தில் முயற்சிகள் ஒழுங்கற்று இருக்கும். பிறகு அவை அடிக்கடி நடந்து, ஒழுங்காகி, எல்லாத் தடைகளும் வெல்லப்படும் வரை தொடர்ந்தும், தீவிரமாகவும் ஆகும்.

**கே:** எதற்கான தடைகள்?

**ம:** சுயம் மறத்தலுக்கான தடைகள்.

**கே:** துதிப்பதும், பிரார்த்தனைகளும் பயனற்றவை என்றால், தினந்தோறும் நீங்கள் ஏன் பாடல்களோடும், சங்கீதத்தோடும் உங்கள் குருவின் படத்தைப் பூஜிக்கிறீர்கள்?

**ம:** யார் அதை வேண்டுகிறார்களோ அவர்கள் செய்யட்டும். அதில் குறுக்கிட எனக்கு எந்த நோக்கமும் இல்லை.

**கே:** ஆனால் நீங்கள் அதில் பங்கெடுக்கிறீர்கள்.

**ம:** ஆமாம். அவ்வாறுதான் தோன்றும். ஆனால் ஏன் என்னைப் பற்றி அவ்வளவு அக்கறை? உன் முழுக் கவனத்தையும் 'எது என்னை உணர்வுள்ளவனாகச் செய்கிறது?' என்னும் கேள்வியில், உன் மனம் அந்தக் கேள்வியே ஆகும்வரை, வேறு ஒன்றையும் நினைக்க முடியாதவரை செழுத்து.

**கே:** எல்லோரும் என்னைத் தியானம் செய்யச் சொல்கிறார்கள். தியானத்தில் எனக்கு விருப்பம் இல்லை. ஆனால் வேறு பலவற்றில் எனக்கு ஆர்வம் இருக்கிறது. சிலவற்றை நான் மிகவும் வேண்டி, என்

மனம் அவற்றிடம் செல்கிறது. தியானம் செய்ய நான் எடுக்கும் முயற்சிகள் அரை மனதுடன் இருக்கின்றன. நான் என்ன செய்வது?

**ம:** 'இவையெல்லாம் யாருக்கு நடக்கிறது?' என்று உன்னைக் கேள். ஒவ்வொன்றையும் உள்முகமாகச் செல்ல ஒரு வாய்ப்பாக எடுத்துக் கொள். தடைகளைப் பிரக்ஞையின் தீவிரத்தால் எரித்து, நீ போகும் பாதைக்கு வெளிச்சம் ஏற்று. நீ ஆசைப்படவோ, அச்சப் படவோ செய்தால் ஆசையோ, அச்சமோ தவறல்ல. அவை போக வேண்டியதில்லை. ஆனால் ஆசையும், அச்சமும் படுகின்ற நபர்தான் போக வேண்டும். மிகவும் இயல்பாகவும், ஞாயமாகவும் உள்ள ஆசைகளோடும், அச்சங்களோடும் சண்டையிடுவதில் அர்த்தம் இல்லை. நபர்தான் அவற்றால் அலைக்கழிக்கப் படுகிறது. அதுதான் கடந்த கால மற்றும் எதிர்காலத் தவறுகளுக்குக் காரணம். நபர்த்தன்மையை ஜாக்கிரதையாகப் பரிசீலனை செய்து, அதன் பொய்த்தன்மையைக் காணவேண்டும்; அப்போது உன்மீது அதற்குள்ள ஆதிக்கம் போய்விடும். நீ ஒவ்வொரு முறை தூங்கப் போகும்போதும் அது அடங்கிவிடுகிறது. ஆழ்ந்த தூக்கத்தில் நீ ஒரு சுய நினைவுள்ள நபர் அல்ல. இருப்பினும் நீ உயிருடன் இருக்கிறாய். நீ உயிருடனும், உணர்வுடனும் இருந்து, ஆனால் மேற்கொண்டு சுய நினைவில்லாமல் இருந்தால் நீ ஒரு நபராக இருக்கமாட்டாய். விழித்திருக்கும்போது இருப்பது நாடக மேடையில் ஒரு வேடத்தில் நடிப்பதைப் போல. ஆனால் நாடகம் முடிந்த பிறகு நீ என்ன? நீ ஆரம்பத்தில் என்னவோ அதுதான்; நாடகம் ஆரம்பிப்பதற்கு முன்னால் என்னவாக இருந்தாயோ அதேபோல்தான் நாடகம் முடிந்த பிறகும் இருப்பாய். வாழ்க்கை என்னும் மேடையில் நடிப்பதாக உன்னைப் பார். நடிப்பு அற்புதமாகவோ அல்லது அசிங்கமாகவோ இருக்கலாம். ஆனால் நீ அதில் இல்லை. நீ வெறுமனே ஆர்வத்தோடும், கருணையோடும் பார்த்துக் கொண்டிருப்பாய். வாழ்க்கை என்னும் நாடகம் நடக்கும்போது அதைப் பார்த்துக்கொண்டிருப்பதாக மட்டுமே எல்லா நேரமும் மனதில் நினைத்துக் கொண்டிருப்பாய்.

**கே:** நீங்கள் எப்போதும் மெய்மையின் ஞானத்தன்மையையே வலியுறுத்துகிறீர்கள். அன்பு, மனோ உறுதி ஆகியவற்றைப் பற்றி ஒருபோதும் குறிப்பிடுவதில்லை. ஏன் அப்படி?

ம: மனோ உறுதி, அன்பு, ஆனந்தம், முயற்சி, மகிழ்ச்சியாக அனுபவிப்பது - இவையெல்லாம் நபர்த்தன்மையினால் அழுத்தமாகக் கறைபட்டிருக்கின்றன. எனவே அவற்றை நம்ப முடியாது. பயணத்தின் ஆரம்பத்திலேயே அவசியமான தெளிவும், தூய்மையும் தேவை. அதைப் பிரக்ஞை மட்டுமே கொடுக்க முடியும். அன்பும், மனோ உறுதியும் செயல்படும் காலம் வரும். ஆனால் அதற்கு ஆயத்தமாக இருக்க வேண்டும். பிரக்ஞை என்னும் சூரியன் முதலில் எழும்பவேண்டும். மற்ற அனைத்தும் பின் தொடரும்.



# 87. மனதை மௌனமாக வைத்திரு. அப்போது கண்டுபிடிப்பாய்

**கேட்பவர்:** ஒருமுறை நான் ஒரு வினோதமான அனுபவத்தைப் பெற்றேன். நானோ, உலகமோ இருக்கவில்லை. உள்ளேயும், வெளியேயும் ஒளி மட்டுமே இருந்தது. அதோடு அளவற்ற அமைதியும் இருந்தது. அது நான்கு நாட்களுக்கு நீடித்தது. பிறகு நான் நடைமுறை விழிப்புணர்விற்குத் திரும்பினேன்.

எனக்குத் தெரிந்ததெல்லாம் கட்டுமானம் நடைபெறும் கட்டிடத்தைப் போர்த்தியிருக்கும் துணியும், தாங்கிக் கொண்டிருக்கும் சாரமும்தான் என்னும் உணர்வுதான் இப்போது உள்ளது. கட்டிடக் கலைஞரையோ, வடிவமைப்பையோ, திட்டத்தையோ, நோக்கத்தையோ எனக்குத் தெரியாது. ஏதோ சில வேலை நடக்கிறது, காரியங்கள் நிகழ்கின்றன; அவ்வளவுதான் நான் சொல்ல முடியும். மெலிதான, குறுகிய காலமே வாழும் அந்தச் சாரம் நான்; கட்டுமானம் முடிந்தபிறகு, சாரம் பிரிக்கப்பட்டு, அப்புறப் படுத்தப்படும். 'நான்' மற்றும் 'நான் என்ன' என்பவை களுக்கு முக்கியத்துவம் இல்லை. ஏனெனில் கட்டிடம் கட்டி முடிந்தவுடன் தன்னைப் பற்றிப் பதில் சொல்லத் தேவைப்படும் எந்தக் கேள்வியையும் விட்டுவைக்காமல் 'நான்' என்பது போய்விடும்.

**மஹராஜ்:** உனக்கு இவை எல்லாவற்றைப் பற்றியும் விழிப்புணர்வு கிடையாதா? விழிப்புணர்வு என்னும் நிஜம் நிலையான காரணி அல்லவா?

**கே:** என் நிலைத்திருப்பது என்னும் உணர்வும், அடையாள உணர்வும் விரைந்து மறையக்கூடிய, நம்பத்தகாத ஞாபகத்தால் வருபவை. சமீபத்திய கடந்த காலத்தைக் கூட மிகச் சிறிதளவே நான்

# 87. மனதை மௌனமாக வைத்திரு. அப்போது கண்டுபிடிப்பாய்

**கேட்பவர்:** ஒருமுறை நான் ஒரு வினோதமான அனுபவத்தைப் பெற்றேன். நானோ, உலகமோ இருக்கவில்லை. உள்ளேயும், வெளியேயும் ஒளி மட்டுமே இருந்தது. அதோடு அளவற்ற அமைதியும் இருந்தது. அது நான்கு நாட்களுக்கு நீடித்தது. பிறகு நான் நடைமுறை விழிப்புணர்விற்குத் திரும்பினேன்.

எனக்குத் தெரிந்ததெல்லாம் கட்டுமானம் நடைபெறும் கட்டிடத்தைப் போர்த்தியிருக்கும் துணியும், தாங்கிக் கொண்டிருக்கும் சாரமும்தான் என்னும் உணர்வுதான் இப்போது உள்ளது. கட்டிடக் கலைஞரையோ, வடிவமைப்பையோ, திட்டத்தையோ, நோக்கத்தையோ எனக்குத் தெரியாது. ஏதோ சில வேலை நடக்கிறது, காரியங்கள் நிகழ்கின்றன; அவ்வளவுதான் நான் சொல்ல முடியும். மெலிதான, குறுகிய காலமே வாழும் அந்தச் சாரம் நான்; கட்டுமானம் முடிந்தபிறகு, சாரம் பிரிக்கப்பட்டு, அப்புறப் படுத்தப்படும். 'நான்' மற்றும் 'நான் என்ன' என்பவை களுக்கு முக்கியத்துவம் இல்லை. ஏனெனில் கட்டிடம் கட்டி முடிந்தவுடன் தன்னைப் பற்றிப் பதில் சொல்லத் தேவைப்படும் எந்தக் கேள்வியையும் விட்டுவைக்காமல் 'நான்' என்பது போய்விடும்.

**மஹராஜ்:** உனக்கு இவை எல்லாவற்றைப் பற்றியும் விழிப்புணர்வு கிடையாதா? விழிப்புணர்வு என்னும் நிஜம் நிலையான காரணி அல்லவா?

**கே:** என் நிலைத்திருப்பது என்னும் உணர்வும், அடையாள உணர்வும் விரைந்து மறையக்கூடிய, நம்பத்தகாத ஞாபகத்தால் வருபவை. சமீபத்திய கடந்த காலத்தைக் கூட மிகச் சிறிதளவே நான்

ஞாபகம் வைத்திருக்கிறேன்! நான் ஒரு வாழ்க்கை முழுவதையும் வாழ்ந்திருக்கிறேன். இப்போது என்னோடு மிச்சம் இருப்பது என்ன? ஒரு நிகழ்வுகளின் கற்றை. அதிக பட்சம் ஒரு சிறுகதை.

**ம:** இவையெல்லாம் உன் விழிப்புணர்வில் நடக்கின்றன.

**கே:** உள்ளும், புறமும். பகல் இருப்பதால் இரவு இல்லையென்றும், இரவு இருப்பதால் பகல் இல்லையென்றும் சொல்ல முடியாது. விழிப்புணர்வுதான் எல்லாமுமே அல்ல. வேறு பல காரியங்கள் அதன் எல்லைக்கு அப்பால் நடக்கின்றன. நான் எதைப் பற்றி உணர்வுடன் இல்லையோ அது இருப்பதில்லை என்று சொல்வது முற்றிலும் தவறு.

**ம:** நீ சொல்வது அறிவுபூர்வமாகச் சரி. ஆனால் உண்மையில் உன் விழிப்புணர்வில் உள்ளதைத்தான் நீ அறிவாய். உணர்வு பூர்வமான அனுபவத்திற்கு வெளியே இருப்பதாக நீ சொல்பவை அனுமானம் மட்டுமே.

**கே:** அது அனுமானிக்கப்பட்டதாக இருக்கலாம். இருப்பினும் உணர்வு பூர்வமானவைகளை விட மெய்யானது.

**ம:** ஜாக்கிரதையாக இரு. நீ பேச ஆரம்பிக்கும் கணமே சொல் வடிவமான ஒரு பிரபஞ்சத்தை, வார்த்தைகள், கருத்துக்கள், கோட்பாடுகள், கருத்துச் சுருக்கங்கள் ஆகியவற்றாலான, பின்னியுள்ள மற்றும் ஒன்றை ஒன்று சார்ந்துள்ள, ஒன்றை ஒன்று அற்புதமாக உருவாக்கி, ஆதரித்து, விவரித்து, இருப்பினும் எல்லாமும் சாரமோ, உள்ளடக்கமோ இல்லாமல், வெறுமனே மனதின் உருவாக்கங்களாக உள்ள பிரபஞ்சத்தை உருவாக்கி விடுவாய். வார்த்தைகள் வார்த்தைகளை உருவாக்குகின்றன. மெய்மை நிசப்தமானது.

**கே:** நீங்கள் பேசும்போது நான் கேட்கிறேன். இது ஒரு நிஜம் இல்லையா?

**ம:** நீ கேட்கிறாய் என்பது ஒரு நிஜம். என்ன கேட்கிறாய் என்பது நிஜமல்ல. நிஜத்தை அனுபவப்படலாம். அந்த அர்த்தத்தில் வார்த்தையின் சப்தமும், அது உருவாக்கும் மன அதிர்வுகளும்

அனுபவப்படலாம். அதற்குப் பின்னால் வேறு எந்த மெய்த் தன்மையும் இல்லை. அதன் அர்த்தம் முற்றிலும் வழக்கமானது, ஞாபகம் வைத்துக் கொள்ள வேண்டியது. ஒரு மொழியைப் பயிற்சி இல்லையென்றால் சுலபமாக மறந்துவிடலாம்.

**கே:** வார்த்தைகளில் மெய்மைத்தன்மை இல்லையென்றால் ஏன் பேச வேண்டும்?

**ம:** அவை இரண்டு பேருக்கு இடையே நடக்கும் தகவல் பரிமாற்றம் என்னும் அளவான நோக்கத்திற்கு உதவுகின்றன. வார்த்தைகள் நிஜத்தைக் கொண்டிருப்பதில்லை. அதைச் சுட்டிக் காண்பிக்கமட்டும் செய்கின்றன. நபருக்கு அப்பால் நீ சென்றுவிட்டால் உன்னை அறிய உனக்கு வார்த்தைகள் தேவையில்லை.

**கே:** எது என்னை நபருக்கு அப்பால் கொண்டுசெல்லும்? விழிப்புணர்விற்கு அப்பால் நான் எப்படிச் செல்வது?

**ம:** வார்த்தைகளும், கேள்விகளும் மனதிலிருந்து வந்து, உன்னை அங்கேயே பிடித்துவைத்திருக்கின்றன. மனதிற்கு அப்பால் செல்ல நீ அமைதியாகவும், பேசாமலும் இருக்கவேண்டும். அமைதியோடு மௌனம், மௌனத்தோடு அமைதி - இதுதான் மனதிற்கு அப்பால் செல்ல வழி. கேள்வி கேட்பதை நிறுத்து.

**கே:** கேள்வி கேட்பதை நிறுத்திவிட்டால் நான் மேற்கொண்டு என்ன செய்வது?

**ம:** காத்திருந்து, கவனிப்பதைத் தவிர நீ வேறு என்ன செய்ய முடியும்?

**கே:** நான் எதற்காகக் காத்திருக்க வேண்டும்?

**ம:** உன் இருத்தலின் மையம் விழிப்புணர்விற்குள் வெளிப்படுவதற்காக. தூங்குவது, கனவு காண்பது, விழித்திருப்பது ஆகிய மூன்று நிலைகளும் விழிப்புணர்வில்தான் உள்ளன, வெளிப்பட்டதாக. காலப்போக்கில் நீ விழிப்புணர்வற்றது எனச் சொல்வதும் வெளிப்படும். முற்றிலும் விழிப்புணர்விற்கு அப்பால் வெளிப்படாதது இருக்கிறது. எல்லாவற்றிற்கும் அப்பால்,

எல்லாவற்றையும் ஊடுருவி, பரிணமித்தது - பரிணமிக்காதது, பரிணமித்தது - பரிணமிக்காதது (சகுணா - நிர்குணா) என ஸ்திரமாகத் துடித்துக் கொண்டு இருத்தலின் இதயம் இருக்கிறது.

**கே:** வார்த்தை வடிவத்தில் இவை சரியாகத் தோன்றுகின்றன. 'நான்' என்னும் உணர்வு மாறி மாறித் தோன்றியும், மறைந்தும் துடித்துக்கொண்டிருக்கின்ற இருத்தலின் விதையாக, விழிப்புணர்வின் ஒரு புள்ளியாக இருப்பதாக என்னை என்னால் உருவகப்படுத்த முடிகிறது. அப்பாற்சென்று, மாற்றமற்ற, வார்த்தைகளற்ற மெய்மைக்குள் செல்ல, அதை ஒரு நிஜமாக அறிய நான் என்ன செய்ய வேண்டும்?

**ம:** நீ எதுவும் செய்யமுடியாது. காலம் எதைக் கொண்டு வந்ததோ அதைக் காலமே கொண்டு சென்றுவிடும்.

**கே:** அப்படியானால் பிறகு ஏன் யோகாவைப் பயிற்சி செய்யவும், மெய்மையைத் தேடவும் இவ்வளவு பிரயத்தனங்கள்? அவை என்னை வலிமைபெற்றவனாகவும், பொறுப்புள்ளவனாகவும் நினைக்கச்செய்கின்றன. ஆனால் உண்மையில் காலம்தான் இவற்றையெல்லாம் செய்கின்றது.

**ம:** இதுதான் யோகாவின் முடிவு - சுதந்திரத்தை அறிவது. நடப்பவை எல்லாம் மனதிற்குள்ளும், மனதிற்கும்தான் நடக்கின்றன. 'நான்' என்பதின் ஆதாரத்தில் ஒன்றுமே நடப்பதில்லை. எல்லாமும் தானாகவே நடக்கின்றன என்று நீ அறிந்துகொள்ளும் போது அதை விதி என்றோ, கடவுளின் சித்தமென்றோ, வெறுமனே விபத்து என்றோ சொல்லலாம். அதற்குப் பிறகு நீ சாட்சியாக மட்டுமே இருப்பாய், புரிந்துகொண்டும், மகிழ்வோடு அனுபவித்துக்கொண்டும், ஆனால் தொந்தரவுபடாமல்.

**கே:** நான் முற்றிலுமாக வார்த்தைகளை நம்புவதை விட்டு விட்டால் என் நிலைமை என்னவாகும்?

**ம:** நம்புவதற்கும், நம்பாமல் போவதற்கும் ஒரு பருவ காலம் உள்ளது. பருவ காலங்களை வேலைசெய்ய விட்டுவிடு. ஏன் கவலைப்படுகிறாய்?

**கே:** எப்படியோ என்னைச் சுற்றி நடப்பவைகளுக்கு என்னைப் பொறுப்பாக உணர்கிறேன்.

**ம:** உன்னால் மாற்றக் கூடியவைகளுக்குத்தான் நீ பொறுப்பாக முடியும். உன்னால் மாற்றக் கூடியதெல்லாம் உன் மனோபாவம் மட்டும்தான். அங்குதான் உன் பொறுப்பு உள்ளது.

**கே:** நீங்கள் மற்றவர்களின் துன்பங்களுக்குக் கருத்தில்லாமல் இருக்கும்படி உபதேசிக்கிறீர்கள்.

**ம:** நீ கருத்தற்று இருக்க வேண்டியதில்லை. மனித குலத்தின் துன்பங்கள் எல்லாம் உன்னை உன் அடுத்த வேளை உணவை மகிழ்ந்து அனுபவிக்கமுடியாமல் தடுப்பதில்லை. சாட்சி கருத்தில்லாமல் இருப்பதில்லை. அவர் புரிதல் மற்றும் வாஞ்சையின் முழுமைத்தன்மை. சாட்சியாக இருப்பதால்மட்டுமே நீ மற்றவர்களுக்கு உதவ முடியும்.

**கே:** என் வாழ்க்கை முழுவதும் வார்த்தைகளால் உணவூட்டப் பட்டிருக்கிறேன். நான் கேட்ட, படித்த வார்த்தைகள் பல கோடி இருக்கும். அவை எனக்குப் பயனுள்ளதாக இருந்ததா? இல்லவே இல்லை!

**ம:** மனம் மொழியை வடிவமைக்கிறது. மொழி மனதை வடிவமைக்கிறது. இவை இரண்டுமே கருவிகள். அவற்றை உபயோகி. ஆனால் தவறாக உபயோகிக்காதே. வார்த்தைகள் அவற்றின் எல்லைவரை மட்டுமே உன்னைக் கொண்டு செல்ல முடியும்; அவற்றிற்கு அப்பால் செல்ல நீ அவற்றைக் கைவிட வேண்டும். மௌனமான சாட்சியாக மட்டுமே இரு.

**கே:** என்னால் எப்படி முடியும்? உலகத்தால் என் மனம் மிகவும் தொந்தரவு அடைகிறது.

**ம:** அது ஏனென்றால் உலகம் பாதிக்கப்படும் அளவிற்கு உன்னைப் பெரியவனாக நினைத்துக் கொள்கிறாய். அது அப்படி அல்ல. எதுவுமே உன்னைத் தடுத்துக் கீழே தள்ள முடியாத அளவிற்கு நீ மிக மிகச் சிறியவன். உன் மனம்தான் சிக்கிக் கொள்கிறது. நீ அல்ல. விழிப்புணர்வில் உள்ள ஒரு புள்ளியாக,

வடிவமற்றும், காலமற்றும் இருப்பதாக, உன்னை உள்ளபடியே அறிந்துகொள். நீ எழுதுகோலின் முனை போல - உன்னிடம் மனம் வெறுமனே கொள்ளும் தொடர்பால் அதன் உலகத்தின் படத்தை வரைகிறது. நீ தனித்தவன் மற்றும் எளியவன் - படம் சிக்கலானது மற்றும் விரிவானது. படத்தால் தவறாக வழி நடத்தப்படாதே - எழுதுகோலின் குறுகிய முனையைப் பற்றிப் பிரக்ஞையோடு இரு - அது படத்தில் எல்லா இடத்திலும் இருக்கிறது.

எது இருக்கிறதோ அது இல்லாமல் போகாது. எது இல்லையோ அது இருத்தலுக்கு வரலாம். ஆனால் எது இருப்பதாகவும், இல்லாமலும் உள்ளதோ, எதன்மீது இருத்தலும், இல்லாதிருத்தலும் சார்ந்திருக்கிறதோ அது அசைக்க முடியாதது. ஆசைக்கும், அச்சத்திற்கும் நீதான் காரணம் என்றாலும், அந்த இரண்டிலிருந்தும் நீ விடுபட்டிருக்கிறாய் என்று உன்னை அறி.

**கே:** நான் எப்படி அச்சத்திற்குக் காரணமாக இருக்க முடியும்?

**ம:** எல்லாமும் உன்னைச் சார்ந்து இருக்கின்றன. உன் ஒப்புதலால்தான் உலகம் இருக்கிறது. உலகத்தின் மெய்த் தன்மையின் மீது நீ கொண்டிருக்கின்ற நம்பிக்கையை விலக்கிக் கொள். அப்போது அது கனவு போலக் கரைந்துவிடும். காலம் மலைகளையும் சாய்த்துவிடும். நீ காலத்தை விடவும் உயர்ந்தவன். ஏனெனில் நீ காலத்தின் ஆதாரமாக இருந்தாலும், அதற்கு அப்பாற் பட்டவன். ஞாபகமும், எதிர்பார்ப்பும் இல்லாமல் காலம் என்பது இருக்காது.

**கே:** 'நான் இருக்கிறேன்' என்பதுதான் உச்சமுடிவானதா?

**ம:** 'நான் இருக்கிறேன்' என்று சொல்வதற்கு முன்னால் நீ அங்கு இருக்க வேண்டும். இருத்தல் சுய நினைவுடன் இருக்க வேண்டிய தில்லை. இருப்பதற்கு நீ அறிந்திருக்க வேண்டியதில்லை. ஆனால் அறிய நீ இருக்க வேண்டும்.

**கே:** ஐயா! நான் வார்த்தைக் கடலில் மூழ்கடிக்கப் படுகிறேன். எல்லாமும் வார்த்தைகள் எப்படிச் சேர்ந்து வெளிவருகின்றன என்பதைப் பொருத்து இருக்கின்றன. ஆனால் வார்த்தைகளை அர்த்தத்துடன் ஒன்றாகச் சேர்க்க யாராவது இருக்க வேண்டும்.

வார்த்தைகளை ஏடாகூடமாகச் சேர்த்திருந்தால் ராமாயணம், மஹா பாரதம், பாகவதம் போன்றவை உருவாகி இருக்க முடியாது. எதிர்பாராத உருவாக்கம் என்னும் கோட்பாடு ஏற்றுக் கொள்ளக் கூடியதல்ல. அர்த்தமுள்ளவைகளின் தோற்றம் அதற்கு அப்பால் இருக்க வேண்டும். குழப்பத்திலிருந்து எந்தச் சக்தி ஒழுங்கைக் கொண்டுவருகிறது? இருத்தலைவிட வாழ்வது பெரியது. வாழ்வதை விட விழிப்புணர்வு பெரியது. யார் உணர்வுள்ள வாழும் இருத்தல்?

ம: உன் கேள்வியே விடையைக் கொண்டுள்ளது: ஒரு உணர்வுள்ள வாழும் இருத்தல், ஒரு உணர்வுள்ள வாழும் இருத்தலே. வார்த்தைகள் மிகவும் பொருத்தமானவை. ஆனால் நீ முழு அர்த்தத்தையும் கிரகிப்பதில்லை. இருத்தல், வாழ்தல். விழிப்புணர்வு ஆகிய வார்த்தைகளின் அர்த்தத்திற்குள் ஆழமாகச் செல். அப்போது நீ சுற்றிச் சுற்றி வந்து கொண்டு, கேள்விகள் கேட்டு, விடையைத் தவற விடுவதை நிறுத்தி விடுவாய். உன்னைப் பற்றிச் செல்லுபடியாகும் ஒரு கேள்வியைக் கேட்க முடியாது என்று புரிந்து கொள். ஏனெனில் யாரைப் பற்றி நீ கேட்கிறாய் என்று உனக்குத் தெரியாது. 'நான் யார்?' என்னும் கேள்வியில் 'நான்' என்பதைத் தெரியாது. ஆகையால் அந்தக் கேள்வியை 'நான் என்று நான் சொல்வதன் அர்த்தம் எனக்குத் தெரியாது' என்று மாற்றிச் சொல்லலாம். நீ என்ன என்று நீதான் கண்டுபிடிக்க வேண்டும். நீ என்னவாக இல்லை என்று மட்டுமே நான் உனக்குச் சொல்ல முடியும். நீ உலகால் ஆனவன் அல்ல. நீ உலகில் இருப்பதுகூட இல்லை. உலகம் இல்லை. நீ மட்டுமே இருக்கிறாய். ஒரு கனவைப் போல நீ உன் கற்பனையில் உலகத்தை உருவாக்குகிறாய். எப்படிக் கனவை உன்னிலிருந்து பிரிக்க முடியாதோ அப்படி, உன்னிலிருந்து சுதந்திரமான ஒரு புற உலகத்தை நீ கொண்டிருக்க முடியாது. நீதான் சுதந்திரமானவன். உலகமல்ல. நீயே உருவாக்கியுள்ள ஒரு உலகத்தைப் பற்றி பயப்படாதே. ஒரு கனவில் மகிழ்ச்சியையும், மெய்மையையும் தேடுவதை விட்டுவிடு. அப்போது விழித்துக் கொள்வாய். 'ஏன்' மற்றும் 'எப்படி' என்று நீ அறிய வேண்டிய தில்லை. கேள்விகளுக்கு முடிவே கிடையாது. எல்லா ஆசை களையும் விட்டுவிட்டு மனதை மௌனமாக வைத்திரு. அப்போது கண்டுபிடிப்பாய்.

# 88.மனதின் அறிவு - உண்மையான அறிவல்ல

**கேட்பவர்:** நீங்களும் எங்களைப் போல விழித்தல், கனவு காணுதல், உறங்குதல் ஆகிய மூன்று நிலைகளை அனுபவப் படுகிறீர்களா அல்லது வேறு விதமாகவா?

**மஹராஜ்:** மூன்று நிலைகளும் எனக்குத் தூக்கம்தான். என் விழித்த நிலை அவற்றிற்கு அப்பால் உள்ளது. நான் உங்களைப் பார்க்கும் போது, நீங்கள் எல்லோரும் உங்களுடைய சொந்த வார்த்தைகளில் கனவு கண்டுகொண்டு தூங்கிக் கொண்டிருப்பதாகத் தெரிகிறது. நான் விழிப்புணர்வுடன் இருக்கிறேன். ஏனெனில் நான் எதையும் கற்பனை செய்வதில்லை. அது ஒரு விதமான தூக்கமாகிய சமாதி நிலை அல்ல. ஏனெனில் சமாதியும் கூட ஒரு ஆழமான தூக்க நிலை. அது கடந்த காலத்திலிருந்தும், எதிர் காலத்திலிருந்தும் சுதந்திரமான, மனதால் பாதிக்கப்படாத ஒரு நிலை. உன்னைப் பொருத்தவரை அது ஆசையாலும், அச்சத்தாலும், ஞாபகங்களாலும், நம்பிக்கை களாலும் திரிக்கப்பட்டுள்ளது. எனக்கு அது இயல்பாக, உள்ளவாறே உள்ளது. ஒரு நபராக இருப்பது என்பது தூக்கத்தில் இருப்பது.

**கே:** உடலுக்கும், தூய பிரக்ஞைக்கும் இடையில் 'அந்தகர்ணா' என்னும் 'சூட்சும தேகம்' உள்ளது. அதைச் 'சூட்சும தேகம்' என்றோ, 'மனோ தேகம்' என்றோ எந்தப் பெயரில் வேண்டு மானாலும் சொல்லலாம். எப்படி ஒரு சுழல்கின்ற கண்ணாடி சூரிய ஒளியைப் பல்வேறு வடிவங்களான கீற்றுகளாகவும், வர்ணங் களாகவும் மாற்றுகிறதோ, அப்படிச் சூட்சும தேகம் ஒளிரும் சுயத்தின் எளிய ஒளியை ஒரு பல்வேறு விதங்களுடைய உலகமாக மாற்றுகிறது - இப்படித்தான் உங்கள் போதனையை நான் புரிந்துகொண்டிருக்கிறேன். என்னால் என்ன புரிந்துகொள்ள

முடியவில்லை என்றால், எப்படி இந்தச் சூட்சும தேகம் ஆரம்பத்திலேயே தோன்றுகிறது என்பதைத்தான்.

**ம:** அது 'நான்' என்னும் கருத்து வெளிப்படும்போது உருவாகிறது. இரண்டும் ஒன்றே.

**கே:** 'நான்' என்பது எப்படித் தோன்றுகிறது?

**ம:** உன் உலகத்தில் ஒவ்வொன்றும் ஆரம்பமும், முடிவும் கொண்டிருக்க வேண்டும். இல்லையென்றால் நீ அதைச் சாசுவத மானது என்று சொல்வாய். என் கருத்துப்படி ஆரம்பம் அல்லது முடிவு என்று ஒன்று இல்லை. இவையெல்லாம் காலத்தைச் சார்ந்துள்ளவை. காலமற்ற இருத்தல் முற்றிலுமாகத் தற்பொழுதில் உள்ளது.

**கே:** அந்தகர்ணா அல்லது சூட்சும தேகம் மெய்யானதா அல்லது மெய்யற்றதா?

**ம:** அது கண நேரத்தையது. இருக்கும்போது மெய்யானது. இல்லாவிட்டால் மெய்யற்றது.

**கே:** எந்த மாதிரியான மெய்த்தன்மை? அது கண நேரத்தையதா?

**ம:** அதை அனுபவத்தை அடிப்படையாகக் கொண்டது அல்லது ப்ரத்தியட்சமானது அல்லது உள்ளபடியானது என்று சொல். அது இங்கேயே, இப்போதே உள்ள, மறுக்க முடியாத உடனடியான அனுபவத்தின் மெய்த்தன்மை. நீ விவரிப்பையும், அர்த்தத்தையும் கேள்வி கேட்கலாம். ஆனால் நிகழ்வையே அல்ல. இருத்தலும், இருத்தலில்லாமையும் மாறிமாறி உள்ளவை. அவற்றின் மெய்த்தன்மை கண நேரத்தையது. மாற்ற முடியாத மெய்மை இடத்திற்கும், காலத்திற்கும் அப்பால் உள்ளது. இருத்தல் மற்றும் இருத்தலில்லாமையின் கணநேரத் தன்மையை அறிந்து, அவற்றிலிருந்து விடுபட்டு இரு.

**கே:** நிகழ்வுகள் கடந்துபோகக் கூடியவை. இருப்பினும் முடிவில்லாமல் திரும்பத் திரும்ப வருபவையாக நம்மிடம் அவை உள்ளன.

**ம:**ஆசைகள் உறுதியானவை. ஆசைதான் திரும்பத் திரும்ப ஏற்படும் நிகழ்வுகளுக்குக் காரணம். ஆசை இல்லாவிட்டால் மறுபடியும் நிகழாது.

**கே:** அச்சத்தைப் பொருத்து எப்படி?

**ம:** ஆசை கடந்த காலத்தைப் பற்றியது. அச்சம் எதிர்காலத்தைப் பற்றியது. கடந்த காலத் துக்கங்களின் ஞாபகமும், அது திரும்ப நடந்துவிடுமோ என்னும் அச்சமும் ஒருவரை எதிர்காலத்தைப் பற்றி பதட்டப்பட வைக்கிறது.

**கே:**அறியாததைப் பற்றியும்கூட அச்சம் இருக்கிறது.

**ம:** துக்கத்தை அனுபவப்படாதவர் அச்சப்பட மாட்டார்.

**கே:** நாங்கள் அச்சத்தினால் தண்டிக்கப்படுகிறோமா?

**ம:** நாம் அச்சத்தைப் பார்த்து, அதை நம் தனிப்பட்ட இருத்தலின் நிழலாக ஏற்றுக் கொள்ளும்வரை நபர்களாக நாம் தண்டனையை அனுபவிக்கத்தான் வேண்டும். எல்லாத் தனிப்பட்ட கோட்பாடு களையும் கைவிட்டுவிட்டால் நீ அச்சத்திலிருந்து விடுபட்டு விடுவாய். அது ஒன்றும் கடினமல்ல. ஆசையை மெய்யற்றது என்று அடையாளம் காணும்போது ஆசையற்றதன்மை தானாகவே வரும். ஆசையோடு நீ போராட வேண்டியதில்லை. முடிவாக அது மகிழ்ச்சிக்கான ஒரு உந்துதல். துக்கம் இருக்கும்வரை அது இயல்பானது. நீ ஆசைப்படுவதில் மகிழ்ச்சி இல்லை என்பதை மட்டும் பார்.

**கே:** நாங்கள் மகிழ்ச்சியை மட்டும் வேண்டுகிறோம்.

**ம:** ஒவ்வொரு சந்தோசமும் துக்கத்தால் சுற்றப்பட்டிருக்கிறது. ஒன்றில்லாமல் மற்றொன்றைக் கொண்டிருக்க முடியாது என்று நீ விரைவாக அறிவாய்.

**கே:** அனுபவிப்பவர் இருக்கிறார். அவருடைய அனுபவமும் இருக்கிறது. எது அந்த இரண்டிற்கும் இணைப்பை ஏற்படுத்துகிறது?

**ம:** எதுவும் அதை உருவாக்கவில்லை. அது இருக்கிறது. இரண்டும் ஒன்றே.

**கே:** எங்கோ ஒரு சிக்கல் இருப்பதாக நான் உணர்கிறேன். ஆனால் எங்கு என்றுதான் எனக்குத் தெரியவில்லை.

**ம:** இருமைத் தன்மை இல்லை. சிக்கல் உன் எதிர்பார்ப்புடன் உள்ள மனதில்தான் உள்ளது. மனம் இல்லாத இருமைத்தன்மையை இருப்பதாக வலியுருத்துகிறது.

**கே:** நான் நீங்கள் சொல்வதைக் கேட்கும்போது என் மனம் முழுவதும் தற்பொழுதில் இருக்கிறது. நான் கேள்விகளற்று இருப்பதைப் பார்த்து ஆச்சரியப்படுகிறேன்.

**ம:** நீ ஆச்சரியப்படும்போதுதான் மெய்மையை அடைய முடியும்.

**கே:** கவலைக்கும், அச்சத்திற்கும் காரணம் ஞாபகம் என்பதை நான் புரிந்துகொள்ள முடிகிறது. ஞாபகத்தை முடிவிற்குக் கொண்டுவர என்ன வழி?

**ம:** வழிகளைப் பற்றிப் பேசாதே. வழி எதுவும் கிடையாது. நீ மெய்யற்றது என்று எதைப் பார்க்கிறாயோ அது கரைந்துவிடும். விசாரம் செய்யும்போது கரைந்துவிடுவது மாயையின் இயல்பு. விசாரம் செய். அவ்வளவே. உன்னால் மெய்யற்றதை அழிக்க முடியாது. ஏனெனில் நீ எல்லா நேரமும் நீ அதை உருவாக்குகிறாய். அதிலிருந்து பின்வாங்கு, அதைப் பொருட்படுத்தாதே, அதற்கு அப்பால் செல். அப்போது அது இல்லாமல் போய்விடும்.

**கே:** இயேசு கிறிஸ்துவும் தீயதைப் பொருட்படுத்தாமல், குழந்தைபோல் இருப்பதைப் பற்றிப் பேசுகிறார்.

**ம:** மெய்மை எல்லோருக்கும் பொதுவானது. மெய்யற்றதுதான் தனி நபருக்கானது.

**கே:** நான் சாதகர்களைக் கவனித்து, அவர்கள் வாழும் வகையின் கோட்பாடுகளைப் பற்றி விசாரித்தால் அவர்கள் பொருள்மீதான ஏக்கங்களிலிருந்து மாறி 'ஆன்மீகப்' பேராவலைக் கொண்டுள்ள தாகக் காண்கிறேன். நீங்கள் எங்களுக்குச் சொல்வதை வைத்துப் பார்க்கும்போது 'ஆன்மீகம்' மற்றும் 'பேராவல்' ஆகிய இரண்டு வார்த்தைகளும் ஒத்துப் போகமாட்டாதவை போல் தெரிகின்றன.

'ஆன்மீகம்' என்பது பேராவலிலிருந்து விடுதலை என்பதைக் குறித்தால், எது ஆன்மீகத் தேடல் உள்ளவரை உந்தித் தள்ளும்? யோகிகள் முக்திக்கான ஆசை அவசியம் என்று சொல்கிறார்கள். அது அதிகபட்ச பேராவல் அல்லவா?

**ம:** பேராவல் தனி நபர்ப்பட்டது. முக்தி என்பது தனி நபர்த் தன்மையிலிருந்து விடுதலை. முக்தியில் பேராவலின் உட்கருத்தும், நோக்கமும் மேற்கொண்டு இருக்காது. மெய்யார்வம் என்பது ஒருவருடைய பெருமுயற்சியின் பலன்களுக்காக ஏங்குவதல்ல. அது ஆர்வத்தை மெய்யற்றதிலிருந்து, தேவையற்றதிலிருந்து, தனி நபர்த்தன்மையிலிருந்து உள்முகமாகத் திருப்புவதன் வெளிப்பாடு.

**கே:** முன்பு ஒரு நாள் நீங்கள் மெய்யறிதலுக்கு முன்பு பூரணமாகச் சரியாக இருப்பதைக் கனவுகூட காணமுடியாது என்று சொன்னீர்கள். ஏனெனில் சுயம்தான் எல்லாப் பூரணத்துவத்திற்கும் ஆதாரம், மனம் அல்ல. முக்திக்கு நற்பண்புகளின் உன்னதம் அவசியமில்லையென்றால் வேறு எது அவசியம்?

**ம:** முக்தி என்பது சில திறமையாகச் செய்யப்படும் செயல்கள் அல்லது சூழ்நிலைகளின் விளைவல்ல. அது காரண காரியத் தன்மைக்கு அப்பாற்பட்டது. எதுவும் அதை நிர்பந்திக்க முடியாது, எதுவும் அதைத் தடுக்க முடியாது.

**கே:** அப்படியானால் நாம் ஏன் 'இங்கு, இப்போது' முக்தாவாக இல்லை?

**ம:** நாம் 'இங்கேயே, இப்போதே' முக்தாவாகத்தான் இருக்கிறோம். மனம்தான் கட்டுக்களைக் கற்பனை செய்து கொள்கிறது.

**கே:** எது கற்பனையை முடிவுறச் செய்யும்?

**ம:** எதற்காக அது முடிவுற வேண்டுகிறாய்? ஒருமுறை மனதையும், அதன் அதிசயமான சக்திகளையும் நீ தெரிந்து கொண்டு, அதை நஞ்சாக்கும் பிரிந்த மற்றும் தனித்த நபர் என்னும் கருத்தை நீக்கிவிட்டு, அதை அதற்குப் பொருத்தமான அதன் வேலையைச் செய்யத் தனித்து விட்டுவிடு. மனதை அதற்குரிய இடத்தில், அதற்குரிய வேலையில் விட்டுவிடுவதே முக்தி.

**கே:** *மனதின் வேலை என்ன?*

**ம:** மனம் இதயத்தின் மனைவி. உலகம் ஒளிபொருந்தியவாறும், மகிழ்ச்சியாகவும் வைத்திருக்கப்பட வேண்டிய அவற்றின் வீடு.

**கே:** *எதுவுமே முக்தி அடையக் குறுக்கே நிற்பதில்லையென்றால் அது ஏன் இங்கு, இப்போது நிகழவில்லை என்று என்னால் புரிந்து கொள்ள முடியவில்லை.*

**ம:**உன் முக்திக்கான வழியில் எதுவுமே குறுக்கே நிற்பதில்லை. நீ மற்ற விஷயங்களில் அதிகமாக ஈடுபாடு கொண்டிருக்காவிட்டால் அது இங்கு, இப்போதே நிகழலாம். உன்னால் உன் ஈடுபாடு களுடன் சண்டைபோட முடியாது. நீ அவற்றைத் தொடர்ந்து செல். அவற்றின் ஊடாகப் பார். அவை தங்களை உன்னுடைய நன்மதிப்பு மற்றும் பாராட்டுக்களின் பிழைகளாக வெளிப்படுவதைக் கவனித்துப் புரிந்துகொள்.

**கே:** *நான் ஒரு மிகச் சிறந்த, புனிதமானவரிடம் சென்று, அவரோடு தங்கியிருந்தால் எனக்கு அது உதவுமா?*

**ம:** மிகச் சிறந்த, புனிதமானவர்கள் எப்போதும் உனக்கு அருகாமையில் இருக்கிறார்கள். ஆனால் நீ அவர்களை அடையாளம் காண்பதில்லை. யார் மிகச் சிறந்த, புனிதமானவர் என்று எப்படி அறிவாய்? செவிவழிச் செய்தியாகவா? நீ மற்றவர்களை இம்மாதிரியான காரியங்களில் நம்ப முடியுமா? அல்லது உன்னையே கூட நம்ப முடியுமா? உன்னைச் சந்தேகத்தின் நிழல்கூட இல்லாமல் நம்பவைக்க ஒரு பாராட்டுக்கும் மேலான, ஒரு கண நேர ஆனந்தப் பேருவகைக்கும் மேலான ஒன்று தேவை. நீ ஒரு மிகச் சிறந்த புனிதமான ஆணையோ, பெண்ணையோ சந்திக்கலாம். ஆனாலும் நீண்டகாலம் உன் நல்ல வாய்ப்பை அறியாமல் இருப்பாய். ஒரு மிக உயர்ந்த மனிதரின் குழந்தைப் பையனுக்கு அவனுடைய தகப்பனின் சிறப்பு பல வருடங்களுக்குத் தெரியாமல் இருக்கலாம். சிறப்பை அடையாளம் காண நீ முதிர வேண்டும். புனிதத்தன்மைக்கு உன் இதயத்தைத் தூய்மைப்படுத்த வேண்டும். இல்லையென்றால் உன் நேரத்தையும், பணத்தையும் வீணாகச் செலவிட்டு, வாழ்க்கை உனக்குக் கொடுப்பதை நீ தவற

விட்டுவிடுவாய். உன் நண்பர்களில் நல்லவர்கள் இருப்பார்கள். அவர்களிடமிருந்து நிறைய நீ கற்றுக் கொள்ளலாம். துறவிகளுக்குப் பின்னால் ஓடுவது வெறுமனே மற்றொரு விளையாட்டு. அதற்குப் பதிலாக உன் சுயத்தை ஞாபகத்தில் வைத்துக் கொண்டு, உன் தினசரி வாழ்க்கையைத் தொய்வில்லாமலும், ஜாக்கிரதையாகவும் கவனி. மெய்யார்வத்துடன் இரு. அப்போது கவனமின்மை மற்றும் கற்பனையின் தளைகளை உடைக்க நீ தவற மாட்டாய்.

**கே:** நான் தனியாகவே போராட வேண்டும் என்கிறீர்களா?

**ம:** நீ ஒருபோதும் தனியாக இல்லை. உனக்குக் கீழ்படிந்து, எல்லா நேரமும் பணிபுரிய சக்திகள் உள்ளன. நீ அவற்றை அறிந்துணர்ந்தோ, அறிந்துணராமலோ இருக்கலாம். எப்படி இருந்தாலும் அவை நிஜமானவை மற்றும் செயல்படுபவை. எல்லாமும் உன் மனதில்தான் உள்ளன என்றும், நீ மனதிற்கு அப்பால் உள்ளாய் என்றும் அறிந்தால் அப்போதுதான் நீ உண்மையாலுமே தனியாக உள்ளாய். அந்த நிலையில் எல்லாமும் நீதான்.

**கே:** எல்லாம் அறியும் பேரறிவு என்றால் என்ன? கடவுள் எல்லாம் அறிந்தவரா? நீங்கள் எல்லாம் அறிந்தவரா? பிரபஞ்ச சாட்சி என்று சொல்வதைக் கேட்டிருக்கிறேன். அதற்கு என்ன அர்த்தம்? சுயம் அறிதல் எல்லாம் அறிவதைக் குறிக்கிறதா? அல்லது அது ஒரு விஷேசமான பயிற்சியா?

**ம:** அறிவின்மீது கொண்டுள்ள ஆர்வம் முழுவதையும் முற்றிலுமாக இழப்பது எல்லாவற்றையும் அறிவதை விளைவிக்கிறது. ஆனால் பிழை இல்லாத செயலுக்கு எதை அறியவேண்டுமோ அதைச் சரியான தருணத்தில் அறிவது ஒரு கொடை. அறிவு செயல்பாட்டிற்குத் தேவை. நீ சரியாகவும், தன்னிச்சையாகவும், விளைவைப் பற்றிய உணர்வில்லாமலும் செயல்பட்டால் மிகவும் நல்லது.

**கே:** ஒருவர் மற்றொருவருடைய மனதை அறியமுடியுமா?

**ம:** உன் மனதை முதலில் அறி. அது முழுப் பிரபஞ்சத்தையும் கொண்டுள்ளது. அதுபோக மீதி இடமும் உள்ளது!

**கே:** உங்களுடைய கோட்பாடு விழித்த நிலை, கனவு மற்றும் கனவற்ற தூக்க நிலைகளிலிருந்து அடிப்படையில் வித்தியாச மானவை அல்ல என்பதுபோல் தெரிகிறது. மூன்று நிலைகளும் உடலுடன் தவறாக அடையாளப்படுத்திக்கொண்டதால் வருபவை. அது உண்மையாக இருக்கலாம். ஆனால் அதுவே முழு உண்மையல்ல என்று நான் நினைக்கிறேன்.

**ம:** உண்மையை அறிய முயலாதே. ஏனெனில் மனதால் ஆன அறிவு உண்மையான அறிவு அல்ல. ஆனால் எது உண்மையல்ல என்று நீ அறியலாம். அதுவே உன்னைப் பொய்யிலிருந்து விடுதலையளிக்கப் போதுமானது. உண்மை எது என்று உனக்குத் தெரியும் என்னும் கருத்து அபாயகரமானது. ஏனெனில் அது உன்னை மனதில் சிறைப்படுத்தி வைத்திருக்கும். நீ அறியாமல் இருந்தால்தான் சுதந்திரமாக ஆராய முடியும். ஆராயாமல் விடுதலை இருக்கமுடியாது. ஏனெனில் ஆராயாமல் இருப்பதுதான் கட்டுப்பட்டிருப்பதற்கு முக்கியமான காரணம்.

**கே:** உலகத்தைப் பற்றிய மாயை 'நான்' என்னும் உணர்வுடன் வருகிறது என்று நீங்கள் சொல்கிறீர்கள். ஆனால் 'நான்' என்னும் உணர்வின் தோற்றத்தைப் பற்றிக் கேட்டால் அது ஆராயும்போது கரைந்துவிடுகிறது என்பதால் அதற்குத் தோற்றமில்லை என்று பதில் சொல்கிறீர்கள். உலகத்தைக் கட்டுவதற்கு எது திடமாக இருக்கிறதோ அது வெறும் மாயையாக இருக்க முடியாது. 'நான்' என்பதுதான் நான் உணர்வுடன் இருக்கும் மாற்றமில்லாத ஒரே காரணி. எப்படி அது பொய்யாக இருக்க முடியும்?

**ம:** 'நான்' என்பது பொய்யல்ல. ஆனால் உன்னை என்னவாக நினைத்துக் கொண்டிருக்கிறாயோ அதுதான் பொய். நீ என்னவென்று உன்னை நினைத்துக் கொண்டிருக்கிறாயோ அதுவல்ல என்று கொஞ்சம்கூட சந்தேகமில்லாமல் எனக்குத் தெரியும். அறிவுபூர்வமாகவோ அல்லது அல்லாமலோ நான் வெளிப்படையானதை மறுக்க முடியாது. நீ உணர்வுடன் இருக்கும் எதுவும் நீ அல்ல. உன் மனதில் நீ கட்டி வைத்திருக்கும் அமைப்பை உடைக்க ஊக்கம் தளராமல் உன்னை ஈடுபடுத்த வேண்டும். மனம் உருவாக்கியதை மனம்தான் நீக்க வேண்டும்.

**கே:** மனதாலோ, மனமற்றோ நீங்கள் இக்கணத்தை மறுக்க முடியாது. எது இக்கணத்தில் உள்ளதோ அது இருக்கிறது. நீங்கள் தோற்றத்தைக் கேள்வி கேட்கலாம். நிஜத்தை அல்ல. எது நிஜத்தின் மூலத்தில் உள்ளது?

**ம:** 'நான்' என்பது எல்லாத் தோற்றங்களின் மூலத்தில் உள்ளது. நாம் வாழ்க்கை என்று சொல்கின்ற அடுத்தடுத்த நிகழ்வுகளின் நிலையான இணைப்பு அது. ஆனால் நான், 'நான்' என்பதற்கு அப்பால் உள்ளேன்.

**கே:** மெய்யறிந்தவர்கள் தங்கள் நிலையை வழக்கமாகத் தங்கள் மதத்திலிருந்து பெறப்பட்ட வார்த்தைகளில் விவரிப்பதை நான் பார்த்திருக்கிறேன். நீங்கள் ஒரு ஹிந்துவானதால் ப்ரம்மா, விஷ்ணு, சிவனைப் பற்றிப் பேசுகிறீர்கள்; ஹிந்து அணுகுமுறையையும், உருவகங்களையும் உபயோகப்படுத்துகிறீர்கள். தயவுசெய்து உங்களுடைய வார்த்தைகளுக்குப் பின்னால் இருக்கும் அனுபவம் என்ன என்று எங்களுக்குச் சொல்லுங்கள். அவை குறிப்பிடும் மெய்மை என்ன?

**ம:** அது நான் பேசும் முறை; நான் உபயோகப்படுத்த எனக்குச் சொல்லிக் கொடுக்கப்பட்ட ஒரு மொழி.

**கே:**ஆனால் மொழிக்குப் பின்னால் என்ன இருக்கிறது?

**ம:** மறுதலிப்பதைத் தவிர நான் எப்படி வார்த்தைகளில் அதைச் சொல்ல முடியும்? ஆகவே, நான் காலமற்ற, இடமற்ற, காரணமற்ற என்பது போன்ற வார்த்தைகளை உபயோகப்படுத்துகிறேன். இவைகளும் வார்த்தைகளே. ஆனால் அவை அர்த்தமற்று இருப்பதால் அவை என் நோக்கத்திற்குப் பொருந்துகின்றன.

**கே:** அவை அர்த்தமற்று இருந்தால் ஏன் உபயோகப்படுத்த வேண்டும்?

**ம:** ஏனெனில் எந்த வார்த்தையும் பொருந்தாததற்கு நீ வார்த்தைகளை வேண்டுகிறாய்.

**கே:** உங்களுடைய கருத்து எனக்குப் புரிகிறது. மறுபடியும் நீங்கள் என்னிடம் கேள்வி இல்லாமல் செய்து விட்டீர்கள்!

# 89.ஆன்மீக வாழ்க்கையில் முன்னேற்றம்

**கேட்பவர்:** நாங்கள் இங்கிலாந்திலிருந்து இந்தியாவைச் சுற்றிப் பார்க்க வந்துள்ள இரண்டு இளம் பெண்கள். யோகாவைப் பற்றி எங்களுக்கு மிகவும் குறைவாகத்தான் தெரியும். இந்திய வாழ்க்கை முறையில் ஆன்மீக ஆசிரியர்கள் முக்கியப் பங்கு வகிக்கிறார்கள் என்று நாங்கள் கேள்விப்பட்டதால் இங்கு வந்துள்ளோம்.

**மஹராஜ்:** உங்களை வரவேற்கிறேன். நீங்கள் புதிதாக எதையும் இங்கு பார்க்கமுடியாது. நாங்கள் இங்கு செய்யும் வேலை காலமற்றது. பத்தாயிரம் வருடங்களுக்கு முன்பும் இது போலவேதான் இருந்தது. பத்தாயிரம் வருடங்களுக்குப் பிறகும் இதுபோலவேதான் இருக்கும். நூற்றாண்டுகள் கடந்துபோனாலும். மனித இனத்தின் துன்பமும், துன்பத்தின் முடிவும் ஆகிய பிரச்சனைகள் மாறுவதில்லை.

**கே:** முன்பு ஒரு நாள் ஏழு இளம் வெளிநாட்டவர்கள் இங்கு வந்து சில இரவுகள் தூங்க இடம் கேட்டனர். அவர்கள் மும்பையில் பிரசங்கம் செய்துகொண்டிருக்கும் தங்களுடைய குருவைப் பார்க்க வந்துள்ளார்கள். நான் அந்தக் குருவைச் சந்தித்தேன். அவர் ஒரு இனிமையான தோற்றம் கொண்ட, உள்ளது உள்ளபடியே பேசும், சாமர்த்தியமானவர். ஆனால் அவரிடம் ஒரு அமைதியான சூழ்நிலையும், நிசப்தமும் இருந்தது. அவருடைய போதனை கர்ம யோகம், சுயநலமற்ற வேலை, குருவிற்குப் பணிவிடை செய்தல் ஆகியவற்றை வலியுறுத்துவதைக் கொண்ட மரபு சார்ந்தது. கீதை சொல்வது போல சுயநலமற்ற வேலை மீட்சிக்கு வழிவகுக்கும் என்று அவர் சொல்கிறார். ஆன்மீகப் பணியாளர்களுக்குப் பயிற்சி கொடுத்து, அவர்களைப் பல நாடுகளில் ஆன்மீக மையங்களை

ஆரம்பிக்கச் செய்ய வேண்டும் என்பது போன்ற நிறைய பேராவல் கொண்ட திட்டங்கள் அவரிடம் உள்ளன. அவர்களுக்கு அதிகாரத்தைமட்டும் அவர் கொடுக்கவில்லை; தன் பெயரில் வேலையைச் செய்ய சக்தியையும் கொடுத்துள்ளதுபோல் தெரிகிறது.

**ம:** ஆமாம். சக்தியை மற்றொருவருக்குக் கடத்துவது என்னும் ஒன்று உள்ளது.

**கே:** நான் அவர்களோடு இருந்தபோது பார்வைக்குத் தெரியாமல் மறைந்துபோவது என்னும் ஒரு விஷேசமான உணர்வு எனக்கு வந்தது. பக்தர்கள் குருவிடம் தாங்கள் சரணடையும்போது என்னிடமும் சரணடைந்தார்கள்! நான் அவர்களுக்கு என்ன செய்தாலும் அது அவர்களுடைய குரு செய்ததைப் போல. என்னை வெறுமனே ஒரு கருவியாகப் பார்த்ததைத் தவிர பொருட் படுத்தவே இல்லை. நான் ஒரு இடது பக்கமோ அல்லது வலது பக்கமோ திருப்பப்படுகின்ற தண்ணீர்க் குழாயாக மட்டுமே இருந்தேன். எந்தவிதமான தனிப்பட்ட தொடர்பும் இருக்க வில்லை. என்னை அவர்கள் தங்களுடைய வழிமுறைக்கு மாற்றச் சிறிதளவு முயற்சித்தார்கள்; என்னுடைய எதிர்ப்பை உணர்ந்த வுடன் அவர்கள் தங்களுடைய கவனத்தை என் மீது செலுத்துவதை விட்டுவிட்டார்கள். அவர்களுக்கிடையேகூட மிகுந்த தொடர்பு இருப்பதாகத் தெரியவில்லை. தங்களுடைய குருவின்மீது தாங்கள் கொண்டுள்ள பொதுவான ஆர்வம்தான் அவர்களை ஒன்றாகச் சேர்த்துவைத்துள்ளது. நான் அதை மிகவும் உணர்வற்றதாக, மனிதாபிமானமற்றதாகக் கண்டேன். கடவுளின் கரத்தில் ஒரு கருவியாகத் தன்னைக் கருதுவது ஒன்று. 'எல்லாமும் கடவுள்' என்பதால் எல்லாக் கவனத்தையும், அக்கறையையும் மறுப்பது கொடூரத்தில் முடியும் கருத்தற்ற தன்மைக்கு வழி வகுக்கும். எல்லாப் போர்களும் 'கடவுளின் பெயரால்' நடத்தப்பட்டவையே. மனித குலத்தின் முழுச் சரித்திரமும் 'புனிதப் போர்களின்' ஒரு தொடர்ச்சியே. போரில் இருப்பது போன்று மனிதத் தன்மையற்று வேறு எதிலும் இருப்பதில்லை.

**ம:** இருத்தலுக்கான மனோதிடத்தில் வற்புறுத்துதலும், எதிர்த்தலும் அடங்கி உள்ளன. இருத்தலுக்கான மனோ திடத்தை நீக்கிவிட்டால் என்ன மிஞ்சும்? இருப்பும், இருப்பில்லாமையும் இடம் மற்றும் காலம், இங்கு மற்றும் இப்போது, அங்கு மற்றும் அப்போது உள்ள சிலவற்றோடு தொடர்புடையவை. இவையெல்லாம் மனதில் உள்ளவை. மனம் ஒரு யூகிக்கும் விளையாட்டை விளையாடுகிறது. அது எப்போதும் உறுதியற்றும், பதட்டம் நிறைந்தும் மற்றும் அமைதியற்றும் இருக்கிறது. ஒரு கடவுள் அல்லது குருவின் கருவியாக வெறுமனே நடத்தப்படுவதை நீ ஒப்புக் கொள்வதில்லை. ஒரு நபராக நடத்தப்படுவதற்கு வலியுறுத்துகிறாய். ஏனெனில் உன் சொந்த இருத்தலைப்பற்றி உனக்கு உறுதியாகத் தெரியவில்லை. மற்றும் ஒரு நபராக இருப்பதின் சுகத்தையும், நிச்சயத் தன்மையையும் இழக்க விரும்பவில்லை. நீ என்னவாக உன்னை நினைத்துக் கொண்டிருக்கிறாயோ அவ்வாறு இல்லாமல் போகலாம். ஆனால் அது உனக்குத் தொடர்ச்சியைக் கொடுக்கிறது. உன் எதிர்காலம் எந்தவிதமான உந்துதலும் இல்லாமல் தற்பொழுதிற்குள் பாய்ந்து, எந்தவிதமான அலைக்கழிப்பும் இல்லாமல் கடந்த காலமாக ஆகிறது. தனிப்பட்ட நபராக இருப்பதை மறுக்கப்படுவது அச்சுருத்துகிறது. ஆனால் நீ அதை எதிர்கொண்டு, உன் அடையாளத்தை வாழ்க்கையின் முழுமைத் தன்மையில் காண். பிறகு யார் யாரை உபயோகப் படுத்துகிறார் என்னும் பிரச்சனை இருக்காது.

**கே:** எனக்குக் கொடுக்கப்பட்ட கவனமெல்லாம் என்னை அவர்களுடைய மார்க்கத்திற்கு மாற்றுவதற்கான முயற்சிக்காகவே. நான் எதிர்த்தபோது அவர்கள் என்மீது கொண்டிருந்த ஆர்வத்தை இழந்துவிட்டார்கள்.

**ம:** மாற்றப்படுவதாலோ, அல்லது எதிர்பாராமலோ ஒருவர் ஒரு சீடராக முடியாது. வழக்கமாக ஒரு புராதனமான இணைப்பு, பல ஜென்மங்களாகக் காப்பாற்றப்பட்டு, அன்பாகவும், நம்பிக்கை யாகவும் மலர்கிறது. அது இல்லாமல் சீடராக முடியாது.

**கே:**உங்களை எது ஒரு ஆசிரியராக இருக்க முடிவெடுக்கச் செய்தது?

**ம:** அவ்வாறு அழைக்கப்படுவதால் நான் அவ்வாறானேன். போதிக்க நான் யார்? யாருக்குப் போதிப்பது? நான் என்னவோ அதுதான் நீ; நீ என்னவோ அதுதான் நான். 'நான்' என்பது நம் எல்லோருக்கும் பொதுவானது; 'நானிற்கு' அப்பால் அளவற்ற ஒளி மற்றும் அன்பு இருக்கிறது. நாம் அதைப் பார்ப்பதில்லை. ஏனெனில் நாம் வேறு எங்கோ பார்க்கிறோம். நான் ஆகாயத்தைச் சுட்டிக் காட்டத்தான் முடியும்; நட்சத்திரத்தைப் பார்ப்பது உன் வேலை. சிலருக்கு நட்சத்திரத்தைப் பார்ப்பதற்கு நீண்ட காலம் எடுத்துக் கொள்ளும். சிலர் விரைவாகப் பார்த்துவிடுவார்கள். அது அவர்களுடைய பார்வையின் தெளிவையும், தேடுதலில் அவர்களுக்கு இருக்கும் மனமார்ந்த முயற்சியையும் பொருத்தது. இவை இரண்டும் அவர்களிடமே இருக்கவேண்டும். நான் ஊக்குவிக்கத்தான் முடியும்.

**கே:** நான் ஒரு சீடராக ஆனால் என்ன செய்ய வேண்டும்?

**ம:** ஒவ்வொரு ஆசிரியரும் அவருக்கே உரிய வழிமுறையைக் கொண்டிருப்பார். அது அவருடைய குருவின் போதனைகளையும், தான் மெய்யறிந்த வழியையும், தன் சொந்த வார்த்தை வடிவங்களையும் அடிப்படையாகக் கொண்டிருக்கும். அந்த வரையறைக்குள் சீடரின் தன்மைக்கேற்றவாறு அதில் சீரமைத்தல் செய்யப்படும். சீடருக்குச் சிந்தனையிலும், விசாரத்திலும் முழு சுதந்திரம் கொடுக்கப்பட்டு, அவர் மனமாற கேள்விகள் கேட்க ஊக்குவிக்கப்படுவார். அவர் குருவின் நிலைப்பாட்டிலும், வல்லமையிலும் முழுமையான நம்பிக்கையுடன் இருக்க வேண்டும். இல்லையென்றால் அவருடைய நம்பிக்கை முழுமையாக இருக்காது; செயல்பாடு முழுமையாக இருக்காது. உனக்குள் இருக்கும் பரிபூரணம் உனக்கு அப்பால் இருக்கும் பரிபூரணத்திற்கு எடுத்துச் செல்லும் - தீர்க்கமான உண்மை, அன்பு, சுயநலமின்மை ஆகியவை மெய்யறிதலைத் தீர்மானிக்கின்ற முக்கியக் காரணிகள். மெய்யார்வத்தால் இவை அடையப்படும்.

**கே:** சீடராக ஒருவர் தன் குடும்பத்தையும், உடைமைகளையும் விட்டுவிட வேண்டும் என்று அறிகிறேன்.

**ம:** அது குருவைப் பொருத்து மாறும். சிலர் தங்களுடைய முதிர்ந்த சீடர்கள் சந்நியாசியாகவும், துறவியாகவும் ஆக வேண்டுமென்று எதிர்பார்க்கிறார்கள். சிலர் குடும்ப வாழ்க்கையையும், கடமை களையும் ஊக்குவிக்கிறார்கள். பெரும்பாலானவர்கள் துறப்பதை விட ஒரு முன்மாதிரியான குடும்ப வாழ்க்கை மிகவும் கடினமான தென்றும், முதிர்ந்த மற்றும் நன்கு சமநிலையான மனமுள்ள ஒரு நபருக்குத்தான் அது பொருத்தம் என்றும் கருதுகிறார்கள். இளம் வயதில் ஆசிரம வாழ்க்கையின் ஒழுங்கும், கட்டுப்பாடும் அவசியம். ஆகையால் ஹிந்து மரபில் மாணவர்கள் 25 வயதுவரை மடத்துத் துறவி போல, வறுமையிலும், கற்புடனும், கீழ்ப்படிதலுடனும் வாழும்படி எதிர்பார்க்கப்படுகிறார்கள். அது அவர்களுக்குத் திருமண வாழ்க்கையின் கஷ்டங்களையும், தூண்டுதல்களையும் சந்திக்கக் கூடிய குணாதிசயத்தை உருவாக்க ஒரு வாய்ப்பளிக்கும்.

**கே:** இந்த அறையில் இருப்பவர்கள் யார்? அவர்கள் உங்களுடைய சீடர்களா?

**ம:** அவர்களையே கேள். வாய் வார்த்தை அளவில் ஒருவர் சீடராக முடியாது. ஆனால் ஒருவருடைய இருத்தலின் அமைதியான ஆழத்தில்தான் ஆக முடியும். உன் விருப்பப்படி சீடராக முடியாது. அது சுய மனோஉறுதியைவிட விதியைப் பொருத்த விஷயம். யார் ஆசிரியர் என்பது பொருட்டல்ல. அவர்கள் அனைவரும் வாழ்த்துவார்கள். சீடரும், அவருடைய நேர்மையும், மெய்யார்வமும்தான் முக்கியம். சரியான சீடர் எப்போதும் சரியான ஆசிரியரைப் பெறுவார்.

**கே:** ஒரு தகுதிவாய்ந்த, அன்பான ஆசிரியரின் கீழ் மெய்யைத் தேட அர்ப்பணிக்கப்பட்ட ஒரு வாழ்க்கையில் அழகைப் பார்க்கவும், ஆசீர்வாதத்தை உணரவும் செய்கிறேன். துரதிர்ஷ்ட வசமாக நாங்கள் இங்கிலாந்திற்குத் திரும்ப வேண்டி உள்ளது.

**ம:** தூரம் ஒரு பொருட்டல்ல. உன் ஆசைகள் வலிமையாகவும், உண்மையாகவும் இருந்தால் அவை உன் வாழ்க்கையை அவற்றை நிறைவேற்றுவதற்காக வடிவமைக்கும். விதைகளை விதை. பருவ காலங்களுக்கு அதை விட்டுவிடு.

**கே:** *ஆன்மீக வாழ்க்கையில் முன்னேற்றத்தின் அறிகுறிகள் என்ன?*

**ம:** ஆவலிலிருந்து விடுதலை; இலகுவாகவும், மகிழ்சியுடனும் இருக்கும் உணர்வு, அகத்தில் ஆழ்ந்த அமைதி, புறத்தில் அளவுக்கதிகமான உற்சாகம்.

**கே:** *நீங்கள் அதை எப்படிப் பெற்றீர்கள்?*

**ம:**நான் இவற்றையெல்லாம் என் குருவின் புனிதமான முன்னிலையில் பெற்றேன். நானாகச் சுயமாக எதையும் செய்யவில்லை. அவர் என்னை அமைதியாகவும் சாந்தமாகவும் இருக்கச்சொன்னார். நான் அதை என்னால் முடிந்த அளவு செய்தேன்.

**கே:** *உங்கள் முன்னிலையில் இருத்தலும் அவருடையதைப் போல சக்திவாய்ந்ததா?*

**ம:** எனக்கு எப்படித் தெரியும்? எனக்கு அவர்தான் ஒரே சாந்நித்யம். நீ என்னுடன் இருந்தால் அவருடைய சாந்நித்யத்திலும் இருப்பாய்.

**கே:** *ஒவ்வொரு குருவும் அவருடைய குருவை எனக்குக் குறிப்பிடுகிறார்கள். ஆரம்பப் புள்ளி எங்கு உள்ளது?*

**ம:** பிரபஞ்சத்தில் மெய்ஞானம் பெறவும், விடுதலைக்கும் ஒரு சக்தி இயங்கிக் கொண்டிருக்கிறது. நாங்கள் அதைச் சதாசிவம் என்று சொல்கிறோம். அது மனிதர்களின் இதயத்தில் எப்போதும் உள்ளது. அது இணைக்கும் காரணி. ஒற்றுமை விடுதலை அளிக்கிறது. சுதந்திரம் இணைக்கிறது. முடிவாக எதுவுமே உன்னுடையதோ அல்லது என்னுடையதோ அல்ல. எல்லாமும் நம்முடையது. உன்னோடு ஒன்றாக இரு. அப்போது முழுப் பிரபஞ்சத்தையும் வீடாகக் கொண்டு எல்லோருடனும் ஒன்றாக இருப்பாய்.

**கே:** *வெறுமனே 'நான்' என்னும் உணர்வில் ஆழ்ந்திருப்பதால் இந்த மகிமைகள் எல்லாம் வரும் என்று சொல்கிறீர்களா?*

**ம:** எளிமையானதுதான் உறுதியானது, சிக்கலானதல்ல. எப்படியோ மக்கள் எளியதை, சுலபமானதை, எப்போதும்

கிடைக்கக்கூடியதை நம்புவதில்லை. நான் சொல்வதை நேர்மையாக ஏன் ஒரு முறை முயற்சி செய்யக் கூடாது? அது மிகச் சிறியதாகவும், முக்கியமில்லாததாகவும் தெரியலாம். ஆனால் அது ஒரு பெரும் மரமாக வளரும் விதையைப் போன்றது. உனக்கு ஒரு வாய்ப்பைக் கொடு!

**கே:** நான் பலர் இங்கு அமைதியாக அமர்ந்திருப்பதைப் பார்க்கிறேன். எதற்காக அவர்கள் வந்துள்ளார்கள்?

**ம:** தங்களைச் சந்திக்க. அவர்கள் வீட்டில் உலகம் அவர்களுக்கு மிகப் பெரியதாக இருக்கிறது. இங்கு எதுவும் அவர்களைத் தொந்தரவு செய்வதில்லை. தங்களுடைய தினசரிக் கவலைகளிலிருந்து விலகி இருக்கவும், அத்யாவசியமான ஆத்ம சிந்தனையைத் தங்களுக்குள் தொடரவும் அவர்களுக்கு இங்கு ஒரு வாய்ப்பு கிடைக்கிறது.

**கே:** சுயப் பிரக்ஞைக்குத் தேவையான பயிற்சி என்ன?

**ம:** பயிற்சி எதுவும் தேவையில்லை. பிரக்ஞை எப்போதும் உன்னுடன் உள்ளது. நீ புறத்தில் கொடுக்கும் அதே கவனத்தை அகத்திற்குத் திருப்பு. எந்தவிதமான புதிய அல்லது விஷேசமான பிரக்ஞையும் தேவையில்லை.

**கே:** நீங்கள் தனிப்பட்ட முறையில் மக்களுக்கு உதவுகிறீர்களா?

**ம:** மக்கள் இங்கு வந்து, தங்களுடைய பிரச்சனைகளைக் கலந்துரையாடுகிறார்கள். அவர்களுக்கு ஏதோ உதவி கிடைக்கிறது போல் தோன்றுகிறது. இல்லையென்றால் அவர்கள் வர மாட்டார்கள்.

**கே:** மக்களுடன் பேசுவது எப்போதும் எல்லோர் முன்னிலையிலுமா அல்லது அவர்களோடு தனியாகவும் பேசுவீர்களா?

**ம:** அது அவர்களுடைய விருப்பத்தைப் பொருத்தது. என்னைப் பொறுத்தவரை பொதுவானதற்கும், தனிப்பட்டதற்கும் வித்தியாசம் கிடையாது.

**கே:** உங்களை எப்போதும் சந்திக்க முடியுமா? அல்லது வேறு ஏதாவது வேலை உங்களுக்கு உள்ளதா?

**ம:** நான் எப்போதும் இருக்கிறேன். ஆனால் காலை வேளையும், பின் மாலைப் பொழுதும் சந்திக்க வசதியானவை.

**கே:** ஒரு ஆன்மீக குருவின் வேலையைவிட உயர்ந்த வேலை எதுவும் கிடையாது என்று புரிந்துகொண்டேன்.

**ம:** நோக்கம் மிகமிக முக்கியம்.



# 90. உன் சொந்தச் சுயத்திடம் சரணடை

**கேட்பவர்:** நான் அமெரிக்காவில் பிறந்தேன். கடந்த பதினான்கு மாதங்களை ஸ்ரீ ரமணாஸ்ரமத்தில் கழித்தேன்; இப்போது அமெரிக்காவிற்குத் திரும்பிச் செல்கிறேன். அங்கு என் தாய் எனக்காகக் காத்துக் கொண்டிருக்கிறார்.

**மஹராஜ்:** உன் திட்டங்கள் என்ன?

**கே:** நான் ஒரு தாதியாகப் பயிற்சி செய்யலாம். அல்லது திருமணம் செய்துகொண்டு குழந்தைகள் பெற்றுக் கொள்ளலாம்.

**ம:** எது உன்னைத் திருமணம் செய்துகொள்ள வேண்டுகிறது?

**கே:** ஒரு ஆன்மீக வீட்டை அமைப்பதுதான் என்னால் சிந்திக்கக் கூடிய மிக உயர்வான சமுதாயச் சேவை. ஆனால் வாழ்க்கை வேறு மாதிரி வடிவமெடுக்கலாம். எது வந்தாலும் நான் அதற்குத் தயார்.

**ம:**இந்தப் பதினான்கு மாதங்களில் ஸ்ரீ ரமணாஸ்ரமத்தில் உனக்கு என்ன கிடைத்தது? நீ அங்கு வந்த போது இருந்ததற்கும், இப்போது இருப்பதற்கும் என்ன வித்தியாசம்?

**கே:** எனக்கு பயம் என்பது மேற்கொண்டு இல்லை. நான் சிறிது அமைதியடைந்தேன்.

**ம:** எந்த மாதிரியான அமைதி அது? நீ வேண்டுவதைப் பெற்ற அமைதியா அல்லது எது உன்னிடம் இல்லையோ அதை வேண்டாதிருப்பதால் ஏற்படும் அமைதியா?

**கே:** இரண்டிலிருந்தும் கொஞ்சம் என்று நினைக்கிறேன். அது சுலபமே அல்ல. ஆசிரமம் மிகவும் அமைதியான இடமாக இருந்தபோதும், அகத்தளவில் நான் வேதனையுடன் இருந்தேன்.

**ம:** அகத்திற்கும், புறத்திற்கும் வேறுபாடு மனதில்தான் உள்ளது என்று அறிந்த பிறகு நீ மேற்கொண்டு பயப்பட மாட்டாய்.

**கே:** அம்மாதிரியான அறிதல் எனக்கு வந்துபோகிறது. நான் இன்னும் மாற்ற முடியாத தன்மையின் பூரணமான முழுமையை அடையவில்லை.

**ம:** நன்று. அவ்வாறு நீ நம்பும்வரை, முழுமையடையவில்லை என்னும் தவறான கருத்தைப் போக்க உன் சாதனாவைத் தொடர வேண்டும். சாதனா மேலே திணிக்கப்பட்டவைகளைப் போக்குகிறது. இடத்திலும், காலத்திலும் உள்ள ஒரு புள்ளியை விடக் குறைவாக, மேற்கொண்டு வெட்டமுடியாத அளவிற்கு மிகவும் சிறியதாக, கொல்ல முடியாதபடி மிக மிகக் குறைந்த காலமே வாழ்வதாக உன்னை அறிந்தால் பிறகு, பிறகு மட்டுமே எல்லா அச்சமும் போகும். நீ ஒரு ஊசியின் முனையை விடச் சிறியதாக இருந்தால் - ஊசி உன்னைத் துளைக்க முடியாது - நீ ஊசியைத் துளைப்பாய்!

**கே:** ஆமாம், அப்படித்தான் சில சமயம் நான் நினைக்கிறேன் - அசாத்தியமானவளாக. நான் அச்சமற்று இருப்பதற்கு மேலே - நான் அச்சமற்ற தன்மையேதான் என்று உணர்கிறேன்.

**ம:** எது உன்னை ஸ்ரீ ரமணாஸ்ரமத்திற்குச் செல்ல வைத்தது?

**கே:** எனக்கு ஒரு சந்தோஷமில்லாத காதல் இருந்தது. அதனால் நரகவேதனையை அடைந்தேன். மதுவோ, போதைப் பொருட்களோ எனக்கு உதவ முடியவில்லை. நான் தடுமாறிக் கொண்டிருந்தேன். அப்போது யோகாவைப் பற்றிய சில புத்தகங்களைப் படிக்க நேர்ந்தது. ஒரு புத்தகத்திலிருந்து மற்றொரு புத்தகமாகப் படித்து, ஒரு குறிப்பிலிருந்து மற்றொரு குறிப்பாக அறிந்து ஸ்ரீ ரமணாஸ்ரமத்திற்குச் சென்றேன்.

**ம:** அதே மாதிரியான பேரிடர் உனக்கு மறுபடியும் நேர்ந்தால், உன்னுடைய தற்போதய மனோ நிலையில் முன்புபோலவே துன்பப் படுவாயா?

**கே:** இல்லை, இல்லை. நான் என்னைத் துன்பப்பட விட மாட்டேன். என்னைக் கொன்று விடுவேன்.

**ம:** அப்படியானால் உனக்குச் சாகப் பயமில்லை!

**கே:** எனக்குச் சாவதற்குப் பயம்தான். ஆனால் சாவைப் பற்றி அல்ல. சாவது வலியும், அசிங்கமுமானது என்று நான் நினைக்கிறேன்.

**ம:** உனக்கு எப்படித் தெரியும்? அது அப்படி இருக்க வேண்டியதில்லை. அது அழகாகவும், அமைதியானதாகவும் இருக்கலாம். இறப்பு உடலுக்குத்தான் நிகழ்கிறது, உனக்கு அல்ல என்று தெளிவாகத் தெரிந்து கொண்ட பிறகு, நீ உன் உடல் ஒரு கழட்டிப் போட்ட துணியைப் போல விழுவதைக் கவனிப்பாய்.

**கே:** இறத்தலின் மேல் எனக்குள்ள அச்சம் என் எதிர்பார்க்கும் அச்ச உணர்வினால் வருவது என்றும், அறிவினால் அல்ல என்றும் எனக்கு நன்கு தெரியும்.

**ம:** மக்கள் ஒவ்வொரு வினாடியும் சாகிறார்கள். இறத்தலின் அச்சமும், வேதனையும் உலகில் இருண்ட மேகத்தைப் போலத் தொங்கிக் கொண்டிருக்கின்றன. நீயும் அச்சப்படுவதில் அதிசயம் எதுவும் இல்லை. ஆனால் உடல் மட்டும்தான் இறக்கிறது, ஞாபகத்தின் தொடர்ச்சியோ, அதில் பிரதிபலிக்கப்படும் 'நான்' என்னும் உணர்வோ அல்ல. இதைத் தெளிவாக நீ அறிந்துவிட்டால் மேற்கொண்டு பயப்படமாட்டாய்.

**கே:** நன்று. இறக்கும்போது எப்படி என்று பார்க்கலாம்.

**ம:** கவனத்தைச் செழுத்து. அப்போது பிறப்பும், இறப்பும் ஏக ரூபம் என்றும், வாழ்க்கை இருத்தலுக்கும், இருத்தல் இல்லாமைக்கும் இடையில் துடிக்கிறது என்றும், முழுமைத் தன்மைக்கு ஒன்றுக்கு மற்றொன்று தேவை என்றும் காண்பாய். நீ இறப்பதற்காகப் பிறக்கிறாய். மறுபடியும் பிறப்பதற்காக இறக்கிறாய்.

**கே:** பற்றற்ற தன்மை இந்தச் செயல்பாட்டை நிறுத்தாதா?

**ம:** பற்றற்ற தன்மையோடு பயம் போய்விடும். ஆனால் நிஜம் போகாது.

**கே:** நான் மறுபடியும் பிறக்க நிர்பந்திக்கப்படுவேனா? எவ்வளவு பயங்கரம்!

**ம:** நிர்பந்தம் எதுவும் கிடையாது. நீ என்ன வேண்டுகிறாயோ அதைப் பெறுகிறாய். நீ உன் சொந்தத் திட்டங்களை வகுத்து அவற்றைச் செயல்படுத்துகிறாய்.

**கே:** நாம் துன்பப்படுவதற்காக நம்மையே தண்டித்துக் கொள்கிறோமா?

**ம:** நாம் ஆராய்வதால் வளர்கிறோம். ஆராய நமக்கு அனுபவம் தேவை. நாம் புரிந்துகொள்ளாததை திரும்பச் செய்ய எத்தனிக்கிறோம். நாம் உணர்வுடனும், புத்திசாலித்தனத்துடனும் இருந்தால் துன்பப்பட வேண்டியதில்லை. வலி என்பது கவனத்தை ஈர்ப்பது மற்றும் அலட்சியத்திற்கு அபராதமும் ஆகும். புத்திசாலித் தனமான மற்றும் வாஞ்சையான செயல்பாடுதான் ஒரே நிவாரணம்.

**கே:** நான் புத்திசாலித்தனத்தில் வளர்ந்ததால் மறுபடியும் என் துன்பத்தைத் தாங்கிக்கொள்ள முடியாது. தற்கொலையில் என்ன தவறு?

**ம:** அது பிரச்சனையைத் தீர்த்தால் தவறு எதுவும் இல்லை. இல்லையென்றால் எப்படி? சில வலிமிகுந்த, தீராத வியாதி இருப்பது, அல்லது தாங்க முடியாத பேரிடர் போன்ற சில அரிதான காரணங்களால் ஏற்படும் துன்பத்திற்குத் தற்கொலை ஓரளவு நியாயமானதாக இருக்கலாம். ஆனால் எங்கு ஞானமும், அன்பும் இல்லையோ அங்கு தற்கொலை உதவாது. ஒரு முட்டாள்தனமான இறத்தலுக்கு, ஒரு முட்டாள்தனமான மறுபிறவி என்று அர்த்தம். தவிர, கர்மாவைப் பற்றிய கேள்வியும் கருதப்பட வேண்டியுள்ளது. தாங்கிக்கொள்வதுதான் வழக்கமாக மிகவும் புத்திசாலித் தனமான வழி.

**கே:** துன்பம் எவ்வளவுதான் தீவிரமாகவும், நம்பிக்கையற்று இருந்தாலும் ஒருவர் பொறுத்துக் கொள்ள வேண்டுமா?

**ம:** தாங்கிக்கொள்வது ஒன்று. ஏற்றுக் கொள்ளாத வேதனை மற்றொன்று. தாங்கிக்கொள்வது அர்த்தமுள்ளது மற்றும் பயனுள்ளது. ஏற்றுக் கொள்ளாத வேதனையோ பயனற்றது.

**கே:** கர்மாவைப் பற்றி ஏன் கவலைப்பட வேண்டும்? எப்படி இருந்தாலும் அது தன்னைப்பற்றி அதுவே பார்த்துக் கொள்ளும்.

**ம:** பெரும்பாலான கர்மா சமுதாயத்தால் ஒன்று சேர்க்கப் பட்டது. எப்படி மற்றவர்கள் நமக்காகத் துன்பப்படுகிறார்களோ அப்படி நாம் மற்றவர்களுடைய பாவங்களுக்காகத் துன்பப்படு கிறோம். மனித இனம் ஒன்றே. இந்த நிஜத்தை அறியாமல் இருப்பது அதை மாற்றாது. மற்றவர்களுடைய துன்பங்களுக்கு நாம் அக்கறையுடன் இருந்திருந்தால் நாம் மிகவும் சந்தோஷமான மனிதர்களாக இருந்திருப்போம்.

**கே:** நான் மிகவும் அதிகப் பொறுப்புள்ளவளாக வளர்ந்துள்ளதைப் பார்க்கிறேன்.

**ம:** நன்று. நீ இதைச் சொல்லும்போது உன் மனதில் என்ன உள்ளது? உன்னை ஒரு பெண் உடலில் உள்ள ஒரு பொறுப்புள்ள நபராகவா?

**கே:** ஒரு உடல் உள்ளது; அதில் கருணை உள்ளது; ஞாபகம் உள்ளது; பலவிதமானவையும், பல மனப்பாங்குகளும் உள்ளன; மொத்தத்தில் அவற்றை ஒரு நபர் என்று சொல்லலாம்.

**ம:** 'நான்' என்னும் கருத்தும் கூடவா?

**கே:** 'நான்' என்பது ஒரு கூடையைப் போல ஒரு நபரை உருவாக்குகின்ற பலவற்றைக் கொண்டுள்ளது.

**ம:** அல்லது, அது கூடையைப் பின்னியிருக்கும் மட்டையைப் போல. உன்னை ஒரு பெண் என்று நினைக்கும்போதுதான் நீ பெண் என்று அர்த்தப்படுகிறாயா அல்லது உன் உடல் பெண் என்று விவரிக்கப் படுகிறதா?

**கே:** அது என் மனோபாவத்தைப் பொருத்தது. சில சமயம் என்னை வெறுமனே பிரக்ஞையின் ஒரு மையமாக உணர்கிறேன்.

**ம:** அல்லது ஒரு பிரக்ஞைக் கடலாக. ஆனால் எதிர்பாராமல் இல்லாமல், சூழ்நிலைகளாலும், நிபந்தனைகளாலும் உருவான, ஆணாகவோ அல்லது பெண்ணாகவோ இல்லாத கணங்கள் இருந்ததா?

**கே:** ஆமாம், இருந்தன. ஆனால் அதைப் பற்றிப் பேசக் கூச்சமாக இருக்கிறது.

**ம:** ஒரு குறிப்பைத்தான் ஒருவர் எதிர்பார்க்க முடியும். நீ மேற்கொண்டு எதுவும் சொல்ல வேண்டியதில்லை.

**கே:** உங்கள் முன்னிலையில் புகைபிடிக்க எனக்கு அனுமதி உண்டா? ஒரு ஞானியின் முன் புகைப்பது வழக்கமில்லை; அதுவும் முக்கியமாக ஒரு பெண்ணிற்குக் கிடையாது என்று எனக்குத் தெரியும்.

**ம:** நீ புகைக்கலாம். யாரும் பொருட்படுத்த மாட்டார்கள். எங்களுக்குப் புரியும்.

**கே:** குளிரவும், அமைதியடையவும் வேண்டியதன் தேவையை நான் உணர்கிறேன்.

**ம:** அமெரிக்கர்களுக்கும், ஐரோப்பியர்களுக்கும் அடிக்கடி அவ்வாறுதான். ஒரு தொடர்ந்த சாதனாவிற்குப் பிறகு அவர்கள் சக்தி ஏற்றப் பட்டு, தீவிரமாக ஒரு வடிகாலைத் தேடுகிறார்கள். அவர்கள் குழுக்களை ஏற்பாடு செய்கிறார்கள், யோகாவைக் கற்றுக் கொடுக்கும் ஆசிரியர்கள் ஆகிறார்கள், திருமணம் செய்து கொள்கிறார்கள், புத்தகம் எழுதுகிறார்கள் - அமைதியாக இருப்பதையும், சக்தியை உள்முகமாகத் திருப்பி, தீராத சக்தியின் ஆதாரத்தைக் காண்பதையும், அதைக் கட்டுப்பாட்டில் வைத்திருக்கும் கலையைக் கற்றுக் கொள்வதையும் தவிர மற்ற எல்லாவற்றையும் செய்கிறார்கள்.

**கே:** நான் மிகவும் சக்தியோடு இருப்பதாக உணர்வதால், திரும்பச் சென்று ஒரு செயல்துடிப்புள்ள வாழ்க்கையை வாழ விரும்புகிறேன் என்பதை ஒப்புக் கொள்கிறேன்.

**ம:** உன்னை உடலும், மனமுமாக எடுத்துக் கொள்ளாதவரை நீ விரும்புவதைச் செய்யலாம். உடலையும், அதோடு போகின்றவை

களையும் உண்மையாகவே விட்டு விடுதல் அவ்வளவு முக்கிய மானவை அல்ல. நீ உடல் அல்ல என்றும், உடலிலிருந்து தனித்தவள் என்றும் தெளிவாகப் புரிந்து கொள். ஒரு விட்டேத்தியான உணர்வு, உணர்ச்சிபூர்வமான ஈடுபாடில்லாமை தான் முக்கியம்.

**கே:** நீங்கள் சொல்வது எனக்குப் புரிகிறது. நான்கு வருடங்களுக்கு முன்பு நான் பொருள்மயமானவைகளை ஒதுக்குதல் என்னும் காலகட்டத்தைக் கடந்தேன். எனக்காக உடைகள் வாங்கிக் கொள்ளவில்லை, எளிமையான உணவுகளை உண்டேன், மரப் பலகைகளின்மேல் படுத்துத் தூங்கினேன். வசதிகள் இல்லா மலிருப்பதை ஏற்றுக்கொள்வதுதான் முக்கியம்; உண்மையான அசௌகரியங்கள் முக்கியம் அல்ல. இப்போது வாழ்க்கையை அது வருவதுபோல் வரவேற்பதும், அது கொடுக்கும் எல்லாவற்றையும் நேசிப்பதும்தான் மிகச் சிறந்தது என்று அறிந்துகொண்டேன். வருவதை நான் மகிழ்சியோடு ஏற்றுக்கொள்கிறேன். அதைச் சிறப்பாக மாற்றிக்கொள்கிறேன். ஒரு சில குழந்தைகளுக்கு வாழ்க்கையும், உண்மையான பண்பாட்டையும் என்னால் கொடுக்க முடிந்தால் அது போதும். என் இதயம் ஒவ்வொரு குழந்தைக்காக இருந்தாலும், என்னால் எல்லோரையும் அடைய முடியாது.

**ம:** ஆண் - பெண் உணர்வுடன் நீ இருந்தால்தான் திருமண மானவள் மற்றும் ஒரு தாய். உன்னை உடலாகக் கருதாவிட்டால் உடலின் குடும்ப வாழ்க்கை எவ்வளவுதான் தீவிரமாகவும், சுவாரசியமாகவும் இருந்தாலும் அது மனத்திரையின் மேல் உள்ள நாடகமாகத்தான் தோன்றும். அப்போது பிரக்ஞையின் ஒளி மட்டும்தான் ஒரே மெய்மை.

**கே:** பிரக்ஞையை மட்டுமே ஏன் ஒரே மெய்மை என்று வலியுறுத்துகிறீர்கள்? பிரக்ஞை சுட்டுகின்ற பொருள் அது இருக்கும்வரை மெய் இல்லையா?

**ம:** ஆனால் அது நீடித்து இருக்காது! கண நேர மெய்மை இரண்டாம்பட்சமானது; அது காலமற்றதைச் சார்ந்திருக்கிறது.

**கே:** நீங்கள் குறிப்பது தொடர்ச்சியானதையா அல்லது நிலையானதையா?

**ம:** இருப்பில் தொடர்ச்சி என்பது இருக்க முடியாது. தொடர்ச்சி கடந்தகாலத்தில், தற்பொழுதில், எதிர்காலத்தில் உள்ள அடையாளத்தைக் குறிக்கிறது. அப்படிப்பட்ட அடையாளம் சாத்தியமில்லை. ஏனெனில் அடையாளத்தின் வழிமுறை கூடக் குறையவும், மாறவும் கூடியது. தொடர்ச்சி, நிலைத்த தன்மை, இவையெல்லாம் ஞாபகத்தால் உருவாக்கப்படும் மாயைகள்; படிவமே இருக்க முடியாத இடத்தில் ஒரு படிவத்தின் வெறும் மன உருவகங்கள். எல்லாத் தற்காலிகமான அல்லது நிரந்தரமான, உடல் அல்லது மனம் பற்றிய, ஆண் அல்லது பெண்ணைப் பற்றிய கருத்துக்களையும் கைவிட்டுவிடு. பிறகு என்ன மிஞ்சும்? எல்லாப் பிரிவினைகளும் கைவிடப்பட்டால் உன் மனோ நிலை என்ன? நான் வேறுபாடுகளை விட்டுவிடுவதைப் பற்றிப் பேசவில்லை. ஏனெனில் அவையில்லாமல் தோற்றங்கள் இருக்காது.

**கே:** நான் பிரிக்கவில்லையென்றால் மகிழ்ச்சியாக, அமைதியுடன் இருக்கிறேன். ஆனால் நான் எப்படியோ என் கட்டுப்பாட்டை மறுபடியும், மறுபடியும் இழந்து, மகிழ்ச்சியைப் புறப் பொருட்களில் தேட ஆரம்பிக்கிறேன். ஏன் என் அக அமைதி நிலையாக இல்லை என்று என்னால் புரிந்து கொள்ள முடியவில்லை.

**ம:** அமைதியும்கூட மனதின் ஒரு நிலைதான்.

**கே:** மனதிற்கு அப்பால் நிசப்தம் இருக்கிறது. அதைப்பற்றிச் சொல்வதற்கு ஒன்றும் இல்லை.

**ம:**ஆமாம், நிசப்தத்தைப் பற்றிய எல்லாப் பேச்சுக்களும் வெறும் சப்தமே.

**கே:** தன்னுடைய சொந்த, இயற்கையான, தன்னிச்சையான மகிழ்ச்சியை ருசித்த பிறகும் நாம் ஏன் லோகாயதமான மகிழ்ச்சியைத் தேடுகிறோம்?

**ம:** மனம் உடலுக்குப் பணிபுரிய ஈடுபட்டிருக்கும்போது மகிழ்ச்சி தொலைந்து போகிறது. அதை மறுபடியும் பெற அது இன்பத்தை நாடுகிறது. மகிழ்ச்சியோடு இருப்பதற்கான உந்துதல் சரியானது. ஆனால் அதைப் பெறும் வழிமுறைகள்தான் தவறாக வழி நடத்துபவை, நம்ப முடியாதவை, உண்மையான மகிழ்ச்சியை அழிப்பவை.

**கே:** இன்பம் எப்போதும் தவறானதா?

**ம:** உடல் மற்றும் மனதின் சரியான நிலையும், உபயோகமும் செறிவாக இன்பமானவை. இன்பத்தைத் தேடுவதுதான் தவறானது. உன்னை மகிழ்ச்சியாக வைத்திருக்க முயலாதே. மாறாக, உன் மகிழ்ச்சிக்கான தேடுதலைக் கேள்வி கேள். நீ மகிழ்ச்சியற்று இருப்பதால் மகிழ்ச்சியை வேண்டுகிறாய். நீ ஏன் மகிழ்ச்சியற்று இருக்கிறாய் என்று கண்டுபிடி. நீ மகிழ்ச்சியற்று இருப்பதால் பொருள்மயமானவற்றில் மகிழ்ச்சியைத் தேடுகிறாய். அம்மாதிரியான இன்பம் வலியைக் கொண்டு வருகிறது. ஆகையால் அதை லோகாயதமானது என்று சொல்கிறாய். பிறகு துக்கம் இல்லாத, நீ தெய்வீகமானது என்று சொல்கிற, வேறு மாதிரியான இன்பங்களுக்கு ஏங்குகிறாய். உண்மையில் இன்பம் என்பது துக்கத்திலிருந்து தற்காலிகமான நிவாரணம். மகிழ்ச்சி என்பது லோகாயதமானது மற்றும் அவ்வாறல்லாதது; நிகழும் அனைத்திற் குள்ளும், அப்பாலும் இருப்பது. வேறுபாட்டை ஏற்படுத்தாதே. பிரிக்க முடியாததைப் பிரிக்காதே. வாழ்க்கையிலிருந்து உன்னை அன்னியப் படுத்தாதே.

**கே:** இப்போது எவ்வளவு நன்றாக உங்களைப் புரிந்து கொண்டிருக்கிறேன் பாருங்கள்! நான் ஸ்ரீ ரமணாஸ்ரமத்தில் தங்குவதற்கு முன்பு, மனசாட்சியால் கொடுமைப்படுத்தப்பட்டு, எப்போதும் என்னை மதிப்பீடு செய்துகொண்டு இருந்தேன். இப்போது நான் முற்றிலும் தளர்வாக, முழுவதுமாக நான் இருப்பது எப்படியோ அப்படி என்னை ஏற்றுக் கொள்கிறேன். நான் அமெரிக்காவிற்குத் திரும்பியபிறகு வாழ்க்கையை அது வருவது போல், ஸ்ரீ ரமண பகவானுடைய அருள் என்று ஏற்றுக் கொண்டு, கசப்பையும், இனிப்போடு ஆனந்தமாக அனுபவிப்பேன். ஸ்ரீ ரமண பகவானை நம்புவது என்பது நான் ஆசிரமத்தில் கற்றுக் கொண்டவைகளில் ஒன்று. நான் முன்பு இது போல இல்லை. முன்பு என்னால் நம்ப முடியாது.

**ம:** ஸ்ரீ ரமண பகவானை நம்புவது உன்னை நம்புவதற்குச் சமம். எது நடந்தாலும் அது உனக்கு நடக்கிறதென்றும், உன்னால் நடக்கிறதென்றும், உன் மூலம் நடக்கிறதென்றும், நீ உணர்ந்து

அறிகின்ற அனைத்தையும் நீதான் உருவாக்குபவர், அனுபவிப்பவர், அழிப்பவர் என்னும் பிரக்ஞையோடும் இரு. அப்போது நீ பயப்பட மாட்டாய். பயப்படாதிருந்தால் நீ மகிழ்ச்சியற்று இருக்க மாட்டாய்; மகிழ்ச்சியையும் தேட மாட்டாய்.

உன் மனம் என்னும் கண்ணாடியில் எல்லாவிதமான படங்களும் தோன்றி மறைகின்றன. அவை முற்றிலும் உன் சொந்த உருவாக்கம் என்று அறிந்து, அவை வந்துபோவதை அமைதியாகவும், உஷாராகவும், ஆனால் குழம்பாமலும் கவனி. இந்த அமைதியான கவனித்தல்தான் யோகாவின் அடித்தளம். நீ படத்தைப் பார்ப்பாய். ஆனால் நீ படம் அல்ல.

**கே:** நான் மறுபடியும் பிறக்க விரும்பாததால் இறத்தலைப் பற்றிய எண்ணம் என்னைப் பயப்படுத்துகிறது. யாரும் என்னை நிர்பந்திக்கவில்லை. இருப்பினும் நிறைவேறாத வாசனைகளின் அழுத்தம் அதிகப்படியாக இருக்கின்றன. ஆகையால் மறுபிறப்பை என்னால் தடுக்க இயலாது.

**ம:** தடுப்பது என்னும் கேள்வி எழுவதில்லை. பிறப்பதும், மறுபடியும் பிறப்பதும் நீ அல்ல. அது நிகழட்டும். அது நிகழ்வதைப் பார்.

**கே:** பிறகு ஏதொன்றையும் ஏன் பொருட்படுத்த வேண்டும்?

**ம:** ஆனால் நீதான் பொருட்படுத்துகிறாய்! உண்மை, அன்பு, அழகு ஆகியவற்றைப் பற்றிய உன்னுடைய சொந்த உணர்வு, நீ அவற்றைப் பற்றி உருவகப்படுத்திக் கொண்டுள்ள படத்தோடு மோதும்வரை நீ பொருட்படுத்துவாய். ஒத்திசைவிற்கும், அமைதிக்கும் ஆசைப்படுவது தவிர்க்க முடியாதது. ஆனால் அவை நிறைவேறிவிட்டால் அக்கறை இல்லாமல் போய்விடும். பௌதீக வாழ்க்கை பிரயத்தனமற்றதாகி, கவனத்தின் நிலைக்குக் கீழே இருக்கும். பிறகு, நீ உடலில்கூட பிறந்திருக்க மாட்டாய். உடலோடு இருப்பதும், உடல் இல்லாமல் இருப்பதும் உனக்கு ஒன்றுதான். உனக்கு எதுவுமே நடக்க முடியாத ஒரு நிலையை அடைவாய். உடல் இல்லாததால் உன்னைக் கொல்ல முடியாது; உடைமைகள் இல்லாததால் உன்னிடம் திருட முடியாது; மனம் இல்லாததால் உன்னை ஏமாற்ற முடியாது. ஒரு ஆசையோ அல்லது அச்சமோ

தொக்கி நிற்கப் புள்ளி எதுவும் இருக்காது. உனக்கு எந்த மாற்றமும் நிகழ முடியாதவரை வேறு என்ன முக்கியம்?

**கே:** எப்படியோ, எனக்கு இறத்தல் என்னும் கருத்து பிடிக்கவில்லை.

**ம:** அது ஏனெனில் நீ மிகவும் இளமையோடிருக்கிறாய். எவ்வளவுக்கெவ்வளவு அதிகமாக உன்னைப் பற்றி உனக்குத் தெரியுமோ அவ்வளவுக்கவ்வளவு குறைவாக நீ பயப்படுவாய். கண்டிப்பாக இறத்தலின் வேதனை ஒருபோதும் பார்க்க இனிமையாக இருக்காது. ஆனால் இறக்கும் மனிதன் அறிதாகத்தான் இறக்கும் உணர்வுடன் இருப்பார்.

**கே:** அவர் விழிப்புணர்விற்குத் திரும்புவாரா?

**ம:** அது பெருமளவில் தூக்கத்தைப் போன்றது. சிறிது காலத்திற்கு நபர் கவனத்தில் இருக்க மாட்டார். பிறகு திரும்பிவிடுவார்.

**கே:** அதே நபராகவா?

**ம:** நபர், சூழ்நிலைகளின் ஒரு உருவாக்கமாக இருப்பதால், எப்படித் தீ அதன் எரிபொருளைப் பொறுத்து மாறுகிறதோ அப்படி, அவற்றோடு சேர்ந்து அவசியமாக மாறும். செயல்பாடு மட்டும் இடத்தையும், காலத்தையும் உருவாக்கிக் கொண்டு மேற்கொண்டு தொடரும்.

**கே:** நன்று. கடவுள் என்னைப் பார்த்துக் கொள்வார். நான் எல்லாவற்றையும் அவரிடம் விட்டுவிடலாம்.

**ம:** கடவுளின்மேல் வைக்கப் படும் நம்பிக்கையும்கூட செல்லும் வழியில் ஒரு நிலைதான். முடிவாக நீ எல்லாவற்றையும் கைவிட்டு விடுவாய். ஏனெனில் நீ வார்த்தைகளால் வெளிப்படுத்த முடியாத, மிக எளிதான ஒன்றை அடைவாய்.

**கே:** நான் இப்போதுதான் ஆரம்பிக்கிறேன். ஆரம்பத்தில் எனக்கு எந்தவிதமான பற்றும், நம்பிக்கையும் கிடையாது. நிகழ்வுகள் நடப்பதுபோல் நடக்க விடுவதில் எனக்குப் பயம். உலகம் மிகவும் அபாயகரமானதாகவும், விரோதமானதாகவும் எனக்குத் தோன்றியது. இப்போது, குறைந்தபட்சம் குருவையோ, கடவுளையோ

நம்புவதைப் பற்றி நான் பேசவாவது முடிகிறது. என்னை வளர விடுங்கள். என்னை வேகமாகச் செல்லும்படி துரத்தாதீர்கள். என்னால் முடிந்த வேகத்தில் முன்னேற விடுங்கள்,

**ம:** எல்லா விதத்திலும் முன்னேறு. ஆனால் நீ முன்னேறு வதில்லை. நீ இன்னும் ஆண் - பெண், முதுமை - இளமை, வாழ்தல் - இறத்தல் ஆகிய கற்பனைகளில் சிக்கிக் கொண்டிருக்கிறாய். மேற்கொண்டு செல்; அப்பால் செல். கவனிக்கப்பட்ட ஒன்று, கடந்து போகக் கூடிய ஒன்றாகும்.

**கே:** ஐயா, நான் எங்கு சென்றாலும் மக்கள் என்னிடம் குறை கண்டு பிடித்து, தொல்லைப் படுத்துகிறார்கள். நான் இந்த ஆன்மீகச் செல்வத்தைத் தேடுவதில் சோர்ந்து போய்விட்டேன். எதிர் காலத்தையது எவ்வளவுதான் மகத்துவமானதாக இருந்தாலும் அதற்காக என்னுடைய தற்போதையதைத் தியாகம் செய்யும் அளவிற்கு அதில் என்ன தவறு? மெய்மை தற்பொழுதில் உள்ள தென்று நீங்கள் சொல்கிறீர்கள். அதை நான் விரும்புகிறேன். எனக்கு அது வேண்டும். நான் என் நிலைப்பாட்டைப் பற்றியும், அதன் எதிர்காலத்தைப் பற்றியும் சாசுவதமாகப் பதற்றத்துடன் இருக்க விரும்பவில்லை. அதிகப் படியானதையும், மேம்பட்டதையும் நான் துரத்திச்சென்று பிடிக்கவிரும்பவில்லை. என்னிடம் என்ன உள்ளதோ அதை விரும்ப விடுங்கள்.

**ம:** நீ சொல்வது மிகவும் சரி. அதைச் செய். நாணயமாக மட்டும் இரு - உன்னிடம் இருப்பதை நேசி - கடும் முயற்சியும், சிரமமும் படாதே.

**கே:** இதைத்தான் நான் குருவிடம் சரணடைவது என்று சொல்கிறேன்.

**ம:** அதை ஏன் வெளிப்புற சமாச்சாரமாக்குகிறாய்? உன் சொந்தச் சுயத்திடம் சரணடை. ஒவ்வொன்றும் அதன் ஒரு வெளிப்பாடு தான்.

## 91. இன்பமும், மகிழ்ச்சியும்

**கேட்பவர்:** என் நண்பர் ஒருவர், சுமார் 25 வயது இளைஞர், தீராத இதய நோயுடன் அவதிப்படுகிறார். மெதுவான இறத்தலைவிட தான் தற்கொலையைத் தெரிவு செய்வதாக எனக்குக் கடிதம் எழுதினார். மேற்கத்திய மருத்துவத்தால் குணப்படுத்த முடியாத ஒரு நோயை வேறு வழியில் குணமாக்க முடியலாம் என்று பதில் எழுதினேன். மனித உடலில் உடனடியான மாற்றங்களைக் கொண்டுவரும் சில யோக சக்திகள் உள்ளன. திரும்பத் திரும்ப இருக்கும் உபவாசம் அதிசயங்களை உருவாக்கும். இறப்பதற்கு அவசரப்பட வேண்டாம்; அதற்குப் பதிலாக மற்ற அணுகு முறைகளுக்கு ஒரு வாய்ப்பைக் கொடுக்கலாம் என்று அவருக்கு எழுதினேன்.

சில அதிசயமான சக்திகளைக் கொண்டுள்ள ஒரு யோகி மும்பைக்கு அருகில் உள்ளார். உடலை இயக்குகின்ற ஆதாரமான சக்திகளைக் கட்டுப்பாட்டிற்குள் வைத்திருப்பதில் அவர் வல்லுனர். நான் அவருடைய சில சீடர்களைச் சந்தித்தேன். அவர்கள் மூலமாக என் நண்பரின் கடிதத்தையும், புகைப் படத்தையும் அவருக்கு அனுப்பி வைத்துள்ளேன். என்ன நடக்கிறது என்று பார்ப்போம்.

**மஹராஜ்:** ஆமாம். அதிசயங்கள் அடிக்கடி நடக்கின்றன. ஆனால் வாழ மனோதிடம் அவசியம். அது இல்லாமல் அதிசயங்கள் நடக்காது

**கே:** அதுமாதிரியான ஆசையை நுழைக்கச் செய்ய முடியுமா?

**ம:** மேலோட்டமான ஆசையை முடியும். ஆனால் அது தேய்ந்து போய்விடும். அடிப்படையாக, யாரும் மற்றொருவரை வாழும்படி நிர்பந்திக்க முடியாது. தவிர, தற்கொலைக்கு ஒப்புக்கொள்ளப் பட்ட மற்றும் மரியாதையான இடம் சில கலாச்சாரங்களில் உண்டு.

**கே:** ஒருவருடைய இயற்கையான வாழ்நாளைக் கழிப்பது கடமையல்லவா?

**ம:** இயற்கையாக - தன்னிச்சையாக - சுலபமாக - ஆமாம். ஆனால் வியாதியும், துன்பப்படுதலும் இயற்கையானவை அல்ல. எது வந்தாலும் அதை அசைக்க முடியாத சகிக்கும் தன்மையுடன் தாங்கிக் கொள்வதில் உன்னதமான ஒழுக்கம் இருக்கிறது. ஆனால் அர்த்தமற்ற கொடுமையையும், அவமானத்தையும் மறுப்பதிலும் மதிப்பு இருக்கிறது.

**கே:** ஒரு சித்தரால் எழுதப்பட்ட புத்தகம் எனக்குக் கொடுக்கப் பட்டது. அதில் அவருடைய வினோதமான மற்றும் ஆச்சரியகர மான அனுபவங்களை விவரிக்கிறார். அவர் சொல்வதன்படி ஒரு உண்மையான சாதகரின் பயணம் அவருடைய குருவைச் சந்திப்பதிலும், தன் உடல், மனம் மற்றும் இதயத்தை அவருக்குச் சரணடையச் செய்வதிலும் முடிகிறது. அதன்பிறகு குரு பொறுப் பெடுத்துக் கொண்டு, சீடரின் வாழ்க்கையில் நிகழும் சிறிய நிகழ்விற்குக்கூட, தாங்கள் இருவரும் ஏகரூபமாகும்வரை பொறுப்பாகிறார். அந்த ஏக ரூபமாவதை மெய்யறிதல் என்று ஒருவர் சொல்லலாம். சீடர் தன்னால் கட்டுப் படுத்த முடியாத மற்றும் தடுக்க முடியாத ஒரு சக்தியால் ஆட்கொள்ளப்பட்டு, புயலில் அகப்பட்ட இலை போல அலைக்கழிக்கப் படுவதாக உணர்வார். குருவின் அன்பின் மேலும், சக்தியின் மேலும் அவருக் குள்ள நம்பிக்கை ஒன்றேதான் அவரைப் பைத்தியத்திலிருந்தும், இறப்பிலிருந்தும் பாதுகாப்பாக வைக்கும்.

**ம:** ஒவ்வொரு ஆசிரியரும் அவருடைய சொந்த அனுபவத்தின்படி போதிப்பார். அனுபவம் நம்பிக்கையால் வடிவமைக்கப்படுகிறது. நம்பிக்கை அனுபவத்தால் வடிவமைக்கப் படுகிறது. குருவும்கூட சீடரின் உருவகத்தின்படி வடிவமைக்கப் படுகிறார். சீடர்தான் குருவை உயர்வானவராக்குகிறார். ஒருமுறை குரு அகமும், புறமும் இயங்குகின்ற ஒரு விடுதலை அளிக்கும் சக்தியின் பிரதிநிதியாகப் பார்க்கப்பட்டால் மனப்பூர்வமாகச் செய்யப்படும் சரணாகதி இயற்கையாகவும், சுலபமாகவும் நடக்கும். எப்படி வலியால் துடிக்கும் மனிதர் ஒரு அறுவை சிகிச்சை

மருத்துவரிடம் தன்னை முற்றிலுமாக ஒப்படைத்துவிடுவாரோ அப்படி, சீடர் எந்தவிதமான நிபந்தனையுமில்லாமல் குருவிடம் தன்னை ஒப்படைத்து விடுவார். உதவியின் தேவை மிகவும் தீவிரமாக உணரப்படும்போது, அதைத் தேடுவது இயற்கை. குரு எவ்வளவுதான் சக்தி உடையவராக இருந்தாலும் அவர் தன்னுடைய விருப்பத்தை மற்றொருவர் மீது திணிக்கமாட்டார். மற்றொரு புறம் நம்பிக்கையற்ற, தயங்குகின்ற ஒரு சீடர் ஆத்ம சித்தியைப் பெற மாட்டார். அதில் குருவின் தவறு எதுவும் இருக்காது.

**கே:** பிறகு என்ன நடக்கிறது?

**ம:** மற்ற எல்லாமும் தோற்றபிறகு, வாழ்க்கை போதிக்கிறது. ஆனால் வாழ்க்கையின் பாடங்கள் வருவதற்கு நீண்டகாலம் எடுத்துக் கொள்கிறது. தாமதமும், தொல்லைகளும் நம்புவதாலும், கீழ்ப்படிவதாலும் தவிர்க்கப்படுகின்றன. அம்மாதிரியான நம்பிக்கை மற்றும் அக்கறையற்ற தன்மையும் அமைதியின்மையும் தெளிவிற்கும், அமைதிக்கும் வழிவிட்டால்தான் வரும். தன்னை மிகவும் தாழ்மையான மதிப்பீட்டில் வைத்திருக்கும் ஒரு மனிதன் தன்னையோ, மற்ற ஒருவரையோ நம்பமுடியாது. ஆகவே ஆரம்பத்தில் குரு, சீடரின் உயர்வான ஆதாரத்தையும், உன்னதமான தன்மையையும், மகத்துவமான பாக்கியத்தையும் சீடரிடத்தில் உறுதிப்படுத்தத் தன்னால் முடிந்தவற்றைச் செய்வார். சில ஞானிகளுடைய மற்றும் தன்னுடைய அனுபவங்களை அவருக்குச் சொல்வார். அது ஆரம்பத்தில் சீடருக்குத் தன்னைப் பற்றித் தாழ்வான உணர்வைக் கொடுத்தாலும் இறுதியில் மிக உயர்ந்த உணர்வில் முடியும். அதனால் சீடருக்குத் தன்னம்பிக்கை அதிகரிக்கும். மேலும், சீடருடைய அளவற்ற சாத்தியங்களின் மீதும் குரு நம்பிக்கையை ஊன்றுவார். தன்னுடைய தன்னம்பிக்கையும், ஆசிரியரின்மேல் நம்பிக்கையும் ஒன்றாகச் சீடருக்கு வந்தால் சீடரின் குணத்திலும், வாழ்க்கையிலும் விரைவான மற்றும் அதிகப் படியான மாற்றங்கள் நிகழும்.

**கே:** நான் மாறவிரும்பவில்லை. இப்போதே என் வாழ்க்கை நன்றாக உள்ளது.

**ம:** நீ வாழும் வாழ்க்கை எவ்வளவு வலி மிகுந்தது என்று நீ பார்க்காததால் அவ்வாறு கூறுகிறாய். நீ மிட்டாயை வாயில் வைத்துக் கொண்டு தூங்கும் ஒரு குழந்தையைப் போன்றவன். முற்றிலும் சுயநலத்துடன் இருப்பதால் ஒரு கணத்திற்கு நீ மகிழ்ச்சியாக உணரலாம். ஆனால் துன்பத்தின் பிரபஞ்ச அளவை உணர்ந்தறிய மனித முகங்களை ஒருமுறை நன்கு பார்த்தால் போதும். உன் சொந்த மகிழ்ச்சியும்கூட ஒரு வங்கி திவால் ஆவதாலோ, அல்லது ஒரு வயிற்றுவலியாலோ பாதிக்கப்பட்டு, குறைந்த காலமே இருக்கக்கூடியது. அது வெறுமனே ஒரு கண நேர ஆசுவாசம், இரண்டு துக்கங்களுக்கு இடையேயான ஒரு இடைவெளி மட்டுமே. உண்மையான மகிழ்ச்சி பாதிப்படையாது. ஏனெனில் அது சூழ்நிலைகளைச் சார்ந்தது அல்ல.

**கே:** *நீங்கள் உங்கள் சொந்த அனுபவத்திலிருந்து பேசுகிறீர்களா? நீங்களும் மகிழ்ச்சியற்று இருப்பீர்களா?*

**ம:** எனக்குத் தனிப்பட்ட பிரச்சனைகள் எதுவும் கிடையாது. ஆனால் உலகம் அச்சத்திற்கும், ஏக்கத்திற்கும் நடுவே சிக்கிப் பிழியப்படும் வாழ்க்கையை உடைய மக்களால் நிரம்பியுள்ளது. அவர்கள் வெட்டப்படும் இடத்திற்கு ஓட்டிச் செல்லப்படும் குதித்துக் கொண்டும், துள்ளிக் கொண்டும், கவலையில்லாமலும், மகிழ்சியோடும் இருக்கும், ஆனாலும் ஒரு மணி நேரத்திற்குள் சாகடிக்கப்பட்டு, தோலுரிக்கப்படும் கால்நடைகளைப் போன்றவர்கள்.

நீ மகிழ்ச்சியாக இருப்பதாகச் சொல்கிறாய். நீ நிஜமாலுமே மகிழ்ச்சியாக இருக்கிறாயா அல்லது வெறுமனே உன்னைச் சமாதானம் செய்து கொள்கிறாயா? உன்னைப் பயப்படாமல் பார். அப்போது உடனடியாக உன் மகிழ்ச்சி நிபந்தனைகளையும், சூழ்நிலைகளையும் சார்ந்தது என்பதையும், ஆகையால் அது கண நேரத்தையது, மெய்யானதல்ல என்றும் அறிவாய். நிஜமான மகிழ்ச்சி அகத்திலிருந்து ஊற்றெடுக்கும்.

**கே:** *உங்களுடைய மகிழ்ச்சியால் எனக்கு என்ன பயன்? அது என்னை மகிழ்ச்சியுடையவன் ஆக்காது.*

**ம:** நீ அதை முழுவதாகவும், அதற்கு மேலேயும் வெறுமனே கேட்பதால் பெற்றுக்கொள்ளலாம். ஆனால் நீ கேட்பதில்லை; உனக்குத் தேவைபோல் தெரியவில்லை.

**கே:** எதனால் அப்படிச் சொல்கிறீர்கள்? நான் மகிழ்ச்சியை வேண்டுகிறேன்.

**ம:** நீ இன்பங்களால் திருப்தி அடைந்துவிடுகிறாய். மகிழ்ச்சிக்கு இடமில்லை. உன் கோப்பையைக் காலி செய்து, சுத்தப்படுத்து. இல்லாவிட்டடல் அதை வேறொன்றால் நிரப்ப முடியாது. மற்றவர்கள் மேலோட்டமான இன்பத்தைத்தான் தர முடியும்; ஆனால் ஒருபோதும் மகிழ்ச்சியை அல்ல.

**கே:** எனக்கு ஒரு இன்பமான நிகழ்வுகளின் தொடர் போதுமானது.

**ம:** விரைவாக அது பேரிடரில் இல்லாவிட்டாலும் வலியில் முடியும். அகத்தளவில் நிலைத்திருக்கும் மகிழ்ச்சியைத் தேடுவதைத் தவிர யோகா என்பது என்ன?

**கே:** நீங்கள் கீழைநாட்டவருக்கு மட்டுமே அவ்வாறு சொல்லலாம். மேற்கத்தியவருக்குச் சூழ்நிலைகள் வித்தியாச மானவை. நீங்கள் சொல்வது அவர்களுக்குப் பொருந்தாது.

**ம:** துக்கத்திலும், அச்சத்திலும் கிழக்கோ, மேற்கோ கிடையாது. துன்பமும், துன்பத்தின் முடிவுமாகிய பிரச்சனைகள் எங்கும், எப்போதும் இருப்பவை. துன்பத்திற்குக் காரணம் சார்ந்திருப்பது. சுதந்திரம்தான் தீர்வு. யோகா என்பது சுயப் புரிதலின் மூலமாக அடையும் சுய விடுதலையின் விஞ்ஞானமும், கலையும் ஆகும்.

**கே:** நான் யோகாவிற்குத் தகுதியானவன் அல்ல.

**ம:** வேறு எதற்கு நீ தகுதியானவன்? நீ போவதும், வருவதும், இன்பத்தை நாடுவதும், நேசிப்பதும், வெறுப்பதும் - இவை யெல்லாம் சுயமாகத் திணிக்கப்பட்ட, அல்லது ஏற்றுக் கொள்ளப் பட்ட வரையறைகளுக்கு எதிராக நீ போராடுகிறாய் என்பதைக் காண்பிக்கின்றன. உன் அறியாமையில் நீ தவறுகளைச் செய்து, உனக்கும், மற்றவர்களுக்கும் துன்பத்தை ஏற்படுத்துகிறாய். ஆனால்

உந்துதல் உள்ளது. அதை மறுக்க முடியாது. பிறப்பு, மகிழ்ச்சி, இறப்பு ஆகியவற்றைப் பற்றிப் புரிந்து கொள்ளத் தேடும் அதே உந்துதல் புரிதலையும், விடுதலையையும் தேடும். அது ஒரு வண்டிப் பஞ்சில் பட்ட ஒரு தீப்பொறியைப் போன்றது. உனக்கு அதைப் பற்றித் தெரியாது. ஆனால் சீக்கிரமோ அல்லது பிறகோ வண்டி தீயில் எரியும். விடுதலை ஒரு இயற்கையான செயல்பாடு. காலப் போக்கில், அது தவிர்க்க முடியாதது. ஆனால் அதை இக்கணத்திற்குக் கொண்டுவருவது உன் சக்திக்குள்தான் உள்ளது.

**கே:** அப்படியானால் ஏன் வெகு சில விடுதலையடைந்தவர்கள் தான் உலகில் உள்ளனர்?

**ம:** ஒரு காட்டில் ஒரு குறிப்பிட்ட கணத்தில் சில மரங்கள்தான் முழுமையாகப் பூத்துக் குலுங்கும். இருப்பினும் ஒவ்வொன்றும் அதன் முறையைக் கொண்டிருக்கும்.

விரைவாகவோ அல்லது பிறகோ உன் பௌதீக மற்றும் மனோ வளங்கள் ஒரு முடிவிற்கு வரும். அப்போது என்ன செய்வாய்? வெறுப்படைவாயா? சரி, வெறுப்படை. நீ வெறுப்படைவதில் ஓய்ந்து போய்க் கேள்விகேட்க ஆரம்பித்துவிடுவாய். அந்தக் கணத்தில் நீ உணர்வுள்ள யோகாவிற்குத் தகுதியாவாய்.

**கே:** நான் இந்தத் தேடுவதையும், முனகுவதையும் இயற்கை அல்லாதது என்று நினைக்கிறேன்.

**ம:** பிறவியிலேயே முடமான ஒருவர் அதுதான் இயற்கையானது என்று நினைத்தால் எப்படியோ அப்படி, நீ உன் நிலையை இயல்பானது என்று நினைத்துக் கொண்டிருக்கிறாய். ஆனால் அது உன்னை இயல்பானவனாக்காது. இயற்கை அல்லது இயல்பு என்றால் என்ன என்பதை நீ அறிய மாட்டாய். மற்றும் உனக்குத் தெரியாது என்பதும் உனக்குத் தெரியாது.

தற்போது நீ வழுக்கிக் கொண்டிருக்கிறாய். அதனால் நீ அபாயத்தில் உள்ளாய். ஏனெனில் ஒரு வழுக்குபவருக்கு எந்தக் கணத்திலும் எதுவும் நடக்கும். நீ விழித்து, உன் நிலைமையைப் பார்ப்பது நல்லது. நீ இருப்பதை நீ அறிவாய். நீ என்ன என்பதை அறியமாட்டாய். நீ என்ன என்று கண்டுபிடி.

**கே:** ஏன் உலகத்தில் இவ்வளவு துன்பம்?

**ம:** சுயநலம்தான் துன்பத்திற்குக் காரணம். வேறு எந்தக் காரணமும் இல்லை.

**கே:** அளவானதில் துன்பம் உள்ளார்ந்து இருக்கிறது என்று நான் புரிந்து கொள்கிறேன்.

**ம:** வேறுபாடுகளும், தனித்த தன்மைகளும் துக்கத்தின் காரணமல்ல. வேற்றுமையில் ஒற்றுமை இயற்கையானதும், நல்லதும் ஆகும். பிரிந்த தன்மையாலும், சுயநலத்தாலும் மட்டுமே உண்மையான துன்பம் உலகத்தில் ஏற்படுகிறது.



# 92. நான் - உடல் என்னும் கருத்திற்கு அப்பால் செல்

**கேட்பவர்:** நாங்கள் வீணான முயற்சிகளுக்காக ஓடுகின்ற விலங்குகள் போன்றவர்கள். அதற்கு முடிவே இல்லை போல் தெரிகிறது. வெளியேற ஏதாவது வழி உள்ளதா?

**மஹராஜ்:** பல வழிகள் உனக்கு வழங்கப்படும். அவை உன்னை ஒரு சுற்றுச் சுற்றி உன் ஆரம்பப் புள்ளிக்கே திரும்பக் கொண்டுவரும். முதலில் உன் பிரச்சனை விழித்த நிலையில்தான் உள்ளது என்றும், எவ்வளவுதான் அது வலி மிகுந்ததாக இருந்தாலும் நீ தூங்கப் போகும்போது அதை முற்றிலுமாக மறக்கமுடியும் என்றும் அறி. நீ விழித்திருக்கும்போது உணர்வுடன் இருக்கிறாய்; தூங்கும்போது நீ உயிருடன் மட்டும் இருக்கிறாய். விழிப்புணர்வு மற்றும் ஜீவன் - இரண்டையும் நீ கடவுள் என்று சொல்லலாம்; ஆனால் நீ இரண்டிற்கும் அப்பாற்பட்டவன், கடவுளுக்கும் அப்பாற் பட்டவன், இருத்தலுக்கும், இருத்தல் இல்லாமைக்கும் அப்பாற் பட்டவன். எது உன்னை எல்லாமாகவும், எல்லாவற்றிற்கு அப்பாலுமாகவும் அறியவிடாமல் தடுக்கிறதோ அது ஞாபகத்தை அடிப்படையாகக் கொண்ட மனம். அதை நம்பும்வரை உன் மேல் அதற்கு ஆதிக்கம் இருக்கும். அதனோடு போராடாதே; வெறுமனே ஒதுக்கித் தள்ளு. கவனம் இல்லாததால் அதன் வேகம் குறைந்து, அதன் இயங்கும் வழிமுறையை வெளிப்படுத்தும். அதன் இயல்பும், நோக்கமும் உனக்குப் புரிந்தவுடன், அதைக் கற்பனையான பிரச்சனைகளை உருவாக்க அனுமதிக்க மாட்டாய்.

**கே:** கண்டிப்பாக எல்லாப் பிரச்சனைகளும் கற்பனையானவை அல்ல. உண்மையான பிரச்சனைகளும் உள்ளன.

**ம:** மனம் உருவாக்காத பிரச்சனை என்னவாக இருக்க முடியும்? வாழ்வும், இறப்பும் பிரச்சனைகளை உருவாக்குவதில்லை.

இன்பமும், துன்பமும் வந்து போகின்றன, அனுபவிக்கப்பட்டு, பிறகு மறக்கப்படுகின்றன. ஞாபகமும், எதிர்பார்ப்பும் அடைதல் அல்லது தவிர்த்தல் ஆகிய பிரச்சனைகளை, விருப்பு வெறுப்புக் களால் சாயமிடப்பட்டு உருவாக்குகின்றன. உண்மையும், அன்பும் மனிதனின் மெய்யான தன்மை. மனமும், இதயமும் அதை வெளிப்படுத்தும் வழிவகை.

**கே:** எப்படி மனதையும், என்ன வேண்டும் என்று தெரியாத இதயத்தையும் கட்டுப்பாட்டிற்குள் கொண்டுவருவது?

**ம:** அவை இருளில் வேலைசெய்ய முடியாது. அவை சரியாக இயங்க தூய பிரக்ஞையின் ஒளி தேவை. அவற்றைக் கட்டுப் படுத்தச் செய்யப்படும் எல்லா முயற்சியும் அவற்றை ஞாபகத்தின் ஆளுமைக்குள் வெறுமனே உட்பட வைக்கும். ஞாபகம் ஒரு நல்ல வேலையாள். ஆனால் ஒரு மோசமான எஜமான். அது கண்டுபிடித்தலை சாமர்த்தியமாகத் தடுக்கிறது. மெய்மையில் முயற்சிக்கு இடமில்லை. உடலுடன் ஏற்படுத்தப்படும் ஒரு சுய அடையாளத்தால் வரும் சுயநலம்தான் முக்கியமான பிரச்சனை. அதுதான் மற்ற எல்லாப் பிரச்சனைகளுக்கும் காரணம். சுயநலத்தை முயற்சியால் நீக்க முடியாது. அதன் காரண காரியத்தின் தெளிவான உள்முகப் பார்வையால்தான் நீக்க முடியும். முயற்சி ஒத்துப் போகாத ஆசைகளின் ஒரு அறிகுறி. அவற்றை, அந்த ஆசைகளை அவை உள்ளபடியே பார்க்க வேண்டும். அப்போதுதான் அவை கரையும்.

**கே:** என்ன மிஞ்சுகிறது?

**ம:** மாறாத எதுவோ அது மிஞ்சுகிறது. மாபெரும் அமைதி, ஆழ்ந்த நிசப்தம், மெய்மையின் மறைமுகமான அழகு மிஞ்சுகிறது. அது வார்த்தைகளில் விவரிக்க முடியாததாக, உனக்காக அது உன்னால் அனுபவிக்கப்படக் காத்துக் கொண்டிருக்கிறது.

**கே:** ஒருவர் மெய்யை அறியப் பொருத்தமாகவும், தகுதியாகவும் இருக்க வேண்டாமா? எங்கள் இயல்பு மிருகத்தனமானது. அதை வெல்லாவிட்டால் நாங்கள் எப்படி மெய்மை உதிக்கும் என்று நம்பிக்கை கொள்வது?

இன்பமும், துன்பமும் வந்து போகின்றன, அனுபவிக்கப்பட்டு, பிறகு மறக்கப்படுகின்றன. ஞாபகமும், எதிர்பார்ப்பும் அடைதல் அல்லது தவிர்த்தல் ஆகிய பிரச்சனைகளை, விருப்பு வெறுப்புக் களால் சாயமிடப்பட்டு உருவாக்குகின்றன. உண்மையும், அன்பும் மனிதனின் மெய்யான தன்மை. மனமும், இதயமும் அதை வெளிப்படுத்தும் வழிவகை.

**கே:** எப்படி மனதையும், என்ன வேண்டும் என்று தெரியாத இதயத்தையும் கட்டுப்பாட்டிற்குள் கொண்டுவருவது?

**ம:** அவை இருளில் வேலைசெய்ய முடியாது. அவை சரியாக இயங்க தூய பிரக்ஞையின் ஒளி தேவை. அவற்றைக் கட்டுப் படுத்தச் செய்யப்படும் எல்லா முயற்சியும் அவற்றை ஞாபகத்தின் ஆளுமைக்குள் வெறுமனே உட்பட வைக்கும். ஞாபகம் ஒரு நல்ல வேலையாள். ஆனால் ஒரு மோசமான எஜமான். அது கண்டுபிடித்தலை சாமர்த்தியமாகத் தடுக்கிறது. மெய்மையில் முயற்சிக்கு இடமில்லை. உடலுடன் ஏற்படுத்தப்படும் ஒரு சுய அடையாளத்தால் வரும் சுயநலம்தான் முக்கியமான பிரச்சனை. அதுதான் மற்ற எல்லாப் பிரச்சனைகளுக்கும் காரணம். சுயநலத்தை முயற்சியால் நீக்க முடியாது. அதன் காரண காரியத்தின் தெளிவான உள்முகப் பார்வையால்தான் நீக்க முடியும். முயற்சி ஒத்துப் போகாத ஆசைகளின் ஒரு அறிகுறி. அவற்றை, அந்த ஆசைகளை அவை உள்ளபடியே பார்க்க வேண்டும். அப்போதுதான் அவை கரையும்.

**கே:** என்ன மிஞ்சுகிறது?

**ம:** மாறாத எதுவோ அது மிஞ்சுகிறது. மாபெரும் அமைதி, ஆழ்ந்த நிசப்தம், மெய்மையின் மறைமுகமான அழகு மிஞ்சுகிறது. அது வார்த்தைகளில் விவரிக்க முடியாததாக, உனக்காக அது உன்னால் அனுபவிக்கப்படக் காத்துக் கொண்டிருக்கிறது.

**கே:** ஒருவர் மெய்யை அறியப் பொருத்தமாகவும், தகுதியாகவும் இருக்க வேண்டாமா? எங்கள் இயல்பு மிருகத்தனமானது. அதை வெல்லாவிட்டால் நாங்கள் எப்படி மெய்மை உதிக்கும் என்று நம்பிக்கை கொள்வது?

**ம:** மிருகத்தைத் தனியாக விட்டுவிடு. அது இருக்கட்டும். நீ என்ன என்று ஞாபகம் வைத்திரு. ஒரு நாளில் நடக்கும் நிகழ்வுகளை, நீ சாட்சியாக இல்லாமல் மிருகமோ, கடவுளோ இருக்க முடியாது என்று ஞாபகப்படுத்த உபயோகி. இருக்கும் அனைத்திற்கும் நீதான் சாரமும், உட்பொருளும் ஆகிய இரண்டுமே என்று புரிந்து, அந்தப் புரிதலில் நீ ஸ்திரமாக இரு.

**கே:** புரிதல்மட்டுமே போதுமா? மேலும் எனக்குத் தொட்டுணரத்தக்க அத்தாட்சிகள் தேவையில்லையா?

**ம:** உன் புரிதல்தான் அத்தாட்சிகளின் நம்பகத்தன்மையை முடிவு செய்யும். உன் சொந்த இருப்பைவிட வேறு என்ன தொட்டுணரத்தக்க அத்தாட்சி உனக்கு வேண்டும்? நீ எங்கு சென்றாலும் உன்னை அங்கு காண்பாய். எவ்வளவு காலம் கடந்தாலும் நீ அப்போதும் இருப்பாய்.

**கே:** வெளிப்படையாக நான் சர்வ வியாபியும், சாசுவத மானவனும் அல்ல. நான் இங்கு, இப்போதுதான் உள்ளேன்.

**ம:** நல்லது. 'இங்கு' என்பது எல்லா இடத்திலும், 'இப்போது' என்பது எப்போதும் இருக்கிறது. 'நான் உடல்' என்னும் கருத்திற்கு அப்பால் செல். அப்போது இடமும், காலமும் உனக்குள் இருக்கின்றன என்றும், நீ இடத்திலும், காலத்திலும் இல்லை என்றும் காண்பாய். இதை நீ புரிந்து கொண்டால் மெய்யறிதலுக்கான முக்கியமான தடை நீக்கப் பட்டுவிடும்.

**கே:** புரிதலுக்கு அப்பால் உள்ள அறிதல் என்ன?

**ம:** ஒரு அடர்த்தியான புலிகள் நிறைய உள்ள காட்டையும், அதில் நீ ஒரு உறுதியான இரும்புக் கூண்டிற்குள் இருப்பதாகவும் கற்பனை செய். நீ நன்கு பாதுகாக்கப்பட்டிருப்பதால் அச்சமில்லாமல் புலிகளை வேடிக்கை பார்ப்பாய். அடுத்து புலிகள் கூண்டில் இருப்பதாகவும், நீ காட்டில் திரிவதாகவும் கற்பனை செய். இறுதியாக கூண்டு மறைகிறது. நீ புலிகளின் மேல் சஞ்சரிக்கிறாய்!

**கே:** அண்மையில் மும்பையில் நடத்தப் பட்ட ஒரு தியான முகாமில் கலந்துகொண்டேன். அங்கு ஆவேச வெறி பிடித்த,

ஒழுக்கங்கெட்ட பங்கேற்பாளர்களைப் பார்த்தேன். ஏன் மக்கள் அம்மாதிரியானவற்றிற்குச் செல்கிறார்கள்?

**ம:** இவையெல்லாம் உணர்ச்சித் தூண்டுதலைத் தேடும் மக்களை ஆதிக்கம் செழுத்துகின்ற ஒரு அமைதியற்ற மனதின் கண்டு பிடிப்புகள். அவற்றில் ஒரு சிலர் உணர்வற்ற நிலையிலிருந்து அமுக்கி வைக்கப்பட்ட ஞாபகங்களையும், ஏக்கங்களையும் வெளியேறச் செய்ய வைப்பார்கள். அந்த அளவிற்கு அவர்கள் நிவாரணம் தருவார்கள். ஆனால் முடிவாக அவர்கள் பயிற்சி பெறுபவரை அவர் எங்கு இருந்தாரோ அங்கேயே விட்டு விடுவார்கள். அல்லது இன்னும் மோசமாக.

**கே:** அண்மையில் ஒரு யோகியால் தியானத்தில் அவர் பெற்ற அனுபவங்களைப் பற்றி எழுதப்பட்ட ஒரு புத்தகத்தைப் படித்தேன். அதில் மனக் காட்சிகளைப் பற்றியும், சப்தங்களைப் பற்றியும், வர்ணங்கள் மற்றும் இனிய கானங்களைப் பற்றியும் நிறைய உள்ளது. அது நல்ல ஒரு காட்சி மற்றும் மிகவும் வேடிக்கையான பொழுதுபோக்கு! முடிவில் அவையெல்லாம் மங்கிப் போயின. முற்றிலும் பயமற்ற உணர்வுமட்டும் மிஞ்சியது. இந்த அனுபவங்களையெல்லாம் பாதிப்பில்லாமல் கடந்த ஒரு மனிதன் எதைப் பற்றியும் பயப்பட வேண்டியதில்லை! இருப்பினும் அந்தப் புத்தகத்தால் எனக்கு என்ன பயன் என்று ஆச்சரியப்படுகிறேன்.

**ம:** உன்னை அது ஈர்க்காததால் அதனால் உனக்கு எந்தப் பிரயோஜனமும் இல்லை. மற்றவர்கள் அதனால் கவரப் படுகிறார்கள். மக்கள் வித்தியாசப்படுகிறார்கள். ஆனால் எல்லோரும் தங்களின் சொந்த இருப்பாகிய நிஜத்தை எதிர்கொள் கிறார்கள். 'நான்' என்பது முடிவான நிஜம். 'நான் யார்?' என்பது முடிவான கேள்வி. அதற்கு ஒவ்வொருவரும் ஒரு பதிலைக் காண வேண்டும்.

**கே:** ஒரே பதிலையா?

**ம:** சாரத்தில் ஒன்று. வெளிப்பாட்டில் வேறுபட்டவை.

ஒவ்வொரு சாதகரும் தனக்குப் பொருந்துகின்ற வழிமுறையை ஒப்புக் கொள்வார் அல்லது கண்டுபிடிப்பார். அதைத் தன்னிடம்

மனமார்ந்த ஈடுபாட்டுடனும், முயற்சியுடனும் செலுத்தி, தன்னுடைய மனப்பாங்கிற்கும், எதிர்பார்ப்பிற்கும் தகுந்தவாறு விளைவுகளைப் பெற்று, அவற்றை ஒரு வார்த்தைக் குவியலாக வார்த்து, ஒரு அமைப்பாக உருவாக்கி, ஒரு பரம்பரையை நிலை நாட்டி, மற்றவர்களைத் தன் 'யோகப் பள்ளி'யில் சேர்க்க ஆரம்பித்து விடுவார். இவையெல்லாம் ஞாபகத்தின்மேலும், கற்பனையின்மேலும் கட்டப்பட்டவை. அம்மாதிரியான பள்ளிகள் மதிப்பற்றவையோ, தவிர்க்க வேண்டியவையோ அல்ல. ஒவ்வொன்றிலும் ஒருவர் ஒரு குறிப்பிட்ட புள்ளிவரை முன்னேறுவார். மேற்கொண்டு முன்னேற, முன்னேறுவதற்கான ஆசை முழுவதையும் கைவிட்டு விட வேண்டும். பிறகு எல்லாப் பள்ளிகளும் கைவிடப்பட்டு, எல்லாப் பிரயத்தனங்களும் நின்று போய்விடும். தனிமையிலும், இருளிலும்தான் அறியாமையையும், அச்சத்தையும் நிரந்தரமாக முடிவுறச் செய்யும் மாபெரும் அடி எடுத்து வைக்கப்படும்.

உண்மையான குரு, தன் சீடரை ஒரு குறிப்பிட்ட கருத்துக்கள், உணர்ச்சிகள் மற்றும் செயல்களில் சிறைப்படுத்த மாட்டார். மாறாக, எல்லாக் கற்பனைகளிலிருந்தும், வரையறுக்கப்பட்ட பழக்கங்களிலிருந்தும் விடுபடுவதற்கான அவசியத்தையும், உஷாராகவும், மனமார்ந்தும் இருப்பதற்கும், வாழ்க்கையோடு அது எங்கெங்கு எடுத்துச் செல்கிறதோ அங்கெல்லாம் செல்லவும், அனுபவித்து மகிழவோ, அல்லது துன்பப்படவோ வேண்டா மென்றும், ஆனால் வாழ்க்கையைப் புரிந்து, கற்றுக்கொள்ளவும் பொறுமையாக அவருக்குக் காண்பிப்பார்.

சரியான ஆசிரியரின்கீழ் சீடர் கற்கக் கற்றுக் கொள்வார், ஞாபகம் வைத்துக் கொள்ளவும், கீழ்ப்படியவும் அல்ல. சத்சங்கம் அதாவது, உன்னதமானவர்களின் அருகாமை வடிவமைப்பதில்லை. அது விடுதலையளிக்கிறது. சார்ந்திருக்க உன்னைச் செய்யும் எல்லா வற்றையும் பற்றி எச்சரிக்கையாக இரு. 'குருவிடம் சரணடைதல்' என்று சொல்லப்படுகின்றவற்றில் பெரும்பாலானவை பேரிடரில் இல்லாவிட்டாலும் ஏமாற்றத்தில் முடிகின்றன. அதிர்ஷ்ட வசமாக ஒரு மனமார்ந்த ஈடுபாடுடைய சாதகர் மேலும் புரிந்துகொண்டு தன்னைச் சரியான நேரத்தில் விடுவித்துக் கொள்வார்.

**கே:** கண்டிப்பாகச் சுயச் சரணாகதிக்கு அதற்குண்டான மதிப்பு உள்ளது.

**ம:** சுய சரணாகதி என்பது எல்லாச் சுய அக்கறையையும் சரணடையச் செய்வது. அதைச் செய்ய முடியாது. உன் உண்மையான ஸ்வரூபத்தை நீ அறியும்போது அது நடக்கிறது. வாய் வழியான சரணாகதி, உணர்ச்சிகளோடு இணைந்திருந்தாலும் அவற்றிற்கு மிகக் குறைந்த மதிப்புதான் உள்ளது. அது மன அழுத்தத்தால் உடைந்துவிடும். அதிகபட்சமாக அது ஒரு விருப்பத்தைத்தான் காண்பிக்கிறது, ஒரு உண்மையான நிஜத்தை அல்ல.

**கே:** ரிக் வேதத்தில், பிரக்ஞைக்கும், ப்ராணாவிற்குமான திருமணம் என்று ஆதி யோகத்தைப் பற்றிய குறிப்பு உள்ளது. அதை நான் அறிவையும், வாழ்க்கையையும் ஒன்றாகச் சேர்ப்பது என்று புரிந்துகொள்கிறேன். அது தர்மத்தையும், கர்மத்தையும் இணைப்பது. அதாவது சரியான செயலைச் செய்வது என்று நீங்கள் சொல்கிறீர்களா?

**ம:** சரியானவை என்றால் ஒருவருடைய உண்மையான தன்மையுடன் ஒத்திசைவோடு இருப்பது என்றும், செயல்பாடு என்றால் சுயநலமில்லாத, ஆசையற்ற செயல் என்றும் நீ அர்த்தப் படுத்தினால், ஆமாம்.

ஆதி யோகத்தில் வாழ்க்கையே குரு; மனம் அதன் சீடர். மனம் வாழ்க்கை சொல்வதைக் கேட்கிறது; அதை ஆளுவதில்லை. வாழ்க்கை இயல்பாகவும், பிரயத்தனமின்றியும் ஓடும். அந்தச் சமப்ரவாகத்தில் அதன் சுலபமான ஓட்டத்திற்கு ஏற்படும் தடைகளை அதுவே நீக்கிக் கொள்ளும்.

**கே:** வாழ்க்கை அதன் இயல்பில் திரும்பத் திரும்ப நடப்ப தல்லவா? வாழ்க்கையைப் பின் தொடர்வது தேங்குவது ஆகாதா?

**ம:** வாழ்க்கை அதாகவே அதிகப்படியான உருவாக்கும் திறன் உடையது. ஒரு விதை, காலப் போக்கில் ஒரு வனமாகிவிடும். மனம் இருப்பிற்கான இன்றியமையாத சக்தியைப் பாதுகாக்கும் மற்றும் நெறிப்படுத்தும் ஒரு வனக் காவலர் போன்றது.

**கே:** ஆதியோகத்தை, வாழ்க்கைக்கு மனதின் சேவை என்று எடுத்துக் கொண்டால் அது ஒரு பூரணமான ஜனநாயகம் போலத் தோன்றுகிறது. அதில் ஒவ்வொருவரும் வாழ்க்கையைத் தன் முழுத் திறமையுடனும், அறிவுடனும் வாழ்வார்கள். அனைவரும் ஒரே குருவின் சீடர்.

**ம:** நீ அவ்வாறு சொல்லலாம். சாத்தியத்தில் அவ்வாறு இருக்கலாம். ஆனால் வாழ்க்கை நேசிக்கப்பட்டு, நம்பப்பட்டு, ஆர்வத்துடனும், விருப்பத்துடனும் தொடரப்பட்டால் ஒழிய விழிப்புணர்வில் ஒரு அசைவாகவும், செயல்பாட்டில் பிரக்ஞை யாகவும் உள்ள யோகாவைப் பற்றிப் பேசுவது மிகையானது.

**கே:** ஒருமுறை நான் ஒரு காட்டாறு பாறைகளுக்கு இடையே ஓடுவதைப் பார்த்தேன். ஒவ்வொரு பாறையிலும், அதன் கொந்தளிப்பு பாறையின் வடிவத்தையும், அளவையும் பொருத்து வித்தியாசமாக இருந்தது. ஒவ்வொரு நபரும் ஒரு உடலின் மேல் வெறுமனே ஒரு கொந்தளிப்பு அல்லவா? ஆனால் வாழ்க்கையோ ஒன்றே ஆகவும், சாசுவதமாகவும் இருக்கிறது அல்லவா?

**ம:** கொந்தளிப்பும், தண்ணீரும் தனித்தனியானவை அல்ல. தண்ணீரை, அதில் ஏற்படும் அலைக்கழிப்புதான் உன்னை அதை உணரச் செய்கிறது. விழிப்புணர்வு எப்போதும் அசைவுடையது, மாற்றமுடையது. மாற்றமில்லாத விழிப்புணர்வு என்று ஒன்று இல்லை. மாற்றமின்மை விழிப்புணர்வை உடனடியாக அழித்து விடும். ஒரு மனிதன் புறத்தளவிலோ அல்லது அகத்தளவிலோ உணர்வற்று இருந்தால் வெறுமையாகிவிடுவார். அல்லது விழிப்புணர்விற்கும், விழிப்புணர்வில்லாமைக்கும் அப்பால் பிறப்பு, இறப்பற்ற நிலைக்குச் சென்றுவிடுவார். எப்போது ஆத்மாவும் (சைத்தன்யமும்), ஸ்தூலப் பொருளும் ஒன்றாகச் சேர்கின்றனவோ அப்போது விழிப்புணர்வு பிறக்கிறது.

**கே:** அவை ஒன்றா அல்லது இரண்டா?

**ம:** அது நீ உபயோகிக்கும் வார்த்தைகளைப் பொருத்தது: அவை ஒன்று அல்லது இரண்டு அல்லது மூன்று. ஆராயப்பட்டால் மூன்று இரண்டாகும். இரண்டு ஒன்றாகும். முகம் - கண்ணாடி - பிம்பம்

என்னும் உதாரணத்தை எடுத்துக் கொள். அதில் எந்த இரண்டும், மூன்றாவதை உணர்த்துகின்றன. அந்த மூன்றாவது மற்ற இரண்டையும் இணைக்கிறது. உன் சாதனாவில், இரண்டை ஒன்றாக அறியும்வரை, மூன்றை இரண்டாகப் பார்ப்பாய். நீ உலகத்தில் ஆழ்ந்திருக்கும்வரை உன்னால் உன்னை அறிய முடியாது. உன்னை அறிய உன் கவனத்தை உலகத்திற்கு அப்பால் திருப்பி, அதை உனக்குள் திருப்பு.

**கே:** என்னால் உலகத்தை அழிக்க முடியாது.

**ம:** அவசியமில்லை. நீ பார்ப்பது உள்ளபடியே இருப்பதல்ல என்று மட்டும் புரிந்து கொள். ஆராயும்போது தோற்றங்கள் மறைந்து, அடித்தளத்தில் இருக்கும் மெய்மை மேற்பரப்பிற்கு வரும். நீ வீட்டிலிருந்து வெளியே வர வீட்டை எரிக்க வேண்டியதில்லை. வெறுமனே நடந்து வெளியே செல்வாய். நீ எப்போது சுதந்திரமாக வீட்டிற்கு உள்ளேயும், வெளியேயும் வந்து போக முடியவில்லையோ அப்போதுதான் வீடு ஒரு சிறைச்சாலையாகிவிடும். நான் சுலபமாகவும், இயல்பாகவும் விழிப்புணர்விற்குள்ளேயும், வெளியேயும் வந்துபோகிறேன். எனவே எனக்கு உலகம் ஒரு வீடு, சிறை அல்ல.

**கே:** ஆனால் முடிவாக ஒரு உலகம் உள்ளதா? அல்லது இல்லையா?

**ம:** நீ பார்ப்பது உன்னைத் தவிர வேறு அல்ல. அதை நீ எப்படி வேண்டுமானாலும் சொல். அது நிஜத்தை மாற்றப் போவதில்லை. விதி (பிரராப்தம்) என்னும் படச் சுருளின் ஊடாக, உன் சொந்த ஒளி திரையின்மேல் படங்களை விழச்செய்கிறது. நீதான் பார்ப்பவர், ஒளி, படம் மற்றும் திரை. விதி என்னும் படச் சுருளும்கூட சுயமாகத் தேர்வு செய்யப்பட்டது மற்றும் சுயமாகத் திணிக்கப்பட்டது. ஆத்மா (சைத்தன்யம்) ஒரு விளையாட்டு. அது தடைகளைக் கடப்பதை மகிழ்ந்து அனுபவிக்கிறது. வேலை எவ்வளவு கடினமாக இருக்கிறதோ அவ்வளவு ஆழமாகவும், அகலமாகவும் அவருடைய சுயம் அறிதல் இருக்கும்.

## 93. மனிதன் செய்பவன் அல்ல

**கேட்பவர்:** என் வாழ்க்கையின் ஆரம்பத்திலிருந்து ஒரு முழுமையற்ற உணர்வால் ஆட்கொள்ளப்பட்டிருக்கிறேன். பள்ளியிலிருந்து கல்லூரிக்கு, பிறகு வேலைக்கு, பிறகு திருமணத்திற்கு, பிறகு செல்வத்திற்கு. நான் அடுத்தது கண்டிப்பாக எனக்கு அமைதியைத் தரும் என்று கற்பனை செய்தேன். ஆனால் அமைதி இல்லை. வருடங்கள் ஆக ஆக, இந்த நிறைவில்லாமை அதிகரித்துக் கொண்டே போகிறது.

**மஹராஜ்:** உடலும், அதனுடனான அடையாளமும் இருக்கும் வரை விரக்தி தவிர்க்க முடியாதது. எப்போது நீ உன்னை உடலிலிருந்து முற்றிலுமாக அன்னியமாகவும், வித்தியாசமாகவும் அறிகிறாயோ அப்போதுதான் 'நான் உடல்' என்னும் கருத்திலிருந்து பிரிக்க முடியாத அச்சம் மற்றும் ஆசையின் கலவையிலிருந்து தற்காலிக ஓய்வைக் காண்பாய். வெறுமனே அச்சங்களை மட்டுப்படுத்துவதும், ஆசைகளைத் திருப்திப்படுத்துவதும் நீ தப்பிக்க முயற்சி செய்யும் இந்த வெறுமை உணர்வை நீக்காது; மெய்ஞானம் தான் உதவ முடியும். மெய்ஞானம் என்று நான் சொல்வது நீ என்னவாக இல்லை என்பதன் முழு அறிவு. அம்மாதிரியான அறிவு அடையக் கூடியது மற்றும் இறுதியானது; ஆனால் நீ என்ன என்று அறிய முயல்வதற்கு முடிவே இருக்காது. எவ்வளவு அதிகமாக நீ கண்டுபிடிக்கிறாயோ அவ்வளவு கண்டுபிடிக்க வேண்டியது மிஞ்சி இருக்கும்.

**கே:** இதற்கு நமக்கு வித்தியாசமான பெற்றோர்களும், பள்ளிகளும் இருக்க வேண்டும். ஒரு வித்தியாசமான சமுதாயத்தில் வாழ வேண்டும்.

**ம:** உன்னால் சூழ்நிலைகளை மாற்ற முடியாது. ஆனால் உன் மனப்பாங்குகளை மாற்றிக் கொள்ளலாம். நீ அவசியமற்றவை

களோடு இணைந்திருக்காதே. தேவையானது மட்டும்தான் நல்லது. அவசியமானதில் மட்டும்தான் அமைதியுள்ளது.

**கே:** நான் தேடுவது மெய்யை. அமைதியை அல்ல.

**ம:** நீ அமைதியாக இல்லாவிட்டால் மெய்யைக் காண முடியாது. ஒரு அமைதியான மனம் சரியான உணர்ந்தறிதலுக்கு அவசியம். அது சுயம் அறிதலுக்கும் தேவை.

**கே:** நான் செய்ய வேண்டியவை நிறைய உள்ளன. என்னால் என் மனதை அமைதியாக வைத்திருக்க முடியாது.

**ம:** அது நீதான் செய்பவர் என்னும் மாயக் கருத்தால் வருவது. மெய்யாகக் காரியங்கள் உனக்குச் செய்யப்படுகின்றன. உன்னால் அல்ல.

**கே:** நடப்பவற்றை அவை நடப்பதுபோல் விட்டுவிட்டால் அவை என் ஆசைகளின்படி நடக்கின்றன என்று எப்படி நான் உறுதியாக இருப்பது? கண்டிப்பாக நான் அவற்றை என் ஆசைகளின்படி திருப்பவேண்டும்.

**ம:** உன் ஆசையும், அது நிறைவேறுவதும் அல்லது அது நிறைவேறாததும் அவைகளாகவே உனக்கு நிகழ்கின்றன. இரண்டில் எந்த ஒன்றையும் மாற்ற முடியாது. நீ உன்னைச் சிரமப் படுத்தி, முயற்சி செய்வதாகவும், போராடுவதாகவும் நினைக்கலாம். மறுபடியும், உன் வேலையின் பலன்கள் உட்பட இவையெல்லாம் நிகழ்கின்றன. எதுவுமே உன்னால் அல்ல; உனக்கு அல்ல. எல்லாமும் திரைப்படத் திரையில் வெளியிடப்படும் படத்தில் உள்ளது. ஒளியில் அல்ல. உன்னை நீ நபராகக் கருதிக் கொள்வது எதுவோ அதுவும் படத்தில்தான் உள்ளது. நீ ஒளி மட்டுமே.

**கே:** நான் ஒளி மட்டும் என்றால் அதை எப்படி நான் மறந்தேன்?

**ம:** நீ மறக்கவில்லை. திரையின் மேல் உள்ள படத்தைத்தான் நீ மறக்கிறாய். பிறகு ஞாபகப்படுத்திக் கொள்கிறாய். உன்னை ஒரு புலி என்று கனவு காண்பதால் நீ ஒருபோதும் மனிதனாக இல்லாமல் போவதில்லை. அதேபோல திரையின்மேல் தோன்றும் படமும், அதோடு ஒன்றாகும் தூய ஒளியும் நீதான்.

**கே:** எல்லாமும் அவையாகவே நடப்பதால் நான் எதற்குக் கவலைப்பட வேண்டும்?

**ம:** மிகச் சரி. சுதந்திரம் என்பது கவலைகளிலிருந்து சுதந்திரம். விளைவுகளின்மேல் உன்னால் தாக்கத்தை ஏற்படுத்த முடியாது என்று அறிந்தபிறகு, உன் ஆசைகளுக்கும், அச்சங்களுக்கும் கவனத்தைச் செலுத்தாதே. அவற்றை வந்து போக விடு. அவற்றிற்கு ஆவல் மற்றும் கவனம் என்னும் ஊட்டச் சக்தியைக் கொடுக்காதே.

**கே:** என்ன நிகழ்கிறதோ அதிலிருந்து என் கவனத்தைத் திருப்பி விட்டால், நான் எதனால் வாழ்வது?

**ம:** மறுபடியும் இது, 'நான் கனவு காண்பதை நிறுத்திவிட்டால் என்ன செய்வது?' என்று கேட்பது போல் இருக்கிறது. நிறுத்திப் பார். 'அடுத்து என்ன?' என்று ஆவலுடன் இருக்க வேண்டியதில்லை. அடுத்தது எப்போதும் இருக்கிறது. வாழ்க்கை தொடங்குவதோ, முடிவதோ இல்லை. அது அசையாமல் இருந்துகொண்டு அசையும். அது கண நேரத்தையதாக இருந்தாலும் நிலையாக இருக்கும். ஒளியினால் திரையிடப்படும் படங்கள் கணக்கற்றவை. அப்படி வாழ்க்கை ஒவ்வொரு வடிவத்தையும் விளிம்புவரை நிரப்பி, வடிவம் உடையும்போது அதன் ஆதாரத்திற்குத் திரும்பிவிடும்.

**கே:** வாழ்க்கை அவ்வளவு மகத்துவமாக இருந்தால், அறியாமை எப்படி ஏற்படும்?

**ம:** நோயாளியைப் பார்க்காமலே வியாதியைக் குணப் படுத்த வேண்டுகிறாய்! அறியாமையைப் பற்றிக் கேட்பதற்கு முன்னால் யார் அறிவற்றவர் என்று ஏன் நீ கேட்கக் கூடாது? உன்னை அறிவற்றவன் என்று நீ சொல்லும்போது, உன் எண்ணங்கள் மற்றும் உணர்வுகளின் உள்ளபடியான நிலையின்மேல் அறியாமை என்னும் கற்பனையான கருத்தைத் திணித்திருக்கிறாய் என்றுதான் அர்த்தம். அவை நிகழும்போது அவற்றைப் பரீட்சித்துப் பார், அவற்றிற்கு உன் முழுக் கவனத்தையும் செலுத்து. அப்போது அறியாமை என்ற ஒன்று இல்லை என்றும், கவனமின்மை மட்டும்தான் உள்ளதென்றும் காண்பாய். உன்னைக் கவலைப் படுத்துவதன் மேல் கவனத்தைச் செலுத்து. அவ்வளவே. கவலை

என்பது மனோ வலி மட்டுமே. வலி என்பது எப்போதும் கவனத்தை ஈர்க்கும் ஒரு அழைப்பு. நீ கவனத்தைச் செலுத்தும் கணத்தில் கவன ஈர்ப்பு நின்றுபோய், அறியாமையைப் பற்றிய கேள்வி கரைந்துபோய்விடும். உன் கேள்விக்கான ஒரு பதிலுக்காகக் காத்திருக்காமல், யார் கேள்வியைக் கேட்பது என்றும், எது அவரைக் கேட்க வைக்கிறது என்றும் கண்டுபிடி. விரைவில் வலியைப் பற்றிய அச்சத்தால் தூண்டப்பட்ட மனம்தான் கேள்வியைக் கேட்கிறது என்று காண்பாய். அச்சத்தில் ஞாபகம் மற்றும் எதிர்பார்ப்பு, கடந்த காலத்தவை மற்றும் எதிர் காலத்தவை உள்ளன. கவனம் உன்னைத் திரும்ப நிகழ்காலத்திற்கு, தற்பொழுதிற்குக் கொண்டுவரும். தற்பொழுதில் உள்ள உன் இருத்தல் எப்போதும் கைவசம் உள்ள நிலை. ஆனால் அரிதாகத்தான் கவனிக்கப்படுகிறது.

**கே:** நீங்கள் சாதனாவை எளிய கவனம் என்னும் அளவிற்குக் குறைத்துவிடுகிறீர்கள். ஏன் மற்ற ஆசிரியர்கள் முழுமையான, கடினமான, நீண்ட காலம் எடுத்துக் கொள்ளும் பயிற்சிகளைக் கற்றுத்தருகிறார்கள்?

**ம:** குருக்கள் தாங்கள் எந்த சாதனாவின் மூலம் அவர்களுடைய குறிக்கோளை அடைந்தார்களோ அதைத்தான் கற்றுத் தருவார்கள், அவர்களுடைய சாதனா எதுவானாலும். இது இயல்பானது. ஏனெனில் தங்களுடைய சொந்த சாதனாவை அவர்கள் நெருக்கமாக அறிவார்கள். என்னுடைய 'நான்' என்னும் உணர்வின்மேல் கவனத்தைச் செலுத்தக் கற்பிக்கப்பட்டேன். அதை மிகவும் பயனுள்ளதாகக் கண்டேன். ஆகையால் அதைப் பற்றி என்னால் முழு நம்பிக்கையுடன் பேச முடியும். ஆனால் மக்கள் அடிக்கடி தங்கள் உடல், மூளை மற்றும் மனதைத் தவறாகக் கையாண்டும், வக்கிரமாகவும், வலிமையற்றும் வருகிறார்கள். ஆகையால் அவர்களுக்கு உருவமற்ற கவனம் என்னும் நிலை அப்பாற்பட்டதாகத் தெரிகிறது. அம்மாதிரியானவர்களுக்குச் சில எளிமையான மனமார்ந்த ஈடுபாடு பொருத்தமாக இருக்கும். ஒரு மந்திரத்தைத் திரும்பத்திரும்பச் சொல்வது, அல்லது ஒரு படத்தை விடாமல் பார்ப்பது அவர்களுடைய உடலையும், மனதையும் ஒரு ஆழமான மற்றும் நேரடியான தேடலுக்குத் தயார் செய்யும்.

மனமார்ந்த ஈடுபாடுதான் தவிர்க்க முடியாத, இன்றியமையாத முக்கியக் காரணி. சாதனா என்பது ஒரு பாத்திரம் மட்டும்தான். அதை விளிம்புவரை மனமார்ந்த ஈடுபாட்டால் நிரப்பவேண்டும். அது செயல்படும் அன்பு. ஏனெனில் அன்பும் விருப்பமும் இல்லாமல் எதுவும் செய்ய முடியாது.

**கே:** நாம் நம்மை மட்டுமே நேசிக்கிறோம்.

**ம:** அப்படி அது இருந்தால், மிகச் சிறப்பானது! உன்னைப் புத்திசாலித்தனமாக நேசி. அப்போது பூரணத்தின் உச்சியை அடைவாய். ஒவ்வொருவரும் தங்களுடைய உடலைத்தான் நேசிக்கிறார்கள். ஆனால் ஒரு சிலரே தங்களுடைய மெய்யான இருத்தலை நேசிக்கிறார்கள்.

**கே:** என்னுடைய மெய்யான இருத்தலுக்கு என் அன்பு தேவையா?

**ம:** உன் மெய்யான இருத்தல் அன்பேதான். உன் பல நேசங்கள் அந்தக் கணத்தில் உள்ள சூழ்நிலைக்கேற்ப அதன் பிரதிபலிப்புகள்.

**கே:** நாங்கள் சுயநலமானவர்கள், எங்களுக்குச் சுய அன்புதான் தெரியும்.

**ம:** ஆரம்பிப்பதற்கு அது போதுமானது. எல்லாவகையிலும் நீ நன்றாக இருக்க விருப்பப்படு. சிந்தி. எது உனக்கு நல்லது என்று ஆழமாக உணர். அதற்காக மனமார்ந்த ஈடுபாட்டுடன் முயற்சி செய். விரைவாக மெய் மட்டும்தான் உனக்கு உண்மையிலேயே நல்லது என்று காண்பாய்.

**கே:** இருப்பினும் பல்வேறு குருக்கள் ஏன் சிக்கலான மற்றும் கடினமான சாதனாக்களைப் பரிந்துரைக்கிறார்கள் என்று எனக்குப் புரியவில்லை. அவர்களுக்கு அதைவிடச் சிறந்ததைத் தெரியாதா?

**ம:** நீ என்ன செய்கிறாய் என்பது முக்கியமில்லை. ஆனால் என்ன செய்யாமல் நிறுத்துகிறாய் என்பதுதான் முக்கியம். தங்கள் சாதனாவை ஆரம்பிப்பவர்கள் மிகவும் நோயுற்றும், அமைதியற்றும் இருக்கிறார்கள். அவர்கள் தங்கள் பயிற்சியைத் தொடர மிகவும் செயல்பாட்டுடன் இருக்கவேண்டும். ஒரு ஒன்றிப்போன வழக்கம் அவர்களுக்கு நல்லது. சில காலத்திற்குப் பிறகு அவர்கள்

அமைதியடைந்து, பிரயத்தனத்திலிருந்து விடுபடுவார்கள். அமைதியிலும், மௌனத்திலும் 'நான்' என்பதை மூடியிருப்பது கரைந்து, அகமும், புறமும் ஒன்றாகிவிடும். உண்மையான சாதனா பிரயத்தனமற்றது.

**கே:** சிலசமயம் எனக்கு இடமே (வெட்ட வெளியே) உடல் என்னும் உணர்வு வருகிறது.

**ம:** 'நான் இந்த உடல்' என்னும் மாயையில் நீ கட்டுண்டிருந்தால், நீ வெறுமனே இடத்தில் ஒரு புள்ளி, காலத்தில் ஒரு கணம். எப்போது உடலோடு சுய அடையாளம் இல்லாமல் போகிறதோ அப்போது எல்லா இடமும், காலமும் உன் மனதில்தான் இருக்கும். மனம் விழிப்புணர்வில் ஒரு சலனம். அதுவேதான் இயற்கையில் பிரதிபலிக்கப்படும் விழிப்புணர்வு மற்றும் எல்லா வெளிப் பட்டவைகளிலும் இருக்கும் பொருள். பிரக்ஞையும், பருப்பொருளும் தூய இருத்தலின் செயல்படுகின்ற மற்றும் செயல்படாத தன்மைகள். தூய இருத்தல் பிரக்ஞைக்குள்ளும், பருப்பொருளுக்குள்ளும் அவற்றிற்கு அப்பாலும் இருக்கிறது. இடமும், காலமும் பிரபஞ்ச இருப்பின் உடலும், மனமும் ஆகும். என் உணர்வு என்னவென்றால் இடத்திலும், காலத்திலும் நடக்கும் அனைத்தும் எனக்கு நடக்கின்றது, ஒவ்வொரு அனுபவமும் என் அனுபவம், ஒவ்வொரு வடிவமும் என் வடிவம் என்பதாகும். என்னை என்னவாக எடுத்துக் கொள்கிறேனோ அது என் உடலாகிறது. அந்த உடலுக்கு என்னவெல்லாம் நடக்கிறதோ அது அதன் மனமாகிறது. ஆனால் பிரபஞ்சத்தின் மூலத்தில் இடத்திற்கும், காலத்திற்கும் அப்பால் இங்கேயே, இப்போதே தூய பிரக்ஞை இருக்கிறது. அதை உன் உண்மையான இருத்தல் என்று அறிந்து, அதன்படி நட.

**கே:** நான் என்னவாக என்னைக் கருதினாலும், அது என் செயல்பாட்டில் என்ன வித்தியாசத்தை ஏற்படுத்தும்? சூழ்நிலை களுக்கு ஏற்றவாறு செயல்பாடு நடக்கிறது.

**ம:** சூழ்நிலைகளும், நிபந்தனைகளும் அறியாமை உடையவரை ஆட்சிசெய்யும். மெய்மையை அறிந்தவரை நிர்பந்திக்க முடியாது. அவர் கீழ்ப்படியும் ஒரே சட்டம் அன்புதான்.

# 94. நீ இடத்திற்கும், காலத்திற்கும் அப்பாற்பட்டவன்

**கேட்பவர்:** நான் எப்போதும் பிறக்கவில்லை என்றும், எப்போதும் இறக்கப் போவதில்லை என்றும் நீங்கள் சொல்லிக் கொண்டே இருக்கின்றீர்கள். அப்படியானால் உலகத்தில் நான் ஏன் பிறந்ததாகவும், கண்டிப்பாக இறப்பேன் என்றும் பார்க்கிறேன்?

**மஹராஜ்:** நீ அவ்வாறு நம்புகிறாய். ஏனெனில் நீ ஒருபோதும் நீதான் பிறந்து, இறக்கின்ற உடல் என்னும் உன் நம்பிக்கையைக் கேள்வி கேட்டதில்லை. உடல்தான் பிறந்து இறக்கிறது என்பது தெளிவு. உயிரோடு இருக்கும்போது அது கவனத்தை ஈர்த்து, முற்றிலுமாகக் கட்டுப்பாட்டிற்குள் வைத்திருக்கிறது. அதனால் ஒருவர் தன் உண்மையான தன்மையை அரிதாகத்தான் உணர்ந்தறிகிறார். இது கடலின் அடியிலிருக்கும் அடர்த்தியை முற்றிலுமாக மறந்துவிட்டு, மேற்பரப்பைமட்டும் பார்ப்பது போன்றது. ஆனால், உலகம் மனதின் மேற்பரப்பாக இருக்கிறது மற்றும் மனம் முடிவற்றது. நாம் எண்ணங்கள் என்று சொல்பவை மனதில் எழும் சலனங்கள். மனம் அமைதியாக இருக்கும்போது மெய்மையைப் பிரதிபலிக்கிறது. அது அசைவற்றிருக்கும்போது, கரைந்துபோய், மெய்மைமட்டுமே மிஞ்சும். இந்த மெய்மை அவ்வளவு கெட்டியானது, அவ்வளவு நிஜமானது, அவ்வளவு மிக அதிகமாக மனதையும், பருப்பொருளையும் விட பிரத்தியட்ச மானது. அதனோடு ஒப்பிட்டால் வைரமும்கூட வெண்ணையைப் போல மிருதுவானது. இந்த அதிகப்படியான மெய்த்தன்மை உலகத்தைக் கனவுபோன்றதாகவும், புதிராகவும், பொருத்த மற்றதாகவும் ஆக்குகிறது.

**கே:** இந்த உலகம் இவ்வளவு துன்பத்தோடு இருக்கும்போது, அதை எப்படி நீங்கள் பொருத்தமற்றது என்று சொல்லலாம்? என்ன ஒரு மரத்துப் போன தன்மை!

**ம:** நீதான் மரத்துப் போனவன், நான் அல்ல. உன் உலகம் அவ்வளவு துன்பத்தால் நிறைந்திருந்தால், அதற்கு ஏதாவது செய்; பேராசையாலும், சோம்பலாலும் துன்பத்தை அதிகப்படுத்தாதே. நான் உன் கனவு போன்ற உலகத்தால் கட்டுப்பட்டவன் அல்ல. என் உலகத்தில் துன்பம், ஆசை, அச்சம் ஆகியவற்றின் விதைகள் விதைக்கப்படவில்லை. ஆகையால் துன்பப்படுதல் வளராது. என் உலகத்தில் ஒன்றுக்கொன்று வித்தியாசமான முரண்பாடுகளான ஒன்றை ஒன்று அழிப்பவை இல்லை. ஒத்திசைவு நிலவுகிறது. அதன் அமைதி பாறை போன்றது. இந்த அமைதியும், மௌனமும் என் உடல்.

**கே:** நீங்கள் சொல்வது புத்தரின் தர்மகாயாவை ஞாபகப் படுத்துகிறது.

**ம:** இருக்கலாம். சொற்தொகுதிக்குப் பின்னால் நாம் ஓட வேண்டாம். மனதிற்குள் உணர்ந்தறிகின்ற உலகத்தின் ஒரு பகுதியாக நீ உன்னை யாரென்று கற்பனை செய்கிறாயோ அந்த நபரைப் பார். மனதை வெளியிலிருந்து பார். ஏனெனில் நீ மனம் அல்ல. உன் ஒரே பிரச்சனை நீ எதை உணர்ந்தறிந்தாலும் அதனோடு ஒன்றாக உற்சாகத்துடன் உன்னைச் சுய அடையாளப்படுத்திக் கொள்வதுதான். இந்தப் பழக்கத்தை விட்டுவிடு. நீ உணர்ந்தறிவது நீ அல்ல என்று ஞாபகம் வைத்திரு. உன் தனியான தன்மையின் சக்தியை உஷாராக உபயோகப்படுத்து. உன்னை வாழ்கின்ற அனைத்திலும் பார். உன் நடத்தை உன் பார்வையை வெளிப் படுத்தும். ஒருமுறை உனக்குச் சொந்தமானது என்று நீ சொல்ல கூடியது உலகத்தில் எதுவும் இல்லை என்று நீ அறிந்துவிட்டால், மேடையில் நடக்கும் ஒரு நாடகத்தைப் பார்ப்பது போல, அல்லது திரைமேல் இருக்கும் ஒரு படத்தைப் போல வெளியிலிருந்து நீ அதைப் பார்ப்பாய். அதைப் பாராட்டி, மகிழ்வாய்; ஆனால் உண்மையில் உதாசீனமாக இருப்பாய். உன்னைத் தொட்டு உணரக் கூடிய, திடமானதாக, பொருட்களில் ஒரு பொருளாக,

காலத்திலும், இடத்திலும் நிஜமாக இருக்கின்றதாக, குறைந்த காலமே வாழக் கூடிய, தாக்குதலுக்கு உட்படக் கூடிய ஏதோ ஒன்றாகக் கற்பனை செய்துகொள்ளும் வரை பிழைக்கவும், பெருகவும் நீ இயல்பாகவே பதட்டத்துடன் இருப்பாய். ஆனால் உன்னை இடத்தில் ஒரு புள்ளியாகவும் காலத்தில் ஒரு கணமாகவும், எப்போதுமே இப்போதாகவும், எல்லா இடமும் இங்காகவும், மிகமிகச் சிறியதைவிடச் சிறியதாகவும், இரகசியத்திலும் இரகசியமானதாகவும், ஆனாலும் உன்னை எங்கும் நீக்கமற நிறைந்திருப்பதாகவும், எல்லாவற்றையும் உள்ளடக்கிய தாகவும், அணுக முடியாததாகவும், துளைக்க முடியாததாகவும் அறிந்தால் மேற்கொண்டு நீ பயப்பட மாட்டாய். உன்னை உள்ளபடி அறி. அச்சத்திற்கு எதிராக வேறு தீர்வு கிடையாது.

இந்த வழிமுறைப்படி சிந்தித்து, உணரக் கற்றுக் கொள்ள வேண்டும். இல்லையென்றால் நீ ஆசை மற்றும் அச்சம், ஈட்டுதல் மற்றும் இழத்தல், வளருதல் மற்றும் நசித்தல் ஆகிய தனிப்பட்ட நிலையில் முடிவில்லாமல் தங்கிவிடுவாய். ஒரு தனிப்பட்ட பிரச்சினையை அதன் நிலையிலேயே தீர்க்க முடியாது. எப்படி மகிழ்ச்சிக்கான ஏக்கம் துயரத்திற்கு வழிவகுக்கிறதோ அப்படி வாழ்வதற்கான ஆசையே இறப்பின் தூதுவன். உலகம் வலி மற்றும் அச்சத்தின், பதட்டம் மற்றும் ஏமாற்றத்தின் கடல். இன்பங்கள் மீன்களைப் போலக் குறைந்த அளவிலானவை மற்றும் லாவகமானவை; அரிதாக வருபவை மற்றும் வேகமாகப் போய்விடக் கூடியவை. புத்திசாலித்தனம் குறைவாக உள்ள மனிதன், எல்லா அத்தாட்சிகளுக்கும் எதிராக, தன்னை ஒரு விதிவிலக்கானவன் என்றும், உலகம் அவனுக்கு மகிழ்ச்சியைக் கொடுக்கக் கடமைப்பட்டுள்ளது என்றும் நம்புகிறான். ஆனால் உலகம் தன்னிடம் இல்லாத ஒன்றைக் கொடுக்கமுடியாது. அடிப்படையிலேயே அது மெய்யற்றது. உண்மையான மகிழ்ச்சிக்கு அதனால் எந்த உபயோகமும் இல்லை. அது வேறுமாதிரி இருக்க முடியாது. நாம் மெய்யைத் தேடுகிறோம். ஏனெனில் மெய்யற்றதோடு மகிழ்ச்சியற்று இருக்கிறோம். மகிழ்ச்சிதான் நம் மெய்யான இயல்பு. அதைக் கண்டுபிடிக்கும்வரை நம்மால் அமைதியாக இருக்கமுடியாது. ஆனால் அதை எங்கு தேடுவதென்று

அரிதாகத்தான் நாம் அறிவோம். ஒருமுறை மெய்மையைப் பற்றிய தவறான பார்வைதான் உலகம் என்றும், அது தோன்றுவதுபோல் இல்லை என்றும் நீ புரிந்துகொண்டால் லோகாயதக் கற்பனைகளால் சூழப்பட்டு அடக்கப்பட்டிருக்க மாட்டாய். எது உன் மெய்யான இருத்தலுடன் ஒத்துப் போகிறதோ அதுதான் உன்னை மகிழ்ச்சியாக்கும். ஆனால் நீ உணர்ந்தறியும் உலகம் அதை முற்றிலுமாக நிராகரிக்கும்.

மனதை மிகவும் அமைதியாக வைத்திருந்து, அதன் மேற்பரப்பிற்கு என்ன வருகிறதோ அதை உஷாராகக் கவனி. அறிந்ததைத் தள்ளுபடி செய். இதுவரை தெரியாததை வரவேற்று, அதன் முறை வரும்போது அதையும் தள்ளுபடி செய். அதனால் அறிவு என்பது இல்லாத, இருத்தல் மட்டுமே உள்ள ஒரு நிலைக்கு நீ வருவாய். அந்நிலையில் இருத்தலே அறிவு. இருத்தலால் அறிவது நேரடி அறிவு. அது பார்ப்பவர் மற்றும் பார்க்கப்படுபவரின் ஏகோபித்த தன்மையை அடிப்படையாகக் கொண்டது. மறைமுக மான அறிவு, உணர்ச்சிகள் மற்றும் ஞாபகம், உணர்ந்தறிபவருக்கும், அவரால் உணர்ந்தறியப்படுவதற்கும் இடையே உள்ள நெருக்கம் ஆகியவற்றை அடிப்படையாகக் கொண்டு அந்த இரண்டிற்கும் இடையேயான வேறுபாட்டில் அடங்கியுள்ளது. அதுவேதான் மகிழ்ச்சிக்கும் பொருந்தும். வழக்கமாக சந்தோஷத்தை அறிய நீ வருத்தத்துடன் இருக்கவேண்டும்; வருத்தத்தை அறிய நீ சந்தோஷ மாக இருக்க வேண்டும். மெய்யான மகிழ்ச்சி காரணமற்றது. அது தூண்டுதல் இல்லை என்பதால் மறையாது. அது துக்கத்திற்கு எதிரானது அல்ல. அது எல்லாத் துக்கத்தையும், துன்பத்தையும் உள்ளடக்கியது.

**கே:** ஒருவர் எப்படி அவ்வளவு துன்பத்திலும் மகிழ்ச்சியோடு இருக்க முடியும்?

**ம:** அதற்கு ஒன்றும் செய்ய முடியாது - உள் மகிழ்ச்சி அபரிமிதமாக மெய்யானது. வானத்தில் உள்ள சூரியனைப் போல, அதன் வெளிப்பாடுகள் மூடி மறைக்கப்பட்டிருக்கலாம். ஆனால் அது ஒருபோதும் இல்லாமல் போகாது.

**கே:** நாங்கள் பிரச்சனையுடன் இருக்கும்போது, கண்டிப்பாக மகிழ்ச்சியோடு இருக்க முடியாது.

**ம:** அச்சம்தான் ஓரே பிரச்சனை. உன்னைச் சுதந்திரமானவன் என்று அறி. அப்போது அச்சத்திலிருந்தும், அதன் தாக்கத்திலிருந்தும் விடுபடுவாய்.

**கே:** மகிழ்ச்சிக்கும், இன்பத்திற்கும் என்ன வித்தியாசம்?

**ம:** இன்பம் புறப் பொருட்களைச் சார்ந்துள்ளது. மகிழ்ச்சி அவ்வாறில்லை.

**கே:** மகிழ்ச்சி சுதந்திரமானது என்றால் நாம் ஏன் எப்போதும் மகிழ்ச்சியாக இல்லை?

**ம:** நாம் மகிழ்ச்சியாக இருக்க நமக்குப் பொருட்கள் தேவையென்று நாம் நம்பும்வரை, அவை இல்லையென்றால் நாம் துன்பப்படுவோம் என்றும் நம்பவேண்டும். மனம் எப்போதும் அதன் நம்பிக்கைகளைப் பொருத்துத் தன்னை வடிவமைத்துக் கொள்ளும். ஆகையால் ஒருவர் மகிழ்ச்சிக்காகப் பிரயத்தனப்பட வேண்டியதில்லை என்றும், பொருட்களால் கிடைக்கும் இன்பம் ஒரு கவனச் சிதறல் மற்றும் இடையூறு என்றும் நம்ப வேண்டியது முக்கியம். ஏனெனில் இன்பம், ஒருவர் மகிழ்ச்சியாக இருக்க பொருட்களை வைத்திருக்கவும், காரியங்களைச் செய்யவும் வேண்டும் என்னும் பொய்யான உறுதிப்பாட்டை வெறுமனே அதிகரிக்கிறது. உண்மையில் அது நேரெதிரானது.

ஆனால் மகிழ்ச்சியைப் பற்றி ஏன் பேச வேண்டும்? நீ மகிழ்ச்சியற்று இருக்கும்போது அல்லாமல் மகிழ்ச்சியைப் பற்றி நினைப்பதே இல்லை. 'இப்போது நான் மகிழ்ச்சியாக இருக்கிறேன்' என்று சொல்லும் ஒரு மனிதன் கடந்த காலம் மற்றும் எதிர் காலம் ஆகிய இரண்டு துக்கங்களுக்கு இடையில் உள்ளார். மகிழ்ச்சி என்பது வலியிலிருந்து நிவாரணம் அடைவதால் உண்டாகும் வெறும் மனக்கிளர்ச்சி. மெய்யான மகிழ்ச்சி முற்றிலும் தன்னுணர்வில்லாதது. 'என்னுடன் எதுவும் தவறாக இல்லை. நான் எதைப் பற்றியும் கவலைப்பட வேண்டியதில்லை' என்று

எதிர்மறையாகத்தான் அதைச் சிறப்பாக வெளிப்படுத்த முடியும். எல்லாச் சாதனாவின் முடிவான நோக்கமும் இந்த உறுதிப்பாடு வெறும் வார்த்தையாக இல்லாமல் நிஜமான, எப்போதும் இருக்கும் அனுபவத்தை அடிப்படையாகக் கொண்டதான ஒரு நிலையை அடைவதுதான்.

**கே:** எந்த அனுபவம்?

**ம:** ஞாபகங்களிலும், எதிர்பார்ப்புகளிலும் ஆழ்ந்து போகாமல் காலியாக இருக்கும் அனுபவம். அது திறந்த வெளியினுடைய, இளமையோடு இருப்பதற்கு மற்றும் காரியங்களைச் செய்ய, கண்டுபிடிக்க, சாகசம் செய்ய எல்லா அவகாசமும், சக்தியும் கொண்டிருப்பது ஆகியவற்றின் மகிழ்ச்சியைப் போன்றது.

**கே:** கண்டுபிடிக்க என்ன மிஞ்சி உள்ளது?

**ம:** மெய்யாக, கடவுளின் மிகப்பெரிய மனதிலும், இதயத்திலும் இருப்பது போல புறத்தில் பிரபஞ்சமும் அகத்தில் எல்லையற்ற விரிவும் உள்ளதை, இருப்பதன் அர்த்தத்தையும், நோக்கத்தையும், துக்கத்தின் ரகசியத்தையும், அறியாமையிலிருந்து வாழ்க்கையின் விடுதலையையும்.

**கே:** மகிழ்ச்சியோடு இருப்பது அச்சத்திலிருந்தும், கவலையிலிருந்தும் விடுபட்டிருப்பதற்கு நிகரானது என்றால், தொல்லையில்லாமல் இருப்பது மகிழ்ச்சிக்குக் காரணம் என்று சொல்லலாமா?

**ம:** துக்கம் இல்லாமல் இருக்கும் நிலை ஒரு காரணமாக இருக்க முடியாது. மகிழ்ச்சிக்குக் காரணம் கிடையாது. ஒன்றும் இல்லாமல் இருப்பது முதன்மையானது. அதில் இருப்பது என்பது வந்து போகிறது. ஒரு பொருளின் இருத்தல் முடிந்தால் என்ன மிஞ்சுமோ அதுதான் அந்தப் பொருள் இல்லாத நிலை. உன் உண்மையான வீடு அந்த ஒன்றும் இல்லாமையில், உள்ளடக்கம் இல்லாத காலித் தன்மையில் உள்ளது. நீ எப்போது உன் வீட்டில் இருப்பாயோ அப்போதுதான் மகிழ்ச்சியாக இருப்பாய்.

**கே:** ஒன்றுமில்லாத தன்மை, சூன்யத் தன்மை - எவ்வளவு அபாயகரமானது!

**ம:** நீ தூங்கப் போகும்போது, அதை மிகவும் உற்சாகத்தோடு எதிர்கொள்கிறாய்! விழித்த தூக்க நிலையை (ஜாக்ரித் - சுசுப்தி) உனக்காகக் கண்டுபிடி. அது உன் மெய்யான இயல்புடன் ஒத்திசைவுடன் இருப்பதைப் பார்ப்பாய். வார்த்தைகள் உனக்குக் கருத்தை மட்டும்தான் கொடுக்க முடியும். கருத்து அனுபவம் அல்ல. உண்மையான மகிழ்ச்சிக்குக் காரணம் கிடையாது என்றும், காரணமற்றது அசைக்க முடியாதது என்றும் மட்டுமே நான் சொல்ல முடியும். பொருட்களால் கிடைக்கும் இன்பத்தைப் போல அது உணர்ந்தறியக் கூடியது என்று அதற்கு அர்த்தம் அல்ல. எது உணர்ந்தறியக் கூடியதோ அது வலியும், இன்பமும்தான். துக்கத்திலிருந்து சுதந்திரமான நிலையை எதிர்மறையாகத்தான் விவரிக்க முடியும். அதை நேரடியாக அறிய காரண காரியத் தன்மைக்கும், காலத்தின் தண்டனைக்கும் பழக்க அடிமையான மனதிற்கு அப்பால் செல்ல வேண்டும்.

**கே:** மகிழ்ச்சி என்பது விழிப்புணர்வில்லாதது, விழிப்புணர்வு மகிழ்ச்சியற்றது என்றால் இரண்டிற்கும் இடையே உள்ள இணைப்பு என்ன?

**ம:** விழிப்புணர்வு, நிலைமைகள் மற்றும் சூழ்நிலைகள் ஆகியவற்றின் ஒரு உருவாக்கம். ஆதலால், அது அவற்றைச் சார்ந்துள்ளது; அவற்றோடு சேர்ந்து மாறுகின்றது. எது சுதந்திர மாகவும், உருவாக்கப்படாமலும், காலமற்றும், மாற்றமற்றும் இருப்பினும் புதியதாகவும், மலர்ச்சியுடனும் எப்போதும் தற்பொழுதில் இருக்கிறதோ அது மனதிற்கு அப்பாற்பட்டது. எப்போது மனம் அந்த நிலையைப் பற்றி நினைக்கிறதோ அப்போது மனம் கரைந்து போகிறது. மகிழ்ச்சி மட்டுமே மிஞ்சுகிறது.

**கே:** எல்லாமும் போய்விட்டால் ஒன்றுமில்லாமை இருக்கும்.

**ம:** ஏதாவது ஒன்று இல்லாமல் எப்படி ஒன்றுமில்லாமை இருக்கும்? ஒன்றுமில்லாமை என்பது ஒரு கற்பனை. அது ஏதாவது ஒன்றைப் பற்றிய ஞாபகத்தைச் சார்ந்துள்ளது. தூய இருத்தல் இருப்பில் இருந்து மிகவும் சுதந்திரமானது. இருப்பு வரையறுக்கப் படக்கூடியது மற்றும் விவரிக்கப்படக் கூடியது.

**கே:** விழிப்புணர்வு மனதிற்கு அப்பால் தொடருமா அல்லது அது மனதோடு முடிவடைந்துவிடுமா என்று தயவு செய்து எங்களுக்குச் சொல்லுங்கள்.

**ம:** விழிப்புணர்வு வந்து போகும். பிரக்ஞை மாற்றமில்லாமல் ஒளிரும்.

**கே:** பிரக்ஞையில் யார் பிரக்ஞையோடு இருப்பது?

**ம:** ஒரு நபர் இருந்தால் விழிப்புணர்வும் இருக்கும். 'நான்' என்பது மனம். விழிப்புணர்வும் அதே நிலையையே குறிக்கிறது. 'நான் பிரக்ஞையோடிருக்கிறேன்' என்று சொன்னால், 'நான் பிரக்ஞையோடிருப்பதைச் சிந்திப்பதைப் பற்றி உணர்வுடன் இருக்கிறேன்' என்று மட்டுமே அர்த்தம். பிரக்ஞையில் 'நான்' என்பது இல்லை.

**கே:** சாட்சித் தன்மையைப் பற்றி எப்படி?

**ம:** சாட்சித் தன்மை மனதினுடையது. சாட்சி, பார்க்கப் பட்டதுடன் போய்விடும். இருமையற்ற தன்மையில் எல்லாப் பிரிவினைகளும் இல்லாமல் போய்விடும்.

**கே:** உங்களைப் பற்றி எப்படி? நீங்கள் பிரக்ஞையில் தொடர்கிறீர்களா?

**ம:** 'நான் இந்த உடல், இந்த மனம், இந்த ஞாபகங்களின் தொடர், இந்த ஆசை மற்றும் அச்சங்களின் கற்றை' என்னும் நபர் மறைந்துவிடும். ஆனால் நீ ஏகோபித்தது என்று சொல்லக் கூடிய ஏதோ ஒன்று மிஞ்சும். அதற்குத் தேவைப்படும்போது நான் ஒரு நபராகலாம். அன்பு அதன் சொந்தத் தேவைக்காக நபராவதன் அவசியத்தை உருவாக்குகிறது.

**கே:** மெய்மை தன்னை 'இருத்தல் - விழிப்புணர்வு - ஆனந்தம்' என்று வெளிப்படுத்துவதாகச் சொல்லப்படுகிறது. அவை தனித்தவையா அல்லது சார்புடையவையா?

**ம:** அவை ஒன்றோடு ஒன்று தொடர்புடையவை மற்றும் ஒன்றை ஒன்று சார்ந்துள்ளவை. மெய்மை அதன் வெளிப்பாடுகளிலிருந்து சுதந்திரமானது.

**கே:** மெய்மைக்கும் அதன் வெளிப்பாடுகளுக்கும் என்ன தொடர்பு?

**ம:** எந்தத் தொடர்பும் இல்லை. மெய்மையில் எல்லாமும் மெய் மற்றும் ஒரே மாதிரியானவை. நாம் சொல்வது போல, சகுணாவும், நிர்குணாவும் பரப்ரம்மத்தில் ஒன்றே. உச்ச உயர்வு மட்டும்தான் உள்ளது. அசைவில் அது சகுணா. அசைவற்று இருந்தால் அது நிர்குணா. ஆனால் மனம் மட்டும்தான் அசையும் அல்லது அசையாது. மெய் அப்பால் உள்ளது, நீ அப்பால் உள்ளாய். உணர்ந்தறியக் கூடிய அல்லது உருவகிக்கக் கூடிய எதுவும் நீ அல்ல என்று புரிந்துகொண்ட பிறகு, நீ உன் கற்பனைகளிலிருந்து விடுபடுவாய். எல்லாவற்றையும் ஆசையினால் பிறந்த கற்பனை என்று பார்ப்பது சுயம் அறிதலுக்கு அவசியம். ஏனெனில் மெய்யற்றதை அதிகக் கற்பனையால் உருவாக்குகிறோம். அவ்வாறு நாம் புரிந்துகொள்ளாவிட்டால் மெய் நம் மனதிற்குள் நுழைய முடியாது.

உன் மனதையும், இதயத்தையும் இவற்றில் செலுத்தி, இவற்றைப் பற்றி திரும்பத் திரும்பச் சிந்திக்க வேண்டும். இது உணவைச் சமைப்பது போன்றது. அது தயாராவதற்கு முன்பு சிறிது நேரத்திற்கு அடுப்பின் மீது வைத்திருத்தல் அவசியம்.

**கே:** நான் என் விதியால், 'கர்மா'வால் அலைக்களிக்கப் படுவதில்லையா? அதற்கு எதிராக நான் என்ன செய்ய முடியும்? நான் என்னவோ அதுவும், நான் என்ன செய்கிறேனோ அதுவும் முன்பே தீர்மானிக்கப்பட்டுள்ளது. என் சுதந்திரமான மனோ விருப்பம் என்று சொல்லப்படுவதும் முன்பே தீர்மானிக்கப் பட்டுள்ளது. எனக்கு அதைப்பற்றித் தெரியாது. நான் சுதந்திரமானவன் என்று கற்பனை செய்து கொள்கிறேன்.

**ம:** மறுபடியும், அது நீ எப்படி அதைப் பார்க்கிறாய் என்பதைப் பொருத்தது. அறியாமை காய்ச்சலைப் போன்றது - அது இல்லாதவற்றை உன்னைப் பார்க்கச் செய்கிறது. கர்மா என்பது இறைத் தன்மையினால் பரிந்துரைக்கப்படும் மருத்துவம். அதை வரவேற்று, அதன் குறிப்புகளை உண்மையாகக் கடைப்பிடித்தால் நீ நலம் அடைவாய். ஒரு நோயாளி நலமடைந்தவுடன் மருத்துவ

மனையைவிட்டு வெளியே சென்றுவிடுவார். விருப்பத் தேர்விற்கும், செயலுக்கும் உடனடியாகச் சுதந்திரத்தை விரும்புவது குணமடைதலை வெறுமனே தள்ளிப்போடும். உன் விதியை ஏற்றுக் கொண்டு அதை நிறைவேற்று - இதுதான் அன்பிலிருந்தும், அதன் நிர்பந்தங்களிலிருந்தும் இல்லாவிட்டாலும்கூட, விதியிலிருந்து விடுதலைபெறுவதற்கு மிகக் குறுகிய வழி. ஆசையாலும், அச்சத்தாலும் செயல்படுவது அடிமைத்தனம். அன்பால் செயல்படுவது சுதந்திரம்.



# 95. வாழ்க்கையை அது வருவதுபோல் ஏற்றுக் கொள்

**கேட்பவர்:** நான் கடந்த வருடம் இங்கு வந்திருந்தேன். இப்போது மறுபடியும் உங்கள் முன்னால் இருக்கிறேன். எது என்னை வர வைக்கிறது என்று எனக்குத் தெரியவில்லை. ஆனால் எதனாலோ உங்களை என்னால் மறக்க முடியவில்லை.

**மஹராஜ்:** அவரவர் விதியைப் பொறுத்து சிலர் மறந்து விடுகிறார்கள். சிலர் மறப்பதில்லை. அது அவர்களுடைய தெய்வீக அருளையும் வாய்ப்பையும் பொறுத்தது.

**கே:** வாய்ப்பிற்கும், விதிக்கும் ஒரு அடிப்படை வித்தியாசம் உள்ளது.

**ம:** உன் மனதில்தான் அது உள்ளது. உள்ளபடியே, எது எதற்குக் காரணம் என்று உனக்குத் தெரியாது. விதி என்பது உன் அறியாமையை மறைக்க ஒரு ஒட்டுமொத்தமான வார்த்தை. வாய்ப்பு என்பது மற்றொரு வார்த்தை.

**கே:** காரணங்களைப் பற்றியும், அவற்றின் விளைவுகளைப் பற்றியும் அறியாமல் சுதந்திரம் இருக்க முடியுமா?

**ம:** காரணங்களும், அவற்றின் விளைவுகளும் எண்ணிக்கையிலும் விதங்களிலும் அளவற்றவை. ஒவ்வொன்றும் ஒவ்வொன்றையும் பாதிக்கிறது. இந்தப் பிரபஞ்சத்தில் ஒன்று மாறும்போது, எல்லாமும் மாறுகிறது. ஆகையால் மனிதனிடம் தன்னை மாற்றுவதால் உலகத்தை மாற்றும் மாபெரும் சக்தி உள்ளது.

**கே:** உங்கள் வார்த்தைகளின்படி, நாற்பது வருடங்களுக்கு முன்பு, உங்களுடைய குருவின் அருளால் நீங்கள் அடிப்படையிலேயே

முற்றிலுமாக மாறிவிட்டதாகச் சொன்னீர்கள். இருப்பினும் உலகம் முன்பு இருந்தது போலவே இருக்கிறது.

**ம:** என் உலகம் முற்றிலுமாக மாறிவிட்டது. உன்னுடையது அப்படியே இருக்கிறது. ஏனென்றால் நீ மாறவில்லை.

**கே:** உங்களுடைய மாற்றம் என்னை ஏன் பாதிக்கவில்லை?

**ம:** ஏனென்றால் நமக்குள் ஐக்கியம் இல்லை. உன்னை என்னிலிருந்து தனித்தவனாகக் கருதாதே. அப்போது நாம் உடனடியாகப் பொதுவான நிலையில் பகிர்ந்து கொள்வோம்.

**கே:** எனக்கு அமெரிக்காவில் சில சொத்துகள் உள்ளன. அவற்றை விற்றுவிட்டு, இமயமலையில் சிறிது நிலத்தை வாங்க உத்தேசித்துள்ளேன். அதில் ஒரு வீட்டைக் கட்டி, ஒரு தோட்டத்தை அமைத்து, இரண்டு அல்லது மூன்று பசுக்களை வைத்துக் கொண்டு அமைதியாக வாழ விரும்புகிறேன். சொத்தும், அமைதியும் ஒத்துப்போகாதவை என்றும், உடனடியாக அதிகாரிகள், அருகாமையில் இருப்பவர்கள், திருடர்கள் ஆகியவர்களின் தொந்தரவு வரும் என்றும் எனக்குத் தெரிந்தவர்கள் சொல்கிறார்கள். அது தவிர்க்க முடியாததா?

**ம:** குறைந்தபட்சம் என்ன நீ எதிர்பார்க்கலாம் என்றால், உன் குடியிருப்பை ஒரு இலவசமான, திறந்த விருந்தினர் இல்லமாக முடிவில்லாத பார்வையாளர்களின் வருகை மாற்றிவிடும் என்பதை. எது சிறந்தது என்றால் வாழ்க்கையை அது வடிவெடுக்கும் விதமாக ஏற்றுக் கொள்; வீட்டிற்குத் திரும்பிப் போ; உன் மனைவியை அன்பாகவும், அக்கறையுடனும் கவனித்துக் கொள். உன்னை வேறு யாருக்கும் தேவை இல்லை. புகழ்ச்சியைப் பற்றிய உன் கனவுகள் உன்னை அதிகமான பிரச்சனைகளில் கொண்டு போய்ச் சேர்க்கும்.

**கே:** நான் தேடுவது புகழ்ச்சியை அல்ல; மெய்மையை.

**ம:** அதற்கு உனக்குத் தேவை ஒரு ஒழுங்கு முறையான வாழ்க்கை, மன அமைதி, அளவற்ற மனமார்ந்த ஈடுபாடு. ஒவ்வொரு கணத்திலும் உன்னிடம் கேட்கப்படாமலே எது வருகிறதோ அது கடவுளிடமிருந்து வருகிறது; அதை நீ முழுமையாகப் பயன்படுத்தினால் அது உனக்குக் கண்டிப்பாக உதவும். உன்

கற்பனையாலும், ஆசையாலும் நீ எதற்காகக் கடும் முயற்சி செய்கிறாயோ அதுதான் உனக்குத் தொந்தரவு தரும்.

**கே:** விதியும், அருளும் ஒன்று போன்றவையா?

**ம:** கண்டிப்பாக. வாழ்க்கையை அது வருவது போல ஏற்றுக் கொள். அப்போது அதை ஒரு ஆசீர்வாதமாகக் காண்பாய்.

**கே:** நான் என் சொந்த வாழ்க்கையை ஏற்றுக் கொள்ளலாம். மற்றவர்களால் கட்டாயப்படுத்தப்பட்டு வாழும் வாழ்க்கை முறையை நான் எப்படி ஏற்றுக் கொள்ள முடியும்?

**ம:** எப்படியாயினும் அதை நீ ஏற்றுக் கொள்கிறாய். மற்றவர்களின் துக்கம் உன் இன்பத்தில் குறுக்கிடுவதில்லை. நீ உண்மையிலேயே இரக்கமுடையவனாக இருந்தால் எல்லாச் சுய அக்கறையையும் நீண்ட காலத்திற்கு முன்பே கை விட்டு, எந்த நிலையிலிருந்து மட்டுமே நீ உதவ முடியுமோ அந்த நிலைக்குள் நுழைந்திருப்பாய்.

**கே:** என்னிடம் ஒரு பெரிய வீடும், போதுமான நிலமும் இருந்தால் ஒரு ஆசிரமத்தை, தனித்தனி அறைகள், பொதுவான தியானக் கூடம், உணவுக் கூடம், நூலகம் ஆகியவற்றுடன் உருவாக்கலாம்.

**ம:** ஆசிரமங்கள் உருவாக்கப்படுவதில்லை; அவை நிகழ்கின்றன. எப்படி ஒரு நதியை ஆரம்பிக்கவோ, தடுக்கவோ முடியாதோ அப்படி நீ அவற்றை ஆரம்பிக்கவோ, தடுக்கவோ முடியாது. ஒரு வெற்றிகரமான ஆசிரமத்தை உருவாக்கப் பலப்பல காரணிகள் ஈடுபடுகின்றன. உன் உள்முக முதிர்ச்சி அவற்றில் ஒன்றுதான். கண்டிப்பாக நீ உன் மெய்யான இருத்தலை அறியாமல் இருந்தால், நீ என்ன செய்தாலும் அது சாம்பலாகப் போய்விடும். உன்னால் ஒரு குருவைப்போல நடிக்கமுடியாது. எல்லாப் பாசாங்கும் பேரழிவில்தான் முடியும்.

**கே:** ஒரு புனிதரைப் போல ஆவதற்கு முன்னால் அவரைப் போல நடந்துகொள்வதில் என்ன தவறு?

**ம:** புனிதத் தன்மையை ஒத்திகை பார்ப்பது ஒரு சாதனா. எந்தப் பெருமையையும் எதிர்பார்க்காதிருந்தால் அது முற்றிலும் சரி.

**கே:** நான் முயற்சி செய்யாமல் எனக்கு எப்படி ஒரு ஆசிரமத்தை ஆரம்பிக்க முடியுமா அல்லவா என்று தெரியும்?

**ம:** உன்னை ஒரு நபராக, ஒரு உடலாக, ஒரு மனமாகக் கருதும் வரையிலும், ஒரு சுய விருப்பத்தைக் கொண்ட, அதன் சொந்த நோக்கங்களைப் பின்தொடரும் வாழ்க்கை ஓட்டத்திலிருந்து தனித்திருப்பதாகக் கருதும் வரையிலும் நீ வெறுமனே மேற்பரப்பில்தான் வாழ்வாய்; நீ எதைச் செய்தாலும் அது குறைந்த காலமே வாழும். கர்வமாகிய தீயை எரிக்கப் போடப்படும் வைக்கோலைப் போல அதற்குக் குறைந்த மதிப்பே இருக்கும். ஏதையாவது மெய் என்று எதிர்பார்ப்பதற்கு முன்னால் நீ உண்மையான மதிப்புடையதைக் கொடுக்க வேண்டும். உன் மதிப்பு என்ன?

**கே:** எந்த அளவுகோலால் அதை நான் அளப்பது?

**ம:** உன் மனதின் உள்ளடக்கத்தைப் பார். எதைப் பற்றிச் சிந்திக்கிறாயோ அதுதான் நீ. பெரும்பாலான நேரம் நீ உன் சொந்தச் சிறு நபரோடும், அதன் தினசரித் தேவைகளோடும் ஈடுபட்டுக் கொண்டிருப்பதில்லையா?

முறைப்படியான தியானத்தின் மதிப்பு என்னவென்றால், அது தினசரி நடைமுறையின் உற்சாகமற்ற செயல் புரிதலிலிருந்து உன்னை அப்பால் எடுத்துச் சென்று, உன்னை என்னவென்று நீ நம்புகிறாயோ அதுவல்ல என்று ஞாபகப்படுத்தும். ஆனால் ஞாபகம் வைத்திருந்தால்மட்டும் போதாது - செயல்பாடு திட நம்பிக்கையைத் தொடரவேண்டும். விளக்கமான உயில் எழுதிவைத்துவிட்டு, இறக்க மறுக்கும் செல்வந்தனைப் போல் இருக்காதே.

**கே:** படிப்படியாக மாறுவது வாழ்க்கையின் விதிமுறை அல்லவா?

**ம:** இல்லை, இல்லை. தயாராவது மட்டும்தான் படிப்படியானது. தனக்குள் நிகழும் மாற்றம் திடீரென்றும், முழுவதுமாகவும்

நடப்பது. படிப்படியான மாற்றம் உன்னை உணர்வுள்ள இருத்தலின் ஒரு புதிய நிலைக்கு எடுத்துச் செல்லாது. நடப்பதுபோல் நடக்க விட உனக்குத் தைரியம் தேவை.

**கே:** தைரியம் என்னிடம் இல்லை என்பதை ஒப்புக் கொள்கிறேன்.

**ம:** அதற்குக் காரணம் நீ முழுவதுமாக நம்பவில்லை. முழுமையான திடநம்பிக்கை ஆசையையும், தைரியத்தையும் உருவாக்கும். புரிதலின் மூலம் நம்பிக்கையை அடையும் கலைதான் தியானம். தியானத்தில் நீ கற்ற பாடத்தை, அதன் எல்லாத் தன்மைகளிலும், தொடர்ந்தும், தெளிவினால் நம்பிக்கையும், நம்பிக்கையால் செயலும் பிறக்கும் வரை சிந்திப்பாய். திட நம்பிக்கையும், செயலும் பிரிக்க முடியாதவை. திடநம்பிக்கையைச் செயல்பாடு தொடரவில்லை என்றால் உன் நம்பிக்கைகளைப் பரிசோதி. தைரியம் இல்லையென்று உன்னைக் குற்றம் சொல்லாதே. சுய மதிப்புக் குறைப்பு உன்னை எங்கும் கொண்டுசெல்லாது. தெளிவும், உணர்வுபூர்வமான ஒப்புதலும் இல்லாமல் மனோ திடத்தால் என்ன பயன்?

**கே:** உணர்வு பூர்வமான ஒப்புதல் என்றால் என்ன அர்த்தம்? நான் என் ஆசைகளுக்கு எதிராகச் செயல்பட வேண்டாமா?

**ம:** நீ உன் ஆசைகளுக்கு எதிராகச் செயல்பட மாட்டாய். தெளிவு மட்டும் போதாது. சக்தி அன்பிலிருந்து வருகிறது - நீ செயல்பட அன்பைச் செலுத்த வேண்டும் - உன் அன்பின் வடிவமும், அன்பு செழுத்தப்படுவதும் எதுவாக இருந்தாலும். தெளிவும், உபகாரமும் இல்லாவிட்டால் தைரியம் அழிக்கக் கூடியது. யுத்தத்தில் ஈடுபடும் மக்கள் அற்புதமான தைரியத்துடன் இருப்பார்கள். அதனால் என்ன பயன்?

**கே:** எனக்கு வேண்டியதெல்லாம் நான் அமைதியாக வாழ ஒரு தோட்டத்தில் உள்ள ஒரு வீடு மட்டும்தான் என்று எனக்குத் தெளிவாகத் தெரிகிறது. என் ஆசைக்காக நான் ஏன் செயல்படக் கூடாது?

**ம:** எல்லாவகையிலும் செயல்படு. ஆனால் தவிர்க்க முடியாததையும், எதிர்பாராததையும் மறந்துவிடாதே. மழை

இல்லாமல் உன் தோட்டம் செழிக்காது. சாகசத்திற்குத் தைரியம் உனக்குத் தேவை.

**கே:** என் தைரியத்தைச் சேர்க்க எனக்கு அவகாசம் தேவை. என்னை அவசரப்படுத்த வேண்டாம். செயலுக்கு என்னை முதிரவிடுங்கள்.

**ம:** முழு அணுகுமுறையுமே தவறு. தாமதிக்கப்பட்ட செயல் கைவிடப்பட்ட செயலாகும். வேறு செயல்களுக்கு வேறு வாய்ப்புகள் இருக்கலாம். ஆனால் இந்தக் கணம் போனால் போனதுதான் - திரும்பப் பெறமுடியாதவாறு தொலைந்து போய்விடும். எல்லாத் தயாராவதும் எதிர்காலத்திற்கு மட்டும்தான் - நிகழ்காலத்திற்கு நீ தயாராக முடியாது.

**கே:** எதிர்காலத்திற்குத் தயாராவதில் என்ன தவறு?

**ம:** தற்பொழுதில் செயல்படுவதற்கு நீ தயாராகுதல் மிகவும் உதவாது. தெளிவு இப்போது உள்ளது; செயல் இப்போது உள்ளது. தயாராகச் சிந்திப்பது செயலைத் தாமதப்படுத்தும். செயல்பாடுதான் மெய்மையின் உரைகல்.

**கே:** நாம் நம்பிக்கையில்லாமல் செயல்பட்டாலும்கூடவா?

**ம:** நீ செயல்படாமல் வாழ முடியாது. ஒவ்வொரு செயலுக்கும் பின்னால் சிறிது அச்சமோ, ஆசையோ இருக்கும். முடிவாக, நீ செய்யும் அனைத்தும் உலகம் மெய்யானது, உன்னிலிருந்து தனித்தது என்னும் உன் நம்பிக்கையை அடிப்படையாகக் கொண்டது. நீ இதற்கு மாறான நம்பிக்கையைக் கொண்டிருந்தால் உன் நடவடிக்கை முற்றிலும் வேறு மாதிரியாக இருந்திருக்கும்.

**கே:** என் நம்பிக்கைகளில் தவறு எதுவும் இல்லை; என் செயல்பாடுகள் சூழ்நிலைகளால் வடிவமைக்கப்படுகின்றன.

**ம:** வேறு மாதிரி சொன்னால் உன் சூழ்நிலைகளின் மெய்த்தன்மையைப் பற்றியும், நீ வாழும் உலகத்தின் மெய்த் தன்மையைப் பற்றியும் நம்புகிறாய். உலகத்தை அதன் மூல ஆதாரம் வரை தேடு. அப்போது நீ உலகத்திற்கு முன்பே இருந்தாய் என்றும், உலகம் இல்லாமல் போனாலும் இருப்பாய் என்றும் காண்பாய்.

உன் காலமற்ற இருத்தலைக் கண்டுபிடி. அப்போது உன் செயல்கள் அதன் அத்தாட்சியாக இருக்கும். அதைக் கண்டுபிடித்தாயா?

**கே:** இல்லை. நான் கண்டுபிடிக்கவில்லை.

**ம:** பிறகு வேறு என்ன நீ செய்ய வேண்டியது இருக்கிறது? கண்டிப்பாக இதுதான் மிகவும் அவசரமான வேலை. நீ எல்லா வற்றையும் உதறிவிட்டு ஒத்தாசை இல்லாமலும், வரையறைக்கு உட்படாதவனாகவும் இருந்தால் ஒழிய உன்னை எல்லாவற்றிலு மிருந்து சுதந்திரமானவனாகப் பார்க்க முடியாது. உன்னை நீ அறிந்துவிட்டால் நீ என்ன செய்கிறாய் என்பது பொருட்டல்ல. ஆனால் உன் சுதந்திரத்தை அறிய நீ சார்ந்திருக்கும் அனைத்தையும் விட்டுவிடுவதால் அதைச் சோதிக்க வேண்டும். மெய்யறிந்த மனிதர் எதையுமே சார்ந்திருக்காத நிலைகளில் முழுமையாக வாழ்கிறார்; அவருடைய அறிவு, அன்பு, தைரியம் ஆகிய அனைத்தும் முழுமை யானவை; அவை எதையும் சார்ந்திருப்ப தில்லை. ஆகையால் அவர் அதிகக் கடினமான பரீட்சைகளினால் தன்னை நிரூபிக்க வேண்டும். பரிசோதிப்பவர், பரிசோதிக்கப்படுவது, பரிசோதிக்கும் ஏற்பாடு ஆகிய அனைத்தும் உள்ளுக்குள்தான் இருக்கின்றன; அது ஒரு அந்தரங்க நாடகம். அதில் வேறு யாரும் பங்கேற்க முடியாது.

**கே:** சிலுவையில் அறையப்படுதல், இறப்பு, உயிர்த்தெழுதல் - இவையெல்லாம் தெரிந்தவை! அவற்றைப் பற்றி நிறையப் படித்திருக்கிறேன், கேட்டிருக்கிறேன், பேசியிருக்கிறேன். ஆனால் அதைச் செய்ய என்னால் முடியாது.

**ம:** அமைதியாக, தொந்தரவில்லாமல் இருந்தால் அறிவும், சக்தியும் தானாகவே வரும். அதற்காக நீ தீவிர ஆவலோடு இருக்க வேண்டியதில்லை. இதயம் மற்றும் மனதின் மௌனத்தில் காத்திரு. அமைதியாக இருப்பது சுலபம். ஆனால் அதற்கான மனோ விருப்பம்தான் அரிது. நீங்கள் எல்லோரும் ஒரே இரவில் அதீத சக்தியுடைய மனிதனாக வேண்டுகிறீர்கள். அடைய விரும்பும் குறிக்கோள் இல்லாமலும், குறைந்தபட்ச ஆசைகூட இல்லாமலும், ஏதுவாகவும், பாதுகாக்கப்படாமலும், உறுதியற்றும், தனித்தும், வாழ்க்கைக்கு முற்றிலும் திறந்தவாறும் அதை வருவதுபோல்

வரவேற்றும், எல்லாமும் உனக்கு இன்பத்தையோ, அல்லது பொருளாதார மற்றும் ஆன்மீகம் என்று சொல்லப்படுகின்ற லாபத்தையோ தர வேண்டும் என்னும் சுயநலமான நம்பிக்கை இல்லாமலும் இரு.

**கே:** நீங்கள் சொல்வது எனக்குப் புரிகிறது. ஆனால் அதை எப்படிச் செய்வது என்று எனக்குத் தெரியவில்லை.

**ம:** உனக்கு எப்படி அதைச் செய்வது என்று தெரிந்தால் நீ செய்ய மாட்டாய். எல்லா முயற்சியையும் கை விடு. சும்மா இரு; முயற்சிக்காதே, போராடாதே, எல்லாத் துணையையும் போக விடு. மற்ற எல்லாவற்றையும் ஒதுக்கித் தள்ளிவிட்டு, கண்மூடித்தனமாக இருத்தல் என்னும் உணர்வைப் பற்றிக் கொள். இது போதும்.

**கே:** இந்த ஒதுக்குதலை எப்படிச் செய்வது? எவ்வளவு அதிகமாக நான் ஒதுக்குகிறேனோ அவ்வளவு அதிகமாக அது மேற்பரப்பிற்கு வருகிறது.

**ம:** கவனத்தைச் செலுத்த மறு. ஒவ்வொன்றையும் வந்து போக விடு. ஆசைகளுக்கும், எண்ணங்களுக்கும்கூட அதே போல. அவற்றையும் பொருட்படுத்தாதே. காலகாலமாக, உன் மனம் என்னும் தெளிவான கண்ணாடியை நிகழ்வுகள் என்னும் தூசி மறைக்கிறது. அதனால் ஞாபகங்களை மட்டும்தான் நீ பார்க்க முடியும். தூசி படிவதற்கு முன்பே தட்டி விடு. இது உன் மனதின் பழைய படிமங்களைத் திறக்கும். உன் மனதின் உண்மையான இயல்பைக் கண்டுபிடிக்கும் வரை இது தொடரும். இவையெல்லாம் எளிமையானவை மற்றும் சுலபமானவை; மனமார்ந்த ஈடுபாட்டுடனும், பொறுமையாகவும் இரு; அவ்வளவே. ஆர்வமற்ற தன்மை, பற்றற்ற தன்மை, ஆசையிலிருந்தும், அச்சத்திலிருந்தும், எல்லாச் சுய அக்கறையிலிருந்தும் சுதந்திரம், ஞாபகமும், எதிர்பார்ப்பும் இல்லாமல் வெறும் பிரக்ஞை - இந்த மனோ நிலையில்தான் கண்டுபிடிப்பு நிகழ முடியும். விடுதலை என்பதே கண்டுபிடிப்பதற்கான சுதந்திரம்தான்.

# 96. ஞாபகங்களையும், எதிர்பார்ப்புகளையும் கைவிடு

**கேட்பவர்:** நான் பிறப்பால் அமெரிக்காவைச் சேர்ந்தவன். கடந்த ஒரு வருடமாக மத்தியப் பிரதேசத்தில் உள்ள ஒரு ஆசிரமத்தில் தங்கி, யோகாவையும், அதன் பல தன்மைகளையும் படித்துக் கொண்டிருந்தேன். எங்களுக்கு ஒரு ஆசிரியர் இருந்தார். அவருடைய குரு, ஞானி சிவானந்த சரஸ்வதியின் சீடர்; மாங்யரில் இருக்கிறார். நான் ஸ்ரீ ரமணாஸ்ரமத்திலும் தங்கி இருந்தேன். நான் பம்பாயில் இருந்தபோது திரு. கோயங்கா என்பவரால் நடத்தப் பட்ட தீவிரமான பர்மீயத் தியான முகாமில் கலந்து கொண்டேன். இருப்பினும் நான் அமைதியைக் காண முடியவில்லை. சுயக் கட்டுப் பாட்டிலும், தினசரி ஒழுக்கத்திலும் ஒரு முன்னேற்றம் உள்ளது. ஆனால் அது அவ்வளவே. என்னால் எது எதை ஏற்படுத்தியது என்று குறிப்பிட்டுச் சொல்ல முடியவில்லை. நான் பல புனிதத் தலங்களுக்குச் சென்றுள்ளேன். ஒவ்வொன்றும் எப்படி என்மேல் வினை புரிந்தது என்று என்னால் சொல்ல முடியாது.

**மஹராஜ்:** நல்ல விளைவுகள் சீக்கிரமோ அல்லது பிறகோ வரும். ஸ்ரீ ரமணாஸ்ரமத்தில் ஏதாவது குறிப்புகளைப் பெற்றாயா?

**கே:** ஆமாம். சில ஆங்கிலேயர்கள் எனக்குக் கற்றுக் கொடுத் தார்கள். அங்கேயே தங்கியிருக்கும், ஞான யோகத்தைப் பின்பற்றும் ஒரு இந்தியர் எனக்குப் பாடங்கள் எடுத்தார்.

**ம:** உன் திட்டங்கள் என்ன?

**கே:** விசா பிரச்சனைகளினால் நான் அமெரிக்காவிற்குத் திரும்ப வேண்டும். என் அறிவியல் பட்டப்படிப்பை முடிக்க வேண்டும், இயற்கை வைத்தியத்தைக் கற்று, அதை என் வாழ்க்கைத் தொழிலாக ஆக்க வேண்டும்.

**ம:** நல்ல வாழ்க்கைத் தொழில். சந்தேகமில்லை.

**கே:** எந்த விலை கொடுத்தாவது ஞானமார்க்கத்தைப் பின்தொடர்வதில் ஏதாவது அபாயம் உள்ளதா?

**ம:** வீடே பற்றி எரியும்போது தீக்குச்சியால் அபாயம் உள்ளதா? மெய்மையைத் தேடுவது எல்லா முயற்சிகளிலும் அபாயகரமானது. ஏனெனில் அது நீ வாழும் உலகத்தை அழித்து விடும். ஆனால் உன் நோக்கம் உண்மையின் மேலும், வாழ்க்கையின் மேலும் கொண்டுள்ள அன்பாக இருந்தால் நீ பயப்படத் தேவையில்லை.

**கே:** என் மனதைப் பற்றி எனக்குப் பயமாக உள்ளது. அது மிகவும் நிலையற்று இருக்கிறது!

**ம:** உன் மனம் என்னும் கண்ணாடியில் பிம்பங்கள் தோன்றி மறைகின்றன. கண்ணாடி இருக்கும். எல்லா வித்தியாசங்களும் தோற்றத்தில் மட்டுமே என்றும், ஏகம்தான் நிஜம் என்றும் அறியும்வரை, அசைவனவற்றில் அசையாதவற்றையும், மாறுபவற்றில் மாறாதவற்றையும் வேறுபடுத்திப் பார்க்கக் கற்றுக் கொள். இந்த அடிப்படை அடையாளம் - அதை நீ கடவுள் என்றோ, ப்ரம்மன் என்றோ, ப்ரக்ரிதி என்றோ சொல், வார்த்தைகள் முக்கியமில்லை - எல்லாமும் ஏக ரூபம் தான் என்று அறியும் பிரத்தியட்ச ஞானம்தான் முக்கியம். 'நான்தான் உலகம், உலகம் நானே' என்னும் நேரடியான அனுபவத்தால் பிறக்கும் உறுதியோடு உன்னால் சொல்ல முடிந்தால், ஒருபுறம் நீ ஆசையிலிருந்தும், அச்சத்திலிருந்தும் விடுபடுவாய்; மறுபுறம் உலகத்திற்கு முற்றிலும் பொறுப்பானவன் ஆவாய். மனித இனத்தின் அறிவற்ற துக்கம் உன் ஒரே அக்கறையாகிவிடும்.

**கே:** ஆகவே, ஞானிக்கும் அவருடைய பிரச்சனைகள் இருக்கும்.

**ம:** ஆமாம். ஆனால் அவை மேற்கொண்டு அவருடைய உருவாக்கங்களாக இருக்காது. அவருடைய துன்பம் ஒரு குற்ற உணர்வால் நச்சுப்பட்டிருக்காது. மற்றவர்களுடைய பாவங்களுக்காகத் துன்பப்படுவதில் தவறு எதுவும் இல்லை. உன் கிறிஸ்துவ மதம் இதை அடிப்படையாகக் கொண்டது.

**கே:** எல்லாத் துன்பங்களும் சுயமாக உருவாக்கப்பட்டவை அல்லவா?

**ம:** ஒரு தனித்த சுயம் அதை உருவாக்க இருக்கும்வரை, ஆமாம். முடிவில், பாவம் என்ற ஒன்று இல்லை, குற்ற உணர்வு இல்லை, பழிக்குப் பழி வாங்குவது இல்லை, வாழ்க்கை மட்டும் அதன் முடிவற்ற மாற்றங்களோடு இருக்கிறது. தனி நபர்ப்பட்ட 'நான்' கரைவதோடு தனி நபர்ப்பட்ட துன்பமும் மறைகிறது. எது மிஞ்சுகிறது என்றால் கருணையின் மாபெரும் துக்கமும், தேவையில்லாத வலியின் பேரச்சமும்தான்.

**கே:** காரியங்களின் திட்டத்தில் ஏதாவது தேவையில்லாதது இருக்கிறதா?

**ம:** எதுவும் அவசியமானது அல்ல. எதுவும் தவிர்க்க முடியாதது அல்ல. பழக்க வழக்கமும், மன விகாரமும் கண்மூடித்தனமானவை மற்றும் தவறாக வழி நடத்துபவை. கருணையுடன் கூடிய பிரக்ஞை குணப்படுத்தும் மற்றும் மீட்டெடுக்கும். நாம் செய்யக் கூடியது எதுவும் இல்லை. நாம் காரியங்களை அவற்றின் இயல்புப்படி நடக்க விடத்தான் முடியும்.

**கே:** நீங்கள் முழுமையான சாத்விகத்தை ஆதரிக்கின்றீர்களா?

**ம:** தெளிவும், ஈகையும் செயல்பாடு. அன்பு சோம்பலானது அல்ல. தெளிவு வழி நடத்துகிறது. நீ செயல்புரிவதைப் பற்றி கவலைப்பட வேண்டியதில்லை. உன் மனதையும், இதயத்தையும் பார். முட்டாள்தனமும், சுயநலமும்தான் ஒரே தீமை.

**கே:** எது சிறந்தது - கடவுளின் பெயரைத் திரும்பத் திரும்ப உச்சரிப்பதா அல்லது தியானமா?

**ம:** திரும்பத் திரும்பச் சொல்வது உன் சுவாசத்தை நிலைப் படுத்தும். ஆழமான மற்றும் அமைதியான சுவாசத்தால் உயிரின் வீரியம் மேம்படும். அது மூளையில் தாக்கத்தை ஏற்படுத்தி, மனம் தூய்மையாகவும், ஸ்திரமாகவும் வளர உதவும். உயிரின் வீரியம் இல்லாமல் சிறிதளவுதான் செய்ய முடியும். ஆகையால்தான் அதைப் பாதுகாக்கவும், அதிகப்படுத்தவும் முக்கியத்துவம். ஆசனங்கள்

மற்றும் சுவாசப் பயிற்சி யோகாவின் ஒரு பகுதி. ஏனெனில் உடல் ஆரோக்யமாகவும், மிகவும் கட்டுப்பாட்டிலும் இருக்கவேண்டும். ஆனால் உடல்மீதான அதிகப்படியான கவனம் அதன் நோக்கத்தையே போக்கிவிடும். ஏனெனில் மனம்தான் அடிப்படையாக முதன்மையானது. மனதை ஓய்வாக வைத்து, அது உள்வெளியை (சித்தகாசத்தை) மேற்கொண்டு தொந்தரவு செய்யாமல் இருந்தால், உடல் ஒரு புது அர்த்தத்தைப் பெற்று, அதன் மாற்றம் அவசியமானதாகவும், சாத்தியமானதாகவும் ஆகும்.

**கே:** நான் இந்தியா முழுவதும் சுற்றித் திரிந்து, பல குருக்களைச் சந்தித்து, பல யோக முறைகளைக் கற்றேன். ஒவ்வொன்றின் ருசியைப் பெற்றிருப்பது சரியா?

**ம:** இல்லை. இது ஒரு அறிமுகம் மட்டுமே. உன் சொந்த வழியைக் கண்டு பிடிக்க உனக்கு உதவும் ஒரு மனிதரைச் சந்திப்பாய்.

**கே:** நான் தேர்ந்தெடுக்கும் ஒரு குரு என் மெய்யான குருவாக இருக்க முடியாது என்று எண்ணுகிறேன். மெய்யானவராக இருக்க அவர் எதிர்பாராமல் வர வேண்டும். தவிர்க்க முடியாதவராக இருக்க வேண்டும்.

**ம:** எதிர்பார்க்காமல் இருப்பது சிறந்தது. நீ எதிர்வினை புரியும் விதம்தான் முடிவு செய்யும்.

**கே:** நான் என் எதிர்வினைகளின் எஜமானா?

**ம:** இப்போது பயிற்சி செய்யப்படும் விவேகமான பார்வையும், பற்றற்ற தன்மையும் அவற்றின் பலன்களைச் சரியான காலத்தில் தரும். வேர்கள் ஆரோக்யமாகவும், நன்கு தண்ணீர் விடப்பட்டும் இருந்தால் பழங்கள் கண்டிப்பாக இனிப்பாக இருக்கும். தூய்மையாக இரு, உஷாராக இரு, தயாராக இரு.

**கே:** உக்கிரமான தபஸ்களும், விரதத்துவங்களும் பயனுள்ளவையா?

**ம:** வாழ்க்கையின் ஏற்றத் தாழ்வுகளைச் சந்திப்பதே போதுமான விரதத்துவம்! நீ புதுப்பிரச்சனைகளைக் கண்டுபிடிக்க வேண்டிய

தில்லை. வாழ்க்கை எதைக் கொண்டுவந்தாலும் அதை ஆனந்தத்துடன் சந்திப்பதே உனக்குத் தேவையான விரதத்துவம்.

**கே:** தியாகத்தைப் பற்றி எப்படி?

**ம:** உன்னிடம் உள்ளவற்றை யாருக்கெல்லாம் தேவையோ அவர்களுக்கு விருப்பத்தோடும், மகிழ்ச்சியோடும் பகிர்ந்துகொள். உன் சுயத்தின்மேல் கொடூரங்களைச் சுமத்திக் கொள்ளாதே.

**கே:** சுய சரணாகதி என்பது என்ன?

**ம:** எது வருகிறதோ அதை ஏற்றுக் கொள்வது.

**கே:** என் சொந்தக் கால்களில் நிற்க நான் மிகவும் வலுவற்றவனாக உணர்கிறேன். எனக்கு ஒரு குரு மற்றும் நல்ல மனிதர்களின் புனிதமான தொடர்பு தேவை. உள்ளத்தின் சம நிலை எனக்கு அப்பாற்பட்டது. எது வருகிறதோ அதை அப்படியே ஏற்றுக் கொள்வது என்னைப் பயமுறுத்துகிறது. நான் அமெரிக்காவிற்குத் திரும்புவதை நினைத்தாலே நடுக்கமாக இருக்கிறது.

**ம:** திரும்பிச் சென்று, கிடைக்கும் வாய்ப்புகளைச் சிறந்த முறையில் உபயோகப்படுத்திக் கொள். முதலில் உன் பி. எஸ்சி. பட்டத்தைப் பெறு. இயற்கை வைத்தியத்தைக் கற்க இந்தியாவிற்கு நீ எப்போது வேண்டுமானாலும் வரலாம்.

**கே:** அமெரிக்காவில் உள்ள வாய்ப்புகளைப் பற்றி எனக்கு நன்கு தெரியும். தனிமைதான் என்னைப் பயமுறுத்துகிறது.

**ம:** நீ எப்போதும் உன் சொந்த சுயத்தின் சகவாசத்துடன்தான் இருக்கிறாய் - தனிமையாக இருப்பதாக நினைக்கவேண்டாம். அதன் நட்பிலிருந்து விலகிவிட்டால் இந்தியாவிலிருந்தாலும் நீ தனிமையாகத்தான் உணருவாய். எல்லா மகிழ்ச்சியும் சுயத்தைச் சந்தோஷப்படுத்துவதில்தான் இருக்கிறது. அமெரிக்காவிற்குத் திரும்பிய பிறகும் அதைச் சந்தோஷப்படுத்து. உன் இதயத்தின் மகிமை பொருந்திய மெய்மைக்கு மதிப்பற்ற எதையும் செய்யாதே. அப்போது நீ மகிழ்வாய்; மகிழ்ச்சியில் நீடிப்பாய். ஆனால் நீ சுயத்தைத் தேட வேண்டும். அதைக் கண்டுபிடித்த பிறகு அதோடு இரு.

**கே:** முற்றிலுமான தனிமையால் ஏதாவது பிரயோஜனம் உண்டா?

**ம:** அது உன் மனோபாவத்தைப் பொருத்தது. நீ மற்றவர்களோடு சேர்ந்து, உஷாராகவும், நட்புடனும், மற்றவர்களுக்காக வேலை செய்து, தனிமையில் இருப்பதை விட முழுமையாக வளர். தனிமை உன்னைச் சோர்வாக மாற்றி, மனதின் முடிவற்ற முணுமுணுப்பு களில் விட்டுவிடும். பிரயத்தனத்தால் மாற்ற முடியும் என்று கற்பனை செய்யாதே. விரதத்துவத்திலும், தவத்திலும் உள்ளது போல உனக்கு எதிராகத் திருப்பப்படும் வன்முறையும்கூட பயனற்றுப் போகும்.

**கே:** யார் ஞானம் பெற்றவர், யார் பெறாதவர் என்று கண்டுபிடிக்க வழி எதுவும் கிடையாதா?

**ம:** உன் ஒரே அத்தாட்சி உனக்குள்தான் இருக்கிறது. நீ தங்கமாக மாறிவிட்டால் சிந்தாமணியைத் தொட்டுவிட்டாய் என்று அறி. (சிந்தாமணி என்பது இந்துப் புராணங்களின் படி அது தொடும் எந்த உலோகத்தையும் தங்கமாக மாற்றிவிடும் கல்.) அது போல அந்த நபருடன் தங்கி, உனக்கு என்ன மாற்றம் நடக்கிறது என்று கவனி. மற்றவர்களைக் கேட்காதே. அவர்களுடைய ஆள் உன்னுடைய குருவாக இல்லாமல் போகலாம். ஒரு குரு அவருடைய சாரத்தில் பிரபஞ்ச மயமாக இருப்பார். ஆனால் அவருடைய வெளிப்பாடு களில் அவ்வாறு இல்லாமல் போகலாம். அவர் கோபமாகவோ, அல்லது பேராசை உடையவராகவோ, அல்லது தன் ஆசிரமத்தைப் பற்றியோ அல்லது குடும்பத்தைப் பற்றியோ அதிக ஆர்வத்துடன் இருப்பவராகவோ தோன்றலாம். மற்றவர்கள் அவ்வாறில்லாமல் அவருடைய தோற்றத்தினால் நீ தவறாக வழி நடத்தப்படலாம்.

**கே:** நான் அகத்திலும், புறத்திலும் முழுவதுமாகப் பூரணத்தை எதிர்பார்க்க எனக்கு உரிமை இல்லையா?

**ம:** அகத்தில் - ஆமாம். ஆனால் புறத்தில் பூரணம் சூழ்நிலை களையும், உடலின் நிலைமையையும், தனிப்பட்ட மற்றும் சமுதாயம், மற்றும் இதர கணக்கற்ற காரணிகளையும் சார்ந்துள்ளது.

**கே:** *நான் ஒரு ஞானியைக் கண்டுபிடிக்குமாறு அறிவுருத்தப் படுகிறேன். அதனால் அவர் மூலமாக ஞானத்தை அடையும் கலையை நான் கற்றுக்கொள்ளலாம். இப்போது முழு அணுகு முறையுமே தவறு என்றும், ஒரு ஞானியைக் கண்டுபிடிக்க முடியாது என்றும், தகுந்த சாதனாவால் ஞானத்தை அடைய முடியாது என்றும் எனக்குச் சொல்லப்படுகிறது. இவையெல்லாம் மிகவும் குழப்புகின்றன!*

**ம:** இவையெல்லாம் நீ மெய்மையை முற்றிலும் தவறாகப் புரிந்து கொண்டததால்தான். உன் மனம் விலை மதிப்பிடுவது மற்றும் அடைவது ஆகிய பழக்கங்களால் நிரம்பியுள்ளது. அங்கீகாரத்திற் காக ஒப்பிட்டுப்பார்க்க முடியாதவையும், பெற முடியாதவையும் உன் இதயத்தில் காலாகாலமாகக் காத்திருக்கின்றன என்று உன் மனம் ஒப்புக் கொள்ளாது. நீ செய்ய வேண்டியதெல்லாம் எல்லா ஞாபகங்களையும், எதிர்பார்ப்புகளையும் கைவிட்டுவிடு. உன்னை முழு நிர்வாணத்திலும், ஒன்றுமில்லாமையிலும் தயாராகவும் உஷாராகவும் வைத்திரு. அவ்வளவுதான்.

**கே:** *யார் கைவிடுவதைச் செய்வது?*

**ம:** கடவுள் அதைச் செய்வார். வெறுமனே கைவிட வேண்டியதன் அவசியத்தைப் பார். தடுக்காதே, நீ என்று நினைத்துக் கொண்டிருக்கும் நபரைப் பிடித்துக் கொள்ளாதே. நீ உன்னை ஒரு நபராக நினைத்துக் கொண்டிருப்பதால் ஞானியையும் சிறிது வித்தியாசமான, நன்கு விஷயமறிந்த, மிகவும் சாமர்த்தியசாலியான ஒரு நபராகவே கருதுகிறாய். அவர் சாசுவதமாக உணர்வுடனும், மகிழ்ச்சியாகவும் இருப்பதாக நீ சொல்லலாம். ஆனால் அதில் பாதிகூட உண்மையில்லை. வரையறைகளையும், விவரிப்புகளையும் நம்பாதே - அவை மொத்தத்தில் தவறாக வழி நடத்துபவை.

**கே:** *நான் என்ன செய்யவேண்டும், எப்படிச் செய்ய வேண்டும் என்று சொல்லப்படாவிட்டால் எல்லாமும் கைவிட்டுப் போனாற் போல இருக்கிறது.*

**ம:** அது போலத் தோன்றுவது நல்லது! நீ உன்னைச் சாமர்த்திய சாலியாக நினைக்கும் வரையிலும், சந்தேகமில்லாமல் இருக்கும்

வரையிலும் மெய்மையை உன்னால் அடையமுடியாது. அகத்தளவிலான சாகசத்தை உன் வாழ்க்கைமுறையாக மாற்றாதவரை கண்டுபிடித்தல் உனக்கு வராது.

**கே:** எதைக் கண்டுபிடிப்பது?

**ம:** எல்லாத் திசைகளிலிருந்தும், காரணகாரியங்களிலிருந்தும் சுதந்திரமான உன் இருத்தலின் மையத்தை.

**கே:** எல்லாமாகவும் இரு, எல்லாவற்றையும் அறி, எல்லாவற்றையும் கொண்டிரு என்றா சொல்கிறீர்கள்?

**ம:** ஒன்றுமில்லாததாக இரு, ஒன்றையும் அறியாதே, ஒன்றையும் கொண்டிராதே. இதுதான் மதிப்புள்ள ஒரே வாழ்க்கை, இதுதான் மதிப்புள்ள ஒரே மகிழ்ச்சி.

**கே:** இந்தக் குறிக்கோள் என்னால் கைக்கொள்ள முடியாதது. குறைந்த பட்சம் அதை அடையும் வழியையாவது சொல்லுங்கள்.

**ம:** உன் சொந்த வழியை நீதான் கண்டு பிடிக்க வேண்டும். நீயே அதைக் கண்டுபிடிக்காவிட்டால் அது உன் சொந்த வழியாக இருக்காது. அது உன்னை எங்குமே கொண்டுபோய்ச் சேர்க்காது. நீ கண்ட உன் உண்மையின்படி மனமார்ந்த ஈடுபாட்டுடன் வாழ் - நீ புரிந்துகொண்ட சிறிதளவின்படி செயல்படு. மனமார்ந்த ஈடுபாடுதான் உன்னைக் கொண்டுபோய்ச் சேர்க்கும் - உன்னுடைய அல்லது மற்றவர்களுடைய புத்திசாலித்தனமல்ல.

**கே:** நான் தவறுகளுக்காகப் பயப்படுகிறேன். நான் பலவற்றை முயற்சித்தேன். எதுவுமே அதனால் கிடைக்கவில்லை.

**ம:** நீ உன் ஜீவனை மிகக் குறைந்த அளவில்தான் ஈடுபடுத்தினாய். நீ வெறுமனே ஆர்வத்துடன்தான் இருந்தாய்; மனமார்ந்த ஈடுபாட்டுடன் அல்ல.

**கே:** எனக்கு இதைவிட மேலானது தெரியாது.

**ம:** குறைந்தபட்சம் இந்த அளவிற்காவது உனக்குத் தெரிகிறது. உன் அனுபவங்கள் மேலோட்டமானவை என்று அறிந்து, அவற்றிற்கு எந்த மதிப்பையும் கொடுக்காதே. அவை வந்து

முடிந்தவுடன் அவற்றை மறந்துவிடு. ஒரு தூய்மையான, சுயனலமற்ற வாழ்க்கையை வாழ். அதுவே போதும்.

**கே:** ஒழுக்கம் அவ்வளவு முக்கியமா?

**ம:** ஏமாற்றாதே, நோகடிக்காதே - இது முக்கியமில்லையா? எல்லாவற்றிற்கும் மேலாக உனக்கு அக அமைதி தேவை - அதற்கு அகத்திற்கும், புறத்திற்கும் இடையே ஒத்திசைவு அவசியம். நீ நம்புவதைச் செய். செய்வதை நம்பு. மற்றவை எல்லாம் சக்தி மற்றும் காலத்தின் விரயம்தான்.



# 97.மனமும், உலகமும் தனித்தனியானவை அல்ல

**கேட்பவர்:** நான் பல ஞானிகளின் படங்களை இங்கு பார்க்கிறேன். அவர்கள் உங்களுடைய ஆன்மீக முன்னோடிகள் என்று என்னிடம் சொல்கிறார்கள். அவர்கள் யார்? இவையெல்லாம் எப்படி ஆரம்பித்தது?

**மஹராஜ்:** எங்கள் பரம்பரையை 'நவ் நாத் சம்பிரதாயம்' என்று மொத்தமாக அழைப்பார்கள். புராணங்களின்படி எங்களின் முதல் ஆசிரியர் மும்மூர்த்திகளான ப்ரம்மா, விஷ்ணு, சிவனின் மாபெரும் திருஅவதாரமாகிய ரிஷி தத்தாத்ரேயர். 'நவ் நாத்' குருக்கள் கூட புராணப்படியானவர்கள்.

**கே:** அவர்களுடைய போதனையின் தனித்துவம் என்ன?

**ம:** அதன் கோட்பாடுகளிலும், நடைமுறையிலும் உள்ள எளிமை.

**கே:** ஒருவர் எப்படி நவ் நாத் ஆவது? தீட்சையாலா அல்லது தொடர்ச்சியாலா?

**ம:** இரண்டினாலுமல்ல. 'நவ் நாத் பரம்பரை' ஒரு ஆற்றைப் போன்றது - அது மெய்மைக் கடலுக்குள் ஓடுகிறது. யார் அதற்குள் நுழைந்தாலும் அது தன்னோடு அடித்துச் செல்லும்.

**கே:** அது அதே பரம்பரையைச் சேர்ந்த ஒரு வாழும் குருவை ஏற்றுக் கொள்வதைக் குறிக்கிறதா?

**ம:** 'நான்' என்பதன்மீது தங்கள் மனதைக் குவிக்கும் சாதனாவைப் பயிற்சி செய்பவர்கள் அதே சாதனாவைச் செய்து வெற்றி பெற்றவர்களோடு தொடர்புகொண்டவர்களாக உணருவார்கள். தங்களை 'நவ்நாத்' என்று சொல்லிக் கொள்வதால் தங்களுடைய

நெருக்க உணர்வை வார்த்தை வடிவத்திற்குக் கொண்டுவரலாம். அது ஒரு ஸ்தாபிக்கப்பட்ட பரம்பரையைச் சேர்ந்திருப்பதன் மகிழ்ச்சியைக் அவர்களுக்குக் கொடுக்கும்.

**கே:** சேர்வதால் அவர்கள் எந்தவிதத்திலாவது பயனடைவார்களா?

**ம:** காலம் செல்லச் செல்ல சத்சங்கின் வட்டம், 'ஞானிகளின் தொடர்பு' எண்ணிக்கை அதிகமாகும்.

**கே:** அதனால் சக்தி மற்றும் அருளின் ஒரு ஆதாரத்தை அவர்கள் பிடித்துக் கொள்வார்களா? அல்லது அவ்வாறு சேரவில்லை என்றால் அந்த ஆதாரம் அவர்களுக்குக் கிடைக்காதா?

**ம:** சக்தியும், அருளும் எல்லோருக்குமானது மற்றும் எல்லோருக்கும் கிடைக்கக் கூடியது. பரம்பரையின் பெயரைச் சேர்த்துக்கொள்வதால் எந்தப் பயனும் இல்லை. நீ எந்தப் பரம்பரையின் பெயரை வேண்டுமானாலும் வைத்துக்கொள். நீ தீவிரமாக உன்னைப்பற்றிக் கவனத்துடன் இருக்கும்வரை மெய்ஞானத்தை அடைவதற்கான தடைகள் கட்டாயமாக அடித்துச் செல்லப் படும்.

**கே:** எனக்கு உங்களுடைய போதனைகள் பிடித்திருந்து, உங்கள் வழிகாட்டுதலை ஏற்றுக் கொண்டால் என்னை ஒரு 'நவ்நாத்' என்று சொல்லிக் கொள்ளலாமா?

**ம:** அதனால் உன் வார்த்தைகளுக்குப் பழக்க அடிமையான மனதை மகிழ்வி! பெயர் உன்னை மாற்றாது. அதிக பட்சம் அது உன்னை நல்லவிதமாக நடந்து கொள்ள ஞாபகப்படுத்தும். குருக்கள் மற்றும் அவர்களுடைய சீடர்களின் ஒரு தொடர்ச்சி ஒன்று உள்ளது. சீடர்கள் மேலும் அதிகமான சீடர்களுக்குப் பயிற்சி அளிப்பார்கள். இவ்வாறாக வழிமுறை காப்பாற்றப்படுகிறது. ஆனால் பாரம்பரியத்தின் தொடர்ச்சி ஒரு குறிப்பிட்ட மாதிரியான முறையைச் சாராதது. மற்றும் சுய விருப்பத்தைச் சார்ந்தது. அது ஒரு குடும்பப் பெயரைப் போன்றது. ஆனால் இங்கு குடும்பம் என்பது ஆன்மீகம்.

**கே:** சம்பிரதாயத்தில் சேர ஒருவர் ஞானம் பெற்றிருக்க வேண்டுமா?

**ம:** நவ்நாத் சம்பிரதாயம் ஒரு பாரம்பரியம் மட்டுமே; அது ஒருவிதமான உபதேசமும், செய்முறையும் ஆகும். அது விழிப்புணர்வின் ஒரு நிலையைக் குறிப்பதில்லை. நீ ஒரு நவ்நாத் சம்பிரதாய ஆசிரியரைக் குருவாக ஏற்றுக் கொண்டால், நீ அவரின் சம்பிரதாயத்தில் சேர்ந்து விடுவாய். வழக்கமாக ஒரு பார்வை, ஒரு தீண்டல், அல்லது ஒரு வார்த்தை, சில சமயம் ஒரு தெளிவான கனவு அல்லது ஒரு உறுதியான ஞாபகம் என்பதாக அவருடைய அருளின் ஒரு அடையாளத்தை நீ பெறுவாய். சிலசமயம் அவருடைய அருளின் ஒரே அடையாளமாக குணாதிசயத்திலும், பழக்க வழக்கத்திலும் ஒரு முக்கியமான மற்றும் விரைவான மாற்றம் இருக்கும்.

**கே:** உங்களைச் சில வருடங்களாக எனக்குத் தெரியும். நான் இங்கு வழக்கமாக வந்துகொண்டிருக்கிறேன். உங்களைப் பற்றிய எண்ணம் என் மனதிலிருந்து எப்போதும் விலகியதில்லை. இது என்னை உங்கள் சம்பிரதாயத்தைச் சேர்ந்தவனாக்குமா?

**ம:** உன் சேர்ந்திருக்கும் தன்மை உன் சொந்த உணர்வுகளையும், திடநம்பிக்கையையும் சார்ந்தது. இவையெல்லாம் வாய்மொழி யானவை மற்றும் சம்பிரதாயப்படி ஆனவை. உள்ளபடியாக குருவோ அல்லது சீடரோ, கோட்பாடோ அல்லது செயல் முறையோ, அறியாமையோ அல்லது அல்லது ஞானமோ கிடையாது. இவையெல்லாம் நீ உன்னை என்னவாக எடுத்துக் கொள்கிறாய் என்பதைப் பொருத்தது. மெய்யாக நீ எவ்வாறு உள்ளாயோ அவ்வாறு உன்னைச் சரியாக அறி. சுய அறிவிற்கு மாற்று இல்லை.

**கே:** என்னைச் சரியாக அறிந்து கொண்டேன் என்பதற்கு என்ன அத்தாட்சி?

**ம:** உனக்கு அத்தாட்சிகள் எதுவும் தேவையில்லை. அந்த அனுபவம் தனித்துவமானது மற்றும் தவறாகப் பார்க்க முடியாதது. அது தடைகள் ஓரளவு நீக்கப்பட்டவுடன் உன் மேல் திடீரென்று

எழும். அது நைந்து போன கயிறு அறுவதைப்போல. உன்னுடைய வேலை கயிற்றை அறுக்க முயல்வதுதான். அறுபடுவது கண்டிப்பாக நடக்கும். அது தாமதமாகலாம்; ஆனால் நிகழாமல் இருக்காது.

**கே:** நீங்கள் காரணகாரியத்தன்மையை மறுப்பது என்னைக் குழப்புகிறது. அதற்கு இந்த உலகம் அது உள்ளதுபோல் இருப்பதற்கு யாரும் பொருப்பல்ல என்று அர்த்தமா?

**ம:** பொறுப்பு என்னும் கருத்து உன் மனதில்தான் உள்ளது. நடக்கும் எல்லாவற்றிற்கும் ஏதோ ஒன்றாவது அல்லது யாரோ ஒருவராவது பொறுப்பாக இருக்கவேண்டும் என்றும் நீ நினைக்கிறாய். பல்வேறு பிரபஞ்சங்களுக்கும், ஒரே காரணத் திற்கும் இடையே ஒரு முரண்பாடு உள்ளது. இந்த இரண்டில் ஒன்று உண்மையல்ல. அல்லது இரண்டுமே உண்மையாக இல்லாமல் இருக்கலாம். என்னைப் பொருத்தவரை இவையெல்லாம் பகல் கனவு. கருத்துக்களில் உண்மை இல்லை. நிஜம் என்னவென்றால் நீ இல்லாமல் பிரபஞ்சமோ, அதன் காரணங்களோ இருத்தலுக்கு வர மாட்டா.

**கே:** நான் பிரபஞ்சத்தின் உயிரினமா அல்லது அதை உருவாக்குபவனா என்று என்னால் தீர்மானிக்க முடியவில்லை.

**ம:** 'நான்' என்பது எப்போதும் உள்ள நிஜம். ஆனால் 'நான் உருவாக்கப்பட்டுள்ளேன்' என்பது ஒரு கருத்து. கடவுளோ, அல்லது பிரபஞ்சமோ உன்னிடம் வந்து நாங்கள்தான் உன்னை உருவாக்கினோம் என்று சொல்லவில்லை. காரிய காரணத் தன்மை என்னும் கருத்தில் கொள்கைப் பிடிப்புள்ள மனம் உருவாக்கத்தைக் கண்டு பிடிக்கிறது. பிறகு 'யார் உருவாக்கியவர்?' என்று ஆச்சரியப் படுகிறது. மனமே உருவாக்குபவர். இதுகூட முற்றிலும் உண்மை யல்ல. ஏனெனில் உருவாக்கப்பட்டதும், உருவாக்குபவரும் ஒன்றேதான். மனமும், உலகமும் தனித்தனியானவை அல்ல. நீ எதை உலகம் என்று நினைக்கிறாயோ அது உன் சொந்த மனம் என்று தெளிவாகப் புரிந்துகொள்.

**கே:** மனதிற்கு அப்பால் அல்லது வெளியே ஒரு உலகம் உள்ளதா?

**ம:** எல்லா இடமும், காலமும் மனதில்தான் உள்ளன. ஒரு உலகத்தை மனதிற்கு அப்பால் எங்கு இருப்பதாகக் கண்டுபிடிப்பாய்? மனதில் பல நிலைகள் உள்ளன. ஒவ்வொன்றும் அதன் சொந்த வடிவத்தை உருவகிக்கின்றது. இருப்பினும் எல்லாமும் மனதில்தான் உள்ளன. மனதால்தான் உருவாக்கப் படுகின்றன.

**கே:** பாவத்தைப் பற்றி உங்களுடைய மனோபாவம் என்ன? வெளிப்புறமாக அல்லது அகத்தளவில் சட்டத்தை மீறுகின்ற ஒரு பாவியை நீங்கள் எப்படிப் பார்க்கிறீர்கள்? அவர் மாற வேண்டும் என்று நீங்கள் விரும்புகிறீர்களா அல்லது வெறுமனே அவர்மீது அனுதாபப்படுகிறீர்களா? அல்லது அவருடைய பாவத்தால் அவர்மீது கருத்தற்று இருக்கிறீர்களா?

**ம:** எனக்கு எந்தப் பாவத்தைப் பற்றியும், பாவியைப் பற்றியும் தெரியாது. உன்னுடைய வித்தியாசங்களும், மதிப்பீடுகளும் என்னைக் கட்டுப்படுத்தாது. ஒவ்வொருவரும் அவருடைய இயல்புப்படி நடக்கின்றார். அதற்கு உதவ முடியாது; அதற்காக வருத்தப்படவும் வேண்டியதில்லை.

**கே:** மற்றவர்கள் துன்பப்படுகிறார்கள்.

**ம:** உயிர் உயிரால் வாழ்கிறது. இயற்கையில் இந்தச் செயல்பாடு கட்டாயமானது. சமுதாயத்தில் அது தன்னிச்சையாக இருக்க வேண்டும். தியாகம் இல்லாமல் வாழ்க்கை இருக்க முடியாது. ஒரு பாவி தியாகம் செய்ய மறுத்து, சாவை வரவேற்கிறார். இது உள்ளபடியே உள்ளது. அது தூற்றுவதற்கோ, அல்லது இரக்கப் படவோ இடம் தராது.

**கே:** ஒரு மனிதன் பாவத்தை மிக அதிகமாகக் கொண்டிருக்கும் போது, கண்டிப்பாக நீங்கள் குறைந்த பட்சம் கருணையையாவது உணருவீர்கள்.

**ம:** ஆமாம், அந்த மனிதனும், அவனுடைய பாவங்களும் என்னுடையது என்று உணருவேன்.

**கே:** சரி. அதற்குப் பிறகு என்ன?

**ம:** நான் அவரோடு ஒன்றாவதால், அவர் என்னோடு ஒன்றாகிறார். அது உணர்வோடு செய்யப்படும் காரியம் அல்ல. அது முற்றிலும் தானாகவே நடக்கிறது. நாம் யாரும் அதற்கு உதவ முடியாது. எது மாறவேண்டுமோ அது எப்படியாவது மாறும். இங்கு, இப்போது தான் உள்ளபடியே தன்னை அறிந்தால் போதும். ஒருவருடைய மனதிற்குள் தீவிரமாகவும், முறைப்படியும் ஆராய்வதுதான் யோகா.

**கே:** பாவத்தால் இறுக்கப்பட்ட விதியின் தொடர்களைப் பற்றி என்ன சொல்கிறீர்கள்?

**ம:** பாவத்தின் தாயான அறியாமை கரைந்தால், மறுபடியும் பாவம் செய்வதற்கான நிர்பந்தமாகிய விதி இல்லாமல் போய்விடும்.

**கே:** பாவத்திற்குப் பிரதிபலன் கொடுக்கப்பட வேண்டும்.

**ம:** அறியாமை முடிவிற்கு வந்தால் எல்லாமும் முடிவிற்கு வந்துவிடும். அப்போது ஒவ்வொன்றும் அது உள்ளபடியே, நன்றானதாகப் பார்க்கப் படும்.

**கே:** சட்டத்தை மீறும் ஒரு பாவி உங்களிடம் வந்து உங்கள் ஆசீர்வாதத்தைக் கேட்டால் உங்கள் எதிர்வினை என்னவாக இருக்கும்?

**ம:** அவர் கேட்டது கிடைக்கும்.

**கே:** ஒரு கெட்ட மனிதனாக இருந்தாலும்கூடவா?

**ம:** எனக்கு எந்தக் கெட்ட மனிதனையும் தெரியாது. எனக்கு என்னை மட்டும்தான் தெரியும். நான் புனிதர்களையோ, பாவிகளையோ பார்ப்பதில்லை. வாழ்பவர்களை மட்டும்தான் பார்க்கிறேன். நான் அருளை வினியோகிப்பதில்லை. கொடுப்பவரும் பெறுபவரும் ஏகரூபம்தான். நீ முன்பே சரிசமமாகக் கொண்டிறாத எதையும் நான் கொடுக்கவோ, மறுக்கவோ முடியாது. உன் செல்வங்களைப் பற்றிப் பிரக்ஞையைக் கொண்டிருந்து, அவற்றை முழுமையாக உபயோகப் படுத்து. உனக்கு என் அருள் தேவை என்று கற்பனை செய்யும் வரை என் கதவிற்கு முன்னால் அதைக் கேட்டு கெஞ்சிக் கொண்டிருப்பாய்.

நான் உன்னிடம் அருளைக் கேட்டுக் கெஞ்சுவதும் அதே போல் அர்த்தமற்றது! நாம் தனித்தனியானவர்கள் அல்ல. மெய் பொதுவானது.

**கே:** ஒரு தாய் தன் பிரச்சனையுடன் உங்களிடம் வருகிறார். அவளுடைய ஒரே மகன் போதைப் பொருட்களிலும், பாலுறவிலும் ஈடுபட்டு, நாளுக்கு நாள் மோசமாகிக் கொண்டே போகிறான். அவள் உங்கள் அருளை வேண்டுகிறாள். உங்கள் எதிர்வினை என்னவாக இருக்கும்?

**ம:** எல்லாமும் நல்லதாக நடக்கும் என்று நான் சொல்வது என்னிடமிருந்து வரலாம்.

**கே:** அவ்வளவுதானா?

**ம:** அவ்வளவுதான். மேலும் என்ன எதிர்பார்க்கிறாய்?

**கே:** ஆனால் அந்தப் பெண்ணின் மகன் மாறுவானா?

**ம:** மாறலாம். அல்லது மாறாமல் இருக்கலாம்.

**கே:** உங்களைச் சுற்றி வந்து சேரும் மக்கள் மற்றும் உங்களைப் பல வருடங்களாகத் தெரிந்தவர்கள் நீங்கள் 'அது சரியாகப் போய்விடும்' என்று சொன்னால் தவறாமல் அவ்வாறே நடக்கும் என்று சொல்கிறார்கள்.

**ம:** தாயின் இதயத்திலிருந்த மனமார்ந்த ஈடுபாடுதான் குழந்தையைக் காப்பாற்றியது என்றும்கூட நீ சொல்லலாம். ஒவ்வொன்றிற்கும் கணக்கற்ற காரணங்கள் உள்ளன.

**கே:** தனக்கு எதுவுமே வேண்டாத மனிதர் முழுச் சக்தி உடையவர் என்று சொல்லக் கேட்டிருக்கிறேன். முழுப் பிரபஞ்சமும் அவருடைய கட்டுப்பாட்டில் உள்ளது.

**ம:** நீ அவ்வாறு நம்பினால் அதன்படி நட. எல்லாத் தனிப்பட்ட ஆசையையும் கைவிடு. அதனால் சேமிக்கப்படும் சக்தியை உலகத்தை மாற்ற உபயோகப் படுத்து!

**கே:** எல்லா புத்தாக்களும், ரிஷிகளும் உலகத்தை மாற்றுவதில் வெற்றிபெறவில்லை.

**ம:** உலகம் மாறுவதற்கு இணங்குவதில்லை. அதன் இயல்பிலேயே அது வலி மிகுந்ததாகவும், நிலையற்றதாகவும் இருக்கிறது. அதை அது உள்ளவாறே பார்த்து, எல்லா ஆசைகளையும், அச்சங்களையும் விட்டுவிடு. உலகம் எப்போது உன்னைப் பிடித்து வைக்கவும், கட்டுப்படுத்தவும் செய்யவில்லையோ அப்போது அது மகிழ்ச்சி மற்றும் அழகின் தாய்வீடாகிறது. நீ உலகிலிருந்து சுதந்திரமாக இருந்தால்தான் உன்னால் அதில் மகிழ்ச்சியாக இருக்க முடியும்.

**கே:** எது சரி? எது தவறு?

**ம:** பொதுவாக, எது துன்பத்தைத் தருகிறதோ அது தவறு. எது அதை நீக்குகிறாதோ அது சரி. உடலும், மனமும் அளவானவை. ஆகையால் தாக்குதலுக்கு உட்படுபவை. அவற்றிற்குப் பாதுகாப்பு தேவை. அது அச்சத்தை உண்டாக்குகிறது. நீ உன்னை அவற்றோடு அடையாளப்படுத்திக் கொள்ளும்வரை துன்பப்படத்தான் செய்வாய்; உன் சுதந்திரத்தை அறிந்துகொண்டு, மகிழ்ச்சியாக இரு. இதுதான் மகிழ்ச்சியின் இரகசியம் என்று நான் உனக்குச் சொல்கிறேன். மகிழ்ச்சிக்காகப் பொருட்களையும், மக்களையும் சார்ந்திருக்க வேண்டும் என்று நம்புவது உன் மெய்யான இயல்பைப் பற்றி உனக்குத் தெரியாததால்தான். மகிழ்ச்சியாக இருக்க சுய அறிவைத் தவிர வேறு எதுவும் தேவையில்லை என்று அறிவது அறிவுடைமை.

**கே:** எது முதலில் வருகிறது - இருத்தலா அல்லது ஆசையா?

**ம:** விழிப்புணர்வில் இருத்தல் தோன்றும்போது, நீ என்னவாக இருக்கிறாய் மற்றும் நீ என்னவாக இருக்க வேண்டும் என்னும் கருத்துக்கள் மனதில் தோன்றுகின்றன. இது ஆசையையும், செயலையும் கொண்டுவந்து, உருவாதல் என்னும் செயல்பாடு தொடங்குகிறது. உருவாதலுக்கு ஆரம்பமோ, முடிவோ கிடையாது. ஏனெனில் ஒவ்வொரு கணமும் அது திரும்பவும் ஆரம்பிக்கிறது. கற்பனையும், ஆசையும் இல்லாமல் போகும்போது, உருவாதல் நின்றுபோய் இதுவாகவோ அல்லது அதுவாகவோ இருப்பது தூய இருத்தலில் கலந்துவிடுகிறது. அதை விவரிக்கமுடியாது. அனுபவிக்க மட்டுமே முடியும்.

உலகம் உனக்கு அபரிமிதமாக மெய்யாகத் தெரிகிறது. ஏனெனில் நீ அதைப்பற்றி எப்போதும் நினைத்துக் கொண்டிருக்கிறாய்; அதைப் பற்றிச் சிந்திப்பதை நிறுத்து. அப்போது அது மெல்லிய பனிபோலக் கரைந்துவிடும். நீ மறக்க வேண்டியதில்லை; ஆசையும், அச்சமும் முடியும்போது, பந்தமும் முடிந்துவிடும். உணர்ச்சிகளில் சிக்கக் கொண்டிருப்பது தளைகளை உருவாக்குகிறது. அதனால் விருப்பு வெறுப்புப் படிவம் உருவாகிறது. அதைத்தான் நாம் நம் குணாதிசயம் மற்றும் மனோநிலை என்று சொல்லுகிறோம்.

**கே:** *ஆசையும், அச்சமும் இல்லையென்றால் செயல்பட என்ன உந்துதல் இருக்கும்?*

**ம:** வாழ்க்கையின் மீதும், சரியான தன்மையின்மீதும், அழகின் மீதும் கொண்டுள்ள அன்பைப் போதுமான உந்துதலாக நீ நினைக்கா விட்டால், உந்துதல் ஒன்றுமே இருக்காது.

ஆசையிலிருந்தும், அச்சத்திலிருந்தும் சுதந்திரமாக இருப்பதற்குப் பயப்படாதே. இந்தச் சுதந்திரம் உன்னை மிகவும் அதிகப்படியான தீவிரத்துடனும், உயர்வாகவும், உனக்குத் தெரிந்த எல்லாவற்றையும் விட வித்தியாசமான வாழ்க்கையை வாழவைக்கும். உண்மையில் நீ எல்லாவற்றையும் இழப்பதால் எல்லாவற்றையும் பெறுவாய்.

**கே:** *உங்கள் ஆன்மீகப் பாரம்பரியத்தை நீங்கள் தத்தாத்ரேய ரிஷியிடம் தொடங்குவதால், நீங்களும், உங்கள் முன்னோர்களும் அந்த ரிஷியின் மறு அவதாரம் என்று நாங்கள் நம்பினால் அது சரியா?*

**ம:** நீ என்ன விரும்புகிறாயோ அதை நம்பு. உன் நம்பிக்கையின்படி செயல்பட்டால் அதன் பலன்களைப் பெறுவாய். ஆனால் எனக்கு அது முக்கியமில்லை. நான் என்னவோ அதுதான். எனக்கு இது போதும். எவ்வளவுதான் ஒருவர் சிறந்த முன்மாதிரியாக இருந்தாலும், நான் என்னை அவரோடு அடையாளப்படுத்திக் கொள்ள எனக்கு ஆசையில்லை. புராணக் கதைகளையும் மற்ற கதைகளையும் உண்மையானவையாகக் கருத வேண்டிய அவசியம் எனக்கு இல்லை. எனக்கு அறியாமையிலும், அதைப் போக்குவதிலும்தான் ஆர்வம். ஒரு குருவின் சரியான வேலை சீடர்களின் இதயத்திலிருந்தும், மனதிலிருந்தும்

அறியாமையைப் போக்குவதுதான். சீடர் புரிந்து கொண்ட பிறகு, உறுதி செய்யும் செயல் சீடரையே பொருத்தது. ஒருவருக்காக மற்றவர் செயல்பட முடியாது. அவர் சரியாகச் செயல்படவில்லை என்றால் அவர் சரியாகப் புரிந்துகொள்ளவில்லை என்றும், குருவின் வேலை இன்னும் முடியவில்லை என்றும் அர்த்தம்.

**கே:** சில தேறாத நபர்களும் இருப்பார்கள் அல்லவா?

**ம:** யாருமே தேறாத நபர் அல்ல. தடைகளைத் தாண்டிவிடலாம். எதை வாழ்க்கை சரி செய்ய முடியாதோ அதை இறப்பு முடிக்கும். ஆனால் குரு தோற்கமாட்டார்.

**கே:** எது உங்களுக்கு உறுதியைத் தருகிறது?

**ம:** குருவும், மனிதனின் அக மெய்மையும் உண்மையிலேயே ஒன்று. அவை மனதின் விடுதலை மற்றும் மீட்சி என்னும் ஒரே குறிக்கோளை நோக்கி வேலை செய்கின்றன. அவர்கள் தோற்க மாட்டார்கள். தங்களைத் தடுக்கும் பாறைகளைக் கொண்டே அவர்கள் தங்களுக்கான பாலங்களைக் கட்டிவிடுவார்கள். விழிப்புணர்வு மட்டுமே மொத்த இருத்தல் அல்ல. மனிதன் வேறு பல நிலைகளிலும் அதிகமான ஒத்துழைப்புடன் இருப்பான். குரு எல்லா நிலையிலும் நிலைபெற்று இருப்பார். அவருடைய சக்தியும், பொறுமையும் தீராதவை.

**கே:** நான் கனவு காண்கிறேன் என்றும், நான் விழிக்க இதுதான் சரியான நேரம் என்றும் நீங்கள் சொல்லிக்கொண்டே இருக்கிறீர்கள். என் கனவில் வந்த மஹராஜ் ஏன் என்னை எழுப்ப முடியவில்லை? அவர் வற்புறுத்திக் கொண்டும், ஞாபகப்படுத்திக் கொண்டும் இருக்கிறார். ஆனால் என் கனவு தொடர்கிறது.

**ம:** அது எதனால் என்றால் நீ கனவு காண்கிறாய் என்று உண்மையிலேயே புரிந்துகொள்ளவில்லை. நிஜத்தை நிஜமற்றதோடு கலப்பதுதான் பந்தத்தின் சாரம். உன்னுடைய தற்போதைய நிலையில் 'நான்' என்னும் உணர்வு ஒன்றுதான் மெய்மையைக் குறிக்கின்றது; 'என்ன' மற்றும் 'நான் எவ்வாறு உள்ளேன்' என்பவை விதி அல்லது எதிர்பாராமல் திணிக்கப்பட்ட மாயக்கருத்துக்கள்.

**கே:** கனவு எப்போது ஆரம்பித்தது?

**ம:** அது ஆரம்பமற்றதாகத் தோன்றுகிறது. ஆனால் நிஜத்தில் அது தற்பொழுதில்தான் உள்ளது. கணத்திற்குக் கணம் நீ அதைப் புதுப்பித்துக் கொண்டிருக்கிறாய். நீ கனவு காண்கிறாய் என்று நீ கண்டுவிட்டால் விழித்துக் கொள்வாய். ஆனால் நீ பார்க்க மாட்டாய். ஏனெனில் நீ உன் கனவு தொடர வேண்டுகிறாய். உன் முழு இதயத்துடனும், மனதுடனும் கனவு முடியவேண்டும் என்று ஏங்கும் ஒரு நாள் வரும். அப்போது அதற்கு எந்த விலையையும் கொடுக்கத் தயாராக இருப்பாய். அந்த விலை விவேகம் மற்றும் பற்றற்ற தன்மையால் ஒதுக்கித் தள்ளுவது, கனவிலேயே ஆர்வம் இல்லாமல் இருப்பது ஆகியவை.

**கே:** நான் எவ்வளவு உதவியற்று இருக்கிறேன் பாருங்கள். இருப்பதாகிய கனவு இருக்கும்வரை நான் தொடர வேண்டுகிறேன். நான் அதைத் தொடர வேண்டும் வரை அது இருக்கும்.

**ம:** அதைத் தொடர வேண்டுவது தவிர்க்கக் கூடியது. உன் நிலைமையைத் தெளிவாகப் பார். உன் தெளிவே உன்னை விடுவிக்கும்.

**கே:** நான் உங்களோடு இருக்கும்வரை நீங்கள் சொல்வது மிகவும் சரியாகத் தெரிகிறது; ஆனால் நான் அப்பால் சென்றவுடன் அமைதி இல்லாமலும், பதட்டமாகவும் திரிகிறேன்.

**ம:** நீ என்னைவிட்டு அப்பால் இருக்க வேண்டியதில்லை; குறைந்தபட்சம் மனதளவிலாவது. ஆனால் உன் மனம் உலக நலத்திற்குப் பின்னால் செல்கிறது!

**கே:** உலகம் பிரச்சனைகளால் நிரம்பி உள்ளது. என் மனமும் அவற்றால் நிரம்பி இருப்பதில் ஆச்சரியம் எதுவும் இல்லை.

**ம:** பிரச்சனை இல்லாத உலகம் எப்போதாவது இருந்துள்ளதா? நீ ஒரு நபராக இருப்பது மற்றவர்களின் மேலான வன்முறையைச் சார்ந்துள்ளது. உன் உடலேகூட இறந்த, மற்றும் இறந்து கொண்டிருப்பவர்களால் நிறைந்துள்ள ஒரு போர்க்களம். இருத்தல் வன்முறையைக் குறிக்கிறது.

**கே:** ஒரு உடலாக - ஆமாம். ஒரு மனிதனாக - கண்டிப்பாக இல்லை. மனித இனத்திற்கு வன்முறை இல்லாமை வாழ்வதின் சட்டம். வன்முறை இறப்பினுடையது.

**ம:** இயற்கையில் வன்முறை இல்லாமை சிறிதளவு தான் உள்ளது.

**கே:** கடவுளும், இயற்கையும் மனிதம் அல்ல; அவை மனிதத் தன்மையுடன் இருக்க வேண்டியதில்லை. என் அக்கறையெல்லாம் மனிதனைப் பற்றித்தான். நான் மனிதனாக இருக்க நான் முற்றிலுமாகக் கருணையுடன் இருக்க வேண்டும்.

**ம:** பாதுகாக்கப்பட ஒரு சுயம் இருக்கும் வரை நீ வன்முறையோடு இருக்க வேண்டும் என்று அறிவாயா?

**கே:** ஆமாம். உண்மையாகவே மனிதனாக இருக்க நான் சுயநலமற்று இருக்கவேண்டும். நான் சுயநலத்துடன் இருக்கும்வரை ஒரு கீழ்த்தரமான மனிதப் பிண்டம் மட்டுமே.

**ம:** ஆகவே, நாம் அனைவரும் மனிதத்தன்மைக்கும் கீழே உள்ளவர்கள். வெகு சிலரே மனிதர்கள். நம்மில் சிலரையோ, பலரையோ தெளிவும், கருணையும்தான் மனிதன் ஆக்குகின்றன. மனிதத் தன்மைக்கும் கீழே உள்ள, மனிதப் பிண்டங்கள் தாமச மற்றும் ராஜச குணங்களினால் ஆதிக்கம் செலுத்தப்படுகின்றார்கள்; மனிதர்கள் சாத்வீக குணத்தால். தெளிவும், கருணையும் சாத்வீகம். ஏனெனில் அது மனதையும், செயலையும் பாதிக்கிறது. ஆனால் மெய் சாத்வீகத்திற்கும் அப்பால் உள்ளது. உன்னை எனக்குத் தெரிந்ததிலிருந்து நீ உலகத்திற்கு உதவுவதிலேயே இருக்கிறாய். உன்னால் எவ்வளவு உதவ முடிந்தது?

**கே:** சிறிதளவுகூட இல்லை. உலகமும் மாறவில்லை; நானும் மாறவில்லை. ஆனால் உலகம் துன்பப்படுகிறது. நான் அதோடு துன்பப்படுகிறேன். துன்பத்திற்கு எதிரான போராட்டம் ஒரு இயற்கையான எதிர்வினை. நாகரீகம் மற்றும் பண்பாடு, தத்துவம் மற்றும் மதம் ஆகியவை துன்பத்திற்கு எதிரான போராட்டத்தைத் தவிர வேறு என்ன? துன்பத்தையும் துன்பத்தை முடிவுகட்டுவதும் - உங்களுடைய முதன்மையான ஈடுபாடு அல்லவா? அதை நீங்கள் அறியாமை என்றும் சொல்லலாம். இரண்டும் ஒன்றேதான்.

**ம:** நன்று. வார்த்தைகள் பொருட்டல்ல, நீ என்ன வடிவத்தில் இப்போது இருக்கிறாய் என்பதும் முக்கியமில்லை. பெயர்களும், வடிவங்களும் முடிவில்லாமல் மாறுகின்றன. மாறும் மனதின் மாற்றமில்லாத சாட்சியாக உன்னை அறி. அது போதும்.



# 98. சுய அடையாளத்திலிருந்து விடுதலை

**மஹராஜ்:** உன்னால் தரையில் அமர முடியுமா? உனக்கு ஒரு தலையணை தேவையா? கேட்பதற்குக் கேள்விகள் உள்ளனவா? நீ கேட்க வேண்டும் என்று அவசியமில்லை. அமைதியாகவும் இருக்கலாம். இருப்பது, வெறுமனே இருப்பது முக்கியம். நீ எதையும் கேட்க வேண்டியதில்லை. எதையும் செய்ய வேண்டியதில்லை. அம்மாதிரியாகச் சோம்பலாகக் காலத்தைச் செலவிடுவது இந்தியாவில் உயர்வாக மதிக்கப்படுகிறது. 'அடுத்து என்ன?' என்னும் தொடர் விருப்பத்திலிருந்து நீ விடுபட்டவன் என்று அதற்கு அர்த்தம். நீ அவசரப்படாமலும், மனம் பதட்டம் இல்லாமலும் இருந்தால் அது அமைதியாகிவிடும். அந்த நிசப்தத்தில் சில கேட்கப்படலாம். அவை சாதாரணமாக மிகவும் அரிதானவை மற்றும் உணர்ந்தறிய மிகவும் நுட்பமானவை. அனுபவிப்பதற்கு மனம் திறந்தும், அமைதியாகவும் இருக்க வேண்டும். நாங்கள் இங்கு செய்ய முயற்சிப்பதெல்லாம் எது மெய்யோ அதைப் புரிந்து கொள்ள நம் மனங்களைச் சரியான நிலைக்குக் கொண்டு வருவதுதான்.

**கேட்பவர்:** நாங்கள் எப்படிக் கவலைகளை முடிவிற்குக் கொண்டு வருவது?

**ம:** நீ உன் கவலைகளைப் பற்றிக் கவலைப் படாதே. வெறுமனே இரு. அமைதியாக இருக்க முயற்சி செய்யாதே. 'அமைதியாக இருப்பது' என்பதை ஒரு கடினமான வேலையாக்காதே. 'அமைதி யாக இருப்பது' என்பதைப் பற்றி அமைதியற்று இருக்காதே. 'மகிழ்ச்சியாக இருப்பது' என்பதைப் பற்றி துக்கப்படாதே. நீ இருக்கிறாய் என்னும் விழிப்புணர்விலும், விழிப்புணர்வோடும் இரு - 'ஆமாம், நான் இருக்கிறேன்; அடுத்து என்ன?' என்று

கேட்காதே. 'நான்' னில் 'அடுத்தது' என்பது இல்லை. அது ஒரு காலமற்ற நிலை.

**கே:** அது ஒரு காலமற்ற நிலை என்றால் தன்னை எப்படியாவது வெளிப்படுத்திக் கொள்ளும்.

**ம:** காலமற்று ஆதாரத்தில் நீ என்னவோ அதுவாக இருக்கிறாய். ஆனால் அதை நீ அறியாமலும், அதன்மேல் செயல்படாமலும் இருந்தால் அதனால் என்ன பயன்? உன் பிச்சைப் பாத்திரம் தூய தங்கத்தால் ஆனதாக இருக்கலாம். ஆனால் அதை நீ அறியாமல் இருக்கும்வரை நீ பொருளற்றவன். நீ உன் உள் மதிப்பை அறிந்து, அதை நம்ப வேண்டும். அதை ஆசை மற்றும் அச்சத்தைத் தினசரி தியாகம் செய்வதால் வெளிப்படுத்து.

**கே:** நான் என்னை அறிந்தால் ஆசையும், அச்சமும்பட மாட்டேனா?

**ம:** சில காலத்திற்கு, புதுப் பார்வை கிடைத்திருந்தாலும் முன்பே அறிந்த கடந்த காலத்திற்கு ஏங்குவதும், அறியப்படாத எதிர்காலத்திற்குப் பயப்படுவதுமாகிய மனப் பழக்கங்கள் சுற்றிச் சுற்றி வரலாம். இவையெல்லாம் மனதினுடையவை என்று நீ உறுதியாக அறிந்தால், நீ அவற்றிற்கு அப்பால் செல்லலாம். உன்னைப் பற்றிய எல்லாவிதமான கருத்துக்களையும் கொண்டிருக்கும் வரை, உன்னை இந்தக் கருத்துக்களின் பனி மூட்டத்திற்குள்ளாகத் தெளிவில்லாமல்தான் அறிவாய்; உன்னை நீ உள்ளபடியே அறிய எல்லாக் கருத்துக்களையும் விட்டுவிடு. நீ தூய தண்ணீரின் சுவையைக் கற்பனை செய்ய முடியாது. அதை நீ எல்லாச் சுவையூட்டுதலையும் விட்டுவிடுவதால்தான் கண்டுபிடிக்க முடியும்.

உன் தற்போதைய வாழும் முறையில் ஆர்வத்துடன் இருக்கும்வரை நீ அதைக் கைவிட மாட்டாய். உனக்குப் பழக்க மானதோடு தொக்கிக் கொண்டிருக்கும் வரை கண்டுபிடித்தல் நிகழாது. உன் கடந்த வாழ்க்கையின் அளவற்ற துக்கத்தை முழுமையாக அறிந்து, அதற்கு எதிராகக் கிளர்ந்தால்தான் ஒரு வெளியேறும் வழியைக் கண்டுபிடிக்க முடியும்.

**கே:** இந்தியாவின் சாசுவதமான இளமையின் இரகசியம் இருத்தலின் இந்தப் பரிமாணத்தில்தான் இருக்கிறது என்பதை நான் காண்கிறேன். இந்தியா மட்டும்தான் எப்போதும் அதைப் பாதுகாப்பாக வைத்திருக்கிறது.

**ம:** அது ஒரு திறந்த ரகசியம். அதைப் பகிர்ந்துகொள்ள எப்போதும் மக்கள் விருப்பத்துடனும், தயாராகவும் இருப்பார்கள். பல ஆசிரியர்கள் இருக்கிறார்கள். ஆனால் அச்சமற்ற சீடர்கள் சிலர்தான்.

**கே:** நான் கற்றுக்கொள்ள மிகவும் விருப்பத்துடன் இருக்கிறேன்.

**ம:** வார்த்தைகளைக் கற்றுக் கொள்வது போதாது. உனக்குக் கோட்பாட்டைத் தெரிந்திருக்கலாம். ஆனால் உன்னை இருத்தலின் தனிப்பட்டதல்லாத, நிர்குணமான மையமாக, அன்பும், ஆனந்தமுமாக நிஜமாகவே அனுபவப்படாவிட்டால் வெறும் வார்த்தையாலான அறிவு பயனற்றது.

**கே:** பிறகு நான் என்ன செய்வது?

**ம:** இருக்க முயற்சி செய்; இருக்க மட்டுமே முயற்சி செய். மிக முக்கியமான வார்த்தை 'முயற்சி'. தினமும் அமைதியாக அமர்ந்திருப்பதற்கும், நபர்த்தன்மையையும் அதன் பழக்க அடிமைத்தனத்தையும், தொடர் எண்ணங்களையும் கடந்து போக முயற்சிப்பதற்கும், வெறுமனே முயற்சிப்பதற்கும் போதுமான நேரத்தை ஒதுக்கு. அதை எப்படிச் செய்வது என்று கேட்காதே. அதை விவரிக்க முடியாது. வெற்றிபெறும்வரை நீ வெறுமனே முயற்சி செய்துகொண்டே இரு. நீ விடாமுயற்சியுடன் இருந்தால் தோல்வி இருக்க முடியாது. எது அதிக பட்ச முக்கியம் என்றால் தீவிரம் மற்றும் மனமார்ந்த ஈடுபாடு; ஒரு நபராக இருக்கும் நிலை அதிகப்படியாக உள்ளது என்று நீ அறிய வேண்டும். ஞாபகங்கள் மற்றும் பழக்கங்களின் ஒரு கற்றையோடு கொண்டுள்ள தேவையில்லாத இந்தச் சுய அடையாளத்திலிருந்து விடுபடுவதன் அவசரத் தேவையை இப்போது காண்பாய். தேவையில்லாததற்கு எதிரான இந்த உறுதியான எதிர்ப்புதான் வெற்றியின் ரகசியம்.

உன் வாழ்க்கையின் ஒவ்வொரு கணத்திலும் நீ என்னவோ அதுதான். ஆனால் அதைப் பற்றி உனக்கு ஒருபோதும் உணர்வு இருந்ததில்லை. சிலசமயம் தூக்கத்திலிருந்து விழிக்கும் கணத்தில் உனக்கு அதைப்பற்றிய உணர்வு இருக்கலாம். உனக்குத் தேவையானதெல்லாம் வார்த்தையாலான அறிக்கையாக இல்லாமல், எப்போதும் இருக்கும் ஒரு நிஜமாக இருத்தலைப் பற்றிய பிரக்ஞையோடு இருப்பது. நீ இருக்கிறாய் என்னும் பிரக்ஞை நீ என்ன என்பதற்கு உன் கண்களைத் திறக்கும். இவையெல்லாம் மிகவும் எளிமையானவை. முதலில் உன் சுயத்தோடு நிலையான ஒரு தொடர்பை ஏற்படுத்து. அதனோடு எல்லா நேரமும் இரு. சுயப் பிரக்ஞைக்குள் எல்லா ஆசீர்வாதங்களும் ஊற்றப்படுகின்றன. கவனத்தின் ஒரு மையமாக, விழிப்புணர்வோடு கூடிய அறிவின் மையமாக ஆரம்பி. செயல்படும் அன்பின் ஒரு மையமாக வளர். 'நான்' என்பது ஒரு சிறு விதை. அது இயற்கையாகவும், பிரயத்தனமில்லாமலும் ஒரு பெரும் மரமாக வளரும்.

**கே:** *என்னிடத்தில் மிக அதிகமான தீயவைகளைப் பார்க்கிறேன். நான் அதை மாற்ற வேண்டாமா?*

**ம:** *தீயவை கவனமின்மையின் நிழல். சுயப் பிரக்ஞையின் ஒளியில் அவை இல்லாமல் போய்விடும்.*

மற்றொன்றின் மேல் சார்ந்திருக்கும் அனைத்தும் பயனற்றவை. ஏனெனில் மற்றவர்கள் என்ன கொடுக்க முடியுமோ அதை வேறொருவர் எடுத்துக்கொள்வார். ஆரம்பத்தில் உனக்கு எது சொந்தமாக இருந்ததோ அதுதான் இறுதிவரை உனக்குச் சொந்தமாக இருக்கும். அகத்திலிருந்து கிடைக்கும் வழிகாட்டுதலைத் தவிர வேறு எதையும் ஏற்றுக் கொள்ளாதே. அப்போது எல்லா ஞாபகங்களையும் வெளியேற்று. ஏனெனில் அவை உன்னைத் தவறாக வழி நடத்துபவை. நீ வழிமுறைகளைப் பற்றி அறியாதிருந்தாலும், அமைதியாக இருந்து, அகத்திற்குள் பார்; அப்போது வழிகாட்டுதல் கண்டிப்பாகக் கிடைக்கும். அடுத்து எடுத்து வைக்க வேண்டிய அடி என்ன என்று நீ அறியாமல் ஒரு போதும் விடப்படுவதில்லை. ஆனால் அடுத்த அடியை நீ எடுத்து

வைக்கமாட்டாய். அதுதான் உன்னோடு பிரச்சனை. தன்னுடைய அனுபவத்தினாலும், வெற்றியினாலும் உனக்குத் தைரியம் கொடுக்க குரு இருப்பார். ஆனால் நீ உன் சொந்தப் பிரக்ஞை யினாலும், சொந்த முயற்சியாலும் கண்டுபிடிப்பது எதுவோ அது நிரந்தரமாக உபயோகமாக இருக்கும்.

நீ உணர்ந்தறியும் எதுவும் உன்னுடையது அல்ல என்று ஞாபகம் வைத்துக் கொள். வெளியிலிருந்து மதிப்புமிக்க எதுவும் உனக்கு வர முடியாது; உன் உணர்ச்சியும், புரிதலும்தான் பொருத்தமானவை மற்றும் வெளிப்படுபவை. வார்த்தைகள், கேட்கப்பட்டவையோ அல்லது படிக்கப்பட்டவையோ, அவை உன் மனதில் பிம்பங்களைத் தான் உருவாக்கும். ஆனால் நீ ஒரு மனப் பிம்பம் அல்ல. நீ பிம்பத்திற்குப் பின்னாலும், அப்பாலும் இருக்கும் உணர்ந்தறியும் சக்தி மற்றும் செயல்படும் சக்தி.

**கே:** *நான் அகந்தையுள்ளவனாக இருக்கும் அளவிற்குச் சுய ஆர்வம் கொண்டவனாக இருக்க எனக்கு நீங்கள் அறிவுரை சொல்வதுபோல் தெரிகிறது. எனக்கு மற்றவர்களுடன் ஈடுபாடு தேவையில்லையா?*

**ம:** உனக்கு மற்றவர்களிடம் உள்ள ஈடுபாடு அகந்தையைக் காட்டுகிறது, சுய அக்கறையுடையது, சுயம் சார்ந்தது. நீ மற்றவர்களுடன் அவர்கள் நபர்கள் என்று உனக்கு ஈடுபாடு கிடையாது. ஆனால் உன்னைப்பற்றி உன் சொந்த மன உருவகத்தை அவர்கள் பிரகாசப்படுத்தும்வரையும் அல்லது உயர்த்தும் வரையும்தான் உனக்கு அவர்களிடம் ஈடுபாடு இருக்கும். சுயநலத்தின் உச்சம் என்னவென்றால் ஒருவரின் சொந்த உடலை மட்டுமே பாதுகாப்பது, பராமரிப்பது, மற்றும் பெருக்குவதுதான். உடல் என்று நான் குறிப்பது உன் பெயர் மற்றும் உருவம், உன் குடும்பம், இனம், நாடு மற்றும் இன்ன பிற. ஒருவருடைய பெயர் மற்றும் உருவத்தோடு ஒட்டிக் கொண்டிருப்பது சுயநலம். தான் உடலோ, மனமோ அல்ல என்று அறிந்த மனிதன் சுயநலமாக இருக்க முடியாது. ஏனெனில் அவன் சுயநலமாக இருக்க எதுவும் கிடையாது. அல்லது அவன் தான் சந்திக்கும் அனைவருக்காகவும் சுயநலமானவன்; ஒவ்வொருவரின் நலமும் அவனுடையதே.

'நானே உலகம், உலகமே நான்' என்னும் உணர்வு அவனுடைய இயல்பாகிறது; அது நிலைபெற்றுவிட்டால் சுயநலமாக இருக்க வழியில்லை. சுயநலமாக இருப்பது என்பது மொத்தத்திற்காக இல்லாமல் பகுதிக்காகக் கவர்வது, அடைவது, சேர்ப்பது.

**கே:** ஒருவர் வாரிசாக இருப்பதாலோ அல்லது திருமணத்தாலோ அல்லது வெறுமனே அதிர்ஷ்டத்தாலோ சொத்துக்களைப் பெற்று பணக்காரராக இருக்கலாம்.

**ம:** அதை நீ பிடித்துவைத்திருக்கவில்லை என்றால் அது உன்னிடமிருந்து எடுத்துக் கொள்ளப்படும்.

**கே:** உங்களுடைய தற்போதைய நிலையில் நீங்கள் மற்றொருவரை நபராக நேசிக்க முடியுமா?

**ம:** நான்தான் மற்ற நபர்; மற்ற நபர் நான்தான். பெயரிலும், உருவத்திலும் நாம் வித்தியாசமானவர்கள். ஆனால் பிரிவு என்பது இல்லை. நம் இருத்தலின் மூலத்தில் நாம் ஒன்றே.

**கே:** மக்களுக்கிடையே காதல் இருக்கும்போது அது அவ்வாறில்லையா?

**ம:** அவ்வாறுதான் உள்ளது. ஆனால் அவர்கள் அதைப் பற்றி உணர்வுள்ளவர்கள் அல்ல. அவர்கள் ஈர்ப்பை உணர்கிறார்கள். ஆனால் அதன் காரணத்தை அறிய மாட்டார்கள்.

**கே:** ஏன் அன்பு தேர்ந்தெடுக்கப்பட்டவாறு உள்ளது?

**ம:** அன்பு தேர்ந்தெடுக்கப்பட்டது போல் இல்லை. ஆசைதான் தேர்ந்தெடுக்கப்பட்டதாக இருக்கிறது. அன்பில் அன்னியர் யாரும் இல்லை. சுயநலத்தின் மையம் இல்லாதபோது, இன்பத்திற்கான ஆசையும், துக்கத்தைப் பற்றிய அச்சமும் இல்லாமல் போய்விடும்; மகிழ்ச்சியாக இருப்பதில் ஆர்வம் இருக்காது; மகிழ்ச்சிக்கு அப்பால் தூய தீவிரம், தீராத சக்தி, ஒரு வற்றாத ஆதாரத்திலிருந்து வழங்குவதன் பரமானந்தம் இருக்கும்.

**கே:** எது சரி, எது தவறு என்னும் என் பிரச்சனையைத் தீர்ப்பதன் மூலம் நான் ஆரம்பிக்கலாமா?

**ம:** எது இன்பத்தைக் கொடுக்கிறதோ அதைச் சரி என்றும், எது துக்கம் மிகுந்ததோ அதைத் தவறு என்றும் மக்கள் எடுத்துக் கொள்கிறார்கள்.

**கே:** ஆமாம், எங்களைப் போன்ற சாதாரண மனிதர்களுக்கு அது அவ்வாறுதான் உள்ளது. ஆனால் ஒருமை நிலையில், அது உங்களுக்கு எவ்வாறு உள்ளது? உங்களைப் பொருத்தவரை எது நல்லது? எது தீயது?

**ம:** துன்பத்தை எது அதிகரிக்கிறதோ அது தீயது. எது தீர்க்கிறதோ அது நல்லது.

**கே:** அப்படியானால், துன்பத்தையே நல்லதல்ல என்று மறுக்கிறீர்கள். துன்பப்படுவதை நல்லதென்றும், உன்னதமானது என்றும் சில மதங்களில் கருதப்படுகிறது.

**ம:** கர்மா அல்லது விதி என்பது ஒரு பயனுள்ள சட்டத்தை வெளிப்படுத்தும் ஒரு விதம். அந்தச் சட்டம் சமநிலை, ஒத்திசைவு, ஒற்றுமை ஆகியவற்றை நோக்கிச் செல்லும் பிரபஞ்ச விருப்பம். ஒவ்வொரு கணத்திலும், எது இப்போது நடந்தாலும் அது நன்மைக்கே. அது வலிமிகுந்ததாகவும், அசிங்கமாகவும், ஒரு கசப்பான, அர்த்தமற்ற துன்பமாகவும் தோன்றலாம். இருப்பினும் கடந்தகாலத்தையும், எதிர்காலத்தையும் கருதினால் ஒரு பேரிடரான நிலைமையிலிருந்து வெளியேறச் சிறந்த வழிதான் அது.

**கே:** ஒருவர் தன்னுடைய பாவங்களுக்காக மட்டும் துன்பப் படுகிறாரா?

**ம:** ஒருவர் தன்னை என்னவாக நினைக்கிறாரோ அதோடு சேர்ந்து தானும் துன்பப்படுகிறார். நீ உன்னை மனித இனத்துடன் ஒன்று என்று நினைத்தால், அதோடு சேர்ந்து துன்பப்படுவாய்.

**கே:** நீங்கள் துன்பப் படுபவர்களோடு ஒன்று என்று உங்களைச் சொல்லிக் கொள்வதால் உங்கள் துன்பத்திற்குக் காலமோ, இடமோ போதாது! காலத்திலும் இடத்திலும் உங்கள் துன்பத்திற்கு அளவு இருக்காது!

**ம:** இருப்பது என்பதே துன்பப்படத்தான். என்னுடைய சுய அடையாளம் எந்த அளவிற்குக் குறுகியதாக இருக்கிறதோ அந்த

அளவிற்கு ஆசையினாலும், அச்சத்தினாலும் ஏற்படும் துன்பம் அதிகத் தீவிரமாக இருக்கும்!

**கே:** கிறிஸ்துவ மதம் துன்பப்படுவதை தூய்மைப் படுத்துவதாகவும், மேன்மைப்படுத்துவதாகவும் ஏற்றுக் கொள்கிறது. ஆனால் ஹிந்து மதமோ அதை விரும்புவதில்லை.

**ம:** கிறிஸ்துவம் ஒரு மாதிரியாக வார்த்தைகளைச் சேர்த்துச் சொல்லும் விதம். ஹிந்துத்துவம் மற்றொரு மாதிரி சொல்லும் விதம். மெய் வார்த்தைகளுக்குப் பின்னாலும், அப்பாலும், வார்த்தைகளால் விவரிக்க முடியாததாகவும், நேரடியாக அனுபவப்படுவதாகவும், வெடிக்கத்தக்க தாக்கத்தை மனதின் மீது கொண்டுள்ளதாகவும் இருக்கிறது. வேறொன்றும் வேண்டப்படாதபோது அது உடனடியாகப் பெறப்படும். மெய்யற்றது கற்பனையால் உருவாக்கப்படுகிறது; ஆசைகளால் தொடர்கிறது.

**கே:** அவசியமான மற்றும் நல்ல துன்பம் என்று எதுவும் இல்லையா?

**ம:** தற்செயலானதும், தற்காலிகமானதுமான துன்பங்கள் தவிர்க்க முடியாதவை மற்றும் கடந்து போகக் கூடியவை; வேண்டுமென்றே உண்டாகப்படும் வலி, நல்ல நோக்கங்களோடு செய்யப் பட்டிருந்தாலும்கூட அர்தமற்றவை மற்றும் கொடூரமானவை.

**கே:** நீங்கள் குற்றத்தைத் தண்டிக்க மாட்டீர்களா?

**ம:** தண்டனை என்பது சட்டபூர்வமான குற்றம். பழிக்குப் பழி வாங்குவதை விடத் தடுப்பதை அடிப்படையாகக் கொண்டுள்ள சமுதாயத்தில் மிகச் சிறிதளவு குற்றமே நடைபெறும். சில விதிவிலக்குகள் மன நிலையோ, உடல் நிலையோ சரி இல்லாததாகக் கருதப்பட்டு வைத்தியம் பார்க்கப்படும்.

**கே:** உங்களுக்கு மதம் சிறிதளவே உபயோகம் போலத் தெரிகிறது.

**ம:** மதம் என்பது என்ன? வானத்தில் உள்ள ஒரு மேகம். நான் வானத்தில் வாழ்கிறேன்; பலப்பல வார்த்தைகள் ஒன்றாகச் சேர்க்கப்பட்ட மேகத்தில் அல்ல. வார்த்தை வடிவத்தை நீக்கி விட்டால் என்ன மிஞ்சும்? மெய் மிஞ்சும். என் வீடு மாற்ற

மில்லாததில் இருக்கிறது. அது எதிர் எதிரானவைகளின் தொடர்ந்த ஒப்பிட்டுச் சரிபார்த்தலும், ஒருங்கிணைந்ததுமான ஒரு நிலையாகத் தோன்றும். மக்கள் அம்மாதிரியான ஒரு நிலை நிஜமாக இங்கு இருப்பதைப் பற்றி கற்றுக் கொள்ள இங்கு வருகிறார்கள். அம்மாதிரியான நிலையின் வெளிப்பாட்டிற்கு உள்ள தடைகளைப் பற்றியும், அதை விழிப்புணர்வில் நிலை நிறுத்துவதைப் பற்றிக் கற்றுக் கொள்ளவும் இங்கு வருகிறார்கள். அவ்வாறு உணர்ந்தறிந்த பிறகு புரிதலுக்கும், வாழ்தலுக்கும் இடையில் மோதல் இருக்காது. அந்த நிலையே மனதிற்கு அப்பால்தான் உள்ளது. அதைக் கற்க வேண்டியதில்லை. மனம் தடைகளைப் பற்றி மட்டும்தான் கவனத்தைச் செலுத்த முடியும்; தடையைத் தடையாகப் பார்ப்பது பயனுள்ளது. ஏனெனில் அது மனம் மனதின்மேல் செயல்படுவது. ஆரம்பத்தில் இருந்து ஆரம்பி: நீ உள்ளாய் என்னும் நிஜத்தின்மீது கவனத்தைச் செலுத்து. நீ ஒருபோதும் 'நான் இல்லை' என்று சொல்ல முடியாது. நீ சொல்லக்கூடியதெல்லாம் 'எனக்கு ஞாபகம் இல்லை' என்றுதான். ஞாபகம் எவ்வளவு நம்பத்தகுந்தது அல்ல என்று உனக்குத் தெரியும். சிறு தனிப்பட்ட சமாச்சாரங்களில் ஈடுபட்டதால் நீ என்ன என்பதை மறந்துவிட்டாய் என்று ஒப்புக் கொள்; அறிந்ததை வெளியேற்றுவதால் இழந்த சுயத்தின் ஞாபகத்தைத் திரும்பக் கொண்டுவர முயற்சி செய். என்ன நடக்கும் என்று உன்னிடம் சொல்ல முடியாது. அது விரும்பத்தக்கதும் அல்ல; ஏனெனில் எதிர்பார்ப்பு மாயத் தோற்றங்களை உருவாக்கும். உள்முகமான தேடலில் எதிர்பாராததைத் தவிர்க்க முடியாது. சுயவிசாரம் எப்போதும் எல்லாக் கற்பனைக்கும் அப்பாற்பட்டது. எப்படி ஒரு பிறக்காத குழந்தை, ஒரு செல்லுபடியாகக் கூடிய படத்தை உருவாக்க அதன் மனதில் எதுவும் இல்லாததால் பிறப்பிற்குப் பிறகான வாழ்க்கையைப் பற்றி அறியாதோ, அப்படி மெய்யற்றதை வைத்துக்கொண்டு மனம் மெய்யைப் பற்றி எதிர்மறையாக 'இது அல்ல, அது அல்ல' என்று ஒதுக்குவதைத் தவிர வேறு மாதிரி சிந்திக்க முடியாது. மெய்யற்றதை மெய் என்று ஏற்றுக் கொள்வதுதான் தடை; பொய்யைப் பொய் என்று பார்த்து, பொய்யைக் கைவிடுவதுதான் மெய்யை இருத்தலுக்குக் கொண்டு வரும். முற்றிலுமான தெளிவு, அளவற்ற அன்பு, முற்றிலுமான

பயமின்மை ஆகிய நிலைகள் - இவையெல்லாம் தற்போது வெறும் வார்த்தைகள், வர்ணமற்ற வரைபடங்கள், என்னவாக இருக்க முடியும் என்பதற்குக் குறிப்புகள். நீ அறுவை சிகிச்சைக்குப் பிறகு பார்வையை எதிர்பார்த்திருக்கும் ஒரு கண்பார்வையற்ற மனிதனைப் போன்றவன் - ஆனால் நீ அறுவை சிகிச்சையைத் தவிர்த்திருக்கக் கூடாது! நான் இருக்கும் நிலையைப் பற்றிய வார்த்தைகள் முக்கியம் அல்ல. வார்தைகளின் மேல் பழக்க அடிமைத்தனமும் முக்கியம் கிடையாது. நிஜங்கள் மட்டுமே முக்கியம்.

**கே:** வார்த்தைகள் இல்லாமல் எந்த மதமும் இருக்க முடியாது.

**ம:** பதிவு செய்யப்பட்ட மதங்கள் வெறும் வார்த்தைகளின் குவியல். மதங்கள் தங்களின் செயல்பாட்டில், நிசப்தமான செயல்பாட்டில்தான் உண்மையான முகத்தைக் காண்பிக்கின்றன. ஒரு மனிதன் எதை நம்புகிறான் என்று அறிய அவன் எப்படிச் செயல்படுகிறான் என்று கவனி. மக்களில் பெரும்பாலானோருக்குத் தங்களின் உடலுக்கும், மனதிற்கும் சேவை செய்வதுதான் அவர்களுடைய மதம். அவர்களுக்கு மதம் சம்பந்தமான கருத்துக்கள் இருக்கலாம். ஆனால் அவற்றின்படி செயல்பட மாட்டார்கள். அவர்கள் அவற்றுடன் விளையாடுவார்கள், அவற்றின்மேல் மிகவும் பிரியத்துடன் இருப்பார்கள். ஆனால் அவற்றின்படி செயல்படமாட்டார்கள்.

**கே:** கருத்துப் பரிமாற்றத்திற்கு வார்த்தைகள் தேவை.

**ம:** தகவல்களைப் பரிமாறிக்கொள்ள - ஆமாம். ஆனால் மக்களுக்கிடையே உண்மையான கருத்துப் பரிமாற்றம் வாய்மொழியானதல்ல. உறவுகளை ஏற்படுத்தவும், பராமரிக்கவும் நேரடியான செயலில் வெளிப்படுத்தப்படும் பாசமுள்ள விழிப்புணர்வு தேவை. நீ என்ன சொல்கிறாய் என்பதல்ல முக்கியம். நீ என்ன செய்கிறாய் என்பதே முக்கியம். வார்த்தைகள் மனதால் உருவாக்கப்படுபவை. அவை மனதின் அளவில் மட்டும்தான் அர்த்தமுள்ளவை. 'ரொட்டி' என்னும் வார்த்தையை நீ சாப்பிடவோ அல்லது அதனால் வாழவோ முடியாது; அது வெறுமனே ஒரு கருத்தைத்தான் தெரிவிக்கின்றது. நிஜமாலுமே

சாப்பிடுவதால்தான் அது அர்த்தம் பெறுகிறது. அதேபோல இயல்பான நிலை வார்த்தை வடிவிலானது அல்ல. நான் அதைச் செயல்பாட்டில் வெளிப்படுத்தப்படும் புத்திசாலித்தனமான அன்பு என்று சொல்லலாம். ஆனால் நீ அவற்றின் முழுமையோடும், அழகோடும் அவற்றை அனுபவித்தால் ஒழிய இந்த வார்த்தைகள் சிறிதளவே தெரிவிக்கின்றன.

வார்த்தைகள் அவற்றின் அளவான பயனைத்தான் கொண்டிருக்கின்றன. ஆனால் நாம் அவற்றிற்கு அளவை வைப்பதில்லை. அதனால் நம்மைப் பேரழிவின் விளிம்பிற்கே கொண்டுவந்து விடுகிறோம். நம் உன்னதமான கருத்துக்கள் எல்லாம் இறுதியாக கீழ்த்தரமான செயல்களால் சமநிலைப்படுத்தப்படுகின்றன. நாம் கடவுள், மெய் மற்றும் அன்பைப் பற்றிப் பேசுகிறோம். ஆனால் நேரடியான அனுபவத்திற்குப் பதிலாக நாம் கோட்பாடுகளை உருவாக்குகிறோம். செயல்பாட்டை விரிவாகவும், ஆழமாகவும் செய்வதற்குப் பதிலாக நாம் நம் கோட்பாடுகளைச் செதுக்கிக் கொண்டிருக்கிறோம். மேலும் நம்மால் வரையறுக்க முடிந்தவற்றை நமக்குத் தெரியும் என்று கற்பனை செய்கிறோம்!

**கே:** வார்த்தைகள் மூலமாக அல்லாமல் எப்படி நாம் அனுபவங்களைத் தெரிவிப்பது?

**ம:** அனுபவத்தை வார்த்தைகளால் தெரிவிக்க முடியாது. அது செயலோடு வருவது. தன் அனுபவத்தில் தீவிரமாக இருக்கும் ஒருவர் நம்பிக்கையையும், தைரியத்தையும் பரப்புவார். மற்றவர்களும் செயல்படுவார்கள். மற்றும் செயல்பாட்டால் பிறக்கும் அனுபவத்தையும் பெறுவார்கள். வார்த்தை வழியான போதனையும் அதன் உபயோகத்தைக் கொண்டுள்ளது. அது மனதை அதன் கற்பனையான சேகரிப்புகளை இல்லாமல் செய்யத் தயார்படுத்துகிறது.

புற வயப்பட்ட எதற்கும் எந்த மதிப்பும் இல்லாமல், இதயம் எல்லாவற்றையும் தியாகம் செய்யத் தயாராக இருக்கும்போது ஒரு மன முதிர்ச்சி நிலை அடையப்பெறும். அப்போது மெய்யிற்கு ஒரு வாய்ப்பு கிடைத்து, அது மனதைக் கைப்பற்றிக் கொள்ளும். தாமதம்

ஏதாவது இருந்தால் அது பார்ப்பதற்கோ அல்லது ஒதுக்கித் தள்ளவோ விருப்பமில்லாத மனதால் ஏற்படுத்தப்படுவது.

**கே:** அப்படியானால் நாம் முற்றிலும் தனியானவர்களா?

**ம:** இல்லை, இல்லை. அப்படி இல்லை. யார் வைத்திருக்கிறார்களோ அவர்கள் கொடுக்கலாம். அவ்வாறு கொடுப்பவர்கள் பலர். உலகமே அன்பான தியாகத்தால் பராமரிக்கப்படும் ஒரு உச்ச உயர்வான கொடை. ஆனால் புத்திசாலித்தனமாகவும், பணிவாகவும் உள்ள சரியான பெற்றுக் கொள்பவர்கள் வெகு சிலரே. 'கேளுங்கள், கொடுக்கப்படும்' என்பது சாசுவதமான சட்டம்.

பற்பல வார்த்தைகளை நீ கற்றுக் கொண்டாய். பற்பலவானவைகளைப் பேசுகிறாய். உனக்கு எல்லாமும் தெரியும். ஆனால் உன்னை உனக்குத் தெரியாது. ஏனெனில் சுயத்தை வார்த்தைகளால் அறிய முடியாது. நேரடியான உட்பார்வை மட்டுமே அதைத் தெரிவிக்கும். உள்ளுக்குள் பார்; உள்ளுக்குள் தேடு.

**கே:** வார்த்தைகளைக் கைவிடுவது மிகவும் கடினம். நம் மனோ வாழ்க்கை ஒரு தொடர்ந்த வார்த்தைகளின் ஓடை.

**ம:** அது சுலபம் அல்லது கடினம் என்பது பொருட்டல்ல. உனக்கு வேறு வழியில்லை. நீ முயற்சி செய்யலாம் அல்லது முயற்சி செய்யாமல் இருக்கலாம். அது உன்னைப் பொருத்தது.

**கே:** நான் பலமுறை முயற்சித்திருக்கிறேன். ஆனால் தோற்றுவிட்டேன்.

**ம:** மறுபடியும் முயற்சி செய். நீ தொடர்ந்து முயற்சி செய்துகொண்டே இருந்தால் ஏதாவது நடக்கும். ஆனால் முயற்சி செய்யாவிட்டால் நீ சிக்கிக் கொள்வாய். உனக்கு எல்லாச் சரியான வார்த்தைகளும் தெரிந்திருக்கலாம்; வேதப் புத்தகங்களைக் கோடிட்டுக் காட்டலாம்; உன் கலந்துரையாடலில் புத்திசாலித்தனமாக இருக்கலாம். ஆனாலும் ஒரு எலும்பு மூட்டையாகத்தான் இருப்பாய். அல்லது நீ ஒரு இருப்பதே தெரியாத மற்றும் பணிவான, முற்றிலும் முக்கியத்துவமில்லாத நபராக, ஆனாலும் அன்பான இரக்கத்தோடும், ஆழமான அறிவோடும் பிரகாசிக்கும் நபராக இருக்கலாம்.

## 99. உணர்ந்தறியப்படுவது உணர்ந்தறிபவராக இருக்க முடியாது

**கேட்பவர்:** பயிற்சி செய்யக் கிடைக்கும் பல்வேறு விதமான யோகாவைத் தேடி பல இடங்களுக்குச் சென்று கொண்டிருக் கிறேன். எனக்கு எது சிறந்த முறையில் பொருந்தும் என்று என்னால் முடிவெடுக்க முடியவில்லை. சில உபயோகமான அறிவுரைகளுக்கு நான் நன்றியுடையவனாக இருக்கிறேன். தற்போது இந்தத் தேடுதலின் விளைவாக மெய்யைக் காண வேண்டும் என்னும் கருத்தில் சோர்ந்துவிட்டேன். அது எனக்குத் தேவையில்லாத தாகவும், தொந்தரவாகவும் தெரிகிறது. வாழ்க்கையை அது இருப்பது போலவே அனுபவித்து மகிழ வேண்டும். அதை மேம்படுத்துவதில் எந்தப் பயனும் இருப்பதாக எனக்குத் தெரியவில்லை.

**மஹராஜ்:** உன்னுடைய மன நிறைவிலேயே தங்கி இருப்பதை வரவேற்கிறேன். ஆனால் உன்னால் முடியுமா? இளமை, ஆற்றல், சொத்து - இவையெல்லாம் நீ எதிர்பார்ப்பதற்கு முன்பே போய் விடும். இதுவரை ஒதுக்கப்பட்ட துக்கம் உன்னைக் கைக் கொள்ளும். துக்கத்திற்கு அப்பால் நீ இருக்க வேண்டுமானால் அதைப் பாதிவழியிலேயே சந்தித்து, அரவணைத்துக் கொள்ள வேண்டும். உன் பழக்கங்களையும், பழக்க அடிமைத் தனங்களையும் கைவிட்டுவிட்டு, ஒரு ஆடம்பரமில்லாத, எளிமையான வாழ்க்கையை வாழ். உயிரோடு வாழும் எதையும் நோகச் செய்யாதே; இதுதான் யோகாவின் அடித்தளம். மெய்மையைக் கண்டுபிடிக்க நீ உன் மிகச் சிறிய தினசரிச் செயலிலும் உண்மையாக இருக்கவேண்டும்; மெய்யைத் தேடுவதில் ஏமாற்றுதல் இருக்க முடியாது. உன் வாழ்க்கை மகிழ்ந்து அனுபவிப்பதாக இருப்பதாகச் சொல்கிறாய். தற்போது அவ்வாறு இருக்கலாம். ஆனால் யார் அதை அனுபவிப்பது?

**கே:** மகிழ்ந்து அனுபவிப்பவரையும், அனுபவிக்கப்பட்டதையும் எனக்குத் தெரியாது என்று ஒப்புக் கொள்கிறேன். எனக்கு மகிழ்ந்து அனுபவிப்பது மட்டுமே தெரியும்.

**ம:** மிகச் சரி. ஆனால் மகிழ்ந்து அனுபவிப்பது என்பது மனதின் ஒரு நிலை - அது வரும், போகும். அதன் நிலையற்ற தன்மையே அதை உணர்ந்தறியப்படுவதாகச் செய்கிறது. மாறாததைப் பற்றிய உணர்வு உன்னுடன் இருப்பதில்லை. எல்லா விழிப்புணர்வும் மாற்றத்தைப் பற்றிய விழிப்புணர்வே. ஆனால் மாற்றத்தைப் பற்றி உணர்ந்தறிவதே - ஒரு மாற்றமில்லாத பின்புலத்தை அவசியமாக்காதா?

**கே:** இல்லவே இல்லை. கடந்த நிலையின் ஞாபகம், தற்போதைய நிலையின் ப்ரக்தியட்சத் (Actual) தன்மையோடு ஒப்பிடப்பட்டால் மாற்றத்தின் அனுபவத்தைக் கொடுக்கிறது.

**ம:** ஞாபகத்தில் உள்ளதற்கும், ப்ரக்தியட்சமானதற்கும் அடிப்படையில் ஒரு வித்தியாசம் இருக்கிறது. அதைக் கணத்திற்குக் கணம் கவனிக்கலாம். எந்த நேரத்திலும், ஞாபகப்படுத்தப்பட்டது ப்ரக்தியட்சமாக இருக்காது. இரண்டிற்குமிடையில் அவற்றின் தீவிரத்தில் மட்டுமல்லாமல் தன்மையிலும் ஒரு வித்தியாசம் இருக்கிறது. ப்ரக்தியட்சம் பிழையில்லாமல் எவ்வாறு உள்ளதோ அவ்வாறு உள்ளது. மன உறுதியுடன் கூடிய பிரயத்தனத்தாலோ, அல்லது கற்பனையாலோ நீ ஞாபகத்தையும், ப்ரக்தியட்சத்தையும் பரஸ்பரமாக இடம் மாற்ற முடியாது. எது ப்ரக்தியட்சத்திற்கு இந்தத் தனித்துவமான தன்மையைக் கொடுக்கிறது?

**கே:** ப்ரக்தியட்சம் மெய்யானது. ஆனால் ஞாபகத்தில் வைத்திருப்பதைப் பற்றி ஒரு நிலையற்ற தன்மை உள்ளது.

**ம:** ஆமாம். ஆனால் ஏன்? ஒரு கணத்திற்கு முன்னால், ஞாபகத்தில் வைத்திருக்கப்பட்டிருப்பது ப்ரக்தியட்சம். இன்னும் ஒரு கணத்தில் ப்ரக்தியட்சம் ஞாபகரூபமாகி வைத்திருக்கப்படும். எது ப்ரக்தியட்சத்தைத் தனித்துவமானதாக்குகிறது? கண்டிப்பாக அது உன்னுடைய இருப்பது என்னும் உணர்வினால்தான். ஞாபகத்திலும், எதிர்பார்ப்பிலும் அது கவனிக்கப்படும் ஒரு மனோ நிலை என்னும் தெளிவான உணர்வு உள்ளது. ஆனால்

ப்ரக்தியட்சத்தில், இருப்பது மற்றும் பிரக்ஞை என்னும் உணர்வுதான் முதன்மையாக உள்ளது.

**கே:** ஆமாம். என்னால் புரிந்து கொள்ள முடிகிறது. பிரக்ஞைதான் ப்ரக்தியட்சத்திற்கும், ஞாபகத்தில் உள்ளதற்கும் வித்தியாசத்தை ஏற்படுத்துகிறது. ஒருவர் கடந்த காலத்தைப்பற்றியோ அல்லது எதிர்காலத்தைப் பற்றியோ சிந்திப்பார். ஆனால் தற்பொழுதில் ப்ரக்தியட்சமாக இருப்பார்.

**ம:** நீ எங்கு சென்றாலும், எப்போதும் ப்ரக்தியட்சம் என்னும் உணர்வை உன்னுடன் கொண்டுசெல்வாய். அதற்கு, நீ இடம் மற்றும் காலத்திலிருந்து சுதந்திரமானவன் என்றும், இடமும், காலமும் உனக்குள் உள்ளன, நீ அவற்றிற்குள் இல்லை என்றும் அர்த்தம். காலத்திலும், இடத்திலும் அடக்கப்பட்டுள்ள உடலுடனான உன் சுயஅடையாளம்தான் நீ அளவானவன் என்னும் உணர்வை உனக்குக் கொடுக்கிறது. மெய்யாக நீ அளவற்றவன் மற்றும் சாசுவதமானவன்.

**கே:** இந்த அளவற்ற மற்றும் சாசுவதமான என் சுயத்தை எப்படி நான் அறிவது?

**ம:** நீ அறியவிரும்பும் சுயம் இரண்டாவது சுயமா? நீ பல சுயங்களால் ஆனவனா? கண்டிப்பாக ஒரே சுயம்தான் உள்ளது. நீதான் அந்தச் சுயம். நீ எந்தச் சுயமோ அதுதான் இருக்கின்ற ஒரே சுயம். உன்னைப் பற்றிய தவறான கருத்துக்களை நீக்கு மற்றும் கைவிடு. அப்போது சுயம் அதன் முழு மகிமையோடு அங்கு இருக்கும். உன் மனம்தான் மெய்ஞானத்தைத் தடுக்கிறது.

**கே:** நான் எப்படி மனதை வெளியேற்றுவது? மனமில்லாத வாழ்க்கை மனித நிலையில் சாத்தியமா?

**ம:** மனம் என்று ஒன்று கிடையாது. கருத்துக்கள் மட்டுமே உள்ளன. அவற்றில் சில தவறானவை. தவறான கருத்துக்களைக் கைவிடு. ஏனெனில் அவை மெய்யற்றவை. அவை உன் ஸ்வரூப தரிசனத்தை மறைக்கின்றன.

**கே:** எந்தக் கருத்துக்கள் தவறு? எவை சரியானவை?

**ம:** கற்பனையாக நீ சரி என்று கருதுபவை வழக்கமாகத் தவறானவை. எவையெல்லாம் கற்பனையாகத் தவறானவை என்று கருதப்படுகின்றனவோ அவை சரியானவை.

**கே:** எல்லாவற்றையும் மறுத்தலால் ஒருவர் வாழ முடியாது!

**ம:** மறுத்தலால்மட்டுமே ஒருவர் வாழமுடியும். ஒப்புக் கொள்தல் தளை. கேள்விகேட்பதும், மறுப்பதும் அவசியம். அது எதிரான கிளர்ச்சியின் சாரம். எதிரான கிளர்ச்சி இல்லாமல் சுதந்திரம் இருக்க முடியாது.

தேடுவதற்கு இரண்டாவது அல்லது உயர்வான சுயம் என்று ஒன்று கிடையாது. நீதான் உயர்வான சுயம். உன் சுயத்தைப் பற்றிய பொய்யான கருத்துக்களை விட்டுவிடு. நீ உடலுமல்ல, அதன் ஆசைகளும், அச்சங்களுமல்ல என்றும், வினோதமான கருத்துகளை உடைய மனமுமல்ல என்றும், எந்த மாதிரியான நபராக நீ இருக்கச் சமுதாயம் உன்னை நடிக்க வற்புறுத்துகிறதோ அந்த நபருமல்ல என்றும் நம்பிக்கை மற்றும் பகுத்தறிதல் உனக்குச் சொல்லும். மெய்யற்றதை விட்டுவிடு. அப்போது மெய் அதனுடைய சக்தியினாலேயே தானாகவே பிரகடனமாகும்.

உன் சுயத்தை நீ அறிய வேண்டும் என்று சொல்கிறாய். நீதான் உன் சுயம். நீ என்னவோ அதுவாக இல்லாமல் வேறு ஒன்றாக இருக்க முடியாது. அறிதல், இருத்தலிலிருந்து தனித்ததா? நீ மனதால் எதை அறிய முடியுமோ அது மனதினுடையது, நீ அல்ல; உன்னைப் பற்றி நீ, 'நான் சத் - சித் - ஆனந்தம்' என்று மட்டும்தான் சொல்ல முடியும்.

**கே:** நான் உயிருடன் இருப்பதை ஒரு துக்கம் மிகுந்த நிலையாகப் பார்க்கிறேன்.

**ம:** நீ உயிரோடு 'இருக்க' முடியாது. ஏனெனில் நீதான் உயிரே. கற்பனையாக நீதான் என்று நினைத்திருக்கும் நபர்தான் துன்பப் படுகிறது; நீ அல்ல. அது வெறுமனே ஞாபகங்கள் மற்றும் பழக்கங்களின் ஒரு கற்றை. இந்த அறிவில் அந்தக் கற்பனையான நபரைக் கரை. பொய்யான உடல் என்னும் உணர்விற்கும், உன் மெய்யான தன்மையின் விழிப்புணர்விற்கும் இடையில் ஒரு

பள்ளம் உள்ளது. அதை நீ பிரக்ஞையாகிய கலையில் தேர்ந்துவிட்டால் சுலபமாகக் கடந்துவிடுவாய்.

**கே:** எனக்குத் தெரிந்ததெல்லாம் என்னை எனக்குத் தெரியாது என்பதுதான்.

**ம:** உன் சுயத்தை உனக்குத் தெரியாது என்று எப்படி உனக்குத் தெரியும்? நீ உன்னை முன்பே அறிந்துள்ளாய் என்று உன் நேரடியான உள்முகப் பார்வை உனக்குச் சொல்கிறது. ஏனெனில் வேறு எந்தப் பொருளின் இருப்பையும் அனுபவப்பட அதற்கு முன்பே நீ அங்கு இருக்க வேண்டும். உன் சுயத்தை உனக்குத் தெரியாது என்று நீ கற்பனை செய்கிறாய். ஏனெனில் உன் சுயத்தை நீ விவரிக்க முடியாது. 'நான் இருக்கிறேன் என்று எனக்குத் தெரியும்' என்று எப்போதும் உன்னால் சொல்ல முடியும். 'நான் இல்லை' என்பதை உண்மையற்ற வார்த்தைகள் என்று நீ மறுப்பாய். ஆனால் எதையெல்லாம் விவரிக்க முடியுமோ அது நீயாக இருக்க முடியாது. நீ என்னவோ அதை விவரிக்க முடியாது. நீ உன்னை நீயாக எந்த விதமான சுய வரையறைக்கும், சுய விவரிப்புக்கும் முயற்சி இல்லாமல் இருப்பதால் மட்டுமே அறிய முடியும். நீ உணர்ந்தறியும் அல்லது அனுமானிக்கும் எதுவும் நீ அல்ல, விழிப்புணர்வுப் புலத்தில் எது தோன்றினாலும் அது நீ அல்ல. இவ்வாறு உனக்குப் புரிந்துவிட்டால் எல்லாச் சுய அடையாளத்தையும் ஒழிக்க நீ ஆரம்பிப்பாய். உன் ஆழமான மெய்ஞானத்தை அடைய இதுதான் ஒரே வழி என்றும் அறிவாய்.

'வ்யதிரேகா' என்னும் செயல் முறையைப் பின்பற்றினால் நீ ஒரு ஏவுகணை போல உண்மையாலுமே முன்னேறுவாய். ('வ்யதிரேகா' என்பது மாறுவதில் உள்ள மாற்றமில்லாததைப் பார்ப்பது - அது மண்ணை, பானையாக ஆக்குவதற்கு முன்பும், பானையான பின்பும், பானை உடைந்த பிறகும் மண்தான் என்று பார்ப்பதைப் போன்றது.)

நீ உடல் மற்றும் மனதைப் பற்றிய பிரக்ஞையுடன் இருந்தாலும், அவை இரண்டும் நீ இல்லை என்று அறிவதே மெய்ஞானம்.

**கே:** நான் உடலோ, மனமோ அல்ல என்றால் நான் அவற்றைப் பற்றி எப்படிப் பிரக்ஞையுடன் இருக்கமுடியும்? எனக்கு அன்னியமாக உள்ள ஒன்றை நான் எப்படி உணர்ந்தறிய முடியும்?

**ம:** 'எதுவுமே நான் அல்ல' என்பது எடுத்து வைக்கும் முதல் அடி. 'எல்லாமும் நான்' என்பது இரண்டாவது. 'ஒரு உலகம் இருக்கிறது' என்னும் கருத்தில் இரண்டும் தொங்குகின்றன. இதையும் விட்டுவிட்டால் நீ என்னவோ அதுவாக, இருமையற்ற சுயமாக மிஞ்சுவாய். இங்கேயே, இப்போதே நீ அது. ஆனால் பார்வை உன் சுயத்தைப் பற்றிய மெய்யற்ற கருத்துக்களால் தடுக்கப் பட்டிருக்கிறது.

**கே:** நன்று. பிறந்ததிலிருந்து, இறக்கும் வரை நான் இருந்தேன், இருக்கிறேன், இருப்பேன். இதை நான் ஒப்புக்கொள்கிறேன். நான் இங்கு, இப்போது இருப்பதைப் பற்றிய சந்தேகம் எனக்கு இல்லை. ஆனால் அது போதாதென்று நான் காண்கிறேன். அகத்திற்கும், புறத்திற்கும் இடையேயான ஒத்திசைவால் பிறக்கும் ஆனந்தம் என் வாழ்க்கையில் இல்லை. நான் மட்டுமே இருந்து, உலகம் ஒரு உருவகம் என்றால் ஒத்திசைவில்லாமை ஏன் உள்ளது?

**ம:** நீ ஒத்திசைவில்லாமையை உருவாக்கிவிட்டு, பிறகு குறை சொல்கிறாய்! நீ ஆசையும், அச்சமும்பட்டு, உன்னை உன் உணர்ச்சிகளோடு ஒன்றாகக் கண்டால் துக்கத்தையும், தளைகளையும் உருவாக்குகிறாய். நீ உருவாக்கும்போது அன்போடும், அறிவோடும் இருந்து, உன் உருவாக்கங்களின் மேல் பற்றற்று இருந்தால் கிடைப்பது ஒத்திசைவும், அமைதியும். ஆனால் உன் மனதின் நிலைமை எதுவாக இருந்தாலும், அது எந்த விதத்தில் உன்மேல் பிரதிபலிக்கும்? உன் மனதின்மீதான உன் சுய அடையாளம்தான் உன்னை மகிழ்ச்சியாகவோ, மகிழ்ச்சியற்றோ இருக்கச் செய்கிறது. உன் மனதிற்கு நீ அடிமையாக இருப்பதற்கு எதிராகக் கிளர்ச்சி செய். உன் தளைகள் சுயமாக உருவாக்கப் பட்டவை என்று பார். பந்தம் மற்றும் திடீர் உணர்ச்சி வேறு பாட்டால் ஆன கட்டுக்களை உடை. நீ முன்பே சுதந்திரமானவன் என்று ப்ரத்தியட்சமாக அறியும் அந்த விடுதலை அடைவது என்னும் குறிக்கோளை மனதில் வைத்திரு. விடுதலை என்பது வலிமிகுந்த

முயற்சிகளால் அடையப் பெறும் நீண்ட எதிர்காலத்தில் இருக்கும் ஒன்று அல்ல, ஆனால் காலா காலமாக ஒருவருக்குச் சொந்தமானது மற்றும் உபயோகப்படுத்தக் கூடியது என்று உனக்குப் புரியும் வரை விடுதலை அடைவது என்னும் உன் குறிக்கோளை உன் மனதில் வைத்திரு. விடுதலை என்பது வெளியிலிருந்து அடைவ தல்ல. ஆனால் அது ஒரு தைரியமான சமாச்சாரம். அது நீ முன்பே சுதந்திர மானவன் என்று நம்பவும், அதன்படி செயல்படுவதற்குமான தைரியம்.

**கே:** நான் விரும்பும்படி செயல்பட்டால் துன்பப்பட வேண்டும்.

**ம:** எப்படியிருந்தாலும் நீ சுதந்திரமானவன். உன் செயலின் விளைவுகள் நீ வாழும் சமுதாயத்தையும், அதன் வழக்கங்களையும் சார்ந்தது.

**கே:** நான் பொறுப்பற்றுச் செயல்படலாம்.

**ம:** தைரியத்தோடு அறிவும், கருணையும், செயல்பாட்டில் திறமையும் வெளிப்படும். உனக்கு என்ன செய்வதென்று தெரியும். நீ செய்வது எதுவானாலும் அது எல்லோருக்கும் நல்லதாக இருக்கும்.

**கே:** என்னுடைய பல்வேறு தன்மைகள் தங்களுக்குள் சண்டை யிடுவதை நான் பார்க்கிறேன். எனக்குள் அமைதி இல்லை. சுதந்திரம் மற்றும் தைரியம், அறிவு மற்றும் கருணை ஆகியவை எங்கே உள்ளன? என் செயல்கள் நான் இருக்கும் பாழான வெளியை வெறுமனே அதிகரிக்கின்றன.

**ம:** இவையெல்லாம் உன்னை நீ ஏதோ ஒருவராக, அல்லது ஏதோ ஒன்றாக நினைத்துக் கொள்வதால்தான். நில், பார், ஆய்ந்தறி! சரியான கேள்விகளைக் கேள், சரியான முடிவுகளை எடு, அவற்றின்படி செயல்பட தைரியத்தைக் கொண்டிரு. பிறகு என்ன நடக்கிறது என்று பார். ஆரம்பத்தில் நீ எடுத்து வைக்கும் அடிகள் கூரையை உன் தலைமேல் கவிழ்க்கும். ஆனால் சீக்கிரமே குழப்பம் தெளிவாகி, அமைதியும், ஆனந்தமும் இருக்கும். உன்னைப் பற்றிப் பலவற்றை நீ அறிவாய். ஆனால் அறிபவரை நீ அறியமாட்டாய். அறிந்ததை அறிபவரான நீ யார் என்று கண்டு பிடி. உனக்குள் முழு முயற்சியோடு பார். உணர்ந்தறியப்பட்டது உணர்ந்தறிபவராக

முடியாது என்று ஞாபகம் வைத்திருக்க ஞாபகம் வைத்திரு. நீ பார்ப்பது, கேட்பது, அல்லது சிந்திப்பது எதுவானாலும், நிகழ்வது எதுவானாலும் அது நீ அல்ல, அது யாருக்கு நிகழ்கிறதோ அவர்தான் நீ. 'நான்' என்னும் உணர்விற்குள் ஆழமாகச் செல். அப்போது உலகத்தை ஒளிர்விக்கின்ற ஒளி எவ்வளவு பிரபஞ்சமயமானதோ அவ்வளவு பிரபஞ்சமயமான உணர்ந்தறியும் மையம் நீ என்று கண்டிப்பாகக் கண்டுபிடிப்பாய். பிரபஞ்சத்தில் நிகழும் அனைத்தும் மௌனமான சாட்சியான உனக்கும் நடக்கும். அதே சமயம் எது செய்யப்பட்டாலும் அது பிரபஞ்சமயமான மற்றும் தீராத சக்தியான உன்னால் செய்யப்பட்டது.

**கே:** சந்தேகமில்லாமல் ஒருவர் மௌனமான சாட்சி என்று கேட்பதற்கு மிகவும் மன நிறைவாக இருக்கிறது. பிரபஞ்ச சக்தி உள்ளது. ஆனால் ஒருவர் எப்படி வார்த்தை அறிக்கையிலிருந்து நேரடி அனுபவத்திற்கு மாறுவது? கேட்பது அறிவதாகாது.

**ம:** நீ எதையும் எளிதாக நேரடியாக, வார்த்தை வடிவமில்லாமல் அறிவதற்கு முன் அறிபவரை அறிய வேண்டும். இதுவரை நீ அறிபவர் என்று மனதைக் கருதினாய். ஆனால் அது அவ்வாறு அல்ல. மனம் பிம்பங்கள் மற்றும் கருத்துக்களால் அடைபட்டு இருக்கிறது. அவை ஞாபகத்தில் வடுக்களை ஏற்படுத்துகின்றன. ஞாபகத்தை நீ அறிவு என்று எடுத்துக் கொள்கிறாய். உண்மையான அறிவு எப்போதும் புதியதாகவும், மலர்ந்ததாகவும், எதிர்பாராத தாகவும் இருக்கும். அது அகத்திலிருந்து ஊற்றெடுக்கும். நீ என்ன என்று அறிந்தால், அறிந்தது நீயாகி விடுவாய். அறிதலுக்கும், இருத்தலுக்கும் இடையில் இடைவெளி இல்லை.

**கே:** என்னால் மனதை மனதால் மட்டுமே ஆராய முடியும்.

**ம:** எல்லாவிதத்திலும் உன் மனதை அறிய மனதை உபயோகப் படுத்து. அது சரியான வழி. அது மனதிற்கு அப்பால் செல்ல முற்றிலும் உத்தமமான தயாராகும் முறை. இருத்தல், அறிதல், மகிழ்ந்து அனுபவித்தல் ஆகியன உன்னுடையவை. முதலில் உன் சொந்த இருத்தலை அறி. இது சுலபம். ஏனெனில் 'நான்' என்னும் உணர்வு எப்போதும் உன்னுடன் இருக்கிறது. பிறகு அறிபவரிலிருந்து தனித்த

அறிபவராக உன்னைச் சந்தி. உன்னை ஒருமுறை தூய இருத்தலாக நீ அறிந்தால், விடுதலையின் பரமானந்தம் உனக்குச் சொந்தமானது.

**கே:** எந்த யோகா இது?

**ம:** அதைப் பற்றி ஏன் கவலைப் படுகிறாய்? உனக்குத் தெரிந்த உன் உடல் மற்றும் மனதின் வாழ்க்கையால் வருத்தப்படுத்தப் பட்டதால் நீ இங்கு வந்துள்ளாய். அடக்குவதாலும், ஒரு குறிக் கோளுக்காகத் திருப்புவதாலும் அவற்றை மேம்படுத்த நீ முயற்சிக் கலாம். அல்லது சுய அடையாளம் என்னும் முடிச்சை முற்றிலுமாக வெட்டிவிட்டு, உன்னை எந்த விதத்திலும் ஈடுபடுத்தாமல் நிகழும் ஏதோ ஒன்றாக உன் உடலையும், மனதையும் பார்க்கலாம்.

**கே:** கட்டுப்படுத்திக் கொள்வது, ஒழுங்காக நடந்துகொள்வது ஆகிய வழியை ராஜ யோகம் என்றும், பற்றற்று இருக்கும் வழியை ஞான யோகம் என்றும், ஒரு சிலையை வழிபடுவதை பக்தி யோகம் என்றும் நான் சொல்லலாமா?

**ம:** அது உன்னை மகிழ்விக்குமானால் அவ்வாறு சொல். வார்த்தைகள் குறிப்பிட்டுக் காண்பிக்க மட்டுமே செய்கின்றன, ஆனால் விளக்குவதில்லை. நான் போதிப்பது விடுதலைக்கு முழுமையாக புரிதல் என்னும் யோகாவின் மூலமாக புராதனமான, எளிய மற்றும் சுலபமான வழி. உன் மனதைத் தெளிவாகப் புரிந்து கொள். அப்போது அதற்கு உன்மீதுள்ள பிடிமானம் விட்டுப் போகும். மனம் தவறாகப் புரிந்து கொள்கிறது. தவறாகப் புரிந்து கொள்வது அதன் அடிப்படைத் தன்மை. சரியாகப் புரிந்துகொள்வது தான் நீ எந்தப் பெயரை அதற்குக் கொடுத்தாலும் ஒரே தீர்வு. அதுதான் பழமையான மற்றும் நவீனமான யோகா. ஏனெனில் அது மனதை அது உள்ளவாறே கையாள்கிறது.

நீ செய்யும் எதுவும் உன்னை மாற்றாது. ஏனெனில் உனக்கு எந்த மாற்றமும் தேவையில்லை. நீ உன் மனதையோ அல்லது உடலையோ மாற்றலாம். ஆனால் எப்போதும் உனக்குப் புறத்தே உள்ளவைகள்தான் மாறும். உனக்குள் அல்ல. மாறுவதற்கு ஏன் தொந்தரவுபட வேண்டும்? ஒரேயடியாக உன் உடலோ, மனமோ, விழிப்புணர்வோகூட நீ அல்ல என்று அறிந்து, விழிப்புணர்விற்கும், விழிப்புணர்வில்லாமைக்கும் அப்பால் உன் மெய்யான இயல்பில்

தனித்து ஸ்திரமாக இரு. எந்தப் பிரயத்தனமும் உன்னை அங்கு கொண்டு செல்லாது. தெளிவான புரிதல் மட்டுமே உன்னை அங்கு கொண்டு செல்லும். உன் தவறான புரிதலைத் தேடிக் கண்டுபிடித்து, அவற்றைக் கைவிடு. அவ்வளவே. தேடவும், கண்டுபிடிக்கவும் எதுவும் இல்லை. ஏனெனில் எதுவும் தொலையவில்லை. ஓய்வெடுத்துக்கொண்டு, அமைதியாக நான் என்பதன் மேல் கவனத்தைச் செலுத்து. மெய் அதற்குப் பின்னால்தான் உள்ளது. அமைதியாக இரு, மௌனமாக இரு; அப்போது அது வெளிப்படும். அல்லது சொல்லப் போனால், அது உன்னை அதற்குள்ளே எடுத்துக் கொள்ளும்.

**கே:** *முதலில் நான் என் உடலையும், மனதையும் விட்டொழிக்க வேண்டாமா?*

**ம:** உன்னால் முடியாது. ஏனெனில் அந்தக் கருத்தே உன்னை அவைகளுடன் பந்தப்படுத்தும். வெறுமனே புரிந்துகொண்டு ஒதுக்கித் தள்ளு!

**கே:** *என்னால் ஒதுக்கித் தள்ள முடியவில்லை. ஏனெனில் நான் ஒருங்கிணைந்து இல்லை.*

**ம:** நீ உன்னை முற்றிலும் ஒருங்கிணைந்தவனாகவும், உன் எண்ணமும், செயலும் முற்றிலும் ஒத்துப் போவனவாகவும் நினைத்துக் கொண்டிருந்தாலும் அது உனக்கு எப்படி உதவும்? நீ உன்னை உடலாகவோ, அல்லது மனமாகவோ தவறாக நினைப்பதிலிருந்து அது உன்னை விடுவிக்காது. நீ உடலோ, மனமோ அல்ல என்று சந்தேகமில்லாமல் பார். அவ்வளவுதான்.

**கே:** *நீங்கள் என்னை மறப்பதற்கு ஞாபகம் வைத்திருக்கச் சொல்கிறீர்கள்!*

**ம:** ஆமாம், அப்படித்தான் தோன்றுகிறது. இருப்பினும் அது சாத்தியமற்றது அல்ல. உன்னால் முடியும். அதை மனமார்ந்த ஈடுபாட்டோடு வைத்திரு. உன்னுடைய குருட்டுத்தனமான நம்பிக்கை வருங்கால உறுதிகளால் நிறைந்துள்ளது. உன் தேடுதலே கண்டுபிடித்தல். நீ தோற்கமாட்டாய்.

**கே:** நாங்கள் ஒருங்கிணைப்பில்லாமல் இருப்பதால் துன்பப் படுகிறோம்.

**ம:** நம் எண்ணங்களும், செயல்களும் ஆசைகளாலும், அச்சத்தாலும் தூண்டப்படும்வரை நாம் துன்பப்படுவோம். அவற்றின் பயனற்ற தன்மையையும், அபாயத்தையும் பார்த்தால் அவை உருவாக்கும் குழப்பங்கள் தணியும். உன்னைப் புணரமைக்க முயற்சிக்காதே. எல்லா மாற்றத்தின் பயனற்ற தன்மையை மட்டும் பார். மாறக்கூடியது மாறிக்கொண்டே இருக்கும். அதே சமயம் மாறுதல் இல்லாதது காத்துக் கொண்டிருக்கிறது. மாறக் கூடியது மாறுதல் இல்லாத மெய்யிற்கு எடுத்துச் செல்லும் என்று எதிர்பார்க் காதே. அது ஒருபோதும் நடக்க முடியாது. மாறுவது என்னும் கருத்தையே மெய்யற்றது என்று பார்த்துக் கைவிடப்படும் போதுதான் மாற்றமில்லாதது அதன் சொந்த இருத்தலுக்கு வரும்.

**கே:** நான் எங்கு சென்றாலும் மெய்யை அறிவதற்கு முன்பாக நான் முற்றிலுமாக மாற வேண்டும் என்று சொல்கிறார்கள். இந்த வேண்டுமென்றே செய்யப்படுகின்ற, சுயமாகத் திணிக்கப்பட்ட மாற்றம்தான் யோகா.

**ம:** எல்லா மாற்றமும் மனதைமட்டுமே பாதிக்கின்றன. நீ என்னவோ அதுவாக இருக்க மனதிற்கு அப்பால், உன் சொந்த ஆதாரமான இருத்தலுக்குள் செல்ல வேண்டும். நீ பின்னால் விட்டுச் செல்லும் மனம், நீ அதை நிரந்தரமாக விட்டுச் சென்றால், என்ன என்பது முக்கியமில்லை. இது சுயம் அறியாமல் சாத்தியம் இல்லை.

**கே:** எது முதலில் வருகிறது - மனதைக் கை விடுவதா அல்லது சுயம் அறிதலா?

**ம:** கண்டிப்பாகச் சுயம் அறிதல்தான் முதலில் வருகிறது. மனம் அதற்கு அப்பால் அதுவாகவே செல்ல முடியாது. அது வெடிக்க வேண்டும்.

**கே:** வெடிப்பதற்கு முன்னால் முனைப்பான தேடிக் கண்டுபிடித்தல் தேவை இல்லையா?

**ம:** வெடிக்கும் சக்தி மெய்யிலிருந்து வருகிறது. ஆனால் உன் மனம் அதற்குத் தயாராக இருக்கவேண்டும் என்று நன்கு அறிவுறுத்தப்படுகிறாய். அச்சம் எப்போதும் மற்றொரு வாய்ப்பு வரும் வரை அதைத் தாமதப்படுத்தலாம்.

**கே:** நான் எப்போதும் மற்றொரு வாய்ப்பு உள்ளதாக நினைக்கிறேன்.

**ம:** கோட்பாடு என்னும் அளவில் - ஆமாம். ஆனால் நடைமுறையில் சுயம் அறிதலுக்கு அவசியமான எல்லாக் காரணிகளும் இருக்கும் ஒரு சூழ்நிலை உருவாக வேண்டும். நான் உன்னை மனம் தளரச் செய்யவில்லை. 'நான்' என்னும் மெய்யைப் பற்றிய விழிப்புணர்வின் மேல் நீ தொடர்ந்து கொண்டிருக்கும் கவனம் மற்றொரு வாய்ப்பை உருவாக்கும். ஏனெனில் மனோபாவம் வாய்ப்புகளை ஈர்க்கும். நீ அறிந்ததெல்லாம் இரண்டாம் பட்சமானது. 'நான்' என்பது மட்டுமே ப்ரக்தியட்சமாக, புதியதாக, மலர்ச்சியாக இருப்பது. அதற்கு அத்தாட்சி தேவையில்லை. அதோடு தங்கி இரு.



பள்ளம் உள்ளது. அதை நீ பிரக்ஞையாகிய கலையில் தேர்ந்துவிட்டால் சுலபமாகக் கடந்துவிடுவாய்.

**கே:** எனக்குத் தெரிந்ததெல்லாம் என்னை எனக்குத் தெரியாது என்பதுதான்.

**ம:** உன் சுயத்தை உனக்குத் தெரியாது என்று எப்படி உனக்குத் தெரியும்? நீ உன்னை முன்பே அறிந்துள்ளாய் என்று உன் நேரடியான உள்முகப் பார்வை உனக்குச் சொல்கிறது. ஏனெனில் வேறு எந்தப் பொருளின் இருப்பையும் அனுபவப்பட அதற்கு முன்பே நீ அங்கு இருக்க வேண்டும். உன் சுயத்தை உனக்குத் தெரியாது என்று நீ கற்பனை செய்கிறாய். ஏனெனில் உன் சுயத்தை நீ விவரிக்க முடியாது. 'நான் இருக்கிறேன் என்று எனக்குத் தெரியும்' என்று எப்போதும் உன்னால் சொல்ல முடியும். 'நான் இல்லை' என்பதை உண்மையற்ற வார்த்தைகள் என்று நீ மறுப்பாய். ஆனால் எதையெல்லாம் விவரிக்க முடியுமோ அது நீயாக இருக்க முடியாது. நீ என்னவோ அதை விவரிக்க முடியாது. நீ உன்னை நீயாக எந்த விதமான சுய வரையறைக்கும், சுய விவரிப்புக்கும் முயற்சி இல்லாமல் இருப்பதால் மட்டுமே அறிய முடியும். நீ உணர்ந்தறியும் அல்லது அனுமானிக்கும் எதுவும் நீ அல்ல, விழிப்புணர்வுப் புலத்தில் எது தோன்றினாலும் அது நீ அல்ல. இவ்வாறு உனக்குப் புரிந்துவிட்டால் எல்லாச் சுய அடையாளத்தையும் ஒழிக்க நீ ஆரம்பிப்பாய். உன் ஆழமான மெய்ஞானத்தை அடைய இதுதான் ஒரே வழி என்றும் அறிவாய்.

'வ்யதிரேகா' என்னும் செயல் முறையைப் பின்பற்றினால் நீ ஒரு ஏவுகணை போல உண்மையாலுமே முன்னேறுவாய். ('வ்யதிரேகா' என்பது மாறுவதில் உள்ள மாற்றமில்லாததைப் பார்ப்பது - அது மண்ணை, பானையாக ஆக்குவதற்கு முன்பும், பானையான பின்பும், பானை உடைந்த பிறகும் மண்தான் என்று பார்ப்பதைப் போன்றது.)

நீ உடல் மற்றும் மனதைப் பற்றிய பிரக்ஞையுடன் இருந்தாலும், அவை இரண்டும் நீ இல்லை என்று அறிவதே மெய்ஞானம்.

**கே:** நான் உடலோ, மனமோ அல்ல என்றால் நான் அவற்றைப் பற்றி எப்படிப் பிரக்ஞையுடன் இருக்கமுடியும்? எனக்கு அன்னியமாக உள்ள ஒன்றை நான் எப்படி உணர்ந்தறிய முடியும்?

**ம:** 'எதுவுமே நான் அல்ல' என்பது எடுத்து வைக்கும் முதல் அடி. 'எல்லாமும் நான்' என்பது இரண்டாவது. 'ஒரு உலகம் இருக்கிறது' என்னும் கருத்தில் இரண்டும் தொங்குகின்றன. இதையும் விட்டுவிட்டால் நீ என்னவோ அதுவாக, இருமையற்ற சுயமாக மிஞ்சுவாய். இங்கேயே, இப்போதே நீ அது. ஆனால் பார்வை உன் சுயத்தைப் பற்றிய மெய்யற்ற கருத்துக்களால் தடுக்கப் பட்டிருக்கிறது.

**கே:** நன்று. பிறந்ததிலிருந்து, இறக்கும் வரை நான் இருந்தேன், இருக்கிறேன், இருப்பேன். இதை நான் ஒப்புக்கொள்கிறேன். நான் இங்கு, இப்போது இருப்பதைப் பற்றிய சந்தேகம் எனக்கு இல்லை. ஆனால் அது போதாதென்று நான் காண்கிறேன். அகத்திற்கும், புறத்திற்கும் இடையேயான ஒத்திசைவால் பிறக்கும் ஆனந்தம் என் வாழ்க்கையில் இல்லை. நான் மட்டுமே இருந்து, உலகம் ஒரு உருவகம் என்றால் ஒத்திசைவில்லாமை ஏன் உள்ளது?

**ம:** நீ ஒத்திசைவில்லாமையை உருவாக்கிவிட்டு, பிறகு குறை சொல்கிறாய்! நீ ஆசையும், அச்சமும்பட்டு, உன்னை உன் உணர்ச்சிகளோடு ஒன்றாகக் கண்டால் துக்கத்தையும், தளைகளையும் உருவாக்குகிறாய். நீ உருவாக்கும்போது அன்போடும், அறிவோடும் இருந்து, உன் உருவாக்கங்களின் மேல் பற்றற்று இருந்தால் கிடைப்பது ஒத்திசைவும், அமைதியும். ஆனால் உன் மனதின் நிலைமை எதுவாக இருந்தாலும், அது எந்த விதத்தில் உன்மேல் பிரதிபலிக்கும்? உன் மனதின்மீதான உன் சுய அடையாளம்தான் உன்னை மகிழ்ச்சியாகவோ, மகிழ்ச்சியற்றோ இருக்கச் செய்கிறது. உன் மனதிற்கு நீ அடிமையாக இருப்பதற்கு எதிராகக் கிளர்ச்சி செய். உன் தளைகள் சுயமாக உருவாக்கப் பட்டவை என்று பார். பந்தம் மற்றும் திடீர் உணர்ச்சி வேறு பாட்டால் ஆன கட்டுக்களை உடை. நீ முன்பே சுதந்திரமானவன் என்று ப்ரத்தியட்சமாக அறியும் அந்த விடுதலை அடைவது என்னும் குறிக்கோளை மனதில் வைத்திரு. விடுதலை என்பது வலிமிகுந்த

முயற்சிகளால் அடையப் பெறும் நீண்ட எதிர்காலத்தில் இருக்கும் ஒன்று அல்ல, ஆனால் காலா காலமாக ஒருவருக்குச் சொந்தமானது மற்றும் உபயோகப்படுத்தக் கூடியது என்று உனக்குப் புரியும் வரை விடுதலை அடைவது என்னும் உன் குறிக்கோளை உன் மனதில் வைத்திரு. விடுதலை என்பது வெளியிலிருந்து அடைவ தல்ல. ஆனால் அது ஒரு தைரியமான சமாச்சாரம். அது நீ முன்பே சுதந்திர மானவன் என்று நம்பவும், அதன்படி செயல்படுவதற்குமான தைரியம்.

**கே:** நான் விரும்பும்படி செயல்பட்டால் துன்பப்பட வேண்டும்.

**ம:** எப்படியிருந்தாலும் நீ சுதந்திரமானவன். உன் செயலின் விளைவுகள் நீ வாழும் சமுதாயத்தையும், அதன் வழக்கங்களையும் சார்ந்தது.

**கே:** நான் பொறுப்பற்றுச் செயல்படலாம்.

**ம:** தைரியத்தோடு அறிவும், கருணையும், செயல்பாட்டில் திறமையும் வெளிப்படும். உனக்கு என்ன செய்வதென்று தெரியும். நீ செய்வது எதுவானாலும் அது எல்லோருக்கும் நல்லதாக இருக்கும்.

**கே:** என்னுடைய பல்வேறு தன்மைகள் தங்களுக்குள் சண்டை யிடுவதை நான் பார்க்கிறேன். எனக்குள் அமைதி இல்லை. சுதந்திரம் மற்றும் தைரியம், அறிவு மற்றும் கருணை ஆகியவை எங்கே உள்ளன? என் செயல்கள் நான் இருக்கும் பாழான வெளியை வெறுமனே அதிகரிக்கின்றன.

**ம:** இவையெல்லாம் உன்னை நீ ஏதோ ஒருவராக, அல்லது ஏதோ ஒன்றாக நினைத்துக் கொள்வதால்தான். நில், பார், ஆய்ந்தறி! சரியான கேள்விகளைக் கேள், சரியான முடிவுகளை எடு, அவற்றின்படி செயல்பட தைரியத்தைக் கொண்டிரு. பிறகு என்ன நடக்கிறது என்று பார். ஆரம்பத்தில் நீ எடுத்து வைக்கும் அடிகள் கூரையை உன் தலைமேல் கவிழ்க்கும். ஆனால் சீக்கிரமே குழப்பம் தெளிவாகி, அமைதியும், ஆனந்தமும் இருக்கும். உன்னைப் பற்றிப் பலவற்றை நீ அறிவாய். ஆனால் அறிபவரை நீ அறியமாட்டாய். அறிந்ததை அறிபவரான நீ யார் என்று கண்டு பிடி. உனக்குள் முழு முயற்சியோடு பார். உணர்ந்தறியப்பட்டது உணர்ந்தறிபவராக

முடியாது என்று ஞாபகம் வைத்திருக்க ஞாபகம் வைத்திரு. நீ பார்ப்பது, கேட்பது, அல்லது சிந்திப்பது எதுவானாலும், நிகழ்வது எதுவானாலும் அது நீ அல்ல, அது யாருக்கு நிகழ்கிறதோ அவர்தான் நீ. 'நான்' என்னும் உணர்விற்குள் ஆழமாகச் செல். அப்போது உலகத்தை ஒளிர்விக்கின்ற ஒளி எவ்வளவு பிரபஞ்சமயமானதோ அவ்வளவு பிரபஞ்சமயமான உணர்ந்தறியும் மையம் நீ என்று கண்டிப்பாகக் கண்டுபிடிப்பாய். பிரபஞ்சத்தில் நிகழும் அனைத்தும் மௌனமான சாட்சியான உனக்கும் நடக்கும். அதே சமயம் எது செய்யப்பட்டாலும் அது பிரபஞ்சமயமான மற்றும் தீராத சக்தியான உன்னால் செய்யப்பட்டது.

**கே:** சந்தேகமில்லாமல் ஒருவர் மௌனமான சாட்சி என்று கேட்பதற்கு மிகவும் மன நிறைவாக இருக்கிறது. பிரபஞ்ச சக்தி உள்ளது. ஆனால் ஒருவர் எப்படி வார்த்தை அறிக்கையிலிருந்து நேரடி அனுபவத்திற்கு மாறுவது? கேட்பது அறிவதாகாது.

**ம:** நீ எதையும் எளிதாக நேரடியாக, வார்த்தை வடிவமில்லாமல் அறிவதற்கு முன் அறிபவரை அறிய வேண்டும். இதுவரை நீ அறிபவர் என்று மனதைக் கருதினாய். ஆனால் அது அவ்வாறு அல்ல. மனம் பிம்பங்கள் மற்றும் கருத்துக்களால் அடைபட்டு இருக்கிறது. அவை ஞாபகத்தில் வடுக்களை ஏற்படுத்துகின்றன. ஞாபகத்தை நீ அறிவு என்று எடுத்துக் கொள்கிறாய். உண்மையான அறிவு எப்போதும் புதியதாகவும், மலர்ந்ததாகவும், எதிர்பாராத தாகவும் இருக்கும். அது அகத்திலிருந்து ஊற்றெடுக்கும். நீ என்ன என்று அறிந்தால், அறிந்தது நீயாகி விடுவாய். அறிதலுக்கும், இருத்தலுக்கும் இடையில் இடைவெளி இல்லை.

**கே:** என்னால் மனதை மனதால் மட்டுமே ஆராய முடியும்.

**ம:** எல்லாவிதத்திலும் உன் மனதை அறிய மனதை உபயோகப் படுத்து. அது சரியான வழி. அது மனதிற்கு அப்பால் செல்ல முற்றிலும் உத்தமமான தயாராகும் முறை. இருத்தல், அறிதல், மகிழ்ந்து அனுபவித்தல் ஆகியன உன்னுடையவை. முதலில் உன் சொந்த இருத்தலை அறி. இது சுலபம். ஏனெனில் 'நான்' என்னும் உணர்வு எப்போதும் உன்னுடன் இருக்கிறது. பிறகு அறிபவரிலிருந்து தனித்த

அறிபவராக உன்னைச் சந்தி. உன்னை ஒருமுறை தூய இருத்தலாக நீ அறிந்தால், விடுதலையின் பரமானந்தம் உனக்குச் சொந்தமானது.

**கே:** எந்த யோகா இது?

**ம:** அதைப் பற்றி ஏன் கவலைப் படுகிறாய்? உனக்குத் தெரிந்த உன் உடல் மற்றும் மனதின் வாழ்க்கையால் வருத்தப்படுத்தப் பட்டதால் நீ இங்கு வந்துள்ளாய். அடக்குவதாலும், ஒரு குறிக் கோளுக்காகத் திருப்புவதாலும் அவற்றை மேம்படுத்த நீ முயற்சிக் கலாம். அல்லது சுய அடையாளம் என்னும் முடிச்சை முற்றிலுமாக வெட்டிவிட்டு, உன்னை எந்த விதத்திலும் ஈடுபடுத்தாமல் நிகழும் ஏதோ ஒன்றாக உன் உடலையும், மனதையும் பார்க்கலாம்.

**கே:** கட்டுப்படுத்திக் கொள்வது, ஒழுங்காக நடந்துகொள்வது ஆகிய வழியை ராஜ யோகம் என்றும், பற்றற்று இருக்கும் வழியை ஞான யோகம் என்றும், ஒரு சிலையை வழிபடுவதை பக்தி யோகம் என்றும் நான் சொல்லலாமா?

**ம:** அது உன்னை மகிழ்விக்குமானால் அவ்வாறு சொல். வார்த்தைகள் குறிப்பிட்டுக் காண்பிக்க மட்டுமே செய்கின்றன, ஆனால் விளக்குவதில்லை. நான் போதிப்பது விடுதலைக்கு முழுமையாக புரிதல் என்னும் யோகாவின் மூலமாக புராதனமான, எளிய மற்றும் சுலபமான வழி. உன் மனதைத் தெளிவாகப் புரிந்து கொள். அப்போது அதற்கு உன்மீதுள்ள பிடிமானம் விட்டுப் போகும். மனம் தவறாகப் புரிந்து கொள்கிறது. தவறாகப் புரிந்து கொள்வது அதன் அடிப்படைத் தன்மை. சரியாகப் புரிந்துகொள்வது தான் நீ எந்தப் பெயரை அதற்குக் கொடுத்தாலும் ஒரே தீர்வு. அதுதான் பழமையான மற்றும் நவீனமான யோகா. ஏனெனில் அது மனதை அது உள்ளவாறே கையாள்கிறது.

நீ செய்யும் எதுவும் உன்னை மாற்றாது. ஏனெனில் உனக்கு எந்த மாற்றமும் தேவையில்லை. நீ உன் மனதையோ அல்லது உடலையோ மாற்றலாம். ஆனால் எப்போதும் உனக்குப் புறத்தே உள்ளவைகள்தான் மாறும். உனக்குள் அல்ல. மாறுவதற்கு ஏன் தொந்தரவுபட வேண்டும்? ஒரேயடியாக உன் உடலோ, மனமோ, விழிப்புணர்வோகூட நீ அல்ல என்று அறிந்து, விழிப்புணர்விற்கும், விழிப்புணர்வில்லாமைக்கும் அப்பால் உன் மெய்யான இயல்பில்

தனித்து ஸ்திரமாக இரு. எந்தப் பிரயத்தனமும் உன்னை அங்கு கொண்டு செல்லாது. தெளிவான புரிதல் மட்டுமே உன்னை அங்கு கொண்டு செல்லும். உன் தவறான புரிதலைத் தேடிக் கண்டுபிடித்து, அவற்றைக் கைவிடு. அவ்வளவே. தேடவும், கண்டுபிடிக்கவும் எதுவும் இல்லை. ஏனெனில் எதுவும் தொலையவில்லை. ஓய்வெடுத்துக்கொண்டு, அமைதியாக நான் என்பதன் மேல் கவனத்தைச் செலுத்து. மெய் அதற்குப் பின்னால்தான் உள்ளது. அமைதியாக இரு, மௌனமாக இரு; அப்போது அது வெளிப்படும். அல்லது சொல்லப் போனால், அது உன்னை அதற்குள்ளே எடுத்துக் கொள்ளும்.

**கே:** முதலில் நான் என் உடலையும், மனதையும் விட்டொழிக்க வேண்டாமா?

**ம:** உன்னால் முடியாது. ஏனெனில் அந்தக் கருத்தே உன்னை அவைகளுடன் பந்தப்படுத்தும். வெறுமனே புரிந்துகொண்டு ஒதுக்கித் தள்ளு!

**கே:** என்னால் ஒதுக்கித் தள்ள முடியவில்லை. ஏனெனில் நான் ஒருங்கிணைந்து இல்லை.

**ம:** நீ உன்னை முற்றிலும் ஒருங்கிணைந்தவனாகவும், உன் எண்ணமும், செயலும் முற்றிலும் ஒத்துப் போவனவாகவும் நினைத்துக் கொண்டிருந்தாலும் அது உனக்கு எப்படி உதவும்? நீ உன்னை உடலாகவோ, அல்லது மனமாகவோ தவறாக நினைப்ப திலிருந்து அது உன்னை விடுவிக்காது. நீ உடலோ, மனமோ அல்ல என்று சந்தேகமில்லாமல் பார். அவ்வளவுதான்.

**கே:** நீங்கள் என்னை மறப்பதற்கு ஞாபகம் வைத்திருக்கச் சொல்கிறீர்கள்!

**ம:** ஆமாம், அப்படித்தான் தோன்றுகிறது. இருப்பினும் அது சாத்தியமற்றது அல்ல. உன்னால் முடியும். அதை மனமார்ந்த ஈடுபாட்டோடு வைத்திரு. உன்னுடைய குருட்டுத்தனமான நம்பிக்கை வருங்கால உறுதிகளால் நிறைந்துள்ளது. உன் தேடுதலே கண்டுபிடித்தல். நீ தோற்கமாட்டாய்.

**கே:** நாங்கள் ஒருங்கிணைப்பில்லாமல் இருப்பதால் துன்பப் படுகிறோம்.

**ம:** நம் எண்ணங்களும், செயல்களும் ஆசைகளாலும், அச்சத்தாலும் தூண்டப்படும்வரை நாம் துன்பப்படுவோம். அவற்றின் பயனற்ற தன்மையையும், அபாயத்தையும் பார்த்தால் அவை உருவாக்கும் குழப்பங்கள் தணியும். உன்னைப் புணரமைக்க முயற்சிக்காதே. எல்லா மாற்றத்தின் பயனற்ற தன்மையை மட்டும் பார். மாறக்கூடியது மாறிக்கொண்டே இருக்கும். அதே சமயம் மாறுதல் இல்லாதது காத்துக் கொண்டிருக்கிறது. மாறக் கூடியது மாறுதல் இல்லாத மெய்யிற்கு எடுத்துச் செல்லும் என்று எதிர்பார்க் காதே. அது ஒருபோதும் நடக்க முடியாது. மாறுவது என்னும் கருத்தையே மெய்யற்றது என்று பார்த்துக் கைவிடப்படும் போதுதான் மாற்றமில்லாதது அதன் சொந்த இருத்தலுக்கு வரும்.

**கே:** நான் எங்கு சென்றாலும் மெய்யை அறிவதற்கு முன்பாக நான் முற்றிலுமாக மாற வேண்டும் என்று சொல்கிறார்கள். இந்த வேண்டுமென்றே செய்யப்படுகின்ற, சுயமாகத் திணிக்கப்பட்ட மாற்றம்தான் யோகா.

**ம:** எல்லா மாற்றமும் மனதைமட்டுமே பாதிக்கின்றன. நீ என்னவோ அதுவாக இருக்க மனதிற்கு அப்பால், உன் சொந்த ஆதாரமான இருத்தலுக்குள் செல்ல வேண்டும். நீ பின்னால் விட்டுச் செல்லும் மனம், நீ அதை நிரந்தரமாக விட்டுச் சென்றால், என்ன என்பது முக்கியமில்லை. இது சுயம் அறியாமல் சாத்தியம் இல்லை.

**கே:** எது முதலில் வருகிறது - மனதைக் கை விடுவதா அல்லது சுயம் அறிதலா?

**ம:** கண்டிப்பாகச் சுயம் அறிதல்தான் முதலில் வருகிறது. மனம் அதற்கு அப்பால் அதுவாகவே செல்ல முடியாது. அது வெடிக்க வேண்டும்.

**கே:** வெடிப்பதற்கு முன்னால் முனைப்பான தேடிக் கண்டுபிடித்தல் தேவை இல்லையா?

**ம:** வெடிக்கும் சக்தி மெய்யிலிருந்து வருகிறது. ஆனால் உன் மனம் அதற்குத் தயாராக இருக்கவேண்டும் என்று நன்கு அறிவுறுத்தப்படுகிறாய். அச்சம் எப்போதும் மற்றொரு வாய்ப்பு வரும் வரை அதைத் தாமதப்படுத்தலாம்.

**கே:** நான் எப்போதும் மற்றொரு வாய்ப்பு உள்ளதாக நினைக்கிறேன்.

**ம:** கோட்பாடு என்னும் அளவில் - ஆமாம். ஆனால் நடைமுறையில் சுயம் அறிதலுக்கு அவசியமான எல்லாக் காரணிகளும் இருக்கும் ஒரு சூழ்நிலை உருவாக வேண்டும். நான் உன்னை மனம் தளரச் செய்யவில்லை. 'நான்' என்னும் மெய்யைப் பற்றிய விழிப்புணர்வின் மேல் நீ தொடர்ந்து கொண்டிருக்கும் கவனம் மற்றொரு வாய்ப்பை உருவாக்கும். ஏனெனில் மனோபாவம் வாய்ப்புகளை ஈர்க்கும். நீ அறிந்ததெல்லாம் இரண்டாம் பட்சமானது. 'நான்' என்பது மட்டுமே ப்ரக்தியட்சமாக, புதியதாக, மலர்ச்சியாக இருப்பது. அதற்கு அத்தாட்சி தேவையில்லை. அதோடு தங்கி இரு.



# 100. புரிதல் விடுதலைக்குக் கொண்டு செல்கிறது

**கேட்பவர்:** உலகின் பல நாடுகளில் விசாரணை அதிகாரிகள் அவர்களுடைய குற்றவாளிகளிடமிருந்து வாக்கு மூலம் வாங்கவும். தேவைப் பட்டால் அவர்களுடைய மனோபாவத்தை மாற்றவும் சில வழிமுறைகளைப் பின்பற்றுகிறார்கள். உடல் ரீதியாக மற்றும் மனோ ரீதியாக அவசியமானவற்றைக் கொடுக்காமலும், வற்புறுத்தல்களாலும் பழைய நபர்த்தன்மை உடைக்கப்பட்டு, ஒரு புது நபர்த்தன்மை அந்த இடத்தில் நிலை நிறுத்தப்படுகிறது. விசாரணைக்கு உட்படும் மனிதன் பல முறை திரும்பத் திரும்ப, அவன் தன் நாட்டின் எதிரி, தன் நாட்டைக் காட்டிக் கொடுப்பவன் என்று சொல்லப்படுவதைக் கேட்பான். அவனுக்குள் ஏதோ ஒன்று உடையும் ஒரு நாள் வரும். அப்போது அவன் முழு நம்பிக்கையுடன் தான் ஒரு தேசத் துரோகி, ஒரு கிளர்ச்சியாளன், முற்றிலும் வெறுக்கத்தக்கவன், நேரடியான தண்டனைக்குத் தகுதியானவன் என்று உணர ஆரம்பிப்பான். இந்தச் செயல்பாடு 'மூளைச் சலவை' என்று அறியப்படுகிறது.

மதப் பயிற்சிகள் மற்றும் யோகப் பயிற்சிகள் 'மூளைச் சலவை' போன்றவையே என்று எனக்குத் தோன்றுகிறது. அவற்றில் உடல் மற்றும் மன இழப்பு, தனிமையான கட்டுக் காவல், ஒரு வலிமையான பாவம் செய்த உணர்வு, மனக் கசப்பு, பிராயச் சித்தத்தாலும், மதம் மாறுவதாலும் தப்பிப்பதற்கான ஆசை, தன்னைப் பற்றிய ஒரு புது பிம்பத்தை எடுத்துக் கொள்வது மற்றும் அந்த பிம்பத்தை உருவகப்படுத்துவது, திரும்பத் திரும்ப ஒரே மாதிரியாக 'கடவுள் நல்லவர்; குரு அறிவார்; நம்பிக்கை என்னைக் காப்பாற்றும்' என்னும் சூத்திரங்கள் சொல்லப்படும். யோகப் பயிற்சிகள் மற்றும் மதப் பயிற்சிகள் என்று சொல்லப்

படுபவைகளிலும் அதே இயக்க முறை செயல்படுகிறது. மனம் மற்ற கருத்துக்களை விலக்கிவிட்டு, ஒரு குறிப்பிட்ட கருத்தின்மேல் ஒருமுகப்படுத்தப்படச் செய்யப்படுகிறது. ஒருமுகப்படுத்துதல் கடுமையான ஒழுக்க நெறிகளாலும், வலிமிகுந்த விரதத்துவத் தாலும் உறுதிப்படுத்தப்படுகிறது. வாழ்க்கையின் அதிகமான விலையும், மகிழ்ச்சியும் கொடுக்கப்படுகிறது. ஆகையால் ஒருவர் அதற்குப் பெறும் பரிசு மிகவும் முக்கியமாகிறது. இந்த முன்பே ஏற்பாடு செய்யப் பட்ட மாற்றம், வெளிப்படையானதோ அல்லது மறைமுகமானதோ, மதம் சம்பந்தப்பட்டதோ அல்லது அரசியல் சம்பந்தப்பட்டதோ, ஒழுக்க நெறி சார்ந்ததோ அல்லது சமுதாயம் சார்ந்ததோ, அது நாணயமானதாகவும், நீடித்திருப்பதாகவும் தோன்றலாம். இருப்பினும், அதைப் பற்றி ஒரு செயற்கைத் தன்மை இருக்கிறது.

**மஹராஜ்:** நீ சொல்வது மிகவும் சரி. பல தடைகளைக் கடந்து போகும்போது மனம் திரிபுற்று, செயலிழந்து போகிறது. அதன் நிலைமை நிலையற்றதாகிறது; அது எதைச் செய்தாலும், ஒரு ஆழமான கட்டுப்பட்டதில் முடியும்.

**கே:** பிறகு சாதனா ஏன் பரிந்துரைக்கப்படுகிறது?

**ம:** நீ மிக அதிகமான முயற்சி செய்யவில்லை என்றால் முயற்சி உன்னை எங்கும் கொண்டு செல்லாது என்று நீ நம்ப மாட்டாய். சுயம் மிகவும் தன்னம்பிக்கையுடையது - அது முற்றிலும் ஊக்கம் கெட்டால் ஒழிய கை விடாது. வெறும் வாய்வார்த்தையாலான திட நம்பிக்கை மட்டும் போதாது. கடும் நிஜங்கள் மட்டுமே சுய பிம்பத்தின் ஒன்றுமில்லாத தன்மையைக் காண்பிக்க முடியும்.

**கே:** மூளைச் சலவை செய்பவர் என்னைப் பைத்தியம் பிடிக்கச் செய்கிறார். குரு என்னை மனத் தெளிவுள்ளவனாக்குகிறார். மாற்றும் செயல் ஒரே மாதிரியானது. இருப்பினும் நோக்கமும், காரணமும் முற்றிலும் வெவ்வேறானவை. ஒற்றுமைகள் வெறும் வார்த்தைகளால் ஆனவை.

**ம:** துன்பப்படுவதற்கு வேண்டுவதும், வற்புறுத்துவதும் வன்முறையை அவற்றுள் கொண்டிருக்கின்றன. வன்முறையின் பலன் இனிப்பாக இருக்காது.

சில வாழ்க்கைச் சூழ்நிலைகள் தவிர்க்கமுடியாமல் வலி மிகுந்தவை. அவற்றை நீ ஏற்றுக்கொண்டு மேற்கொண்டு பயணிக்க வேண்டும். நீ வேண்டுமென்றோ, அல்லது அஜாக்கிரதையினாலோ உருவாக்கிய மோசமான சூழ்நிலைகளும் உள்ளன. அவற்றிலிருந்தும் நீ பாடங்களைக் கற்க வேண்டும். அதனால் அவற்றைத் திரும்பச் செய்யாமல் இருக்கும் கலையைக் கற்றுக் கொள்ள வேண்டும்.

**கே:** துக்கத்தைத் தோற்கடிக்கக் கற்றுக் கொள்ள நாம் துன்பப்பட வேண்டும்போல் இருக்கிறது.

**ம:** துக்கம் என்றால் துக்கம்தான். அதை அனுபவித்துத்தான் ஆக வேண்டும். துக்கத்தைத் தோற்கடிப்பது என்று ஒன்று இல்லை. அதற்குப் பயிற்சி தேவையில்லை. எதிர்காலத்திற்காகப் பயிற்சி எடுப்பது, அதற்கான மனப்பாங்கை வளர்த்துக் கொள்வது ஆகியவை அச்சத்தின் ஒரு அறிகுறி.

**கே:** ஒருமுறை எனக்கு துக்கத்தை எப்படி எதிர்கொள்வது என்று அறிந்துவிட்டால் நான் அதிலிருந்து விடுபட்டுவிடுவேன். துக்கத்தைப் பற்றி எனக்குப் பயமில்லை. ஆகையால் நான் மகிழ்ச்சி அடைகிறேன். இதுதான் கைதிக்கு நடக்கிறது. அவன் தன் தண்டனையைச் சரியானதென்றும், முறையானதென்றும் ஒப்புக் கொண்டு, சிறை அதிகாரிகளிடமும், அரசாங்கத்திடமும் ஒழுங்காக நடந்து கொள்வான். எல்லா மதங்களும் ஒப்புக் கொள்வதையும், சரணாகதியையும்தான் போதிக்கின்றன. நாம் குற்றம் புரிந்தவர்கள் என்று ஒப்புக் கொள்ளவும், உலகில் உள்ள எல்லாத் தீமைகளுக்கும் நாம்தான் பொறுப்பு என்று உணரவும், அவற்றிற்கு ஒரே காரணம் நாம்தான் என்று சுட்டிக் காட்டவும் நாம் ஊக்குவிக்கப் படுகிறோம். என் பிரச்சனை என்னவென்றால், சாதனாவில் ஒருவர் உடல்ரீதியாக அடக்கப்படவில்லை என்பதைத் தவிர மூளைச் சலவைக்கும், சாதனாவிற்கும் அதிக வித்தியாசத்தை என்னால் பார்க்க முடியவில்லை. இரண்டிலும் கட்டாயமான அறிவுறுத்தல் இருக்கிறது.

**ம:** நீ சொன்னதைப் போல ஒற்றுமைகள் மேலோட்டமானவை. நீ அதற்காக அலுத்துக் கொள்ள வேண்டியதில்லை.

**கே:** ஒற்றுமைகள் மேலோட்டமானவை அல்ல ஐயா. மனிதன் ஒரு சிக்கலானவன். ஒரே நேரத்தில் குற்றம் சுமத்துபவனாகவும், குற்றவாளியாகவும், நீதிபதியாகவும், சிறை அலுவலராகவும், தூக்குத் தண்டனையை நிறைவேற்றுபவராகவும் இருக்கிறான். ஒரு தானாகச் செய்யும் சாதனாவில் தானாகச் செய்வது என்பது அதிக மில்லை. ஒருவருடைய அறிவின் நிலைக்கும், கட்டுப்பாட்டிற்கும் அப்பால் உள்ள சக்திகளால் ஒருவர் இயக்கப்படுகிறார். யோகா போன்ற வலிமிகுந்த, நீண்ட முயற்சிகளால் அல்லாமல் என் உடல் மற்றும் மனதைக் குறைவாகத்தான் மாற்றமுடியும். நான் கேட்பதெல்லாம்: யோகா வன்முறையைக் குறிக்கிறது என்னும் என் கருத்தை மஹராஜ் ஒப்புக் கொள்கிறாரா?

**ம:** நீ சொன்னது போல யோகா என்பது வன்முறைதான். நான் ஒருபோதும் வன்முறையை எந்த வடிவத்திலும் ஆதரித்ததில்லை. என் வழி முற்றிலும் அஹிம்சையானது. நான் சொல்வதை மிகச் சரியாகச் சொல்கிறேன்: அது முற்றிலும் அஹிம்சையானது. நீயே அது என்ன என்று கண்டுபிடி. நான், 'என் வழி அஹிம்சை.' என்று மட்டும்தான் சொல்கிறேன்.

**கே:** நான் வார்த்தைகளைத் தவறாக உபயோகிக்கவில்லை. ஒரு குரு என் வாழ்நாள் முழுவதும் என்னைத் தினசரி பதினாறு மணி நேரம் தியானம் செய்யச் சொன்னால் என்மீதான உச்சமான வன்முறையில்லாமல் அதை நான் செய்யமுடியாது. அம்மாதிரியான ஒரு குரு சரியானவரா அல்லது தவறானவரா?

**ம:** யாரும் உன்னை ஒரு நாளைக்குப் பதினாறு மணி நேரம் தியானம் செய்யச் சொல்ல மாட்டார்கள், நீ அவ்வாறு செய்யும்படி உணர்ந்தால் ஒழிய. அது 'உன்னோடு தங்கி இரு; மற்றவர்களில் உன்னைத் தொலைத்துவிடாதே' என்று சொல்லும் ஒரு வழி. குரு காத்திருப்பார். ஆனால் மனம் பொறுமையற்றது.

மனம்தான் வன்முறையானது, குரு அல்ல. அதுவே அதன் சொந்த வன்முறையைப் பார்த்துப் பயப்படும். மனதோடு தொடர்புடையது எதுவோ அது சார்ந்திருப்பது. அதைத் தனித்ததாகப் பார்ப்பது ஒரு தவறு.

**கே:** நான் செயலற்று இருந்தால் எதுவும் நடக்காது. நான் செயல்பட்டால் வன்முறையோடு இருக்க வேண்டும். செயல் படாமலோ, அல்லது வன்முறை இல்லாமலோ எந்த ஒன்றை நான் செய்வது?

**ம:** வன்முறையானதோ அல்லது செயல்படாததோ அல்லாத, இருப்பினும் மிக உயர்வான செயல்விளைவுடைய ஒரு வழி உள்ளது. வெறுமனே உன்னை உள்ளபடியே பார். உன்னை உள்ள படியே காண். உன்னை உள்ளபடியே ஏற்றுக்கொள். நீ என்னவோ அதற்குள் ஆழமாகச் செல். வன்முறையும், வன்முறையில் லாமையும் மற்றவர்களின்மேல் நீ கொண்டுள்ள உன் மனப்பாங்கைத்தான் விவரிக்கின்றன; சுயத்திற்கு அதனோடு வன்முறையானதோ அல்லது வன்முறையற்றதோ இல்லை. அது தன்னைப் பற்றிய பிரக்ஞையைக் கொண்டிருக்கும் அல்லது பிரக்ஞையற்று இருக்கும். அது தன்னை அறிந்தால், அது செய்யும் அனைத்தும் சரி; இல்லாவிட்டால் அது செய்யும் அனைத்தும் தவறு.

**கே:** 'நான் என்ன என்று எனக்குத் தெரியும்' என நீங்கள் சொல்வதன் அர்த்தம் என்ன?

**ம:** மனதிற்கு முன்பே நான் இருக்கிறேன். 'நான்' என்பது மனதின் ஒரு எண்ணம் அல்ல; மனம் எனக்கு நிகழ்கிறது. நான் மனதிற்குள் நிகழ்வதில்லை. காலமும், இடமும் மனதில் இருப்பதால், நான் காலத்திற்கும், மனதிற்கும் அப்பாற்பட்டவன், சாசுவதமானவன், எங்கும் வியாபித்திருப்பவன்.

**கே:** நீங்கள் சொல்வதை உறுதியாகத்தான் சொல்கிறீர்களா? நிஜமாகவே நீங்கள் எல்லா இடத்திலும், எல்லா நேரமும் இருப்பதாகச் சொல்கிறீர்களா?

**ம:** ஆமாம். அப்படித்தான். ஓரிடத்திலிருந்து இன்னொரு இடத்திற்குச் செல்வதற்கு உனக்கு எப்படிச் சுதந்திரம் வெளிப் படையாக உள்ளதோ அப்படி அது எனக்கு வெளிப்படையாக உள்ளது. ஒரு மரம் குரங்கைப் பார்த்து, 'ஒரு இடத்திலிருந்து மற்றொரு இடத்திற்கு நீ செல்வாயா?' என்று கேட்பதாகக் கற்பனை செய். குரங்கு 'ஆமாம். நான் செல்வேன்' என்று சொல்லும்.

**கே:** நீங்கள் காரிய காரணத்தன்மையிலிருந்தும் சுதந்திர மானவரா? உங்களால் அதிசயங்களைச் செய்ய முடியுமா?

**ம:** உலகமே ஒரு அதிசயம். நான் அதிசயங்களுக்கு அப்பாற் பட்டவன் - நான் முற்றிலும் இயல்பானவன். எனக்கு ஒவ்வொன்றும் அவை எவ்வாறு நடக்கவேண்டுமோ அவ்வாறு நடக்கிறது. நான் உருவாக்கத்தில் குறுக்கிடுவதில்லை. எல்லா நேரமும் அதிகபட்ச உயர்வான அதிசயங்கள் நடைபெறும்போது சிறிய அதிசயங்களால் எனக்கு என்ன பயன்? நீ எதைப் பார்த்தாலும் உன் சொந்த இருத்தலைத்தான் பார்க்கிறாய். உனக்குள் ஆழமாகச் செல், உனக்குள் தேடு, சுயம் அறிதலில் வன்முறையோ, வன்முறை யில்லாமையோ கிடையாது. பொய்யை அழிப்பது வன்முறையாகாது.

**கே:** இது எனக்கு ஏதோ ஒரு விதத்தில் லோகாயதமாகப் பயனளிக்கும் என்னும் கருத்தோடு நான் சுய விசாரத்தைப் பயிற்சி செய்யும்போது, அல்லது எனக்குள் செல்லும் போது நான் என் அடிப்படை ஆதாரத்திலிருந்து தப்பித்து விடுகிறேன்.

**ம:** மிகச் சரி. உண்மையான விசாரம் எப்போதும் ஏதோ ஒன்றுக்கு உள்ளாகத்தான்; அதற்கு வெளியே அல்ல. ஏதோ ஒன்றை எப்படிப் பெறுவது அல்லது தவிர்ப்பது என்று நான் விசாரம் செய்தால் உண்மையிலேயே நான் விசாரம் செய்வதில்லை. ஒன்றைப்பற்றி அறிய அதை நான் முழுவதுமாக ஒப்புக் கொள்ளவேண்டும்.

**கே:** ஆமாம். கடவுளைப் பற்றி அறிய நான் கடவுளை ஒப்புக் கொள்ள வேண்டும் - எவ்வளவு அச்சுறுத்துகிறது!

**ம:** கடவுளை ஒப்புக் கொள்வதற்கு முன்னால் உன்னை நீ ஒப்புக் கொள்ள வேண்டும். அது அதைவிட அச்சுறுத்துவது. சுயத்தை ஏற்றுக்கொள்வதற்கு எடுத்து வைக்கப்படும் முதல் அடிகள் ஒருபோதும் இனிமையானவை அல்ல. ஏனெனில் ஒருவர் பார்ப்பது மகிழ்ச்சியான காட்சி அல்ல. மேற்கொண்டு செல்ல ஒருவருக்கு மிகுந்த தைரியம் தேவை. எது உதவும் என்றால் மௌனம்தான். உன்னை முழுமையான மௌனத்தில் பார், உன்னை விவரிக்காதே. உன்னை நீ எப்படி இருப்பதாக நினைத்துக் கொண்டிருக்கிறாயோ

அதைப் பார். அப்படி நீ பார்க்கும் எதுவோ அது நீ அல்ல என்பதை ஞாபகம் வைத்திரு. 'இது நான் அல்ல என்றால், நான் யார்?' என்பதுதான் சுய-விசாரத்தின் இயக்கம். விடுதலைக்கு வேறு வழி இல்லை. மற்ற எல்லா வழிமுறைகளும் தாமதிக்கச் செய்வன. உண்மையான சுயம் அதன் மகிமையான சூன்யத்தில், ஒன்றுமே இல்லாத நிலையில் வெளிப்படும்வரை, நீ என்னவாக இல்லையோ அதை விடாப்பிடியாக ஒதுக்கு.

**கே:** உலகம் விரைவான மற்றும் முக்கியமான மாற்றங்களுக்குள் கடந்து சென்றுகொண்டு இருக்கிறது. அவை மற்ற நாடுகளில் நடந்தாலும், அமெரிக்காவில் அதை மிகத் தெளிவாகப் பார்க்கலாம். ஒரு பக்கம் குற்றங்கள் அதிகரித்துக்கொண்டே போகின்றன. மறுபக்கம் அதிக அளவில் உண்மையான புனிதத்தன்மை அதிகரிக்கிறது. சமுதாயக் குழுக்கள் உருவாக்கப்படுகின்றன. அவற்றில் சில உயர்ந்த அளவில் ஒழுங்கு மற்றும் கட்டுப்பாட்டுடன் இருக்கின்றன. எப்படி ஒரு தீ அதன் எரிபொருளைத் தீர்த்து விடுகிறதோ, அப்படி தீமை அதன் சொந்த வெற்றிகளாலேயே தன்னை அழித்துக் கொள்வது போலவும், நன்மை, வாழ்க்கையைப் போல, தன்னை வாழ வைத்துக் கொள்வதாகவும் தோன்றுகிறது.

**ம:** நீ நிகழ்வுகளை நல்லவை மற்றும் தீயவை என்று பிரிக்கும்வரை நீ சொல்வது சரியாக இருக்கலாம். நிஜத்தில், அவற்றின் சொந்த நிறைவடைதலால் நல்லது தீயதாகவும், தீயது நல்லதாகவும் மாறுகிறது.

**கே:** அன்பைப் பற்றி எப்படி?

**ம:** அது சிற்றின்ப இச்சையாக மாறும்போது அழிக்கும் தன்மையுடையதாகிறது.

**கே:** சிற்றின்ப இச்சை என்பது என்ன?

**ம:** ஞாபகம் வைத்திருத்தல் - கற்பனை செய்தல் - எதிர்பார்த்தல். அது புலன் உணர்வு சார்ந்தது மற்றும் வார்த்தைவடிவிலானது. ஒரு மாதிரியான பழக்க அடிமைத்தனம்.

**கே:** யோகாவில் ப்ரம்மச்சரியம், தன்னடக்கம் தவிர்க்க முடியாததா?

**ம:** அடக்கப்பட்டதும், அமுக்கப்பட்டதுமான ஒரு வாழ்க்கை யோகா அல்ல. மனம் ஆசைகளற்று, ஓய்வாக இருக்க வேண்டும். அது புரிதலுடன் வருகிறது; ஞாபகத்தின் மற்றொரு வடிவமான மன உறுதியால் அல்ல. ஒரு புரிதல் உள்ள மனம் ஆசைகள் அற்றும், அச்சங்கள் அற்றும் இருக்கும். நீ ஆசையோ, அச்சமோபட்டால் அதைத் தெளிவாகப் புரிந்து கொண்டு, அதை அடக்கவோ மாற்றவோ செய்யாதே.

**கே:** நான் எப்படி என்னைப் புரிந்துகொள்ள வைப்பது?

**ம:** தியானம் செய்வதால். அதற்குக் கவனத்தைச் செழுத்துதல் என்று அர்த்தம். உன் பிரச்சனையைப் பற்றி முழுவதும் அறிந்து கொள். அதை எல்லாப் பக்கங்களில் இருந்தும் பார், அது உன் வாழ்க்கையை எப்படிப் பாதிக்கின்றது என்று கவனி. பிறகு அதைத் தனியாக விட்டு விடு. உன்னால் அதற்குமேல் எதுவும் செய்ய முடியாது.

**கே:** அது என்னைச் சுதந்திரமானவன் ஆக்குமா?

**ம:** நீ புரிந்துகொண்டதிலிருந்து சுதந்திரமானவன். சுதந்திரத்தின் வெளிப்புறமான வெளிப்பாடுகள் தெரிவதற்கு அதிக காலம் எடுத்துக் கொள்ளலாம். ஆனால் அவை முன்பே அங்கு உள்ளன. பரிபூரணத்தை எதிர்பார்க்காதே. வெளிப்பாடுகளில் பரிபூரணத் தன்மை இல்லை. எல்லாத் தேடல்களிலும் முரண்பாடு உள்ளது. எந்தப் பிரச்சனையும் முழுவதுமாகத் தீர்க்கப்படாது. ஆனால் அது செயல்படாத நிலைக்கு அதிலிருந்து நீ விலகலாம். அங்கு அது உன்மேல் எந்தப் பாதிப்பையும் ஏற்படுத்தாது.

# 101. ஞானி கைப்பற்றுவதும் இல்லை, தக்கவைத்துக்கொள்வதும் இல்லை

**கேட்பவர்:** ஏதாவது தனக்குச் செய்யப்பட வேண்டுமானால் ஞானி என்ன செய்வார்? அவர் விவரங்களை முடிவு செய்து, திட்டமிட்டு, செயல்படுவாரா?

**மஹராஜ்:** ஞானி ஒரு சூழ்நிலையை முழுவதுமாகப் புரிந்து கொண்டு, உடனடியாக என்ன செய்ய வேண்டுமோ அதை அறிவார். அவ்வளவுதான். மீதியெல்லாம் அவையாகவே நடக்கும்; பெரும்பாலும் உணர்வில்லாமலே. இருக்கும் அனைத்துடனும் ஞானியின் அடையாளம் முழுமையானது. அவர் பிரபஞ்சத்துடன் எவ்வளவு எதிர்வினை புரிகிறாரோ அவ்வளவு பிரபஞ்சம் அவருக்கு எதிர்வினை புரியும். ஒரு சூழ்நிலை ஒருமுறை அனுமானிக்கப் பட்டுவிட்டால் நிகழ்வுகள் போதுமான எதிர்வினையுடன் நகரும் என்று அவர் மிக மிக உறுதியாக இருப்பார். சாதாரண மனிதன் தன்னோடு அக்கறையுடன் இருப்பான். அவன் தன் அபாயத்தையும், வாய்ப்புகளையும் கணக்கிட்டுக் கொண்டிருப் பான். ஆனால் ஞானியோ அக்கறையில்லாமல், ஒவ்வொன்றும் அவை நடக்க வேண்டியதுபோல் நடக்கும் என்று உறுதியாக இருப்பார்; என்ன நடக்கிறது என்பது பொருட்டல்ல. ஏனெனில் முடிவாக சமநிலைக்கும், ஒத்திசைவிற்கும் திரும்புவது தவிர்க்க முடியாதது. இருப்பவற்றின் இதயம் அமைதியில் உள்ளது.

**கே:** நபர்த்தன்மை ஒரு மாயை என்றும், அடையாளத்தை இழக்காமல் உஷாரான பற்றின்மைதான் மெய்மையுடன் நமது தொடர்புப் புள்ளி என்றும் நான் புரிந்துகொண்டேன். இந்தக் கணத்தில் நீங்கள் ஒரு நபரா அல்லது ஒரு சுயப்பிரக்ஞையுடைய எல்லாமுமா என்று தயவு செய்து எனக்குச் சொல்லுங்கள்.

**ம:** நான் இரண்டுமே. ஆனால் உண்மையான சுயத்தை நபரால் கொடுக்கப்பட்ட விவரங்களால் அல்லாமல், நான் என்னவாக இல்லையோ அந்த விவரங்களால் அல்லாமல் விவரிக்க முடியாது. நபரைப் பற்றி நீ சொல்லக் கூடியதெல்லாம் சுயமல்ல. சுயத்தைப் பற்றி உன்னால் எதுவும் சொல்ல முடியாது. அப்படிச் சொன்னால் அது உள்ளபடியே ஆன, உள்ளபடியே இருக்கக் கூடிய, உள்ள படியே இருக்க வேண்டிய நபரைக் குறிக்காது. எல்லாக் குணாதி சயங்களும் தனிநபர்ப்பட்டவை. மெய் எல்லாக் குணாதிசயங்களுக்கும் அப்பாற்பட்டது.

**கே:** நீங்கள் சில சமயம் சுயமும், சில சமயம் நபருமா?

**ம:** அவ்வாறு எப்படி நான் இருக்க முடியும்? நபர் என்பது நான் மற்றவர்களுக்கு எப்படித் தோன்றுகிறேனோ அப்படி. என்னைப் பொறுத்தவரை விழிப்புணர்வின் அளவற்ற விரிவு நான். அதில் கணக்கற்ற நபர்கள் முடிவில்லாத தொடர்ச்சியாகத் தோன்றி மறைகிறார்கள்.

**கே:** உங்களுக்கு மாயையாகத் தோன்றும் நபர், எங்களுக்கு எப்படி நிஜமாகத் தோன்றுகிறார்?

**ம:** எல்லா இருத்தலுக்கும், விழிப்புணர்விற்கும், ஆனந்தத்திற்கும் உன் சுயம் மூலமாக இருப்பதால் நீ எதை உணர்ந்தறிந்தாலும் உன் மெய்மையை அதற்குக் கொடுக்கிறாய். இந்த மெய்மையைக் கொடுத்தல் எப்போதும் தற்பொழுதில்தான் நடக்கிறது, வேறு எப்போதும் அல்ல. ஏனெனில் கடந்த காலமும், எதிர்காலமும் மனதில் மட்டும்தான் உள்ளன. 'இருத்தல்' தற்பொழுதிற்கு மட்டும் தான் பொருந்தும்.

**கே:** சாசுவதம் முடிவற்றதும்கூட அல்லவா?

**ம:** காலம் முடிவற்றது. அளவானதாக இருந்தாலும் முடிவற்றது. சாசுவதம் தற்பொழுதின் மிகக்குறுகிய கணத்தில் உள்ளது. நாம் அதைத் தவறவிடுகிறோம், ஏனெனில் மனம் எப்போதும் கடந்த காலத்திற்கும், எதிர்காலத்திற்கும் இடையில் ஊசலாடிக் கொண்டிருக்கிறது. தற்பொழுதில் கவனத்தைக் குவிக்கப்பதற்காக அது நிற்காது. அதற்கு ஆர்வம் தூண்டப்பட்டால் அதைச் சுலபமாகச் செய்ய முடியும்.

**கே:** எது ஆர்வத்தைத் தூண்டும்?

**ம:** முதிர்ச்சியின் குறியீடான மனமார்ந்த ஈடுபாடு.

**கே:** முதிர்ச்சி எப்படி வரும்?

**ம:**உன் மனதைத் தெளிவாகவும், சுத்தமாகவும் வைத்திருப்பதால், உன் வாழ்க்கையை ஒவ்வொரு கணத்திலும் அது நிகழும்போது முழுப் பிரக்ஞையுடன் வாழ்வதால், ஆசைகளையும், அச்சங் களையும் அவை தோன்றிய உடனேயே ஆராய்ந்து, கரைப்பதால்.

கே; அம்மாதிரியான கவனக் குவித்தல் சாத்தியமா?

**ம:** முயற்சி செய். ஒரு தடவையில் ஒரு அடி எடுத்து வைப்பது சுலபமானது. மனமார்ந்த ஈடுபாட்டுடன் சக்தி ஊற்றெடுக்கும்.

**கே:** நான் போதுமான அளவு மனமார்ந்த ஈடுபாட்டுடன் இல்லை.

**ம:** சுய ஏமாற்றுதல் ஒரு அபாயகரமான சமாச்சாரம். அது மனதைப் புற்று நோயைப் போல் அழிக்கும். அதற்குத் தீர்வு சிந்தனையில் கொண்டுள்ள தெளிவாலும், நேர்மையாலும் கிடைக்கும். நீ ஒரு மாயையால் ஆன உலகத்தில் வாழ்கிறாய் என்று புரிந்துகொள். அவற்றை ஆராய்ந்து, வேர்களைக் களை. அவ்வாறு செய்வதற்கான முயற்சியே உன்னை மனமார்ந்த ஈடுபாடுள்ளவனாக்கும். ஏனெனில் சரியான காரியத்தில் ஆனந்தம் உள்ளது.

**கே:** அது என்னை எங்கு கொண்டு செல்லும்?

**ம:** அதன் சொந்தப் பரிபூரணத்திற்கு அல்லாமல் அது வேறு எங்கு கொண்டு செல்லும்? ஒருமுறை நீ தற்பொழுதில் நன்கு நிலை பெற்றுவிட்டால் நீ வேறு எங்கும் செல்ல வேண்டியதில்லை. நீ காலமற்று என்னவாக உள்ளாயோ அந்த ஸ்வரூபத்தைச் சாசுவதமாக வெளிப்படுத்துவாய்.

**கே:** நீங்கள் ஒன்றா அல்லது பலவா?

**ம:** நான் ஒன்று. ஆனால் பலவாகத் தோற்றமளிக்கின்றேன்.

**கே:** ஒருவர் எதற்காகத் தோற்றமளிக்க வேண்டும்?

**ம:** இருப்பதும், உணர்வுடன் இருப்பதும் நல்லது.

**கே:** வாழ்க்கை சோகமானது.

**ம:** அறியாமை துக்கத்தை உருவாக்குகிறது. மகிழ்ச்சி சரியான புரிதலைத் தொடரும்.

**கே:** அறியாமை ஏன் வலி மிகுந்ததாக இருக்க வேண்டும்?

**ம:** எல்லா ஆசை மற்றும் அச்சத்தின் மூலத்தில் அறியாமை இருக்கிறது. இந்த இரண்டு நிலைகளிலிருந்தும் துக்கம் மற்றும் முடிவற்ற தவறுகள் உருவாகின்றன.

**கே:** ஆத்மஞானம் பெற்றதாகக் கருதப்படும் சிலர் சிரித்துக் கொண்டிருப்பதையும், அழுவதையும் நான் பார்க்கிறேன். அது அவர்கள் ஆசை மற்றும் அச்சத்திலிருந்து விடுபடவில்லை என்பதைக் காண்பிக்கவில்லையா?

**ம:** அவர்கள் சூழ்நிலைகளுக்குத் தகுந்தவாறு சிரிக்கவோ, அழவோ செய்யலாம். ஆனால் உள்முகமாக அவர்கள் அமைதியாகவும், தெளிவாகவும், தங்களுடைய தன்னிச்சையான எதிர்வினைகளைப் பற்றற்றுக் கவனித்துக்கொண்டும் இருப்பார்கள். தோற்றங்கள் தவறாக வழிநடத்துபவை. ஒரு ஞானியைப் பொருத்தவரை அது மிகவும் அதிகமாக இருக்கும்.

**கே:** உங்களை என்னால் புரிந்துகொள்ள முடியவில்லை.

**ம:** மனதால் புரிந்துகொள்ள முடியாது. ஏனெனில் கைப்பற்றவும், தக்க வைத்துக்கொள்ளவும்தான் மனம் பழக்கப்பட்டிருக்கிறது. ஞானியோ கைப்பற்றவும், தக்கவைத்துக்கொள்ளவும் மாட்டார்.

**கே:** நீங்கள் தக்க வைத்துக் கொள்ளாத எதை நான் தக்க வைத்துக் கொள்கிறேன்?

**ம:** நீ ஞாபகங்களின் பொம்மை; குறைந்தபட்சம் உன்னை அவ்வாறு நினைத்துக் கொள்ளவாவது செய்கிறாய். நான் முற்றிலும் கற்பனை செய்யப்பட முடியாதவன். மூலத்தில் நான் என்னவோ அதுதான் நான். என்னை எந்தப் பௌதீக அல்லது மனோ நிலையுடனும் அடையாளப்படுத்த முடியாது.

**கே:** ஒரு விபத்து உங்களின் சமநிலையை அழித்துவிடும்.

**ம:** வினோதமான நிஜம் என்னவென்றால் அதனால் முடியாது. நானே ஆச்சரியப் படும்விதமாக நான் உள்ளவாறே இருக்கிறேன் - தூய பிரக்ஞையாக, நிகழும் எல்லாவற்றைப் பற்றியும் உஷாருடன்.

**கே:** இறக்கும் கணத்திலுமா?

**ம:** உடல் இறப்பது என்பதால் எனக்கு என்ன?

**கே:** உலகத்தோடு தொடர்புகொள்ள அது உங்களுக்குத் தேவையில்லையா?

**ம:** எனக்கு உலகம் தேவையில்லை. நானும் அதில் இல்லை. நீ நினைக்கும் உலகம் உன் மனதில்தான் உள்ளது. உன் கண்களின் மூலமாகவும், மனதின் மூலமாகவும் நான் அதைப் பார்க்க முடியும். ஆனால் அது ஞாபகங்களின் ஒரு உருவகம் என்று நான் முழுவதுமாக அறிந்திருக்கிறேன்; அது பிரக்ஞை என்னும் புள்ளியில் தான் மெய்யால் தொடப்படுகிறது. அது தற்பொழுதில்தான் சாத்தியம்.

**கே:** நமக்குள் உள்ள ஒரே வித்தியாசம், எனக்கு என் மெய்யான சுயத்தைத் தெரியாது என்று சொல்லிக் கொண்டே இருக்கிறேன், நீங்கள் உங்கள் சுயத்தை நன்கு அறிவீர்கள் என்று சொல்கிறீர்கள் என்பதுதான். நமக்குள் வேறு வித்தியாசம் ஏதாவது இருக்கிறதா?

**ம:** நமக்குள் வித்தியாசம் எதுவும் இல்லை. என்னை எனக்குத் தெரியும் என்று என்னால் சொல்ல முடியாது. நான் விவரிக்கவோ, வரையறுக்கவோ முடியாதவன் என்று எனக்குத் தெரியும். மனம் சென்று அடையக் கூடிய அதிகபட்ச தூரத்திற்கு அப்பால் ஒரு பரந்த வெளி இருக்கிறது. அந்தப் பரந்த வெளி என்னுடைய வீடு; அந்தப் பரந்த வெளி நான். அந்தப் பரந்த வெளி அன்பும் கூட.

**கே:** நீங்கள் அன்பை எல்லா இடத்திலும் பார்க்கிறீர்கள். நானோ வெறுப்பையும், துன்பத்தையும்தான் பார்க்கிறேன். மனித இனத்தின் வரலாறு தனித்த அல்லது ஒன்று சேர்ந்த கொலையின் வரலாறு. வேறு எந்த உயிரினமும் கொல்வதில் அந்த அளவு ஆனந்தப்படுவதில்லை.

**ம:** நீ நோக்கத்தைப் பார்த்தாயானால் அன்பைத்தான் பார்ப்பாய் - தன்மேல் கொண்டுள்ள அன்பை, தன்னுடைய சொந்தங்கள் மற்றும் சொத்தின் மேல் கொண்டுள்ள அன்பை. மக்கள் தாங்கள் எதன் மேல் அன்பு செலுத்துவதாகக் கற்பனை செய்கிறார்களோ அதற்காகச் சண்டையிடுகிறார்கள்.

**கே:** அதற்காக இறக்கத் தயாராக இருப்பதால், கண்டிப்பாக அவர்களுடைய அன்பு மெய்யானதாக இருக்க வேண்டும்.

**ம:** அன்பு அளவற்றது. ஒரு சிலருக்கு என அளவானது அன்பாக இருக்க முடியாது.

**கே:** உங்களுக்கு அம்மாதிரியான அளவற்ற அன்பைத் தெரியுமா?

**ம:** ஆமாம். எனக்குத் தெரியும்.

**கே:** அதைப் பற்றி எப்படி உணர்கிறீர்கள்?

**ம:** எல்லாமும் நேசிக்கப்படுகிறது, நேசிக்கத்தக்கது. எதுவுமே விலக்கப் படுவதில்லை.

**கே:** அசிங்கமாக இருப்பவர்களையும், குற்றம் புரிபவர் களையுமா?

**ம:** எல்லாமும் என் விழிப்புணர்வில் இருக்கின்றன; எல்லாமும் என்னுடையவை. விருப்பு, வெறுப்புகளால் சுயத்தைப் பிரிப்பது பைத்தியக்காரத்தனம். நான் இரண்டிற்கும் அப்பாற்பட்டவன்; நான் அன்னியன் அல்ல.

**கே:** விருப்பு வெறுப்பற்றிருப்பது ஒரு விட்டேத்தியான நிலை அல்லவா?

**ம:** ஆரம்பத்தில் அது அவ்வாறு தோன்றவும், உணரப்படவும் செய்யலாம். அம்மாதிரியான விட்டேத்தியான தன்மையில் விடாப்பிடியாக இருந்தால் அது எல்லாவற்றிலும் ஊடுருவும் அன்பாகவும், எல்லாவற்றையும் அணைக்கும் அன்பாகவும் மலரும்.

**கே:** மனம் ஒரு பூவாகவும், ஒரு ஜோதியாகவும் ஆகின்ற தருணங்களை ஒருவர் கொண்டிருப்பார். ஆனால் அவை நீடித்திருக்

காது. வாழ்க்கை எப்போதும் போல அதன் வெறுத்துப்போன தூய்மையற்ற வரட்டுத்தன்மைக்குத் திரும்பிவிடும்.

**ம:** நீ உறுதியானதைக் கையாளும்போது, அது அளவானது என்பது என்பது விதிமுறை. அகண்டமாக இருப்பதை அனுபவப் பட முடியாது. ஏனெனில் அதற்கு எல்லைகள் இல்லை. விழிப்புணர்வு மாறுபாடுகளைக் குறிப்பாக உணர்த்துகிறது, மாற்றம் மாற்றத்தைத் தொடரும். ஒரு காரியமோ அல்லது ஒரு நிலையோ முடிவிற்கு வந்தால் மற்றொன்று ஆரம்பமாகும். எல்லைக்கோடில்லாததைப் பொதுவான வார்த்தையின் அர்த்ததில் அனுபவப்பட முடியாது. ஒருவர் அறியாமலே, அதுவாக இருக்கலாம். ஆனால் அது என்னவாக இல்லை என்று ஒருவர் அறியலாம். எப்போதும் அசைந்து கொண்டிருப்பது கண்டிப்பாக விழிப்புணர்வின் முழு உள்ளடக்கம் அல்ல. இது உறுதி.

**கே:** அசையாததை அறிய முடியாது என்றால் அதை அறியும் ஞானத்தை அடைவதன் அர்த்தமும், பிரயோஜனமும் என்ன?

**ம:** அசையாததை அறிவது என்பது அசையாததாகவே ஆவது. வாழும் எல்லாவற்றிற்கும் நன்மை பயப்பது அதன் பிரயோஜனம்.

**கே:** வாழ்க்கை என்பது அசைவது. அசைவில்லாமை இறத்தல். வாழ்க்கைக்கு இறத்தல் எந்தவிதத்தில் உபயோகமானது?

**ம:** நான் அசைக்க முடியாமையைப் பற்றிப் பேசுகிறேன்; அசைவில்லாமையைப் பற்றி அல்ல. முறையான வாழ்க்கையில் நீ அசைக்க முடியாததாக ஆகி விடுவாய். எல்லாவற்றையும் சரியாகச் செய்யும் ஒரு சக்தியாக நீ ஆவாய். வெளிப்புறத்தில் அது தீவிரமான செயல்பாட்டைக் குறிக்கலாம்; குறிக்காமலும் போகலாம். ஆனால் மனம் ஆழமாகவும், அமைதியாகவும் இருக்கும்.

**கே:** நான் என் மனதைக் கவனிக்கும்போது, அது எப்போதும் மாறிக்கொண்டிருப்பதையும், அளவற்ற விதங்களில் ஒரு மனோ நிலை மற்றொரு மனோநிலையைத் தொடர்வதையும் பார்க்கிறேன். ஆனால் நீங்களோ அதே ஆனந்த மயமான உன்னத மன நிலையில் எப்போதும் இருப்பதுபோல் தெரிகிறது.

**ம:** மனோ நிலைகள் மனதில் உள்ளன. அது பொருட்டல்ல. உள்ளுக்குள் செல், மனதிற்கு அப்பால் செல். உன் விழிப்புணர்வின் உள்ளடக்கத்தால் ஈர்க்கப்படுவதை நிறுத்து. உன் மெய்யான இருத்தலின் ஆழமான அடுக்குகளை நீ அடையும்போது மனதின் மேலோட்டமான விளையாட்டுகள் உன்னை மிகவும் குறைவாகத்தான் பாதிக்கும் என்பதைக் காண்பாய்.

**கே:** மனதின் விளையாட்டு அங்கு இருக்குமா?

**ம:** ஒரு அமைதியான மனம் ஒரு இறந்த மனம் அல்ல.

**கே:** விழிப்புணர்வு எப்போதும் அசைந்துகொண்டிருக்கும் என்பது அது ஒரு கவனிக்கக் கூடிய நிஜம். நகராத விழிப்புணர்வு ஒரு முரண்பாடு. நீங்கள் ஒரு அமைதியான மனதைப் பற்றிப் பேசுகிறீர்கள். அது என்ன? மனமும், விழிப்புணர்வும் ஒன்றே அல்லவா?

**ம:** வார்த்தைகள் தேவையைப் பொருத்து பல வழிகளில் உபயோகப் படுத்தப்படுகின்றன என்று நாம் ஞாபகம் வைத்திருக்க வேண்டும். நிஜம் என்னவென்றால் உணர்வுள்ளதற்கும், உணர்வற்றதற்கும் சிறிதளவு வேறுபாடுதான் உள்ளது. அவை சாரத்தில் ஒன்றே. விழித்த நிலை, ஆழ்ந்த தூக்கத்திலிருந்து சாட்சி இருப்பதால்தான் வித்தியாசப்படுகிறது. பிரக்ஞையின் ஒரு ஒளிக் கீற்று நம் மனதின் ஒரு பகுதியை ஒளியேற்றுகிறது. அந்தப் பகுதி நம் கனவாகிறது அல்லது விழித்த விழிப்புணர்வாகிறது. ஆனால் பிரக்ஞையோ சாட்சியாகத் தோன்றுகிறது. சாட்சி வழக்கமாக விழிப்புணர்வை மட்டுமே அறியும். சாதனா என்பது, சாட்சி முதலில் தன் உணர்வின்மேல் திரும்புவதையும், பிறகு தன்மேல், தன் சொந்த பிரக்ஞைக்குள் திரும்புவதையும் கொண்டது. சுயப் பிரக்ஞைதான் யோகா.

**கே:** பிரக்ஞை எல்லாவற்றிலும் ஊடுருவக் கூடியது என்றால், ஒரு கண் பார்வை அற்றவன், ஞானம் அடைந்துவிட்டால் பார்க்க முடியுமா?

**ம:** நீ உணர்ச்சிகளைப் பிரக்ஞையுடன் கலக்கிறாய். ஞானிக்குத் தன்னை உள்ளவாறே தெரியும். தன் உடல் முடமாக்கப்

பட்டிருப்பதும், தன் மனதிற்குப் புலன்மூலமான உணர்ந்தறிதல் கிடைக்கப்பெறாமலிருப்பதும் அவருக்குத் தெரியும். ஆனால் அவர் கண் பார்வை இருப்பதாலோ, இல்லாமலிருப்பதாலோ பாதிக்கப் பட மாட்டார்.

**கே:** என் கேள்வி மிகவும் குறிப்பிட்டவாறானது: ஒரு கண் பார்வையற்றவர் ஞானியாக ஆனால் அவருடைய கண் பார்வை திரும்பக் கிடைத்துவிடுமா, இல்லையா?

**ம:** அவருடைய கண்களும், மூளையும் ஒரு புதுப்பித்தலுக்கு உட்படாவிட்டால் அவர் எப்படிப் பார்க்க முடியும்?

**கே:** ஆனால் அவை புதுப்பித்தலுக்கு உட்படுமா?

**ம:** உட்படலாம்; உட்படாமலும் போகலாம். இவையெல்லாம் விதியையும், அருளையும் பொருத்தது. ஆனால் ஒரு ஞானி தன்னிச்சையான, புலன் உணர்வு சாராத உணர்ந்தறிதலைக் கைக்கொள்கிறார். அது அவரை நேரடியாக, புலன்களின் குறுக்கீடு இல்லாமல் ஒவ்வொன்றையும் எளிதாக அறிய வைக்கிறது. அவர் தொடர்ந்து இருக்கக் கூடியவைக்கும், உருவகிப்பவைக்கும் அப்பாலும், காலம் மற்றும் இடம், பெயர் மற்றும் வடிவம் ஆகியவற்றின் விதங்களுக்கு அப்பாலும் உள்ளார். அவர் உணர்ந் தறியப்பட்டதோ, உணர்ந்தறிபவரோ அல்ல. ஆனால் அவர் எளிய, பிரபஞ்சமயமான, உணர்ந்தறிதலைச் சாத்தியமாக்குகின்ற காரணி. மெய்மை விழிப்புணர்விற்குள் இருக்கிறது. ஆனால் அது விழிப்புணர்வோ அல்லது அதன் உள்ளடக்கமோ அல்ல.

**கே:** எது மெய்யற்றது - உலகமா அல்லது அதைப்பற்றிய என் அறிவா?

**ம:** உன் அறிவிற்கு அப்பால் ஒரு உலகம் உள்ளதா? உனக்குத் தெரிந்ததற்கு அப்பால் நீ செல்ல முடியுமா? உன் மனதிற்கு அப்பால் ஒரு உலகத்தை நீ உருவகிக்கலாம் . ஆனால் அது ஒரு நிரூபிக்கப் படாத, நிரூபிக்க முடியாத ஒரு கருத்தாக மட்டுமே இருக்கும். உன் அனுபவம்தான் உன்னுடைய அத்தாட்சி. அது உனக்குத்தான் செல்லுபடியாகும். வேறொருவர் உன் அனுபவத்தில் தோற்றமளிப்பது போல் மட்டுமே மெய்யானவராக இருக்கும் போது உன் அனுபவத்தை வேறு யார் கொண்டிருக்க முடியும்?

**கே:** நான் அவ்வளவு நம்பிக்கையற்ற தனித்தவனா?

**ம:** ஒரு நபராக, ஆமாம். உன் மெய்யான இருப்பில் நீதான் முழுமை.

**கே:** நீங்கள் என்னுடைய விழிப்புணர்வில் நான் கொண்டிருக்கும் உலகத்தின் பகுதியா அல்லது சுயேட்சையானவரா?

**ம:** நீ பார்ப்பது எதுவோ அது உன்னுடையது. நான் பார்ப்பது என்னுடையது. இரண்டிற்கும் பொதுவானவை மிகச் சிறிதளவே.

**கே:** நம்மை இணைக்கின்ற பொதுவான காரணி ஏதாவது இருக்க வேண்டும்.

**ம:** பொதுவான காரணியைக் கண்டுபிடிக்க நீ எல்லா வித்தியாசங்களையும் கைவிட வேண்டும். பிரபஞ்ச மயமானதுதான் பொதுவாக உள்ளது.

**கே:** மிகப் பெரிய வினோதமாக எது எனக்குத் தோன்றுகிறது என்றால் நான் வெறுமனே என் ஞாபகங்களின் உருவாக்கம் என்றும், சொல்லத்தக்க வகையில் அளவானவன் என்றும் நீங்கள் சொன்னாலும், நான் ஒரு மிக மிக விரிந்த, செழுமையான, நீங்களும், உங்கள் போதனையும் உட்பட எல்லாவற்றையும் உள்ளடக்கிய ஒரு உலகத்தை உருவாக்குகிறேன். எப்படி இந்த விரிவானது உருவாக்கப்பட்டு, என் சிறிய அளவில் அடக்கப் படுகிறது என்பதை என்னால் புரிந்துகொள்ள முடியவில்லை. நீங்கள் எனக்கு முழுமையான உண்மையைக் கொடுத்தாலும், நான் அதில் ஒரு சிறிய பகுதியைத்தான் பற்றிக்கொள்கிறேன் போலிருக்கிறது.

**ம:** ஆமாம். சிறியது, பெரியதை, முழுமையை உருவகப் படுத்துகிறது, ஆனால் உருவகப்படுத்துவது முழுமையைக் கொண்டிருக்க முடியாது என்பது ஒரு நிஜம். உன் உலகம் எவ்வளவுதான் உயர்ந்ததாகவும், முழுமையாகவும் இருந்தாலும், அது சுய முரண்பாடுடையது, கண நேரத்தையது, மற்றும் முற்றிலும் மாயத் தன்மையானது.

**கே:** அது மாயத் தன்மையுடையதாக இருக்கலாம். ஆனாலும் அது அற்புதமானது. நான் பார்க்கும்போது, கேட்கும்போது, தொடும்

போது, முகரும்போது, சுவைக்கும்போது, சிந்திக்கும்போது, உணரும்போது, ஞாபகம் வைத்திருக்கும்போது, கற்பனை செய்யும்போது என் அதிசயமான உருவாக்கும் திறனைப் பற்றி என்னால் திகைக்காமல் இருக்க முடியவில்லை. நான் ஒரு நுண் நோக்கி ஆய்வுக் கருவி மூலமாகவோ, வான்வெளி நோக்கி மூலமாகவோ பார்க்கும்போது அதிசயங்களைக் காண்கிறேன்; நான் ஒரு அணுவின் அசைவைத் தொடர்கிறேன், நட்சத்திரங்களின் முணுமுணுப்பைக் கேட்கிறேன். நான்தான் இவை எல்லாவற்றையும் உருவாக்கும் ஒருவன் என்றால், நான் கடவுளே! ஆனால் நான் கடவுள் என்றால் ஏன் எனக்கு மிகச் சிறியவனாகவும், உதவியற்றவனாகவும் தெரிகிறேன்?

**ம:** நீ கடவுள். ஆனால் நீ அதை அறியவில்லை.

**கே:** நான் கடவுள் என்றால், நான் உருவாக்கிய உலகம் மெய்யானதாக இருக்க வேண்டும்.

**ம:** அது சாரத்தில் மெய்யானது. ஆனால் தோற்றத்தில் அல்ல. ஆசைகளிலிருந்தும், அச்சங்களிலிருந்தும் விடுபட்டிரு. உடனடியாக உன் பார்வை தெளிவாகி, நீ எல்லாவற்றையும் அவை உள்ளபடியே பார்ப்பாய். அல்லது சாத்வீக குணம் உலகை உருவாக்குகிறது, தாமச குணம் அதை மறைக்கிறது, ராஜச குணம் அதைத் திரிக்கிறது என்றும் நீ சொல்லலாம்.

**கே:** இது எனக்கு அதிகமாக விளக்கவில்லை. ஏனெனில், குணங்கள் என்பவை என்ன என்று கேட்டால், எது உருவாக்குகிறதோ, எது மறைக்கிறதோ, எது திரிக்கிறதோ அதுதான் குணங்கள் என்று பதில் வரும். நிஜம் அப்படியே இருக்கிறது - நம்ப முடியாத ஏதோ ஒன்று எனக்கு நிகழ்ந்தது; அது என்ன, எப்படி, ஏன் என்று எனக்குத் தெரியாது என்னும் நிஜம் அப்படியே இருக்கிறது.

**ம:** நன்று. ஆச்சரியப்படுவது ஞானம் உதிப்பதன் அடையாளம். உறுதியாகவும், தொடர்ந்தும் ஆச்சரியப்படுவது சாதனா.

**கே:** எனக்குப் புரியாத ஒரு உலகத்தில் நான் இருக்கிறேன். ஆகையால் அதற்குப் பயப்படுகிறேன். இதுதான் ஒவ்வொருவருடைய அனுபவம்.

**ம:** நீ உன்னை உலகத்திலிருந்து பிரித்துக் கொண்டாய். ஆகையால் அது உன்னைத் துக்கப்படச் செய்கிறது மற்றும் அச்சுறுத்துகிறது. உன் தவறைக் கண்டுபிடித்து, அச்சத்திலிருந்து விடுபடு.

**கே:** நீங்கள் என்னை உலகத்தை விடச் சொல்கிறீர்கள்; நானோ உலகத்தில் ஆனந்தமாக இருக்க விரும்புகிறேன்.

**ம:** நீ சாத்தியமற்றதைக் கேட்டால் நான் எப்படி உதவ முடியும்? அளவானது துக்கம் மிகுந்ததாகவும், மகிழ்ச்சியானதாகவும் கண்டிப்பாக மாறி மாறி இருக்கும். நீ உண்மையான, அசைக்க முடியாத, மாற்ற முடியாத மகிழ்ச்சியைத் தேடினால் நீ உலகத்தை அதன் சுக துக்கங்களோடு உனக்குப் பின்னால் விட்டுவிட்டு, அப்பால் செல்ல வேண்டும்.

**கே:** அதை எப்படிச் செய்வது?

**ம:** வெறும் உடல் ரீதியான துறவு மனமார்ந்த ஈடுபாட்டின் ஒரு அடையாளம் மட்டுமே. ஆனால் மனமார்ந்த ஈடுபாடு மட்டுமே விடுதலை அளிக்காது. உஷாரான உணர்ந்தறியும் தன்மையாலும், ஆர்வமான விசாரத்தாலும், ஆழமான ஆராய்ச்சியாலும் வரும் புரிதல் இருக்க வேண்டும். பாவத்திலிருந்தும், துக்கத்திலிருந்தும் மீட்சியடைய நீ அயராது உழைக்க வேண்டும்.

**கே:** எது பாவம்?

**ம:** உன்னைக் கட்டுப்படுத்துவதெல்லாம் பாவம்.

இப்போது, நீ இங்கு கற்றுக் கொண்டது விதையாக மாறும். வெளிப்படையாக நீ அதை மறக்கலாம் . ஆனால் அது உயிருடன் இருக்கும். சரியான பருவத்தில் முளைத்து, வளர்ந்து, பூத்து, கனிகளைக் கொடுக்கும். எல்லாமும் தானாகவே நடக்கும். நீ எதுவும் செய்ய வேண்டியதில்லை. அதைத் தடுக்காமலிருந்தால் போதும்.

# நிசர்க யோகா

**- மோரிஸ் ஃப்ரைட்மேன்**

---

ஸ்ரீ நிசர்கதத்த மஹராஜ் அவர்களின் எளிய இல்லத்தி ல் மின்சார விளக்குகள் மற்றும் தெருவின் போக்குவரத்துச் சத்தத்தைத் தவிர, மனித சரித்திரத்தின் எந்தக் காலத்தில் தான் இருக்கிறேன் ஒருவர் அறிய முடியாது. அவருடைய சிறு அறையில் ஒரு காலமற்ற தன்மை இருக்கும். அங்கு விவாதிக்கப்பட்ட கருத்துக்கள் காலமற்றவை - எல்லாக் காலத்திலும் செல்லுபடியாகக் கூடியவை. அவற்றை விவரிக்கப்பட்ட விதமும், ஆராயப்பட்ட விதமும் காலமற்றவை. மிகவும் புராதனமானதும், சாசுவதமாகப் புதியதானதுமான விஷயங்கள் அங்கு கையாளப்பட்டன.

அங்கு நடந்த விவாதங்களும், கொடுக்கப்பட்ட உபதேசங்களும் பத்தாயிரம் வருடங்களுக்கு முன்பும், இப்போதிருந்து பத்தாயிரம் வருடங்களுக்கு பின்பும் ஒன்றாகத்தான் இருக்கும். எப்போதும் உணர்வுடன் இருப்பவர்கள் தாங்கள் உணர்வுடன் இருப்பதான நிஜத்தைப் பற்றியும், அவற்றின் காரணம் மற்றும் நோக்கத்தைப் பற்றியும் விசாரம் செய்து கொண்டிருப்பார்கள். ''எங்கிருந்து 'நான்'என்பது வந்தது?'' ''நான் யார்?'' - இம்மாதிரியான கேள்விகளுக்கு ஆரம்பமும், முடிவும் இல்லை. அவற்றிற்கான விடைகளை அறிவது மிகவும் முக்கியம். ஏனெனில் தன்னைப் பற்றிய முழுப் புரிதல் இல்லாமல், காலத்திலும், காலமற்ற தன்மையிலும் வாழ்க்கை இருக்கிறது - ஆனால் ஒரு கனவாக, நம் மேல் நமக்குத் தெரியாத, நம்மால் புரிந்து கொள்ள முடியாத காரணங்களால் திணிக்கப்பட்டதாக.

மஹராஜ் ஒரு அதிகக் கல்வி கற்ற மனிதர் அல்ல. அவருடைய தாய்மொழியான மராத்தியில் அவருக்குப் புலமை இல்லை; அவர்

வல்லுநர்களை மேற்கோள் காட்டவில்லை; சாஸ்திரங்கள் அரிதாகத்தான் குறிப்பிடப்பட்டன. இந்தியாவின் ஆச்சரிய கரமான, செழுமையான ஆன்மீகப் பாரம்பரியம் அவரிடம் வெளிப்படையாக இல்லாமல் உள்ளார்ந்து இருந்தது. அவரைச் சுற்றி எந்த ஒரு ஆசிரமும் எழுப்பப்படவில்லை. அவரைப் பின்பற்றியவர்களில் பெரும்பாலானவர்கள் மஹராஜுடன் அவ்வப்போது ஒரு மணி நேரத்தைச் செலவிடக் கிடைக்கும் வாய்ப்பைப் போற்றும், வேலைக்குச் செல்லும் எளிய மக்கள்.

எளிமையும், தாழ்மையும்தான் அவருடைய வாழ்க்கை மற்றும் போதனைகளின் அடிப்படை. புறத்திலும், அகத்திலும் அவர் ஒருபோதும் உயர்ந்த இடத்தை எடுத்துக் கொண்டதில்லை. அவர் குறிப்பிட்டுப் பேசுகின்ற இருத்தலின் சாரத்தைத் தன்னில் எவ்வளவு நெருக்கமாகப் பார்த்தாரோ அவ்வாறே மற்றவர்களுக்குள்ளும் பார்த்தார். தனக்கு அதைப் பற்றித் தெரியும்; மற்றவர்களுக்கு இன்னும் தெரியவில்லை என்றும், ஆனால் இந்த வேறுபாடு தற்காலிகமானது; மனதிற்கும், அதன் எப்போதும் மாறுகின்ற உள்ளடக்கத்திற்கும் தவிர சிறிதளவே முக்கியமானது என்றும் அவர் ஒப்புக் கொண்டார். அவருடைய யோகாவைப் பற்றிக் கேட்ட போது, எந்த வழிமுறையும் கிடையாது; எந்த வேத சாஸ்திரமோ, அண்டப் பிறப்புக் கோட்பாடோ, மனோதத்துவ இயலோ, தத்துவமோ தன்னிடம் கொடுப்பதற்கு இல்லை என்றார். அவருக்குத் தன்னுடைய மற்றும் தான் பேசுவதைக் கேட்பவர் களுடைய மெய்யான தன்மை தெரிந்திருந்தது. கேட்பவர், கண்கூடாக அதைச் சாதாரணமாகவும், நேரடியாகவும் பார்க்க முடிவதில்லை. ஏனெனில் அவருக்குத் தெரிவதெல்லாம் அவருடைய புலன்களால் தூண்டப்பட்ட மனதின் மூலம்தான் தெரியும். அந்த மனமே ஒரு புலன் என்பதை அவர் சந்தேகிக்கக்கூட மாட்டார்.

**'நிசர்க யோகா'** - மஹராஜ் அவர்களின் 'இயற்கை யோகா' மிகவும் எளிமையானது. எல்லாமாகவும் ஆகக் கூடிய மனம் அதன் சுய இருத்தலையே - இது அல்லது அதுவாக, இங்கு அல்லது அங்கு, அப்போது அல்லது இப்போது என்றில்லாமல், காலமற்ற இருத்தலாக அடையாளம் கண்டு ஊடுருவ வேண்டும்.

இந்தக் காலமற்ற இருத்தல்தான் உயிருக்கும், விழிப்புணர்விற்கும் ஆதாரம். காரணமற்ற காரணமானதால் காலம், இடம் மற்றும் காரணத்தன்மை ஆகியவற்றை வைத்துப் பார்த்தால் அது முழு வலிமையுடையது. அது ஆரம்பமோ, முடிவோ இல்லாமல் எப்போதும் இருப்பதால் அது எல்லாவற்றிலும் ஊடுருவுவது, சாசுவதமானது. காரணமற்றதால் அது சுதந்திரமானது; எல்லா வற்றிலும் ஊடுருவுவதால் அது அறியும்; பிரிவற்றதால் அது மகிழ்ச்சியோடு இருப்பது. அது வாழ்கிறது, நேசிக்கிறது, பிரபஞ்சத்தை வடிவமைப்பதாலும், மறு வடிவமைப்பதாலும் முடிவற்ற வேடிக்கை உடையது. ஒவ்வொரு மனிதனும் அதைக் கொண்டிருக்கிறான். ஒவ்வொருவரும் அதுதான். ஆனால் எல்லோருக்கும் தங்களை உள்ளபடி தெரியாது. அதனால் தங்களைப் பெயர், வடிவம் மற்றும் விழிப்புணர்வின் உள்ளடக்கம் ஆகியவற்றில் அடையாளம் காண்கிறார்கள்.

இந்தத் தன்னுடைய மெய்மையைத் தவறாகப் புரிந்து கொள்ளலைச் சரிப்படுத்த ஒரே வழி ஒருவருடைய மனதின் செயல் படும் வழிகளை முழுமையாக அறிந்து, அதைச் சுயம் அறிதலுக்கான ஒரு கருவியாக மாற்றுவதுதான். உயிர்வாழ்வதற்கான போராட்டத்தில் உள்ளபடியே மனம் ஒரு கருவி. இயற்கையை வெல்ல அது இயற்கையின் விதிகளையும், வழிமுறைகளைகயும் கற்றுக் கொள்ள வேண்டும். மனம் அதைச் செய்தது; செய்து கொண்டிருக்கிறது. ஏனெனில் மனமும், இயற்கையும் ஒன்றோடு ஒன்று இணைந்து செயல்பட்டால் உயிர் வாழ்வதை உயர்ந்த நிலைக்கு உயர்த்தலாம். ஆனால் இந்தச் செயல்பாட்டின் போது மனம் குறியீடுகளாகச் சிந்திப்பது மற்றும் தகவல் பரிமாறுவது என்னும் கலையையும், மொழியின் கலையையும், திறமையையும் பெற்றுக் கொண்டுவிட்டது. வார்த்தைகள் முக்கியமாகிவிட்டன. கருத்துக்களும், கருத்துச் சுருக்கங்களும் மெய்த் தோற்றத்தைப் பெற்றுவிட்டன; மெய்யிற்குப் பதிலாக கருத்து உருவாக்கம் இடம் கொண்டுவிட்டது. இதனால் மனிதன் வார்த்தைக் கூட்டத்தால் சூழப்பட்டு, வார்த்தைகளால் ஆளுமைப் படுத்தப்பட்ட ஒரு வாய் மொழியான உலகத்தில் வாழ்கிறான்.

வெளிப்படையாகப் பொருட்களையும், மக்களையும் கையாள வார்த்தைகள் மிகவும் உபயோகமானவை. ஆனால் அவை நம்மை முழுவதும் குறியீட்டாலான உலகத்தில் வாழ வைக்கின்றன. அதனால் அவை நிஜமல்ல. இந்தச் சொல்மயமான மனச் சிறையை உடைத்து, மெய்மைக்குள் புக ஒருவர் தன் கவனத்தை உலகத்தி லிருந்து மாற்றி, வார்த்தைகள் எவற்றைக் குறிக்கின்றனவோ அதன்மீதே வைக்க வேண்டும்.

மிகச் சாதாரணமாக உபயோகப்படுத்தப்படுவதும், உணர்ச்சிகளால் நிரப்பப்பட்டதுமான வார்த்தை 'நான்'. மனம், உடல் மற்றும் பூரணம் ஆகிய ஒவ்வொன்றையும் அதில் சேர்க்க முயற்சிக்கிறது. நடைமுறையில் அது நேரடியான, நெருக்கமான, அதி முக்கியமான ஒரு அனுபவத்தைச் சுட்டிக் காண்பிப்பதாக இருக்கிறது. இருத்தலும், ஒருவர் இருப்பதாக அறிதலும் மிகவும் முக்கியமானவை. ஒன்றில் ஆர்வத்துடன் இருக்க, ஒருவருடைய ஒவ்வொரு ஆசை மற்றும் அச்சத்தின் மையப் புள்ளியாக உள்ள விழிப்புணர்வுடைய இருத்தலுக்குத் தொடர்புடையதாக அது இருக்கவேண்டும். ஒவ்வொரு ஆசையின் உச்ச இறுதியான நோக்கம் இருத்தல் உணர்வை மேம்படுத்துவதும், தீவிரப் படுத்துவதும் ஆகும். அதேசமயம் எல்லா அச்சங்களும் அதன் சாரத்தில் சுய அழிவைப் பற்றியதே.

மிகவும் நிஜமாகவும், இன்றியமையாததாகவும் உள்ள 'நான்' என்னும் உணர்விற்குள் அதன் ஆதாரத்தை அடைய ஆழ்ந் திருப்பதே 'நிசர்க யோகா'வின் மையக் கருத்து. தொடர்ச்சியாக இல்லாமல் 'நான்' என்னும் உணர்வு ஊற்றெடுக்கவும், திரும்பிச் செல்லவும் அது ஒரு ஆதாரத்தைக் கொண்டிருக்க வேண்டும். விழிப்புணர்வுடைய இருத்தலின் இந்தக் காலமற்ற ஆதாரத்தைத்தான் மஹராஜ் சுயத்தின் இயல்பு, சுயத்தின் இருத்தல், ஸ்வரூபம் என்கிறார்.

ஒருவருடைய சுய இருத்தலுடனான உச்ச உயர்வான அடையாளத்தை அறியும் வழிமுறைகளைப் பற்றி மஹராஜ் பொறுப்பெடுத்துக் கொள்வதில்லை. மெய்மைக்கு ஒவ்வொரு வரும் தங்களுடைய சொந்த வழியைக் கொண்டிருக்கிறார்கள்.

அதற்குப் பொதுவான வழிமுறை எதுவும் கிடையாது. ஆனால் எந்தப் பாதையில் என்று அடைந்தாலும் மெய்மைக்கான வாசல் 'நான்' என்னும் உணர்வுதான். 'நான்' என்பதன் முழு முக்கியத்துவத்தைக் கிரகித்து, அதைக் கடந்து அதன் ஆதாரத்திற்குச் செல்வதால்தான் ஒருவர் ஆதியிலிருந்தே உள்ள, இறுதியான உச்ச உயர்வான நிலையை அடைய முடியும். ஆரம்பத்திற்கும், முடிவிற்கும் வித்தியாசம் மனதில்தான் உள்ளது. மனம் இருண்டோ அல்லது அலைக்கழிக்கப்பட்டோ இருக்கும்போது ஆதாரம் அனுமானிக்கப்படாது. அது தெளிவாகவும், ஒளி பொருந்தியும் இருந்தால் ஆதாரத்தின் ஒரு உண்மையான பிரதிபலிப்பாக மாறும். இருளுக்கும், ஒளிக்கும் அப்பாலும், உயிர் வாழ்தலுக்கும் இறப்பிற்கும் அப்பாலும், விழிப்புணர்விர்க்கும், விழிப்புணர் வில்லாமைக்கும் அப்பாலும் உள்ள அந்த ஆதாரம் எப்போதும் ஒன்றுதான்.

இந்த 'நான்' என்னும் உணர்வில் தங்குவது எளிய, சுலபமான, இயற்கையான யோகா- 'நிசர்க யோகா.' அதில் இரகசியம் எதுவும் இல்லை; அதற்காக எதையும் சார்ந்திருக்க வேண்டியதில்லை; அதற்காக ஆயத்தப்பட வேண்டியதில்லை; தீட்சை பெற வேண்டியதில்லை. யாரெல்லாம்தான் ஒரு விழிப்புணர்வுடைய இருத்தலாக இருப்பதால் தடுமாறி, தன் சுய ஆதாரத்தை அறிய உள்ளார்ந்த ஈடுபாட்டுடன் இருக்கிறார்களோ, அவர்கள், எப்போதும் இருக்கின்ற 'நான்' என்னும் உணர்வைக் கிரகித்து, மனதை மறைக்கின்ற மேகங்கள் கரைந்து, இருத்தல் அதன் மகிமையோடு பார்க்கப் படும் வரை அதில் சோம்பல் இல்லாமல் பொறுமையாகத் தங்குவார்கள்.

'நிசர்க யோகா'வை விடா முயற்சியுடன் அதன் முதிர்ச்சிக்குக் கொண்டுவந்தால், அது ஒருவர் எப்போதும் விழிப்புணர்வற்றும், மந்தமாகவும் இருக்கும் நிலையில் விழிப்புணர்வையும், இயக்கத்தையும் கொண்டுவரும். அதன் தன்மையில் வித்தியாசம் இல்லை. விதத்தில்தான் வித்தியாசம் உள்ளது - ஒரு தங்கக் கட்டிக்கும், அதிலிருந்து செய்யப்பட்ட ஒரு அழகான நகைக்கும் உள்ள வித்தியாசத்தைப் போல. அப்போதும் வாழ்க்கை தொடரும்;

ஆனால் தன்னிச்சையாகவும், சுதந்திரமாகவும், அர்த்தமுள்ள தாகவும், ஆனந்தமாகவும்.

மஹாராஜ் இந்த இந்தத் தன்னிச்சையான நிலையை மிகத் தெளிவாக விவரிக்கிறார். ஆனால் எப்படி ஒரு பார்வையற்றவர் ஒளியையும், வர்ணங்களையும் கற்பனை செய்து காண முடியாதோ அப்படி மெய்ஞானம் பெறாத மனம் இம்மாதிரியான விவரிப்பு களுக்கு அர்த்தத்தைக் கொடுக்க முடியாது. பற்றற்ற மகிழ்ச்சி, பாசமான விடுபடல், பொருட்கள் மற்றும் இருத்தலின் காலமற்ற மற்றும் காரணமற்ற தன்மை ஆகிய சொற்றொடர்கள் அவர்களுக்கு வினோதமாகத் தோன்றும். அவை எந்த ஒரு எதிர்வினையையும் ஏற்படுத்த மாட்டா. அவை ஆழ்ந்த அர்த்தத்தைக் கொண்டிருக் கின்றன என்று நாம் உள்ளுணர்வில் அறிவோம். வர்ணனைக்கு அடங்காத ஒரு வினோதமான வேட்கையை அவை நமக்குள் உருவாக்குகின்றன. வரப்போகின்றவற்றுக்கு அவை ஒரு முன்னோடி. அவ்வளவுதான். மஹராஜ் சொல்வதைப் போல வார்த்தைகள் குறியீடுகள் மட்டும்தான். அவை செல்ல வேண்டிய திசையைத்தான் காண்பிப்பவை. ஆனால் அவை நம்முடன் கூடவே வரமாட்டா. உள்ளார்ந்த செயலின் பலன் மெய்யறிதல். வார்த்தைகள் வெறுமனே வழியைத்தான் சுட்டுபவை.



மோரிஸ் ஃப்ரைட்மேன்

# மோரிஸ் ஃப்ரைட்மேன்

மோரிஸ் ஃப்ரைட்மேன், (சுவாமி பாரதானந்தா) 1896ம் ஆண்டு போலந்தில் பிறந்து, 1930களில் இந்தியாவிற்கு வந்து, மைசூர் அரசாங்கத்தில் மின்சாரப் பொறியியலாளராகப் பணி புரிந்தார். அவருக்கு மகாத்மா காந்தி, ஸ்ரீ ரமண மகரிஷி, ஸ்ரீ நிசர்கத்த மஹராஜ், ஜே.கிருஷ்ணமூர்த்தி ஆகியோரிடம் நெருங்கிய தொடர்பும், புரிதலும் இருந்தது.

அவர் 1938ல் வட இந்தியாவிலிருந்த அவுந்த் என்னும் சிறு நாட்டின் அரசரைத் தன் நாட்டைக் குடியரசாக மாற்ற ஒப்புக்கொள்ளச் செய்து, காந்திஜியுடன் சேர்ந்து அந்த நாட்டில் அரசியலமைப்புச் சட்டத்தை 'அவுந்த் பிரகடனம்' மூலமாகச் செயல்படுத்தினார். மற்ற சிற்றரசர்களுக்கு அது முன்னோடியாகவும், இந்தியச் சுதந்திரப் போராட்டத்தில் ஒரு முக்கிய நிகழ்வாகவும் இருந்தது. அவர் அக்காலத்தில் இந்தியாவிற்கு வந்த திபெத்திய அகதிகளுக்குக் குடியிருப்பை ஏற்படுத்தவும், பொருளுதவி செய்யவும் அரசாங்கத்தை வலியுறுத்திக் கிடைக்கச் செய்தார். காந்திஜியின் ராட்டினத்தைச் சிறப்பாக வடிவமைத்தவரும் அவரே.

ஃப்ரைட்மேனின் ஆன்மீகப் புரிதல் மிக உயர்ந்த நிலையில் இருந்தது. அவரும் ஒரு ஞானி. ஸ்ரீ நிசர்கதத்த மஹராஜூம் அவரை ஞானி என்று அடையாளம் கண்டார். அவர் மஹராஜின் உரையாடல்கள் அடங்கிய மராத்தி ஒலிப்பதிவுகளைத் தொகுத்து "I AM THAT" என்னும் ஆன்மீகச் செவ்விலக்கியமாக ஆங்கிலத்தில் மொழி பெயர்த்தார். அது 1973ம் ஆண்டு வெளியிடப்பட்டு உலகெங்கிலும் போற்றப்படுகிறது. அதன் மராத்தி மொழியிலான மூலப்புத்தகமும் அப்போதே மஹராஜ் அவர்களால் சரி பார்க்கப் பட்டு வெளியிடப்பட்டது. அவர் 9.3.1976ம் தேதி, மும்பையில் சமாதியானார். அப்போது மஹராஜ் அவர் அருகில் இருந்தார்.

மோரிஸ் ஃப்ரைட்மேன் என்னும் மாமனிதருக்கு இந்திய மக்களும், உலகெங்கிலும் உள்ள ஆன்மீகச் சாதகர்களும் என்றென்றும் நன்றி உடையவர்களாக இருப்பார்கள்.

# அருஞ் சொல் அகராதி

| | | |
|---|---|---|
| விழிப்புணர்வு | : | CONSCIOUSNESS |
| பிரக்ஞை | : | AWARENESS |
| இருத்தல் | : | BEING |
| இருப்பு | : | EXISTENCE |
| அகம் சார்ந்த | : | SUBJECTIVE |
| புறம் சார்ந்த/ புற வயப்பட்ட | : | OBJECTIVE |
| உச்ச உயர்வு | : | SUPREME |
| மெய்மை | : | REALITY |
| இடம் | : | SPACE |
| சாசுவதமான | : | ETERNAL |
| உச்சமுடிவான | : | ULTIMATE |
| முடிவற்ற | : | INFINITE |
| பூரணம் | : | ABSOLUTE |
| சாட்சி | : | WITNESS |
| சாட்சிபாவம் | : | WITNESSING |
| உணர்வு | : | CONSCIOUS |
| நிஜம் | : | FACT |
| உணர்ந்தறிதல் | : | PERCEPTION |
| பழக்க அடிமைத்தனம் | : | ADDICTION |
| கருத்து உருவாக்கம் | : | CONCEPT |
| மனமார்ந்த ஈடுபாடு | : | EARNESTNESS |

| | | |
|---|---|---|
| ப்ரத்தியட்சம் | : | ACTUAL |
| ஆதாரம் | : | SOURCE |
| மகிழ்ந்து அனுபவித்தல் | : | ENJOYMENT |
| மெய்யறிதல்/ சுயம் அறிதல்/ ஆத்ம ஞானம் | : | SELF REALISATION |
| தளை | : | BONDAGE |
| பிரபஞ்சம் | : | UNIVERSE |
| பரிணமிக்காதது (அவியக்தா) | : | UNMANIFESTED |
| பிரபஞ்ச அளவில் பரிணமிப்பது/ சாட்சி (வியக்தா) | : | MANIFESTED |
| நபராகப் பரிணமிப்பது (வியக்தி) | : | MANIFESTED AS INDIVIDUAL |
| தொடர் மனப் பழக்கம் | : | OBSESSION |





பாரதத்தின் அண்மைக் காலத்தைய மாபெரும் ஞானிகளில் ஒருவரான ஸ்ரீ நிசர்கதத்த மஹராஜ் அவர்களின் காலவரம்பற்ற ஆன்மீக உபதேசங்களின் இந்தத் தொகுப்பு, ஆங்கிலத்தில் 'I am That' என்னும் புத்தகமாக 1973-ல் பதிப்பிக்கப்பட்டதிலிருந்து, சுயம் அறிதலில் தீவிர ஈடுபாடுடைய சாதகர்களுக்கு ஞானத் தெளிவை அளித்து வருகிறது.

ஸ்ரீ நிசர்கதத்த மஹராஜ் எந்த ஒரு சித்தாந்தத்தையோ, மதத்தையோ முன் வைக்கவில்லை. ஆனால் சுயம் பற்றிய புதிரை மென்மையாக விடுவித்தார். அவருடைய செய்தி எளிமையானது, நேரடியானது, உன்னதமானது. மஹராஜின் போதனைகளின் மையக் கருத்தாக, "மனிதன் தன் பொய்யான அடையாளங்களிலிருந்தும், பல்வேறு வெளி வேஷங்கள் மற்றும் மயக்கங்களிலிருந்தும் விடுபடும் வரை தன் சுயத்திற்குள் உள்ளார்ந்திருக்கும் சாசுவதமான மெய்மையை அறிய முடியாது. மனம் எதை உருவாக்குகிறதோ அதை அழிக்கும். ஆனால் மெய் உருவாக்கப்படுவது அல்ல; அதை அழிக்கவும் முடியாது" என்று சொல்லலாம். மஹராஜின் ஒரே குறிக்கோள் மனிதனின் இந்தப் போலியான உருவகத்தை அழித்து, ஒருவருடைய மெய்யான இயல்பையும், காலவரம்பற்ற இருத்தலையும் புரிய வைப்பதுதான். மும்பையிலிருந்த அவருடைய வீட்டிற்கு உலகெங்கிலுமிருந்து வந்த பலதரப்பட்ட மெய்யார்வலர்களுக்கு, 'மெய்யான அனுபவத்திற்கு அப்பால் இருப்பது மனம் அல்ல - சுயம், ஒவ்வொன்றும் எதில் தெரிகிறதோ அந்த ஒளி, ஒவ்வொன்றும் எதில் நிகழ்கிறதோ அந்தப் பிரக்ஞை' என்னும் தெளிவை அவர் கொடுத்தார்.

காலகாலமாக இருக்கும் 'நான் யார்?' என்னும் கேள்விக்கு வாசகர்கள் இரு பகுதிகளாகப் பதிப்பிக்கப்பட்டுள்ள 'நான் பிரம்மம்' என்னும் புத்தகங்களில் பதில்களைக் கண்டுபிடித்துப் புரிந்து கொள்ளலாம்.

மகோன்னதமான ஞானப் பெட்டகம் இதோ உங்கள் கைகளில்!

இந்த ஞானப்பெட்டகத்தை வெளியிடுவதில் கண்ணதாசன் பதிப்பகம் பெருமை கொள்கிறது!

ISBN 978-81-8402-807-2



கண்ணதாசன் பதிப்பகம்